# நிழல் முகங்கள்



சு. சமுத்திரம்

# நிழல் முகங்கள்

சு. சமுத்திரம்



ஏகலைவன் பதிப்பகம்
9, இரண்டாவது குறுக்குத் தெரு,
டாக்டர். இராதாகிருஷ்ணன் நகர்,
சென்னை - 600 041.
✆: 4917594

முதற்பதிப்பு : டிசம்பர், 1991.
இரண்டாம் பதிப்பு : ஆகஸ்ட், 2000.


விலை : ரூபாய். 60-00

தலைப்பு : நிழல் முகங்கள்
மொழி : தமிழ்
பொருள் : சமூக நாவல்
ஆசிரியர் : சு. சமுத்திரம்
வெளியீடு : ஏகலைவன் பதிப்பகம்
9, இரண்டாவது குறுக்குத் தெரு,
டாக்டர். இராதாகிருஷ்ணன் நகர்,
சென்னை - 600 041.

வடிவம் : "டெமி"
பக்கம் : 226+14=240

ஒளி அச்சு : ஏகலைவன் பதிப்பகம்
அச்சிட்டோர் : ஸ்டெட்பாஸ்ட் பிரஸ், சென்னை - 600 013.

# சோதனைப் புதுமை

- இலக்கிய யோகி. வ.க.

ஓடிக்கொண்டிருக்கும் ஒவ்வொரு ரயில் வண்டியும் ஒரு தனி உலகம். அதில் நாள்தோறும் விதவிதமான உணர்ச்சி நாடகங்கள் நடைபெறுகின்றன. உணர்ச்சிகளின், எண்ணங்களின், திட்டமிடுதல்களின் உருவங்களான வித விதமான மனிதர்கள் ரயில்களில் பயணம் செய்கிறார்கள். அவர்களிடையே எத்தனையோ சோக நாடகங்கள், காதல் காவியங்கள், திகில்-மர்ம நாவல்கள், பல்வேறு உணர்ச்சிகளையும் உள்ளடக்கிய நெடுங்கதைகள் மறைந்து கிடக்கின்றன.

அப்படிப்பட்ட அனுபவக் கதைகளில் ஒன்றை நண்பர் சு. சமுத்திரம் **'நிழல் முகங்கள்'** என்ற சுவை நிறைந்த நாவலாகப் பதிவு செய்திருக்கிறார். இது புதுமையான நாவல். சோதனை ரீதியான படைப்பு என்றும் சொல்லலாம்.

இந்த நாவலின் நிகழ்வுகள் அனைத்தும் ஓடுகிற ரயில் வண்டியிலேயே நடைபெறுகின்றன. எத்தனை ரகமான உணர்ச்சி அனுபவங்கள்! அவற்றை எல்லாம் இணைக்கும் உயிர்ச்சரடாக விளங்குகிறது புனிதமான அன்பு.

ரயிலிலேயே உழைத்து, ரயிலிலேயே வாழ்ந்து கொண்டிருக்கும் தொழிலாளிகளின் அன்பின் அடிப்படையில் வளர்க்கிற மனிதநேயம் எத்தகைய மாண்புமிக்கதாகப் பரிணமிக்கிறது! பேச்சுத் திறன் இழந்துவிட்ட ஒரு அனாதைப் பையனிடம், அவர்கள் கொண்டுள்ள பிரியமும், காட்டுகிற பரவசமும் நேசமும் எவ்வளவு உயர்ந்தவை! அவர்கள் ஆதரவில் வளர்கிற அந்த அநாதைச் சிறுவன் உள்ளத்தில் ஊற்றெடுத்துப் பெருகும் அன்பும், ஆதரவற்றுத் திண்டாடுகிறவர் யாராக இருப்பினும் அவர்களை அரவணைத்துக் கொள்கிற நேயமும் உண்மையான மனிதத்தின் உயர் பண்புகளாகப் பிரகாசிக்கின்றன.

அன்பின் உருவங்களாக நடமாடும் அந்தத் தொழிலாளர்களும், அவர்களது செல்லப் பிள்ளையாக விளங்கும் அநாதையான வாய் பேசாச் சிறுவனும், அவர்களது பாதுகாப்பை நாடி வந்த அபலைப் பெண்ணும், வெறும் நிழல் முகங்களாக இல்லை. உயிர்ப்பும் உணர்வும் நிறைந்த ஜீவசித்திரங்களாக இயங்குகிறார்கள் இந்த நாவலில்.

உறவுக்காரர்களால் வஞ்சிக்கப்பட்ட அந்த அபலைப் பெண் பணக்கார உறவுக்காரனால் ஓடும் ரயிலிலேயே வேட்டைப் பிராணிபோல் துரத்தப்பட்டு, பலவித சோக அனுபவங்களுக்கு இலக்காகிற துர்ப்பாக்கியசாலி - அன்பும்

மனிதாபிமானமும் நிறைந்த ரயில் மனிதர்களால் பாதுகாக்கப்படுகிறாள். ஓடும் ரயிலில் தொடர்ந்து அவளுக்கு ஏற்படும் அனுபவங்கள் நாவலின் விறுவிறுப்புக்கும் வளர்ச்சிக்கும் துணைபுரிகின்றன. பிரயாண முடிவில் அவளுக்கு நல்வாழ்வும் பிறக்கிறது.

ஓடிக்கொண்டிருக்கும் ரயிலில் நடைபெறும் இந்த நாவல் பல்வேறு இயல்புகள் கொண்ட ரகம் ரகமான மனிதர்களை ரசமாக அறிமுகம் செய்து வைக்கிறது. பயணிகளான இரண்டு பெண்களையும், அவர்களது கவனத்தைக் கவரப் பெரிதும் முயலும் ஒரு இளைஞனையும் வாசகர்கள் எளிதில் மறந்துவிட முடியாதுதான்.

**'ஒரு கோட்டுக்கு வெளியே'** என்ற படைப்பின் மூலம் குறிப்பிடத் தகுந்த நாவலாசிரியராகத் தெரிய வந்த நண்பர் சு. சமுத்திரம், **'ஊருக்குள் ஒரு புரட்சி' 'சத்திய ஆவேசம்'** போன்ற நாவல்களின் வாயிலாகவும், மற்றும் பலப் பல சிறுகதைகளின் மூலமும் தனது எழுத்தாற்றலையும், சமுதாயப் பார்வையையும், அகண்ட மனிதநேயத்தையும் புலப்படுத்தியிருக்கிறார். பல்வேறு துறைகளிலும் அதிகார வர்க்கத்தினரிடையிலும், மண்டி வளர்கிற சிறுமை களையும் குறைபாடுகளையும் முற்போக்குச் சிந்தனை வேகத்துடனும், அறச் சீற்றத்துடனும், போற்றப்பட வேண்டிய மெய்த் துணிவோடும் அவர் எடுத்துச் சொல்லிவருகிறார். இச்சீரிய பண்புகள் இந்த நாவலிலும் சுடர்விட்டு ஒளிர்கின்றன.

இந்த நாவலில் குறிப்பிட்டாக வேண்டிய இன்னொரு புதுமையையும் நண்பர் சு. சமுத்திரம் சேர்த்திருக்கிறார். ஓடும் ரயிலில் நிகழ்கிற இந்தக் கதை **தமிழ்நாடு, இலங்கை, மலேசியா** ஆகிய பிரதேசங்களைத் தழுவிக் கொண்டிருக்கிறது. இது அவருடைய விசாலப் பார்வையை உணர்த்துகிறது.

நண்பர் சமுத்திரத்தின் இதர நாவல்களைப் போலவே, இந்த **'நிழல் முகங்கள்'** நாவலும் ரசிகர்களால் வரவேற்று பாராட்டப்படும் என்பதில் சந்தேகமில்லை.

நண்பர் சமுத்திரத்துக்கு என் பாராட்டுக்களும் வாழ்த்துக்களும்.

**- வல்லிக்கண்ணன்**

*10,* வள்ளலார் பிளாட்ஸ்,
புதுத் தெரு, லாயிட்ஸ் ரோடு,
**சென்னை** - *600 005.*

# அனுபவப் பகிர்வு

**-சு. சமுத்திரம்**

இந்த நாவல், சுமார் பத்து ஆண்டுக்குப் பிறகு புதுப்பிக்கப்படுகிறது. அதற்கு பத்து ஆண்டுகளுக்கு முன்பு, ஒரு தடவை டெல்லி - சென்னை ரயில் பயணத்தில் கிடைத்த அனுபவங்களை வைத்து, இதனைப் படைத்தேன். முதலில் எழுதும்போதே அத்தனை முகங்களும் நிழலாகத்தான் தோன்றின. அதனால்தான், இதற்கு "**நிழல் முகங்கள்**" என்று பெயரிட்டேன். ஆனால், இவற்றில் முக்கால்வாசிப்போர் நிச முகங்கள். இருபது ஆண்டுகளுக்குப் பிறகு, இப்போது அந்தப் பயணத்தைத் திரும்பிப் பார்க்கும்போது, இந்த நிழல்கள் நிச முகங்களாக தோன்றுகின்றன.

இந்த நாவலில் வரும் பலராமன், நவாப்ஜான், அந்தோணி, அண்ணாமலை, நாராயணன், டில்லிப் பெண்கள் - எல்லாவற்றிற்கும் மேலாக அந்த ரயில் பயல், நிசமான பாத்திரங்கள். அந்த மூன்றுநாள் பயணத்தில், அண்ணன்-தம்பிகளாக, சோதர-சோதரிகளாக பழகினோம். ஆனால், இதுவும் ரயில் நட்பாகவே மாறிப்போய்விட்டது.

பிரபல மலேசியப் பத்திரிகை "**தமிழ்நேசன்**" என்னிடம் ஒரு தொடர்கதை கேட்டபோது, இந்த அனுபவங்களையே மையமாக வைத்து எழுதுவது என்று தீர்மானித்தேன். ஆனால், "**தமிழ்நேசன்**" என்னிடம் எதிர்பார்த்ததோ வேறு பாணிக்கதை. அநேகமாக, நான் இங்கே எழுதிய கதைகளை, அவர்கள் அதிகமாக படித்திருக்க மாட்டார்கள் என்பதாலேயே, எனக்குத் தொடர்கதை எழுதும் அழைப்பை விடுத்தார்கள் என்று நினைக்கிறேன். நானும், "**பேசும் உறவுகள்**" என்ற தலைப்பில், முப்பதுக்கும் மேலான அத்தியாயங்களை எழுதினேன். அந்தப் பத்திரிகையால் மெல்லவும் முடியவில்லை; விழுங்கவும் முடியவில்லை. ஒரு ரயில் பயலை - அதுவும் அழகற்ற, வாய்பேச முடியாத ஒரு சிறுவனை மையமாக வைத்து, கதையாக இழுத்துக்கொண்டு போவது அந்தப் பத்திரிகைக்கு பிடிக்காமல் போனதில் தவறில்லை.

"**தமிழ்நேசன்**" பத்திரிகைப் பிரதிகளும், எனக்கு ஒழுங்காக வந்த பாடில்லை. ஒருதடவை, அதன் ஆசிரியர் திரு. **விவேகானந்தன்** அவர்களுக்கு, காரசாரமாக கடிதம் எழுதினேன். அவரும் திருப்பி மிளகாய் நெடியில் ஒரு கடிதம் எழுதினார். அதில், என்மீது அவருக்குத் தனிப்பட்ட கோபமில்லை என்பதும், இப்படிப்பட்ட கதையை அவர் எதிர்பாராத அதிர்ச்சியே இந்த மிளகாய் வாசனை என்றும் புரிந்துகொண்டேன். இந்தத் தொடர்கதை முற்றுப் பெற்ற பிறகு, சென்னைக்கு வந்திருந்த மலேசியா எழுத்தாளர்கள் கூட்டம்

ஒன்றிற்கு, சென்னை வானொலி நிலைய செய்தி ஆசிரியர் என்ற முறையில் சென்றிருந்தேன். திரு. விவேகானந்தனுடன் அப்போது அதிகமாகப் பேசவில்லை. ஆனாலும், 'உங்களின் இந்தக்கதை மட்டும் ஏனோ சரியாக வரவில்லை' என்று ஏமாற்றம் கலந்த இனிமையோடு குறிப்பிட்டார். ஆனாலும், நான் தொடர்கதைகள் அதிகமாக எழுதியதில்லை. ஒருவேளை, நானும் வழக்க மான மசாலா பாணியில் எழுதுகிற எழுத்தாளன் என்று நம்பி, அவர் என்னை எழுதச் சொல்லியிருக்கலாம். என்றாலும், கதையை நிறுத்தச் சொல்லாமல், எழுதுகிற வரைக்கும் எழுதட்டும் என்பதுபோல் பல்லைக் கடித்துக் கொண்டிருந்த ஆசிரியர் திரு. விவேகானந்தன் அவர்களுக்கு என் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன். நிச்சயமாக இதைப் போன்ற தொடர்கதையை இங்குள்ள வணிகப் பத்திரிகைகளில் எழுதமுடியாது. இலக்கியப் பத்திரிகைகள் வெளியிட்டால், இதற்கே அவைகளுக்கு காகிதம் போதாது.

இந்த "தமிழ்நேசனி"ல், எனது தொடர்கதை பற்றி கருத்துத் தெரிவிக்கும் படி ஒரு அறிவிப்பு வெளியிட்டிருந்தேன். சுமார் நூறு கடிதங்கள் வந்திருக்கும். இப்போது தேடிப் பார்த்ததில் பதினைந்து கடிதங்களே கிடைத்தன. எஞ்சிய கடிதங்கள் பைலாக்கப்பட்டு, அந்த பைல் பரணுக்குள் போய்விட்டது. பரண் இருக்கிறது, பைல் இல்லை. அன்பைச் சுமந்து வந்த அந்தக் கடிதங்களை போற்றிக் காக்க தவறிவிட்டதற்காக வருந்துகிறேன். இந்தக் கடிதத்திலும், ஒரு எழுத்தாளர், '**தமிழக எழுத்தாளர்கள், மலேசிய எழுத்தாளர்களின் வயிற்றில் மண்ணைப் போடும்படி கொலை, கொள்ளை, கற்பழிப்பு போன்ற வற்றை மையமாக வைத்து, என்னைப்போல் எழுதுகிறார்கள்**' என்று குற்றஞ் சாட்டியிருந்தார். இந்தத் தொடர்கதையையும் அவர் படிக்கவில்லை என்பதை ஒப்புக்கொண்டார். இந்தக் கடிதத்தையும், அதற்கு நான் வழங்கிய காரசாரமான பதிலையும் பிரசுரிக்கலாம் என்று நினைத்தேன். பத்து ஆண்டுகளுக்கு முன்பு இருந்த இலக்கியச்சூழலை எங்களது கடிதங்கள் பிரதிபலிக்கும் என்பதற்காக வெளியிடத் திட்டமிட்டேன். ஆனால், இப்போதைய இலக்கியச்சூழல், இங்கே மட்டுமல்ல, அங்கேயும் மாறி இருக்கிறது என்பதால், அந்தக் கடிதத்தை பாதுகாத்து வருகிறேன். இதனாலேயே இன்னொரு மலேசிய நாளிதழ், தொடர்கதை கேட்டபோது மறுத்துவிட்டேன். சரி... கதைக்கு வருவோம்.

இந்தப் படைப்பில், ரயில்வே தொழிலாளர்கள் குறிப்பாக, தாழ்நிலையில் உள்ளவர்கள், அந்த ரயில் பயலை, சொந்த மகன்போல் பராமரிப்பதைக் கண்டு மெய்சிலிர்த்துப் போனேன். அந்தப் பெண்களிடம் தவறாக நடந்து கொள்ள முயற்சித்தது, தமிழ்நாட்டைச் சேர்ந்த ஒரு ராணுவ இளைஞன். இவ்வரைச் சொல்லி, இந்திய ராணுவத்தில் பணியாற்றும் பண்புள்ள பெரும் பான்மையான வீரத் தோழர்களை கொச்சைப் படுத்தலாகாது என்று, இந்த ராணுவவீரன் செய்த மேற்கொண்ட தகாத முயற்சிகளை, ஒரு அப்பாவி சீனிவாசன் தோளில் சாய்த்துவிட்டேன்.

இந்த நாவலை எழுதுவதற்கு முன்னால், சில ஆயத்த வேலைகளையும் மேற்கொண்டேன். அப்போது சென்ட்ரல் ரயில் நிலையத்தில் கண்காணிப்பாளராக இருந்த திரு. **கனகசபாபதி** அவர்கள், பண்புள்ள அதேசமயம் கண்டிப்பான நேர்மையான அதிகாரிகளுக்கு ஒரு முன் உதாரணம். அவர் மூலம் சில தகவல்கள் தெரிந்தன. அவரும், அனாதையாக விடப்படும் குழந்தைகளை எடுத்து, உரியவர்களிடமோ அல்லது தக்கவர் களிடம் வளர்ப்புக் குழந்தைகளாகவோ ஒப்படைக்கும் அற்புத மனிதரான **பிளாட்பார இன்ஸ்பெக்டர் மணியை**, எனக்கு அறிமுகம் செய்து வைத்து, அவர் மூலமாகவே தனது அனுபவங்களை சொல்ல வைத்தார். இந்த மணி, அண்மையில் இறந்தபோது, எனக்கு தொலைபேசியில் தெரிவிக்கப்பட்டது. அப்போது, நானும் நோய்வாய்ப் பட்டிருந்ததால், என்னால் இறுதி அஞ்சலி செலுத்த இயலவில்லை. ஆனாலும், அவரது தோற்றமும் தொண்டும் என் நெஞ்சிலே நீங்கா இடம்பெற்று, அவருக்கு ஒரு நிரந்தர அஞ்சலியாக நிலைத்து நிற்கிறது. தமிழக அரசின் சமூக நலத்துறைக்கும், நமது பிளாட்பார இன்ஸ்பெக்டர் மணிக்கும் நடந்த சண்டைகளில் ஒன்றை நாவலில் குறிப்பிட்டிருக்கிறேன்.

அந்த ரயில் பயலுக்கு எல்லாமாகிப் போனவர் சுந்தரம். இவரை நான் பார்க்க முடியவில்லை. ஆனால், இவர் இந்த பையனிடம் கொண்டிருக்கும் பாசத்தை, பலர் என்னிடம் எடுத்துரைத்தார்கள். இவருக்கு ஒரு குடும்பத்தை நானாகவே ஏற்படுத்திக் கொடுத்தேன். இவரது நிசமக குடும்பத்தைப் பற்றி எனக்குத் தெரியாது.

இந்தக் கதையில் வரும் **கமலாகரன்**, ஒரு மெய்யான பாத்திரம். இலங்கையில், முதல் தடவையாக கலவரம் முழு வீச்சில் நடந்தபோது, இ.பி.ஆர்.எல்.எப். சார்பில் போராடி ஒரு கையை இழந்து சென்னைக்கு வந்த இளைஞர். அப்போது, சென்னை வானொலி நிலையத்தில், வட இலங்கைத் தமிழர்களை அமைதிப்படுத்தும் வகையில் ஒரு அரைமணி நேர நிகழ்ச்சி ஒலிபரப்பானது. இதில், அய்ந்தைந்து நிமிடம் மாலையிலும் காலையிலும் செய்திகளை ஒலிபரப்புவது எனது பொறுப்பானது. இதற்காக, பல இலங்கை சோதர சோதரிகளை செய்தி வாசிப்பாளர்களாக, பலரின் ஆட்சேபத்திற்கிடையே சேர்த்துக் கொண்டேன். இதனால், இவர்களின் வறுமைப் போகவில்லை என்றாலும், வயிறு அரைவாசியாவது நிரம்பியிருக்கும். இந்தக் கமலாகரன், இ.பி.ஆர்.எல்.எப். வரதராஜ பெருமாள் தலைமையில் மாநில அரசு அமைந்ததும், அங்கே சென்றார். யாழில், மாநில ஆலோசனைக் குழுவில் உறுப்பினராக இடம் பெற்றிருக்கிறார். ஆனாலும், இப்போது அவர் உயிரோடு இல்லை. விடுதலைப்புலிகள், இந்தக் கமலாகரனை கொன்று விட்டதாக கூறப்படுகிறது. இந்த பண்பட்ட இளைஞருக்காக, சிலசமயம் மனதுக்குள் ஊமை அழுகை ஏற்படுகிறது.

நான் பயணித்த ரயிலில், ஒரு தமிழச்சி, பலார்ஷா ரயில் நிலையத்தில் காய்கறிக் கூடைகளோடு ஏறி, நூறு கிலோமீட்டருக்கு அப்பால் உள்ள ரயில் நிலையத்தில் இறங்கி, இந்த இடைப்பட்ட வேளையில் ரயிலுக்குள்ளேயே வியாபாரம் செய்வாள். நடுத்தர வயதுப்பெண். இப்படி செய்வது அவளுக்கு அன்றாட வழக்கம் என்று கூறப்பட்டது. அந்த ரயில் பயலை கொஞ்சிக் குலாவி வெளிப்படுத்திய அவளது தாய்மையும், அங்கிருந்த ரயில்வே ஊழியத் தொழிலாளர்களிடம் அன்புச் சகோதரியாய் பேசிய பேச்சும் என்னை ஆட்கொண்டன. இவளையே, **தமிழ்ச்செல்வி**யாக மாற்றினேன்.

பொதுவாக, முன்பெல்லாம் ஒவ்வொரு கிராமத்திலும் ஒருவர் மாடு மேய்த்துக் கொண்டிருப்பார். கிட்டே நெருங்கி விசாரித்தால், மலேசியாவில் காரோடும் பேரோடும் வாழ்ந்துவிட்டு, ஊரில் உறவினர்களால் ஏமாற்றப் பட்டவராகவே அவர் இருப்பார். எங்கள் ஊரில்கூட, நாற்பதாண்டுகளுக்கு முன்பு, எனது அம்மாவின் பங்காளிக் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு மூதாட்டி, அந்தக் காலத்தில் வியக்க வைக்கும் வில் வண்டியில் தடபுடலாக வந்து இறங்கினார். அப்போது, பாவாடை என்றால் என்ன என்று தெரியாத கிராமத்துப் பெண்கள், இந்தம்மா புடவைக்குள் போட்டிருக்கும் டவுசரைப் பற்றியே மலைப்பாகவும் வியப்பாகவும் பேசியது, இன்னும் என் நினைவிற்கு வருகிறது. இறுதியில், இந்த படைப்பில் வரும், தமிழ்ச்செல்வியின் அம்மா போல், உடலும் உள்ளமும் செத்தவளாய் ஏதோ புலனுக்குப் புரியாத ஒன்று, அவளை இயக்குவதுபோல், மாடுகளை மேய்த்துக் கொண்டிருந்தாள்.

இலங்கையில் அமைதிப்படை தங்கியிருந்தபோது, யாழ்ப்பாணத்தில் உள்ள பலாலி, வவுனியா போன்ற பகுதிகளையும், திரிகோணமலை, மட்டக்களப்பு போன்ற தனித்தனிப் பகுதிகளுக்கு பத்திரிகையாளர்களோடு கூட்டாகவும், வானொலி செய்தி ஆசிரியர் என்ற முறையில் தனிமையாகவும் பலதடவை சென்றிருக்கிறேன். வடக்கு கிழக்குப் பகுதி தமிழர்களுக்கு மண்வாசனையில், பேச்சு வழக்கில், வேறுபாடுகள் நிறைய உண்டு. கிழக்குப் பகுதியில், **மூர்கள்** என்று அழைக்கப்படும் இஸ்லாமியர்கள், தமிழர்களேயன்றி வேறில்லை. ஆனால், யாழ்ப்பாண மேலாண்மை ஏற்படுத்திய ஒரு வரலாற்றுக் கட்டாயத்தால், இவர்கள் தமிழர் என்ற நினைப்பிலிருந்து அந்நியப்பட்டு, தங்களை இஸ்லாமியர்களாக மட்டுமே பாவிக்கிறார்கள். இந்த அனுபவங்கள், இந்த நாவலை யதார்த்தமாய் நிறைவு செய்கின்றன.

*1991* ஆம் ஆண்டே இந்த நாவலுக்கு முன்னுரை எழுதிக் கொடுத்த இலக்கிய யோகி, பெரியவர். **வல்லிக்கண்ணன்** அவர்களுக்கும், இந்தப் படைப்பை நன்கு விமர்சித்த பத்திரிகைகளுக்கும், முதல் பதிப்பை வெளியிட்ட தமிழ்ப் புத்தகலாய உரிமையாளர் திரு. **அகிலன் கண்ணன்** அவர்களுக்கும் நான் நன்றிக்கடன் பட்டிருக்கிறேன்.

இந்தப் படைப்பிற்கு கட்டியம் கூறியவரும், இடதுசாரி இலக்கிய வாதிகளின் பேனா பிடித்த கைகளை தூக்கி விட்டவரும், "செம்மலர்" இதழின் அப்போதைய ஆசிரியருமான திரு. **கேம். எம். முத்தையா** அவர்கள் சுட்டிக் காட்டும் கட்டியத்தையும், பின்பக்க அட்டையில் பிரசுரித்திருக்கிறேன்.

பெரியவர். **வல்லிக்கண்ணன்** அவர்கள் சுட்டிக்காட்டியதைப்போல், ஓடும் ரயிலை மையமாக வைத்து, இலக்கியமாகவும், அதற்கு எதிரியாகக் கருதப் படும் எளிமையாகவும் இனிமையாகவும் இதனைப் படைத்திருக்கிறேன். இது முதல் பதிப்பானபோது, நான் சரக்கு முடுக்கை மட்டுமே நம்பிக் கொண்டு இருந்தேன். அது மட்டும் கை கொடுக்காது என்பது, இப்போது அதிகமாகவே புரிந்துவிட்டது. காரணம், பல நல்ல நாவல்களை இருட்டடிப்பு செய்வது, இன்றைய குழு மனப்பான்மை எழுத்தாளர்களுக்கும் அவர்களின் தாசாதி தாசர்களுக்கும் ஒரு கை வந்த கலையாகிவிட்டது. என்றாலும், இப்போது காலம் மாறிவிட்டது. முன்புபோல், நல்ல நாவல்களை, நான் குறிப்பிட்டவர்கள் இருட்டடிப்பு செய்துகொண்டே இருந்தாலும், அப்படிப் பட்டவர்கள் இலக்கிய இருட்டுக்குள் சிக்கப்போவதும், இன்றைய தமிழ்நாடு முற்போக்கு இளம் படைப்பாளிகள்தான் இந்த நூற்றாண்டின் இலக்கியத்தை தீர்மானிக்கப் போகிறார்கள் என்பதும் ஒரு சமூக, கலை இலக்கிய வரலாற்றுக் கட்டாயமாகப் போகிறது.

கூடவே, இலக்கியப் பிதாமகன் **கலைஞரின்** மேலான தலைமையில், தமிழக அரசு அமைத்திருக்கும் புதிய அமைப்பான **தமிழ் இலக்கிய சங்கப் பலகையின் குறள்பீடம்**, தகுதி இருந்தும் காணாமல்போன **விந்தன்** போன்ற அந்தக் கால படைப்பாளிகளையும், காணமல் செய்யப்படும் இன்றைய தகுதி மிக்க படைப்பாளிகளையும் எல்லா மொழிகளுக்கும் கொண்டு செல்லும் என்பதில் எனக்கு சந்தேகமே இல்லை.

இந்த நாவலுக்கு ஆய்வுக்கூட்டம் நடத்திய ரயில்வே தொழிலாளர்களுக்கு என் நன்றி உரித்தாகும்.

இந்த படைப்பை அருமையாக பிரசுரித்ததோடு, சிறப்பாக முகப்போவியத்தையும் வழங்கிய மணிவாசகப் பதிப்பகத்தின் உரிமையாளர் **பேராசியர். ச. மெய்யப்பன்** அவர்களுக்கும், அவரது அருமைச் செல்வன் **சோமு** அவர்களுக்கும், மேலாளரான தோழர். **குருமூர்த்தி** அவர்களுக்கும், இந்தப் பதிப்பகத்தின் இதரத் தோழர்களுக்கும் என் நன்றி. இது வாடிக்கையான நன்றி அல்ல; என் அனுபவத்திலும் இனிய நினைவுகளிலும் சேமிப்பாகிப்போன ஒரு நினைவு. இதற்கு இன்னொரு பெயர்தான் நன்றி.

அன்புடன்,

**சு. சமுத்திரம்**

# பேசும் உறவுகள்

உங்களின் சிறந்த தொடர்கதை, உண்மையிலேயே எங்களைக் கவர்ந்து விட்டது. ஒவ்வொரு முறையும் படிப்பதற்கு சலிப்புத் தட்டாமல் இருக்கிறது. இந்தக் கதை, என்னமோ... உண்மைக்கதை போல இருக்கிறது. எங்களின் மனமார்ந்த வாழ்த்துக்களையும் பாராட்டுக்களையும் இதன்மூலம் தெரிவித்துக் கொள்கிறோம்.

அன்புச் சகோதரிகள்,
**மு. பழனியம்மாள் - லட்சுமி,**
ஜோகூர், **மலேசியா.**

**********

என் தகப்பனார் இந்தியாவில் இருந்துவிட்டு, இங்கு வந்து கடுமையாக உழைத்து, அடிக்கடி பணம் ஊருக்கு அனுப்பினார். பிறகு, இங்கு இறந்து போனார். பல வருடம் சென்று, நான் இந்தியாவுக்கு சுற்றுலா போனேன். அப்போது ஊருக்குப் போய், அப்பாவின் சொத்தைப் பார்க்கலாம் என்று சென்றேன். ஆனால், சென்ற வேகத்திலேயே திரும்பிவிட்டேன். அப்படி எனக்கு ஒரு வரவேற்பு கிடைத்தது. என்னுடைய நண்பர் ஒருவருக்கும் இதேகதிதான்.

**ஏ. மாலப்பன்,**
நெ. 11, சுபாங் ஜெயா,
சலாகார், **மலேசியா.**

**********

தாங்கள், எங்களின் மலேசிய நாட்டை ஓர் அளவு புரிந்து வைத்திருப்பதாக, உங்கள் தொடர்கதை மூலம் தெரிகிறது. இந்த முயற்சியை கைவிடாமல் தொடருங்கள். அறுவடை கடைசியில்

தான் தெரியும். உங்களுக்கு நூறுபேர் இல்லாவிட்டாலும், பதராக இல்லாமல், பத்து பேராவது தேருவார்கள். அதுதான் நிலைக்கும்.

**இரா. பொன்னுசாமி,**
ஜலான் முட்டான் மெலிங்டாங்க்,
**மலேசியா.**

**********

தமிழ்நாட்டில் நல்ல இதயம் கொண்ட ஆயிரம் ஆயிரம் அன்புச் சகோதரர்களும் சகோதரிகளும் இருக்கிறார்கள் என்பது எனக்குத் தெரியும். தாங்கள் அதை நினைவுபடுத்தியதற்கு மிகவும் நன்றி.

**ஆமீனா பானு,**
தைப்பிங் பெராக்,
**மலேசியா.**

**********

தங்கள் கதை, நல்ல நடையில் அருமையாக இருக்கிறது. நானும் ஒரு எழுத்தாளி. பத்து வருடமாக எங்கள் நாட்டில் எழுத்துப்பணியில் ஈடுபட்டுள்ளேன்.

**பி.கே. அஞ்சலை,**
பெர்லிஸ், **மலேசியா.**

**********

உங்களுடைய தொடர்கதையை "**தமிழ் நேசன்**" பத்திரிகையில் தொடர்ந்து படித்து வருகிறேன். நல்ல முறையில் எழுதப்படும் இந்தக் கதையில், நீங்கள் குறிப்பிடுவதுபோல் சலிப்பு தட்டவில்லை.

**பி. வடிவேல்,**
**மேற்கு மலேசியா.**

*********************

# நிழல் முகங்கள்



பருவம் பனிக்காலம். சூரியன் நிலவுபோலக் குளுமையாகப் பார்வை காட்டிய நாக்பூர் ரயில் நிலையம்.

அந்த சூரியப் பார்வையை கண்டு, பதிலுக்குக் கண்ணடிப்பது போல் ரெயில் நிலையக் கட்டிடத்தை ஒட்டியிருந்த எடை எந்திரத்திற்குள் வட்டமான வண்ணத் தகட்டில் மின்னொளி அணைந்து மின்னியது. மின்னி மின்னி அணைந்தது. அதன் எதிர்த் திசையில் டில்லியிலிருந்து ஓடி வந்த துரிதரயில் சென்னையை நோக்கி முகம் வைத்து இளைப்பாறிக் கொண்டிருந்தபோது_

ஆகாயப் பந்தல் ரயில் பாலங்களுக்குக் கீழே, மக்கள் அலைமோதிக் கொண்டிருந்தார்கள். இந்தியாவில் வடபுலத்திற்கும், தென்புலத்திற்கும் நடுவில் நாக்பூர் இருப்பதால், கூட்டத்தில் குல்லாய்கள், தலைப்பாகைகள், சர்தார் கொண்டைகள், முக்காடுகள், முழுத்தலைகள் ஆகியவை தனித்தனியாகவும், இரண்டறக் கலந்தும் காணப்பட்டன.

பதினைந்து நிமிடம்வரை எல்லாமே, நிதானமாகவும், நிம்மதியாகவும் நடப்பது போலிருந்தது. பிளாட்பாரத்தில் நடமாடியவர்கள் அனைவருமே, அங்கேயே தங்கப் போகிறவர்கள் போல் நிதானமாய்த் திரிந்து கொண்டு இருந்தார்கள். அப்போது_

தொலைவில் பச்சை வண்ணம் பளிச்சிட்டது. பௌர்ணமி நிலவுக்குப் பச்சை வண்ணம் தீட்டியதுபோல், தூரத்து ரயில்விளக்கு மின்னியது. சீருடை தரித்த ரயில்வே அதிகாரி ஒருவர், தமிழகத்துத் தொண்டர்கள் போல், பச்சைக்கொடி பிடித்த கரத்தை உயர்த்தி

உயர்த்தி, எம்பி எம்பிக் குதித்தார். ரயில்வே தகவல் அறிவிப்பாளர், இந்திப்பேச்சு ஆங்கிலம் மாதிரியும், ஆங்கிலப்பேச்சு இந்தி மாதிரியும் ஒலிக்கும்படி தொலைக்காட்சிப் பெட்டிகளில் வாய்க் கோணலோடு முகம் தோன்ற 'இரண்டுங் கெட்டானாகக் கத்திக் கொண்டிருந்தார். அவர், மூக்கு வழியாகப் பேசியதைப் பார்த்தால், ஆசாமிக்குத் தமிழக அரசியலில் பரிச்சயம் இருக்கலாம் போல் தோன்றியது. போதாக்குறைக்கு, ரயிலின் பொறுப்பதிகாரி, கடைசிப் பெட்டியில் வாசலோரம் நின்றபடி விசிலடித்தார்.

அந்தக் கொடியும் விசிலும், வேறொரு ரயிலுக்கு என்பதை புரிந்து கொள்ளாத தென்னகப் பயணிகளில் பலர், துடியாய் துடித்தார்கள். சப்பாத்தி வாங்கிய சர்தார் ஒருவர், பச்சை விளக்கையும் சப்பாத்தியையும் மாறி மாறிப் பார்த்தபடியே, அவசர அவசரமாகத் தின்று, அந்த வேகத்தில் மனிதர் இலையில் ஒரு பகுதியைக்கூடத் தின்றுவிட்டார். இன்னொருத்தர் - அநேகமாக அவர் ஜாட் இனப் பஞ்சாபியாக இருக்கலாம்... சில்லறை கொடுக்க முடியாமல் சிக்கலாகப் பார்த்த சிகரெட் வியாபாரியை ரயிலை நோக்கி இழுத்துக் கொண்டே ஓடினார்: கூடை கூடையாகக் குவிந்திருந்த ஆரஞ்சுப் பழக் குவியல்களில் கும்பல் கும்பலாய் நின்ற பயணிகள், ரயில் பெட்டிக்குள் கூட்டம் கூட்டமாய் விழுந்தடித்து ஓடினார்கள். ஒரு பெட்டியில் அவசர அவசரமாய்ப் பெட்டி படுக்கையோடு நுழையப் போன ஒருத்தரை, உள்ளே இருந்த மார்வாடிக் குடும்பம் வெளியே தள்ளிக் கொண்டிருந்தது. இன்னொரு பெட்டியில் ஏறுவோரை இறங்குவோரும், இறங்கு வோரை ஏறுவோரும் தங்களை அறியாமலே தடுத்துக் கொண்டு இருந்தார்கள். பதிவு செய்யப்படாத மூன்று ரயில் பெட்டிகளில், ஆண் பெண் வேறுபாடின்றி ஒரு போரே நடந்து கொண்டிருந்தது.

ரயில் புறப்படப் போவதாக அனுமானித்தும், கால் டம்ளர் தேநீரைக்கூட மிச்சம் வைக்க விரும்பாத ஒரு தெலுங்குக்கார 'மனவாடு' அந்த சூடான திரவத்தை வாய்க்குள் விடுவதற்குப் பதிலாக மூக்கிற்குள் விட்டு முகம் சுழித்துத் தும்மினார். சில பெட்டிகளில் உள்ளே இருந்த பெண்கள் "ஏமண்டி... ஏமய்யா... எந்தா... என்னங்க..." என்று வெளியே சுகவாசிகள் போல் நின்ற சொந்தவாசிகளைக் குரல்களால் சுரண்டிக் கொண்டு இருந்தார்கள்.

மொத்தத்தில் அந்த பிளாட்பாரமே பூகம்பம் ஏற்பட்டு 'குய்யோ முறையோ' என்று கூவுவது போலிருந்தது. மனிதக்குரல் என்று தனித்துக் கண்டுபிடிக்க முடியாத கூட்டக்குரல். தவளைகளின் இரவுவேளைக் குரலையும், தேனீக்களின் பகல் வேளைக் குரலையும் ஒன்று சேர்த்ததுபோல் கடைசி நிமிட வியாபாரச் சத்தம் இறுதி

நேரச் சில்லரைச் சண்டை... இந்தியும் தமிழும், தெலுங்கும், மராத்தியும், ஆங்கிலத்திற்குத் தாதிகளாகி, ஆங்காங்கே ஓலமிட்ட பல்மொழிக் குரலோசை.... கடைசி நிமிடக் கைமுத்தங்கள்... கண்ணீர் வெளிப்பாடாக மாறிய இறுதிநேர வழியனுப்பு உபசாரங்கள்... அப்போது_

வடக்கே போகும் ரயிலிலிருந்து தெற்கே போகும் ரயிலின் வயிற்றுப் பெட்டியான - சாப்பாடு சமைக்கும் தனிப் பெட்டிக்கு அருகே, பிளாட்பாரத்தில், பிடரியில் கை வைத்தபடி ஒரு சிறுவன் நின்றான். அவனது தோற்றத்தையும், அழுக்கடைந்த வேட்டியையும் பார்த்த பலர், அவனை விட்டு ஒதுங்கியபடியே நடந்தார்கள். இப்போது ஒரு முண்டாசுப் பயில்வான் அவனருகே வந்தான். சின்ன வயதுதான் என்றாலும், அந்த முண்டாசு அவனை தாதாவாக காட்டியது. பையனின் கழுத்தை, பாம்பு தவளையை பிடிப்பது போல் தனது ஒரு கைக்குள் வைத்துக் கொண்டே, அவன் முகத்தை அங்குமிங்குமாய் ஆட்டியபடியே கேட்டான்.

"ஏண்டா... அந்த ரயிலுல இருந்து இறங்கினே... சோமாறி? நான் படிச்சப் படிச்சு பல தடவை சொன்னது, ஒன் காதுல விழலியா..? இன்னைக்கு மட்டும் நீ வரல.... மவனே அவ்வளவுதான்..."

அந்தப் பயல், அவன் கைமுஷ்டி அளவுகொண்ட தன் முகத்தை அங்குமிங்குமாய் திருப்பி, உடம்பை வில்போல் வளைத்து, அவன் காட்டும் ரயிலை பார்க்க மறுத்ததுபோல், தென்நோக்காய் திரும்பி 'ஆய்... ஊய்...' என்று தவளை போலவே ஓலமிட்டான். பிறகு அவனைப் பார்த்து, டில்லியில் பயங்கரமான குளிர் என்பதை குறிப்பால் உணர்த்துவதுபோல், கைகளை மார்பில் குறுக்காய் வைத்து உடம்பை வெடவெடப்பாய் ஆட்டிக் காட்டினான். சிறிது நேரம் யோசித்த அந்த முண்டாசுக்காரன் விரக்தியாகப் பேசுவது போல் பேசினான்.

"சரி எனக்கென்ன....? வந்தா... வராட்டா போ... சுந்தரண்ணன் டில்லிக்குப் போற ரயிலுல எஸ். 8 பெட்டியில இருக்கார். ஒன்னை கூட்டி வரச் சொன்னாரு..."

தனக்குத் தெரியாமல் சுந்தரம் 'அப்' வந்திருக்க முடியாதே என்பதுபோல், பயல் கீழுதட்டில் வெள்ளரிக்காய் விதைகள் போன்ற பற்களை பதித்தபோது, முண்டாசு கிண்டலும் கேலியுமாய் பேசினான்.

"ஒன்னை மாதிரி அவரு என்ன ஓசி கிராக்கியா? பணம் கொடுத்து, டிக்கெட் எடுத்துட்டு டில்லிக்கு வரார். ஒன்னை கையோட கூட்டி வரச்சொன்னார்."

பயல், இப்போது வடக்கு நோக்கி முகம் போட்டான். முண்டாசு இளைஞனின் கையைப் பிடித்தபடியே 'வா போகலாம்' என்பதுபோல், அவனை டில்லியை நோக்கிப் போகும் ரயிலுக்கு இழுத்தான். 'இப்ப மட்டும் துரைக்கு, டெல்லி குளிர் தெரியலையோ?' என்றான் முண்டாசு.

அந்தப் பயல், தான் என்னமோ ஒரு எஞ்சின் மாதிரியும், அந்த முண்டாசு, ஒற்றை ரயில் பெட்டி மாதிரியும், தனது இரண்டு கைகளால் அவனது கைகளை இழுத்துப் பிடித்தபடி ஓடினான். அந்தக்காலத்து கரி எஞ்சின் மாதிரி அவன் வாயிலிருந்து பனிப்புகை கக்கியது. அந்தச் சமயம் பார்த்து, இன்னொருத்தன் ஓடி வந்தான். அவன் ஓடி வந்த வேகத்தை பார்த்ததும், நின்று கொண்டிருந்த பயணிகள் வண்டிக்குள் ஏறினார்கள். வண்டிக்குள் இருந்த பயணிகள், வெளியே வந்தார்கள். வந்தவன், முண்டாசுக்காரனை இழுக்கும் அந்தப் பயலுக்கு முன்னால், வழி மறியல் செய்தபடியே, முண்டாசை பின்பக்கமாகத் தள்ளினான். ஒரு உற்சாகமான சண்டை நடக்கப் போவதுபோல் பெரும்பான்மையான பயணிகள் ரயில் பெட்டிகளின் ஜன்னல் வாய்களில் முகங்களை பதித்தார்கள். இதற்குள், வழிமறித்தான் ஒரு அதட்டல் போட்டான். அது, புயலுக்கு முன் நிலவும் அமைதிபோல், ஒரு இடி முழக்கமான சண்டைக்கு ஏற்பாடு நடப்பதாக பயணிகள் ரசிக்கத் துவங்கினார்கள். இந்தச் சண்டையை கிட்டே நின்று பார்ப்பதற்காக கீழே இறங்கப்போன ஒரு சில ஆண்களை, அவர்களது சரிபாதிகள் அல்லது சகோதரிகள் சட்டைகளை பிடித்து பின்னோக்கி இழுத்தார்கள். சில பெண்கள் போக விட்டார்கள் - அப்படியாவது சனியன் பிடித்த சர்வாதிகார மனிதர் உதை வாங்கிக்கொண்டு வரட்டும் என்பதுபோல். வழிமறித்தான் அதட்டலை பேச்சாக்கினான்.

"ஒனக்கு அறிவிருக்காடா ? வழக்கமாய் எங்ககூட வாரது மாதிரி வரவேண்டியதுதானே...? இந்தப் பய பேச்சைக் கேட்டு, டெல்லி குளிர்ல சாகப் போறியா? வாடா போகலாம்."

அந்தப் பயல், 'சுந் அப்.. சுந் அப்..' என்று வலது கையை தலைக்கு மேல் வில்லாய் வளைத்து, விரல்களை முன்பக்கமாக படர விட்டான். வந்தவன் ஒன்றும் புரியாமல் விழித்தபோது, பயல், 'சுந் அப்... டிக்... டிக்...' என்று சொன்னபடியே, முண்டாசுக்காரனைப் பிடித்து, 'வா போகலாம்' என்பதுமாதிரி இழுத்தான். உடனே முண்டாசுக்காரன், வந்தவனைப் பார்த்து கண்ணடித்தபடியே_

"இவனோட அப்பா சுந்தரம், இவனை மாதிரி ஓசிக் கிராக்கியா இல்லாமல்... டிக்கெட்டோட டெல்லி ரயிலுல இவனுக்காக காத்திருக்கார்."

வழிமறித்தான், அந்தப் பயலின் காதை திருகியபடியே, 'முட்டாப்பயலே... இவன் முரடன் மட்டுமில்ல.. முழுப் புளுகன்... சுந்தரம் அண்ணனுக்குத்தான் ரயில் பாஸ் இருக்கே... அவர் எப்படி டிக்கெட் எடுப்பார் என்கிற அறிவு ஒனக்கு இருக்கா? இவன் ஒன்னை ஏமாத்துறான். குளிர்ல நனைச்சு கொல்லப் பார்க்கிறான். பேசாம என்கூட வா' என்று பயலின் கையைப் பிடித்து இழுத்தான். பயலும், தன் புத்தியை செருப்பால் அடிக்க வேண்டும் என்பது போல், கையை செருப்பு மாதிரி வைத்துக் கொண்டு, தனது தலையிலேயே அடித்துக் கொண்டான். பிறகு, யாரும் எதிர் பார்க்காத வகையில், முண்டாசுக்காரனின் வயிற்றில் கீச்சுக் கீச்சுக் காட்டினான். முண்டாசு பிடியை விட்டபோது, பயல் தென்நோக்கி ஓடினான். அவன் பின்னால், முண்டாசும், வழிமறிப்பு செய்தவனும் தலைவிரி கோலமாக ஓடினார்கள்.

இந்த சயமத்தில், அந்தப் பயல், ஓட்ட வேகத்தில், தலையில் பழக்கூடை சுமந்து வந்த, ஒரு கிழட்டு வியாபாரி மேல் இடறி விழுந்தான். அவர் நிலை தடுமாறினாலும் கீழே விழவில்லை. ஆனால் அவரது கூடை விழுந்து கர்ணம் போட்டது. ஆரஞ்சுப் பழங்கள் கோழிக்கூட்டிற்கு வெளியே வந்த குஞ்சுகள் மாதிரி, கூடையில் இருந்து விடுபட்டு பிளாட்பாரத்தில் உருண்டோடின. அவற்றைச் சில பிச்சைக்காரச் சிறுவர்களும், வசதியுள்ளவர்கள் போல் தோன்றிய ஒருவரும் பொறுக்கினார்கள். அந்தப் பயல், அந்த மசால்வடை வியாபாரி மீதும் இடறி விழமாட்டானா என்பது போல் ஏங்கிப் பார்த்தார்கள். இப்படிப் பிச்சை எடுத்துப் பிழைப்பு நடத்துவதைவிட, இந்தச் சிறுவனைப் போலப் பராக்குப் பார்த்து ஓடுவதுபோல் ஓடி, கிழட்டு வியாபாரிகள் மீது இடறி விழுவது போல் விழுந்து, பொறுக்கலாமே என்றுகூட அவர்களில் ஒருவன் சிந்திப்பதுபோல் கைவிரல்களைப் பிடிபட்ட பழத்தின்மேல் அடித்தான்.

இதற்குள், அந்த மராத்திக் கிழவன், சின்னக் கிழவன் போல் தோன்றிய அந்தப் பயலைப் பிடித்துக் கொண்டான். அவன் கையைத் திருகப் போனான். அவன் ஒற்றை வேட்டிக்குள் பணம் இருக்குமா என்பதுபோல், அதை அவிழ்க்கப் போனான். ஆனால், அந்தச் சிறுவனோ, ரயில் சக்கரம் ஒன்றில் ஒட்டிக் கிடந்த பத்துப் பதினைந்து பழங்களைச் சுட்டிக் காட்டி, அவற்றை எடுப்பதற்குத் தன்னை இறக்கிவிடும்படிக் கிழவனுக்குச் சைகை செய்தான். பழத்தை விடுவதைவிட, பையனை விடுவது மேல் என்பதுபோல் நினைத்த கிழவன், அந்தப் பயலையும் ரயில் பாதையையும் மாறி மாறிப் பார்த்துவிட்டு, பின்னர் பையனைப் பிடித்து, கீழே இறக்கப் போனான் இந்த அமளி புரியாத முண்டாசுக்காரன், கண்ணுக்குத் திரைபோட்ட குதிரைபோல, வேக வேகமாய் ஓடினான்.

கீழே இறங்கிய சிறுவன், ரயிலுக்கும் பிளாட்பாரத்திற்கும் இடையே சிரமப்பட்டு நின்று ஆரஞ்சுப் பழங்களை பொறுக்கு வதற்குக் குனியப் போனான். வலைப் பனியனும், ஒற்றை மடிசார் வேட்டியும், மராத்தித் தொப்பியும் வைத்திருந்த கிழவனுக்கு மனசு கேட்கவில்லை. அந்தப் பயலை கைகொடுத்துத் தூக்கி விட்டான். பிறகு, கூடையில் 'ஒண்ணே ஒண்ணு கண்ணே கண்ணு' என்று இருந்த ஆரஞ்சுப் பழத்தை அந்தப் பயலிடம் நீட்டினான்: பயலோ, அதை வாங்கிக் கிழவனுக்கே திருப்பிக் கொடுத்தான். இறுதியில், அந்த ஊனப் பழத்தை வாங்கிக் கொண்ட சிறுவன், அப்போதுதான் துரத்தியவனின் நினைவு ஏற்பட்டதுபோல், திடுக்கிட்டு நாற்புறமும் சுற்றிப்பார்த்தான். பிறகு, முண்டாசுக்காரன் கூட்டத்திற்குள் மறைந்துவிட்ட திருப்தியில், பிளாட்பாரத்தில் நிதானமாக நடந்தான்.

அந்தச் சிறுவன் சிறிது சிறிதாய் நடந்து, ரயிலின் சாப்பாட்டுப் பெட்டிக்கு அருகே வந்தபோது, திடீரென்று வீறிட்டுக் க்த்தினான். வாயில் வைத்திருந்த மிச்சம் மீதி ஆரஞ்சுச் சுளைகளைத் துப்பியபடியே 'அப்... அப்...'' என்றான். நரி போல் ஊளையிட்டான். முண்டாசின் கிடுக்கிப் பிடியில் நடுநடுங்கியபடியே முனங்கினான். சிறுவனின் தலையைக் காலிடுக்கில் வைத்தபடியே முண்டாசுக் காரன், “நீ இன்னிக்கு என் கிட்டே இருந்து தப்பவே முடியாது” என்றான். கால்களை விரிவாக்கி, பயலின் தலையைத் தூக்கிப் பிடித்து நிறுத்துவதற்காக முண்டாசு குனிந்தபோது_

அந்தச் சிறுவன், முண்டாசுக்காரனின் காலைக் கடித்தான். அந்தக் கடி கொடுத்த வலியைவிட, எச்சில் பட்ட அசூயையில், முண்டாசு கால்களை மேலும் மேலும் அகலமாக்கியபோது, அந்தப் பயல் காலிடுக்கில் சிக்கிய தலையை, ஆமைபோல் பின்னால் இழுத்து, முண்டாசுக்காரனின் முதுகையே ஆதரவாய்ப் பிடித்தபடி எழுந்தான். எழுந்த வேகத்தில் ஓடினான். முண்டாசுக்காரன் முன்னிலும் அதிக வேகமாய் அவனைத் துரத்தினான். மீண்டும் ஓட்டமும், துரத்தலும்... எதிரே வந்த தள்ளுவண்டி விளையாட்டுப் பொம்மை வியாபாரி, பயல் வண்டியில் மோதி, பொம்மைகள் தரையில் விழுந்து, அன்றைய வாழ்க்கை பொம்மை வாழ்க்கையாய் ஆகிவிடக்கூடாதே என்ற பயத்தில், அவனைப் பிடித்தார். அப்போது அங்கே ஓடிவந்த முண்டாசுக்காரன் அவனிடமிருந்து அந்தப் பயலைப் பறித்துக் கொண்டான்.

அந்தச் சிறுவன், இப்போது நடப்பது நடக்கட்டும் என்பது போல் வீறாப்பாக நின்றான் பயலுக்குப் பதினான்கு வயதிருக்கலாம். வயதுக்கேற்ற உடம்பில்லாதவன்... ஒட்டடைக் கம்பு மாதிரியான

தோற்றம். கன்னங்கரேறென்ற நிறம். எண்ணெக்கருப்பு என்பார்களே நாட்டுக் கோட்டைச் செட்டியார்களின் நிறம் அது மாதிரியான மின்னுங் கருப்பனல்ல. முகம் சுழித்துப் பார்க்க வைக்கும் 'துக்கக்' கருப்பு. பறட்டைத் தலை... ஒடுங்கிய விழித்திரைக்குள் உள்ளோடிய கண்கள்... அவன் மேனி... அந்த முண்டாசுக்காரனின் இரண்டு கால்களின் பரிமாணத்திற்கு இருக்கலாம். குழிபட்ட கன்னங்கள், நீளவாகுவான முகம்... அவன் பற்கள்கூட மெலிந்து இருப்பது போன்ற தோரணை. நைந்து போன பழைய வேட்டி. இடுப்புக்கு மேலே குப்பைத் தொட்டியில் கிடந்து எடுத்தது போன்ற ஒரு பனியனைப் போட்டிருந்தான். நூல் கற்றைகளை விட அழுக்கை அதிகமாகக் கொண்ட, துண்டு ஒன்றை, தோளில் தாறுமாறாகப் போட்டிருந்தான். ஒரு கையை முண்டாசுக் காரனிடம் கொடுத்து விட்டு, இன்னொரு கையைக் குறுக்காக மடித்து வைத்தபடி எங்கேயோ வெறித்துப் பார்த்தான்.

இதற்குள் வழிமறித்தானும், தடகள ஓட்டம்போல் வண்டிகளுக்கு வழிவிட்டும், மனிதர்களை தள்ளிவிட்டும், வழுக்கி வழுக்கி ஓடி வந்துவிட்டான். முண்டாசுக்காரனிடம் பொய்க் கோபம் போட்டுப் பேசினான்.

"அவனை விடுடா, மச்சான்..."

"விட முடியாதுடா மாமா."

"டேய்... அந்தோணி... சொல்றதைக் கேளுடா... டில்லிக் குளிரு அவனுக்குத் தாங்காதுடா.... விட்டுத் தள்ளுடா."

"இல்லடா, பலராமா... சென்ரல் ஸ்டேஷன்ல எங்கூட டில்லிக்கு வாரதாய் இந்தப் பயல் தலையாட்டினான். இப்பக்காட்டி பால்மாறுறான்.... ஒரு சொல்லுல நிற்காண்டாமோ....?"

"வரமாட்டேன்னு ஒரு சொல்லுலதானே நிற்கான்...? அவனை ஏண்டா வம்பு பண்றே?"

"வம்பு நீதான் பண்றே. நீ இருக்கிற தைரியத்துலதான் பயல் எகிறினான். கொடுத்த வாக்கைக் காப்பாத்தாமல் டபாய்க்கிறான்... டேய் அவனைத் தொட்டே.... அப்புறம் நான் பார்த்துக்கொண்டு இருக்கமாட்டேன்...."

"ஏண்டா மச்சான் கோபப்படுறே?"

"இல்லடா... மாமா.. எனக்கு அவன் வரணும்..."

"டேய் அந்தோணி.. ஏதும் சரக்கு போட்டுக்குனு பேசுறியா...? டெல்லியில இருந்துதானே நான் வாறேன்... பயங்கரமான குளிருடா

மச்சான்... காலையில பத்து மணி வரைக்கும்கூட கண்ணை மறைக்கிற பனிடா... காலு கை உருகி ஒடிடும்போல பனி... ஒன் தடி ஒடம்பு தாங்கும். இந்தப் பூஞ்சை உடம்பு தாங்குமா...?"

"நான் என்ன ஒன்னை மாதிரி மூளையில்லாத முண்டமுன்னு நினைக்குறியா...? இது தெரிஞ்சுதான் பயலுக்கு பர்மா ஸ்வெட்டர் வாங்கி வச்சுருக்கேண்டா.. கம்பளிகூட வாங்கியிருக்கேன்..."

"சரி, அடுத்த வாட்டி கூட்டிப் போ... இப்போ வேண்டாம்."

"இந்த வாட்டி வராட்டால் அவன் எந்த வாட்டியும் வரப்படாது.... டேய் நடடா..."

"விட்டுடா... மாமா... பாவண்டா..."

"எதுடா பாவம்? பாவமுன்னா உனக்கு அர்த்தம் தெரியுமாடா...? நான் கிறிஸ்தவன்.. சொல்லுறதைக் கேளு... பைபிள் சொல்லுது... பாவத்தின் சம்பளம்..."

"ஆமாடா.. இந்த மாதச் சம்பளத்தை வாங்கிட்டியா...? ஒரு அம்பது ரூபாய் கொடுடா..."

"இந்தப் பயலையும் என்னையும் பிடிக்காட்டால் ஐம்பதில்லை... அறுபதாய்த் தாறேன்."

"நீ ஐநூறு தந்தால்கூட டில்லிப் பனிக்கு, இந்தப் பயலை காவு கொடுக்கச் சம்மதிக்கமாட்டேன்."

"டேய்.... இதுக்கு மேல பேசினே.... எனக்கு நிசமாவே கோபம் வரும்..."

"சரிடா... உன் இஷ்டம்... குளிர்ல சாகணுமுன்னு அவன் தலைவிதி இருந்தா யாரால தடுக்க முடியும்? உன்னால மட்டுந்தான் தடுக்க முடியும். வாறேண்டா மச்சான்."

அந்தோணி, அந்தப் பயலை வலுக்கட்டாயமாக பிடித்து இழுத்துக்கொண்டு அவனை நகர்த்தியபோது, இடையிலே ஒரு தள்ளுவண்டி வந்தது. அதற்காக இடங்கொடுத்து, பயல்மேல் போட்டிருந்த பிடியை லேசாய் தளர்த்தியபோது, அந்தப் பயல், அவன் கையைக் கடித்தான். பொய்க் கடிதான். அதில் பொங்கும் எச்சில், அந்தோணி 'அப்'புக்கு பிடிக்காது என்பது அவனுக்குத் தெரியும். அதோடு விடவில்லை... அவன் வயிற்றில் மீண்டும் கீச்சு கீச்சு காட்டினான். அந்தோணியின் கை, வயிற்றுப் பக்கம் போன போது, இவன் லாகவமாக தன் கைகளை விலக்கிக்கொண்டே, சென்னை செல்லும் ரயிலை நோக்கி, முழு வேகத்தோடு ஓடினான்.

# 2

அந்த ரயில், கனகவிசயன் தலையில் கல் ஏற்றியதாக கூறப்படும் சேரன் செங்குட்டுவன்போல், வடபுலத்தில் இருந்து தென்புலத்திற்கு புறப்பட தயாராகிக் கொண்டிருந்தது.

அந்த ரயிலின் எஸ்-11 பெட்டியில் ஆறு இருக்கைகள் அதாவது ஒரு நீளப் பெஞ்சும், அரைப் பெஞ்சும் ரயில்வே துப்புரவுத் தொழிலாளர் களுக்குச் சொந்தமானவை. பலராமன், ஜன்னலோரம் தபக்கென்று உட்கார்ந்தான். செம்மேனிக்காரன், லேசாய் நீண்ட பற்கள், எலும்பும் சதையும் ஒன்றைவிட்டு ஒன்று பிரியப் போவதில்லை என்று சபதமேற்றது போன்ற கட்டுடம்புக் காரன். இவனுக்கு இடம் கொடுப்பதற்காக, வலது காலை நகர்த்திய படி, அங்குலம் அங்குலமாக நகர்ந்தான் ஒருத்தன். பலராமனுக்கு ஏதோ பெரிய மனது பண்ணி இடம் கொடுப்பவன் போல.... பெயர் நாராயணனாம். ஆனால் அவனிடம் சக்கிரதாயு தத்திற்குப் பதிலாக இரும்பு நட்டுக்களும் ஸ்பேனர்களும் இருந்தன. பதவிப் பெயர் உதவி மெக்கானிக்காம்.... இதுக்கு நாற்பது வயதுக்காரன் அறுபது வயது நரைமுடியோடு காட்சிக் காட்டினான்... தலைமை மெக்கானிக்காம்... எதிர்ப் பெஞ்சில், ஒரு சர்தார்... அவரைப் பயத்தோடு பார்த்தபடியே... பல பயணிகள் பெட்டியைக் கடந்து கொண்டிருந்தார்கள். அவருக்கருகே ஐம்பது வயதுக்கு மேற்பட்ட ஒரு பெண்... "அன்னையா... அன்னையா..." என்று வெளியே வேர்க்கடலைக் கொறித்தவரைப் பார்த்து, அவள் கூப்பிட்டதில் இருந்து அநேகமாய் அவள் கன்னடக் கிழவியாக இருக்கலாம், அவளுக்கருகே ஒரு அரும்பு மீசை இளைஞன்.

ரயில் பயல், சாவகாசமாக வருபவன்போல் உள்ளே வந்தான். அவனைப் பார்த்ததும், பலராமனும், நாராயணனும், தங்கள் இருக்கைகளுக்கு இடையே இடைவெளியை ஏற்படுத்தி, அவனை உட்காரச் சொல்வது போல் பார்த்தார்கள். பயல், பேசாமல் பெரிய மனிதத் தோரணையுடன், கைகளைக் கட்டியபடி நின்றபோது, நாராயணன் கிண்டலாய்க் கேட்டான்.

"துரை உட்கார மாட்டிங்களோ? அடச் சீ...... உட்காருடா; இல்லாட்டால் வேற எவனாவது இடையில் வந்து குந்தப்போறான்."

பயல் பேசாமல் இருந்தான். பலராமன், அவனை கேள்வியோடு பார்த்தபோது, அவன், இருக்கையைச் சுட்டிக் காட்டினான். பலராமன் சிரித்தபடியே, "நீயே ஒசி.. அதுல வேற... ஜன்னல் சீட்டு

கேட்குதோ?" என்று சொல்லிவிட்டு, வேறு எங்கேயோ பார்த்த போது, அந்தப் பயல் பலராமனை, செல்லமாகத் தள்ளினான். பலராமன், அவன் தள்ளலால் நகர்ந்தவன்போல் பாசாங்குத் தனமாய் நகர்ந்து, மீண்டும் தனது இருக்கையிலே விழுந்தான். பயலுக்குக் கைவலிச்சது தான் மிச்சம். பிறகு நாராயணனைப் பார்த்து "அப்... அப்..." என்று கூவியபடியே, பலராமன் இருக்கையை வாங்கித் தரும்படி சமிக்கை காட்டினான். நாராயணனுக்கு மனசு இளகியது.

"டேய் பலராமா... அந்த இடத்தை விட்டுடு... துரைக்கு அதுதான் வேணுமாம்."

"அவன் கேட்டதையெல்லாம் கொடுத்துடணுமா? அப்புறம் என்னவெல்லாமோ கேட்பான்."

"சரிதாண்டா, ஒழிஞ்சு போறான்."

"ஒழிஞ்சு போகப்படாதுன்னுதான் கொடுக்கல. கையை வெளில நீட்டுவான். தந்திக் கம்பத்துல அடிபடும்."

"அந்தக் கதையே வேணாம்... விட்டுக் கொடு."

"இதுக்கு மேல பேசாதடா."

"எதுக்கு மேலயும் பேசுவேன்... ஏன்னா அது என்னோட சீட்டு... தோ... நான் இருக்கேனே.... அதான் ஒன்னோட சீட்."

பலராமனின் சிரித்த முகம் கறுத்தது... மடமடவென்று எழுந்தான். அந்தச் சிறுவனைப் பார்த்து "மவராசனாய் உட்காருடா" என்றான். பயல் உட்காராமல், அப்படி பேசியவனையே பார்த்தான். உடனே பலராமன், நாராயணனிடம் இருக்கும் கோபத்தைக் காட்டும் வகையில் அந்தப் பயலை, தோளை அழுத்தி உட்கார வைத்தான். ஆனால், பையனோ மீண்டும் எழுந்தான். அப்புறமும் பலராமன் "ஒனக்காக அந்தோணிய கிச்சுக் காட்டுனேன் பாரு... எனக்கு இதுவும் வாணும்... இன்னமும் வாணும்..." என்று சொன்ன படியே அந்தப் பயலைத் தோளைப் பற்றிக் கட்டாயமாக உட்கார வைத்தான்.

இப்படி, பலராமன் அந்தச் சிறுவனை இருகரங்களால் தோளை அழுத்தி ஜன்னலோர இருக்கையில் உட்கார வைப்பதும், அவன் கை விடுபட்டதும், பயல் எழுந்திருப்பதும் பல தடவை நடந்து கொண்டிருந்தது. ஒரு குரல் பேசிக்கொண்டே உள்ளே வந்தது.

"பச்சை மண்ணை ஏன்டா இந்தப் பாடு படுத்துறே...?"

பலராமன், சொன்னவனை ஏறிட்டுப் பார்த்தான். நவாப்ஜான். அவனைப்போல் இன்னொரு தோட்டித் தொழிலாளி. குல்லா போடாதவன். முஸ்லீம் என்று அடையாளம் காண்பது சிரமம். பலராமன், நவாப்ஜானிடம் முறையிட்டான்.

''ஜன்னலோர சீட்டு என் சீட்டுன்னு நாராயணன் கேட்கிறாண்டா... அண்ணன் தம்பியாய் நாம் பழகுறப்போ சட்டம் பேசுறது நாயமான்னு கேளுடா சாய்பு..."

நவாப்ஜான் நாராயணனின் கண்களில் கண் பதித்து இப்படிக் கேட்டான்.

"ஏண்டா... நார்ணா நாயமாடா...?"

"நான் நாரவுமுல்ல... மணக்கவுமுல்லடா... குட்டிப் பையன் ஆசைப்படுறானேன்னு கேட்டுட்டேன். இவனுக்கு ரோஷம் வரட்டுமேன்னு கேட்டேன். சில்மிஷமாய்க் கேட்கல..."

"அது எனக்குத் தெரியும்... ஆனாலும் "நான்... நீ..." என்ற வார்த்தை நமக்குள்ளே வரப்படாது... எனக்கு என்கிறதுக்குப் பதிலாய் எங்களுக்குன்னும், நான் என்கிறது நாமுன்னும் வரணும்."

''ஆரம்பிச்சுட்டியா ஒன்னோட துப்புறவு ஊழியர் சங்க வேலையை...?"

"நல்லாக் கேட்டடா நவாப்... அந்தப் பயல்கூட எம் மனம் நொந்துட்டோன்னு உட்காராமல் நிற்கான்... இதுகூட இல்ல இந்த நாராயணனுக்கு...."

"ஏண்டா என் தலையை உருட்டுறே...? நான் சொன்னது தப்புத்தான்..."

போதும் என்பதுபோல், பலராமன் தலையாட்டினான். ஏதோ பெரிய தப்பு செய்துவிட்டதுபோல நின்ற அந்தப் பயலை, இழுத்துப் போட்டு, தன் மடியில் உட்கார வைத்துப் பின்னர் சாளரத்தின் பக்கம் சாய்த்தான். அப்போது இரண்டு பெண்கள், மூன்று ஆண்களோடு உள்ளே வந்தார்கள். ஒருத்திக்கு வயது இருபத்து நான்கு இருக்கலாம். கழுத்தில் மஞ்சள் லைசென்ஸ் தொங்கியது. செக்கச் சிவந்த நிறம். எப்போதும் சிரித்துக் கொண்டிருப்பது போன்ற தோரணை. இன்னொருத்தி வெண் சிவப்பு... வெறுங் கழுத்து.... மஞ்சள் சரடு போட்டவள், திருமணம் ஆகாதவள் மாதிரியும், போடாதவள் அப்படி ஆனவள் மாதிரியும் தோன்றினார்கள். காலி இருக்கைகளில் அவர்கள் உட்காரப் போனார்கள். தலைமை மெக்கானிக் கோடிநாதன் வாய்விட்டார்.

"ரயில்வே தொழிலாளிகளுக்காக உள்ள இடங்கள். நீங்க அதுல உட்காரக்கூடாது.... உட்கார முடியாது..."

அந்தப் பெண்களின் கூட வந்த ஆடவர்களில், ஒரு ஒல்லியான மனிதர், எல்லோரையும் பொதுப்படையாகப் பார்த்து முறையிட்டார்.

"இவள் என் சகோதரி. அவள் என் சித்தி மகள்... ரெண்டு பேரும் டில்லியில் கிளார்க்குகளாய் வேலை பார்த்தாங்க... இப்போ சென்னைக்கு மாற்றல் வாங்கிக்கொண்டு போறாங்க... நான் இந்த நகரத்துல பொதுப் பணித்துறையில் இருக்கேன்.... நேற்றைய ரயில்ல வந்த இவங்களைத் தெரியாத்தனமாய் என் வீட்ல தங்க வச்சுட்டேன்... ரயில் பிரயாணம் இவ்ளோ கிலோமீட்டருக்கு மேல இருந்தால் ஒரு நாள் தங்கலாம். சம்பந்தப்பட்ட அதிகாரிங்க கிட்டேயேயும் ஜர்னியை பிரேக் செய்யுறதாய் சொல்லிட்டோம். சீட் ஒதுக்குவாங்கன்னு நினைச்சால் ஒதுக்கல. ரயில்வே இலாகாவைப் பற்றி ஒங்களுக்குத் தெரியாதா.... ஒரே ஊழல்..."

நவாப்ஜான், காரமாயும் சாரமாயும் பதிலளித்தான்.

"இந்த நாட்ல... எந்த இலாகாவுலே ஊழல் இல்லாமல் இருக்குது.... இந்த ரயில்வே இலாகாவுல இல்லாம இருக்குதுக்கு? இந்த நாட்டில் உள்ள ஆயிரக்கணக்கான தாலுகா அலுவலகங்களில் ஒண்ணே ஒண்ணுலயாவது லட்சக்கணக்கான போலீஸ் ஸ்டேஷன்கள் ஒண்ணுலயாவது ஊழல் இல்லன்னு சொல்ல முடியுமா...? பெரிசா ரயில்களை மட்டும் பேச வந்துட்டிங்களே...? எங்களுக்கும் ஊழல்ல உரிமை வேண்டாமா... சொம்மா கடமையை மட்டும் செய்தால் எப்டி?"

"இப்போ அது பிரச்சினை இல்ல தம்பி... ஒங்களைக் கவனிச்சுக்கிறேன். இவங்களுக்கு எப்படியாவது நீங்கதான் இடம் கொடுக்கணும்."

நவாப்ஜான் 'ரேட்டுக்காக' இழுத்தான்.

"இடம் இல்லியேன்னு பார்க்கேன்..."

திடீரென்று ஜன்னலோர இருக்கையில் உட்கார்ந்திருந்த சின்னப்பயல் எழுந்தான். நவாப்ஜானைப் பார்த்து 'அப்... அப்...' என்று சொன்னபடியே தனது இடத்தில் அவர்களில் ஒருத்தி உட்காரலாம் என்று சைகை செய்தான். உடனே அந்த நாக்பூர் தமிழர் "பரவாயில்லே.... ஒரு சீட்லயே ரெண்டு பேரும் அனுசரிச்சு உட்காருவாங்க. நாங்க பெட்டி படுக்கையோடு வாறோம்" என்று சொல்லிவிட்டு மறைந்தார் - அந்தப் பெண்களுடன்.

நவாப்ஜானுக்குப் பயங்கர கோபம். இருக்கையில் உட்காராமல் நின்ற சிறுவனை முறைத்துப் பார்த்தான். பிறகு, அவன் காதைப் பிடித்துத் திருகியபடியே கத்தினான்.

"முட்டாப் பயலே... சொம்மா இருக்க வேண்டியதுதானடா... பெரிய தர்மதுரை... பிச்சப் போடுறாரு... கடைத் தேங்காயை எடுத்து வழிப் பிள்ளையாருக்கு உடைக்கிறானாம் முட்டாப் பய..."

அந்தச் சிறுவன் காதுவலி தாங்காமல் நரிபோல் ஊளையிட்ட போது, அந்தப் பெண்கள் பெட்டி படுக்கையோடு வந்து, உட்கார்ந்திருந்த பயலைக் கண்களால் எழுப்பி உட்கார்ந்தார்கள். நவாப்ஜான், அப்போது ஊழல் பேசியவரை 'ஓரம்' கட்டி பேசியனுப்பினான்.

திடீரென்று ரயில் ஊளையிட்டது. மெள்ள மெள்ள நகர்ந்தது. அப்போது அந்தப் பயல் பெட்டிக்கு வெளியே வந்தான். "அப்.. அப்.." என்று கத்தியபடியே அந்தத் தொழிலாளர்களை விட்டுவிட்டு, பெட்டி பெட்டியாகக் கடந்து ஓடி ஓடி ஓய்ந்து கொண்டிருந்தான். பயணிகள்மேல் மோதி, படுக்கைகளைக் காலால் இடறி, எதிர்ப் பட்டவர்களை மோதி, எங்கேயோ போகப் போகிறவன்போல் ஓடிக் கொண்டிருந்தான்.

பலராமன், படபடத்தான்.

"டேய் சாய்பு பையா... ஒன்னால அந்தப் பயல் ஓடிட்டான் பாரு... ரோஷக்காரப் பயல்.... ரயில்ல இருந்து கீழே குதிச்சுத் தற்கொலை பண்ணப் போறாண்டா... வாங்குன பணத்தை அப்புறம் எண்ணிக்கலாம்டா... வாடா... நாமும் ஓடுவோம்... அவனை சாவுலே இருந்து காப்பாத்துவோம்..."



அந்த ரயில், மனிதனின் நடை வேகத்தில் போனபோது, ரயில் பயல், பலரை இடித்துக்கொண்டு, ஓடும் ரயிலுக்குள்ளேயே பின் புறமாய் ஓடினான்.

வராந்தா மாதிரியான ஒடுக்கப் பாதை வழியாக ரயில் பெட்டி களுக்கு இடையே உள்ள இணைப்புப் பாலம் வழியாக, "அப்... அப்..." என்று சொன்னபடியே ஓடினான். என்னமோ ஏதோ என்று, ஒரு

சில பயணிகள், ரயில் சங்கிலியை இழுக்கப்போனார்கள். அப்படி இழுக்கப் போனவர்களை, மற்றவர்கள் இழுத்துப் பிடித்துத் தடுத்தார்கள். சிலர், அவன் எதையும் திருடி கொண்டு போகிறானோ என்பதுபோல், "திருடன், திருடன்" என்று சொன்னபடியே பின்னால் ஓடி, அப்புறம் இளைத்துப் போய் இருக்கைகளுக்குத் திரும்பினார்கள்.

எப்படியோ ஒரு பெட்டியின் வாசல் பக்கம் போய், அந்தோணியைப் பார்த்து விட்டான். கதவு, பாதி திறந்திருந்தது... அவனைப் பார்த்த பயல் "அப்... அப்..." என்றான். இன்னமும் பிடறிகளை கை பின்னியபடி நடந்த அந்தோணி, பயலை அதிசயித்துப் பார்த்தபடியே, ரயில் வேகத்தில் ஒத்து ஓடி, அவனைக் கீழே இறக்கி விடப்போனான். பயலோ, அவன் பிடியில் சிக்காமல், லாவகமாக ஒதுங்கியபடியே "அப்... அப்..." என்று சொன்னபடியே கையசைத்தான். விடை பெறுகிறானாம்

இதற்குள், ரயில் ஏதோ ஒரு காரணத்திற்காக நின்றது. "கட்டை வண்டிக்கு ரயிலுன்ன பேர் வச்சுட்டாங்கய்யா" என்று பக்கத்துப் பெட்டிப் பயணி ஒருத்தர் கத்தியபோது நவாப்ஜான், பலராமன், நாராயணன் உட்பட பல தொழிலாளர்கள் ஓடி வந்தார்கள். நவாப்ஜான் அந்தப் பயலைப் பார்த்து, பொய்யான கோபத்துடனும் மெய்யான வருத்தத்துடனும் அதட்டினான்.

"ஏண்டா, ஒன் காதைத் திருக எனக்கு உரிமை இல்லையா...? நூறு ரூபாய் சீட்டைக் கொடுத்திட்டியே... என்கிற ஆத்திரத்துல லேசாத்தான் காதைப்பிடிச்சேன். அதுக்கா இப்படியாடா ஓடுகாலியாகிறது... ஓடுகாலிப் பயலே!"

கீழே நின்ற அந்தோணி, மேலே நின்ற நவாப்ஜானை அதட்டினான்.

"அப்படியேதான் இருக்கட்டும்... அதுக்காக இந்த அப்பாவிப் பயலை அடிக்கலாமாடா...? வெற்றிலை மாதிரி இருக்கிற அவன் காதுல ஒன் உலக்கைக் கை பட்டால் என்னடா ஆகிறது? டேய், இந்த மாங்காய் மடையன்ககிட்ட நீ இருந்தது போதும், வாடா என்னோட... டில்லிக்கு ஜாலியாய்ப் போயிட்டு வரலாம்..."

அந்தோணி இரண்டு கைகளையும் நீட்டியபோது, அந்தப் பயல் சற்று உள்ளேபோய் நின்று கொண்டான். அங்கு நின்றபடியே அவனைப் பார்த்து "அப் அப்" என்று சொன்னபடியே கையைக் காலை ஆட்டி, பல்வேறு சமிக்ஞைகளைப் பண்ணினான் அந்தோணி மீண்டும் கோபப்பட்டு "பிறகு எதுக்குடா இங்கே ஓடி வந்தே" என்று கத்தினான்

பலராமன், விளக்கினான்.

"ஒனக்கு மூளையே கிடையாதுடா மச்சான்... நீ நடந்து போறதைப் பயல் பார்த்துட்டான். அவன் இல்லாமல், நீ வருத்தத்தோட போறதைப் புரிஞ்சுக்கிட்டான். மனசு கேட்காமல் ஒன்னைச் சமாதானப் படுத்துறதுக்காக ஓடி வந்தான்; நவாப்பு காதைத் திருகினான்னு கோபத்துல வரல... ஏண்டா ஊமப் பிசாசே, அப்படித்தானே?"

அந்தப் பயல் 'ஆமாம்' என்பது போல் தலையை மேலும் கீழும் ஆட்டினான். உடனே 'காது திருகி' நவாப்ஜானுக்கு மகிழ்ச்சி. அந்தோணிக்கு ஏமாற்றம். அதைப் புரிந்து கொண்ட பயல், அவனையும் தங்களோடு வரும்படிக் கையைப் பிடித்து இழுத்தான். "அப்... அப்..." என்று சொன்னபடியே ரயில் கதவில், ஒரு காலை ஆதாரமாக ஊன்றியபடியே இழுத்தான். அந்தோணிக்கு அந்த அன்புப் பிரவாகத்தில் அழுகையே வரும் போலிருந்தது. அதைக் காட்டிக் கொள்ளாமலே, சமாதானப்படுத்தினான்.

"ஒன்னை மாதிரி நான் என்ன ஓசிக் கிராக்கியாடா...? இஷ்டப் பட்ட ரயிலில் ஏறி இஷ்டத்துக்குச் சுத்துறதுக்கு முடியாதுடா... இது பொழப்புடா...."

அந்தப் பயல், அந்தோணி சொல்வதைப் புரிந்து கொண்டவன் போல், அவனை இழுப்பதை விட்டுவிட்டு, அவனையே பார்த்த படியே நின்றான். உடனே அந்தோணி, இரண்டு ரூபாய் நோட்டை அவன் வேட்டியில் மடித்து அதை இடுப்பில் சொருகிவிட்டுச் சொன்னான்.

"ஏண்டா கண் கலங்குறே? அடுத்த வாரம் டில்லிக்குப் போகிற ரயிலு இந்த நாக்பூருக்கு திரும்பத்தானே போகுது. நீ அப்போ என்னோடு வரத்தானே போறே... டேய் நவாபு... இன்னொரு வாட்டி என் மகனோட காதைப் பிடிச்சே அப்புறம் பிடிக்கிறதுக்கு உனக்குக் கை இருக்காது... சாக்கிரதை."

ரயிலும், சாக்கிரதையாகப் புறப்பட்டு சரிகமபதநிஸ தாள லயத்தோடு நகர்ந்து, பின்னர் ராட்சத ஓட்டம் எடுக்கத் துவங்கியது. பலராமனும், நவாப்ஜானும், பயலைப் பிடித்தபடியே திரும்பி நடந்தார்கள். பயலோ அவர்களிடமிருந்து திமிறி விடுபட்டு, மீண்டும் ரயில் கதவுக்கருகே ஓடி வந்து, அந்தோணியைப் பார்த்து, "அப்... அப்..." என்று ஒலிச் சிதறல்களை உணர்ச்சிமயமாய், ஒருமுனைப்படுத்திக் கூவியபோது, ரயில் அந்தோணியையும் அவனையும் பிரித்தது

பயல், தனக்காகத் காத்து நின்ற நவாப்ஜானின் கையையும், பலராமனின் இடுப்பையும் பற்றியபடியே நடந்தான். மூவரும் சொந்த இருக்கைக்குக்கு வந்தார்கள். அப்போது, அந்தப் பெண்கள் இருவரும், இவர்களின் இருக்கைகளில் ராணிகள் போல் கால்மேல் கால் போட்டு கைமேல் கை பின்னி உட்கார்ந்திருந்தார்கள். இந்த மூவரையும் பார்த்துவிட்டு ஒப்புக்கு எழப் போனார்கள். எதிர் பெஞ்சில் உட்கார்ந்திருந்த வாலிபன் "இங்கே வந்து உட்காருங்க" என்று சொல்லி, உடம்பைக் குறுக்கினான். அவர்களில் எவளாவது ஒருத்தி உட்காருவாள் என்ற நப்பாசையுடன்.

அவன், ஆனந்தமாக எதிர்பார்த்தபோது, பலராமன்தான் அவன் பாதி உடம்பில் விலா படும்படி உட்கார்ந்தான்.

அந்த ரயில் மலையைக் கிழித்துக் கொண்டு போவதுபோல், குகைகளுக்குள் பாய்ந்து வெட்டவெளிக்குள் வெளிப்பட்டுப் பாய்ந்தது. இருபக்கமும் வியாபித்த காடுகளும், அந்த ரயில்வண்டி மூலம் குரலிடுவது போன்ற தோரணை.... நிசப்தத்தின் நிஷ்டூரமாகத் தோன்றிய அந்தப் பெருங்காட்டில், இதே ரயிலோசையைத் தவிர வேறு எந்த ஓசையும் இல்லை. சக்கரக்கால்கள் கொண்ட ஒரு அசுரன், அஸ்வமேத யாகம் நடத்திக் கொண்டிருப்பது போன்ற பிரமை. எதிரே குறுக்கிடும் எதையும் சல்லி சல்லியாய்க் கிழித்துப் போடத் துணிந்து விட்டது போன்ற பிரமிப்பு. தக்காரும், மிக்காரும் இன்றி ஓட்டம் போட்டது. பார்த்த இடமெல்லாம் மரங்களாகவும், பாறைகளாகவும் தென்பட்ட அந்தக் காட்டுப் பூமியில், இந்த ரயில் பச்சைத் துணியில் வெள்ளை நூல் சுற்றிய ஊசியைக் குத்தி வைத்திருப்பதுபோல் காட்சி தந்தது.

ஒரு சின்னப் பையன், அந்தப் பெட்டிக்குள் வந்தான். கிழிந்து போன கால் சட்டைக்காரன். அந்தப் பெட்டி முழுவதையும் துடப்பத்தால் துடைத்து விட்டு, கையேந்தினான். பலராமன் அவனுக்குப் பத்து பைசா போட்டான்... நவாப்ஜான் அதட்டினான்.

"நீயே ஒரு துடப்பம்... ஒனக்கு ஒரு சின்னத் துடப்பமா... அந்த முதலாவது வகுப்புக் பெட்டிக்காரன் குப்பை குப்பைன்னு கரடியாய்க் கத்தினான். போனியாடா மச்சான்?"

"டேய் சாய்பு! மொதல்ல உட்காருடா..."

"போய் பெருக்கிட்டு வாடா பயலே.. இல்லாட்டி உன்னோடு என்னையும் சேர்த்து மசாலா பண்ணிடுவாங்க..."

"அட சொம்மா துள்ளாதடா... கிழவன் கத்துன களைப்புல தூங்கிட்டான். பழையபடியும் குலைக்கும்போது பார்த்துக்கலாம்..."

"டேய் பலராமா.. ஏன்டா ஸ்வெட்டரைக் கழட்டிட்டே?

"நாக்பூருக்குத் தெற்கே எவனாவது ஸ்வெட்டர் போட்டால் அவன் அசல் எருமை மாடுன்னு அர்த்தம்..."

உல்லன் ஸ்வெட்டரும், கம்பளிக் கோட்டும் போட்டிருந்த அந்த இரண்டு பெண்களும் திடுக்கிட்டார்கள். ஸ்வெட்டர் போடுவதே எருமை மாட்டுத்தனம் என்றால், அதோடு கோட்டையும் சேர்ந்து போட்டால், அது எதில் சேர்த்தி? அவர்களுக்குச் சந்தேகம். ஒருத்தி, லேசாய்ச் சிரித்தபடியே கோட்டைக் கழட்டப் போனாள். அது ஜாக்கெட்டோடு சேர்ந்து வரப்போனபோது, இன்னொருத்தி அவசர அவசரமாகத் தடுத்தாள்.

பலராமன், தான் கழட்டிப் போட்ட ஸ்வெட்டரின் வாயை, அந்தப் பயலின் தலைக்குள் திணிக்கப் போனான். அவனோ, நரி மாதிரி ஊளையிட்டபடியே, தலையை அங்குமிங்குமாய் ஆட்டி, கழட்டிக் கொண்டான். "போட்டுக்கடா... போட்டுக்கடா..." என்று பலராமன், கெஞ்சக் கெஞ்ச, பயல் மிஞ்சிக் கொண்டே போய் எழுந்து விட்டான். "அடச்சீ... என்னைச் சொல்லணும்" என்று சொன்னபடியே, அவன் கையைப் பிடித்திழுத்து உட்கார வைத்தான்.

இதற்குள், "டிரிங்... டிரிங்..." என்று குளிர் பதனக் குரலெழுப்பிய படி ஒருத்தன் வந்தான். பிளாஸ்டிக் பேப்பரில், வேர்க்கடலைகளைக் கூம்பு வடிவத்தில் வைத்துக் கொண்டு இன்னொருத்தன் வந்தான். சிகரெட்டுக்களைக் கொண்டு வந்த ஒருத்தன், அந்தப் பயலைப் பார்த்து, "டேய்... மாப்பிள்ளே... சிகரெட் பிடிக்கியாடா" என்றபோது பயல், தன் வாயை ரயில் பெட்டி ஜன்னலுக்கு வெளியே கொண்டு போனான்.

இறுதியாக ஒருத்தன், பிளாஸ்டிக் டம்பளர்களில் கேட்பவருக்கு எல்லாம் தேநீரை வாரி வாரி வழங்கியபடியே, காசுக் குவியல்களை ஒரு டப்பாவில் வாங்கி வாங்கிப் போட்டான். உடனே அந்தச் சிறுவன் அவனைப் பார்த்து "டி.... டி.... டி..." என்றான். வந்தவனுக்கு வந்தது கோபம்.

"அய்யாவுக்குக் கொடுத்தாகணுமோ? போடா, போ!"

பயல், சொன்னவனை சொரணையோடு பார்த்தான். பின்னர் உடம்பைப் பின்னியிருந்த வேட்டிக்குக் கீழே கையைக் கொண்டு போய், அந்தோணி கொடுத்த இரண்டு ரூபாய்த் தாளை எடுத்து, அவனிடம் நீட்டினான். தேநீர்க்காரன் தேள் கொட்டியதுபோல் கத்தினான்.

"பார்டா, பல்ராமா!"

"டேய் என் பெயர் பலராமன்.... பல்ராமனில்ல..."

"என்ன ராமனோ, விட்டுத் தள்ளு. இந்தப் பயலைப் பாருடா... எப்படி ரெண்டு ரூபாய் நோட்டை எடுத்து நீட்டுறான் பாரு! காசு கொடுப்பானாம்... டீ கொடுக்கணுமாம். அடப் பாருடா அந்தப் பயலை! ஒனக்கும் சாய்புக்கும் நார்ணனுக்கும் கொடுக்கணுமாம்... பணம் கொடுக்கேன் என்கறது மாதிரி சைகை செய்கிறான் பாரு... அடி செருப்பால, குதிரைக்கு ஏன் கொம்பு கொடுக்கல என்கிறதுக்கு அர்த்தம் இப்பத்தான் புரியுது...."

தேநீர்க்காரன், அந்தப் பயலுக்குத் தேநீர் கொடுக்காமலே, போக்குக் காட்டினான். பிறகு ஒரு பிளாஸ்டிக் தம்ளரில் நிறையவே ஊற்றி அவனிடம் கொடுத்தான். அவன் நீட்டிய இரண்டு ரூபாய் நோட்டை வாங்க மறுத்து, அவன் காதைத் திருகப்போனான். பயல் தலையை ஜன்னலுக்குவெளியே நீட்டினான். உடனே "முண்டமாய்ப் போயிடுவேடா முண்டம்" என்று கத்தினான்.

அரும்பு மீசை இளைஞன், ஒரு ஆரஞ்சுப் பழத்தை எடுத்து, அந்தப் பயலிடம் நீட்டினான். தொலைக்காட்சி காமிராவுக்கு, அரசியல்வாதிகள் போஸ் கொடுப்பது போல், அவன் முகத்தைக் கோணலாக்கியபடியே நீட்டினான். பயல் மறுத்தான். "துரைக்கு வாயில ஈரம் படப்படாதாம்" என்று விளக்கமளித்தான் நவாப்ஜான். பயல் மறுக்க பழத்தை வாலிபன் எதிரே தோன்றிய இளம் பெண்களுக்குக் காட்ட, அவர்கள் மறுக்க, இறுதியில் அவன் அந்த மார்வாடி மனிதரிடம் நீட்ட, அவரோ, அதை அவன் ஈடு வைக்கிறானோ என்பதுபோல் பழத்தை உருட்டி உருட்டிப் பார்த்தார்.

இந்தப் பெட்டிக்கு அடுத்த பெட்டியில் ஒரே கும்மாளம். "அங்கமுத்து... தங்கமுத்து..." என்று ஒருவன் பாட, பலர் அதற்குக் கைத்தட்டால் தாளம் போட்டார்கள். அவர்கள் தமிழ் மாணவர்களாம். நாக்புரியில் உள்ள பொறியில் கல்லூரியில் படிப்பவர்களாம். விடுமுறையில் வீடுகளுக்குப் போகிறார்கள். ஆங்காங்கே அவர்கள் பாடல் விரசமாக இருந்தது. அந்தப் பெண்கள் முகம் சுழித்தார்கள். பிறகு, காதுகளை, கைகளால் மூடிக் கொண்டார்கள். உடனே ரயில் பயல், பலராமன் கைகளைப் பிராண்டி, பாட்டுப் பாடும் பெட்டிக்குள், ஏதாவது தர்மம் செய்யும் படி, அவனை தன் பிஞ்சுக் கரங்களால் தள்ளினான். நவாப்ஜான் அங்கிருந்தபடியே குரல் கொடுத்தான்.

"ஏண்டா... புறம்போக்குகளா... புல்லுருவிகளா... ஒங்கப்பா, ஒங்கம்மா வாயைக் கட்டி, வவுத்தக் கட்டிப் படிக்க வைக்கிறதை நெனச்சுப் பாருங்கடா. தமிழன்னா உசத்தின்னு ஒரு காலத்துல இருந்த பேரைக் கெடுக்கிறதுக்கே பிறந்த பசங்களா. இந்த ரயிலுல

எப்படி எப்படில்லாம் தொழில் நுட்பம் இருக்குதுன்னு பேசினீங்கன்னா.. அது படித்தவன் செய்யுற காரியம். இனி ஒரு தடவ அப்படிப் பாடிப்பாருங்க... ஓங்கவாயைக் கிழிக்கேனா இல்லியான்னு பார்த்துடலாம்... பெண்கள் இருக்காங்க என்கிற நினைப்பில்லாமல் என்னடா... பாட்டு? ஏடாகோடமான பாட்டு."

பக்கத்து பெட்டியில் கப்சிப்... வாய் கிழிபடக்கூடாது என்பது போல் எல்லா மாணவர்களும் அதை மூடி வைத்தார்கள். ஊசி போட்டுத் தைத்தது மாதிரியான உதடு ஒட்டல்கள். நவாப் ஜான் பேசி முடித்த பெருமிதத்தில் உட்கார்ந்தபடியே சுற்றுப்பக்கமாய்க் கண்களைச் சுழலவிட்டான். உடனே, பயல், "ஏ.... ஹோ" என்றபடி கைத்தட்டினான். உடனே எல்லோரும் கைத்தட்டினார்கள். அந்த வாலிபன் மட்டும் கை தட்டாமல் "நானே கத்தணுமுன்னு நினைச்சேன்... நல்லவேளை, நீங்க தலையிட்டுப் பேசிட்டீங்க.... இல்லாட்டி கொலையே நடந்திருக்குமாக்கும். நான் கூடத்தான் எம்காம் படிச்சேன். இப்படியா பாடுறேன்?" என்று சொன்னபடியே அந்தப் பெண்களை ஓரங்கட்டிப் பார்த்தான். இந்தப் பெண்களில் ஒருத்தி, மற்றவர்களிடம் முணுமுணுத்தாள்.

"பாடுற வயசு. பாடிட்டுப் போறாங்க. பாவம். அவங்களை இப்படியா திட்டுறது...?"

அரும்பு மீசை வாலிபன் அவர்களின் பேச்சை நோட்டம் போட்டான். அதன் அர்த்தம் புரிந்ததும் அவனுக்கு எரிச்சல் வந்தது. இவன் இருக்கும்போது, இவள்களுக்கு அப்படி என்ன பாட்டு கேக்குது... அந்தப் பெண்களைப் பார்ப்பதைவிட அந்த அழுக்குப் பயலைப் பார்க்கலாம் என்பதுபோல், அவன் உற்றுப்பார்த்தான். அப்புறம் பலராமனிடம் ஒரு கேள்வியைக் கேட்டான்.

"இந்தப் பையன் யாருங்க? இவனோட அப்பாம்மா எங்கே இருக்காங்க?"

பலராமன் அந்தச் சிறுவனை, தட்டித் தட்டிக் கேட்டான்.

"டேய் ஓங்கப்பாம்மா எங்கேடா இருக்காங்க."

அந்தச் சிறுவனோ, சூடுபட்ட பூனைபோல் திடுக்கிட்டான். மேலே அவனைப்போலவே, அந்தரத்தில் தொங்கிய மின்விசிறியைப் பார்த்தான். பெஞ்சில் வைத்த கால்களைக் கீழே போட்டான். கண்களைச் செருகியபடியே வெளியே பார்த்தான்.

பலராமன், அந்தச் சிறுவனைத் தன் பக்கத்தில் இழுத்து வைத்துக் கொண்டான். பிறகு பொதுப்படையாக, கண் கலங்கிப் பேசினான்.

"இவனோட கதை தனிக்கதை... பெரிய எழுத்தாளரால கூட எழுத முடியாத கதை... சொல்றேன். ஆனால், இந்தக் கதையைக் கேட்கிறதுக்கு உங்களுக்குக் கருணை இருக்கணும். மனிதாபிமானம்.. வேணும்... இருக்குமென்கிற அனுமானத்துல சொல்றேன்."

தடா தடா என்று காட்டுத்தனமாகப் பாய்ந்த ரயில், இப்போது வேகமடக்கி, வீறாப்பைக் குறைத்துத் தொட்டிலாடுவது போல் ஆடியது... ஓடியது. அப்போது அந்தப் பையனுக்கு அம்மா ஆட்டிய தொட்டில் நினைவுக்கு வந்ததோ என்னமோ... தனக்குள்ளே தன்னையோ அல்லது தாயையோ பார்ப்பதுபோல், ஆடாமல் அசையாது இருந்தான். அவன், அப்போது ஒரு மாதிரியாகப் பார்த்தான். இயலாமையால் எழுந்த ஏமாற்றப் பார்வை. எதையோ குறிவைத்து ஏமாந்து போனது போல் விடை காணா விகற்பப் பார்வை.... பார்வை இழந்தவனைப் போன்ற பாராமுகப் பார்வை....

அரும்புமீசை வாலிபன், தூண்டினான்.

"சரி... சொல்லுங்க."

பலராமன், பயலைத் தோளில் சாய்த்தபடியே சொன்னான்.

"இந்தப் பையன் எங்களுக்கும் இந்த ரயிலில் சீனியர். நான் வேலைக்குச் சேர்ந்து மூணு வருடந்தான் ஆகுது. ஆனால் இவன் இந்த ரயில்ல எட்டு வருஷமாய் இருக்கான். ஆறுவயசுப் பையனாய் சென்ட்ரல் ரயில் நிலையத்துல கையைக் சூப்பிக்கிட்டுப் படுத்துக் கிடந்தானாம். அப்புறம் சாயங்காலமாய் அங்குமிங்குமாய் அழுது திரிஞ்சானாம். அப்போ பிளாட்பாரம் இன்ஸ்பெக்டர், மணி... அவரு ஒரு அற்புதமான மனிதர் - இப்பவும் சென்ட்ரல் ரெயில் நிலையத்துல எந்தப் பிரச்சினைன்னு வந்தாலும் அவரைத்தான் கேட்பார்கள். இதுவரைக்கும் ஏழு அனாதைக் குழந்தைகளைக் கண்டுபிடிச்சு வசதியானவர்கள் கிட்ட வளர்ப்புப் பிள்ளையாய் ஒப்படைச்சிருக்கார்... ஒரு தடவை பஞ்சலோக சிலைகளைக் கோணி மூட்டைகளில் கட்டிப் போட்டு எடுத்துட்டுப் போனவனையும் கையும் களவுமாய் கண்டுபிடித்தவர். தங்கமான மனிதர்..."

வாலிபன் குறுக்கிட்டான்.

"சரி பையனுக்கு வாங்க."

"ஒங்க பேரு என்னங்க?"

"சீனிவாசன்"

"இதோ பாருங்க சீனி... ஒரு நல்ல மனிதனைப் பத்திப் பேசும்போது காது கொடுத்துக் கேட்கணும். மனிதாபிமானம் செத்துப் போயிட்டு இருக்கிற காலத்துல ஏழு அனாதைக் குழந்தை

களுக்கு அடைக்கலம் கொடுத்த மனிதரைப் பற்றிச் சொல்லும் போது, காது கொடுக்க மறுக்கறது - அந்தப் பிள்ளைகளை பெத்துப் போட்டுட்டுப் போனாள்களே அந்தப் பெத்தவங்க செய்த காரியத்துக்குச் சமம். நம்மால நல்லதுதான் செய்யமுடியல, நல்லது செய்தவர்களைப் பத்தி நல்லவங்க சொல்வதை, நல்ல விதமாய்க் கேட்கணும்."

நவாப்ஜான், இடைச் செருகலாய்,

"ஏண்டா சோம்பேறி... மணி சார் கூட ஒட்டிக்கவா பார்க்கிறே? நீ நல்லவன்னால் உலகத்துல கெட்டவன்னு எவனுமே இருக்க மாட்டான் கண்ணு...."

பலராமன், பதிலடி கொடுக்கப் போனபோது, இளம்பெண்களில் கல்யாணம் ஆகாத காஞ்சனா, அவசரமாய்ப் பரபரப்பாய்க் கேட்டாள்.

"ஆமா... ஏழு பிள்ளைங்களை அனாதைக் குழந்தைகளாய் எடுத்திருக்காரே... பெற்றவள்களுக்கு எப்படி மனசு வரும்...?"

"இவளுங்கப் பெத்தவங்க இல்ல... ஏதோ ஒரு சந்தோஷத்துல எதிர்பாராமக் கிடைச்ச சீமை... சந்தோஷமா அனுபவிச்சிட்டு, அப்புறம் பிறக்கிற பிள்ளைகளைத் தள்ளுரவள்கள். இவள்கள் தாய்களில்ல; நாய்கள். நாய்கள் கூடக் குட்டிகளை நல்லாத்தான் காப்பாத்துது..."

"சரி, அவள்கள் கிடக்கறாக, குழந்தைங்க எங்கெல்லாம் கிடச்சுதாம்?"

"நடுப்பகல்ல... பிளாட்பாரத்துல... தேநீர் விடுதியில... பயணச் சீட்டு கொடுக்கிற இடத்துல... ரயில் பெட்டியில...."

"அப்புறம் வேற எங்கெல்லாம்...?"

கல்யாணமான கல்யாணி, காஞ்சனாவை ரகசியமாக எச்சரித்தாள்.

"இதுக்கு மேலக் கேட்காதடி...."

"கேட்டா என்னவாம்?"

"நீ என்னவோ பிள்ளைப் பெத்துத் திருட்டுத்தனமாய் கை விடுறதுக்கு முயற்சி செய்யப் போறேன்னு நினைக்கப் போறாங்க...."

"சீ, போடி..."

அந்தப் பெண்கள் என்ன பேசுகிறார்கள் என்பதைக் கண்டறிய முயற்சித்து தோல்வி கண்ட சீனிவாசன், மூக்கைத் தடவினான்

சிறிது நேரம் அமைதி. எதையுமே பொருட்படுத்தாதது போல் கைகால்களை மடக்கிப் போட்ட அந்த வயதான தெலுங்கம்மா முதல் தடவையாகப் பேசினாள்.

“தரவாத ஈ அப்பாய் கத செப்பண்டி.”

(இந்தப் பையனோட கதையைச் சொல்லுங்க.)

பலராமன் பதிலளித்தான். கைகளைச் சொடுக்கிடுவது வரைக்கும் திறந்து வைத்திருந்த வாயைப் பேசவிடாமல் செய்து விட்டு, இப்போது பேசினான்.

“எனக்குன்னு ஒரு பழக்கம் இருக்கும்மா. ஒரு விஷயத்தைச் சொல்லிட்டு இடையிலேயே விட்டுடுவேன். அப்புறம் யாராவது கேட்டால்தான் பதிலைச் சொல்லுவேன். நான் சொல்றதை யாரும் வேண்டா. வெறுப்பாய்க் கேட்கிறது எனக்குப் பிடிக்காது....”

“நல்லவேளை... நீங்களாவது கேட்டிங்களே.... இந்தப் பயல் ஆறுவயசு குழந்தையாம்... அலைஞ்சு பிளாட்பாரம் இன்ஸ்பெக்டர் மணி....”

“மரியாதையோட சொல்லுடா... நீயெல்லாம் தமிழனா?”

“டேய். இடையிலே வராதடா... மணி அய்யா... இந்தப் பயலுக்குப் பால் வாங்கிக் கொடுத்திருக்கார். ஒலி பெருக்கிலயும் அறிவிச்சு இருக்கார்... ரேடியோவுல சொல்லியிருக்கார். ஒருத்தியும் வரலை. அப்புறம் ஒருவாரம் தன்னோட வச்சிருக்கார். அப்போதான் சமையல்காரர் ஆண்டியப்பன், இந்தப் பயலை மணி ஸார்கிட்டே இருந்து வாங்கி தன்னோட வச்சுட்டார். இவர் சொந்தப் பிள்ளை மாதிரி ரெண்டு வருஷம் வளர்த்திருக்கார்... ரயில்ல போகும்போதும் வரும்போதும் கூட்டி வந்திருக்கார்.... திடீர்னு அவர் இறந்துட்டார்.”

மார்வாடி மனிதரும் இப்போது முதல் தடவையாகப் பேசினார்.

“அதுக்குத்தான் குழந்தைகளை தத்து எடுக்கவும் ராசி பார்த்து எடுக்கணும் என்கிறது.”

“என்ன பேச்சு ஸார் பேசுரே...? செத்த பேச்சு...”

“சரி. மேலே போங்க...”

“வளர்ப்புத் தந்தை ஆண்டியப்பன் செத்துப் போனதும், இந்த ரயிலுலயும் அப்புறம் தமிழ்நாடு ரயிலுலயும் வேலை செய்யுற தொழிலாளிகளும் சமையல்காரங்களும் சர்வர்களும்... பயலுக்கு வளர்ப்புத் தந்தைகளாய் ஆயிட்டாங்க... பயல் இவங்களையெல்லாம் “அப்... அப்...” அதாவது அப்பான்னு தான் கூப்பிடுவான். அப்புக்கு

மேலே அடுத்த வார்த்தை வராது.... அவ்வளவு ஊமை... ஆனால் பேசுறது நல்லா கேட்கும்... நம்மைவிட அதிகமாகவே கேட்கும்..."

"எப்படிப் பிழைப்பு நடக்குதுன்னு சொல்லலியே?"

"சொல்றேன். மவராசா, சென்ட்ரல் ஸ்டேஷன்ல ஜி.டி. ரயிலுல ஏறுவான். நாக்பூர் வரைக்கும் ஒன்றரை நாள் வரைக்கும் இருப்பான். என்னை மாதிரி... மெக்கானிக்குங்க கூட இருந்துக்குவான்... சமையல் பெட்டில போய் இஷ்டப்பட்டதை எடுத்துக்குவான்..."

"நாக்பூர் வந்ததும்..."

"டில்லியில இருந்து புறப்படுற ஜி.டி. ரயிலும், சென்னையில் இருந்து புறப்படுற ஜி.டி. ரயிலும் இந்த நாக்பூர்லதானே சந்திக்குதுங்க? அய்யா டில்லிக்குப் போகிற ரயிலுல இருந்து இறங்கி, சென்னைக்குப் போற ரயிலுல ஏறிக்குவார். ரெண்டு ரயிலுமே இந்தப் பயலுக்குச் சொந்த ரயிலுங்க... டிக்கட் பரிசோதகர்களுக்கும் இவனை நல்லாத் தெரியும்; எல்லாத் தொழிலாளர்களுக்கும் இவன்மேல தனிப்பாசம்... நாக்பூரில் இவனை மடக்குனானே அந்தோணி... அவனும் இவனுக்கு ஒரு அப்பா. அவனோடதான், பயல் சென்னையில் இருந்து புறப்பட்டான். அந்தோணி அவனை டில்லி வரைக்கும் கூட்டிட்டுப் போக விரும்பியிருக்கான்.... பயல் டிமிக்கிக் கொடுத்துட்டான். இந்த ராசாவுக்கு டில்லி ஒத்துக்காதாம். அதனாலதான் அந்த அந்தோணியோட போகல. ஆனாலும் பயல் கடைசி நேரத்துல அந்தோணி காட்டுன அன்புக்கு ஈடாய் பசுவைப் பார்த்துக் கன்றுக்குட்டி கத்துவது மாதிரி.... "அப்... அப்..."ன்னு கத்துவது... மாதிரி பாவம்... அப்பான்னுகூட உச்சரிக்க முடியல... ஆனால் சொந்த மகனைவிட ஆயிரம் மடங்கு பாசம் வச்சிருக்கிறவன்!"

சீனிவாசன், இனிப்பில்லாமல் கேட்டான்.

"அப்பாக்கள் கிடக்கட்டும்... இவன் அம்மா என்ன ஆனாள்? டேய் பயலே! ஒங்கம்மா என்னடா ஆனா? அவ ஞாபகம் வருதா?"

சீனிவாசன் அந்தப் பயலை நேரடியாகக் கேட்டது, பலராமன் குழுவிற்குப் பிடிக்காதுபோலவே, அந்த இளம் பெண்களுக்கும் பிடிக்கவில்லை. எல்லோருமே முகம் சுழித்தார்கள்.

அந்தப் பயல் மருண்டு பார்த்தான்: சுருண்டு உட்கார்ந்தான். தலையை மேலும் கீழும் ஆட்டினான். அவன் மனம் பின்னோக்கிப் போனது. நினைவுகள் மங்கல் மங்கலாய், மங்கலமற்ற நிகழ்ச்சிகளை நிழல் முகங்களாகக் காட்டின.

அம்மாவின் இடுப்பில் இருந்த ஞாபகம். அவள் தோளில் சாய்ந்த நினைவு... அவளை யார் யாரெல்லாமோ திட்டியதைக் கேட்கவில்லையானாலும் பார்த்தது மாதிரி எண்ணம்... கூடாரம் கூடாரமாய் குவிந்த இடத்தில்... அநேகமாக இந்த பலராமன் “அப்” சொல்வது மாதிரி.... சென்ட்ரல் நிலையத்தில் அம்மாவுடன் இருந்துதான் கூட்டத்திற்குள் அகப்பட்டது மாதிரித் தோற்றம்... அம்மா... அந்தக் கூட்டத்திற்குள் தன்னைத் தள்ளிவிட்டது மாதிரி... தள்ளிவிட்டாளோ...! கூட்டத்தின் தள்ளலில் தற்செயலாய்த் தள்ளப் பட்டேனோ...?

அந்தச் சிறுவன், இரண்டு கால்களையும் பெஞ்சில் தூக்கி வைத்து, முழங்கால்களில் முகம் புதைத்து, தலையை உருட்டினான். நினைவுகளைச் சிந்தனையில் சேர்த்தான்.

‘அம்மா என்னை வேண்டுமென்று தள்ளியிருக்க மாட்டாள். கூட்ட நெரிசலில் நானே தள்ளப்பட்டிருப்பேன். இல்லை... வேண்டுமென்றே விட்டிருப்பாள்... அப்படி விட்டிருந்தால் ஆறு வயசு வரைக்கும் இடுப்பில் ஏன் எடுத்து வைக்கிறாள்? பிறந்தபோதே குப்பைத் தொட்டியில் போட்டிருப்பாளே. என் அம்மாவை நான் பார்ப்பேனா? ஒரு தடவையாவது பார்ப்பேனா.... இப்போகூட என்னால் அவளை அடையாளம் கண்டு கொள்ள முடியும்... வட்ட முகம். முதுகை மூடிய முடி. கறுப்புப் பொட்டு. ஒரு தெத்துப்பல். எதையோ ஊடுருவுவது மாதிரியான கண்கள். கறுப்புச் சேலை. வெள்ளை ஜாக்கெட்.’

‘அம்மா. என் அம்மா. அவள் என் அம்மா... என்னைக் கூட்டத்தில் தள்ளிவிட்டுத் தன் போக்கில் போன தறுதலை. இல்லையானால் என்னைத் தேடிக் கண்டு பிடித்திருக்கலாமே. மணி ‘அப்’கிட்டே ஒரு வாரம் இருந்த என்னை மீட்டிருக்கலாமே. அவள் அம்மா இல்ல. இந்த ரயில் என்னை எப்படி உணர்ச்சி இல்லாமல் சுமக்கிறதோ, அப்படி என்னை உணர்ச்சியத்து சுமந்தபின் உயிரற்றவன் மாதிரி ஆக்கியவள். அவள் நெனப்பே கூடாது. எனக்கு எல்லாமே இந்த அப்பார்க்கள்தான். நான் முருகன் மாதிரி. பெண் வயிற்றில் பிறக்காத ஆண்பிள்ளை. இந்த பல்ராம் அப்பா எதுக்காக என்னைப் பற்றிச் சொல்லணும்? சொல்லாதிங்கப்பா....’

அந்தச் சிறுவன், திடீரென்று எழுந்தான். பலராமனுக்கு முதுகைக் காட்டி அரும்புமீசை சீனிவாசனைக் கோபமாய்ப் பார்த்தபடி நின்றான். பிறகு, மறுபக்கமாய்த் திரும்பி, பலராமனைப் பார்த்தான். உடனே அப்படியே அவன் மேல் விழுந்து, அவன் கழுத்தில் தன் பிஞ்சுக் கரங்களைப் படர விட்டபடியே “அப்... அப்...” என்று அரற்றினான். அப்புறமாய் அழுதான்; அதற்குப் பிறகு “அப்... அப்..” என்று வீறிட்டான்.

நவாப்ஜான், "டேய்... டேய்..." என்றான். உடனே அந்தச் சிறுவன் ஒரு கையால், அவன் கழுத்தையும் சுற்றி வளைத்துக் கொண்டு "அப்... அப்..." என்று சொல்லியபடியே அழுதான். அழுதபடியே முணுமுணுத்தான். அதைப் பார்த்து பலராமனும் அழுதுவிட்டான். அவன் கண்ணீர், அந்தச் சிறுவனின் முதுகு வழியாகக் கீழே ஓடியது. நவாப்ஜான் சுயத்தை இழக்காமல் ஆடிப்போனாலும், அதை அடக்கியபடியே சுதாரித்துக் கொண்டான்.

"ஏன் ஸார், ஒனக்கு மூளை இருக்குதா? அவன் எதை மறக்க நினைக்கானோ அதை ஞாபகப்படுத்துனால் என்ன ஸார் அர்த்தம்? அவன் அம்மா எப்படி இருந்தால் ஒனக்கென்னய்யா... டேய், கயிதே! அழாதடா கயிதே... நாங்க இருக்கோண்டா, ஒங்கம்மாவை நெனக்காதடா. இதோ பார் எனக்கு ஒரே அம்மா.... உருப் பிடியில்லாத அப்பா. பலராமனுக்கும் ஒரே அப்பா. பணத்தால பாசத்தை அழிக்கிற வேசக்கார அப்பா. ஆனால் ஒனக்கு எத்தனை எத்தன அப்பாங்க! நாலு அப்பா... நாராயணன் அப்பா... அந்தோணி அப்பா... இந்த பலராம் கயிதேயும் அப்பா. அடேயப்பா! எத்தனை அப்பா! ஏண்டா... எங்களைவிட ஒங்கம்மா ஒனக்கு ஒசத்தியா? இதுக்குமேல் அழுதால் ஒங்கம்மா உசத்தி, நாங்க தாழ்த்தின்னு அர்த்தம்..."

அந்தப் பயல், எப்படி திடீரென்று அழுதானோ, அந்த வேகத்தில் அழுவதை நிறுத்திக் கொண்டான். பலராமனின் மார்பில் முகமெடுத்தான். நவாப்ஜானைப் பார்த்தான். நீங்கதான் உசத்தி என்பதுபோல் அண்ணாந்து பார்த்தான். அவன் கையைப் பிடித்தபடியே பார்த்தான். பிறகு பலராமன் கையையும், பிடித்துக் கொண்டான். அப்போது சீனிவாசன் "நான் எதுக்குக் கேட்டேன்னால்" என்று இழுத்தபோது நவாப்ஜான் "கொஞ்ச நேரம் வாயை மூடிக்கினு இருய்யா ஸாரே" என்று அதட்டினான்.

அந்தப் பெட்டியில் இருந்த அனைவரும் அந்தப் பையனைப் பற்றி தத்தம் தரத்திற்கேற்ற வகையில், இப்படி தொடர்ந்து சிந்திப்பது அவர்களுக்கு பழக்கமில்லாததால், அந்தச் சிந்தனையே அவர்களுக்கு மூளைச் சுமையாக, லேசாக தூங்கிப் போனார்கள்.

ஆனால், அந்த பயலால் தூங்க முடியவில்லை. வெளியே வந்தான். அந்தப் பெட்டியின் பின்பகுதியில் வாசல் ஓரத்தில், ஒருத்தி அங்கும் இங்குமாக அலைமோதி நடந்தபடியே, அவனை பீதியோடு பார்த்தாள். ஏற்கெனவே திறந்து வைத்த ரயில் கதவின் வழியாக அவள் குதிக்கப்போனாள்.

# 4

அந்த ரயில், அந்த பெண்ணைப் போலவே, தண்டவாளத்தில் இருந்து குதிக்கப் போவதுபோல், தாவிக் கொண்டிருந்தது.

அந்தப் பயல், ஓடிப்போய் அவள் கையைப் பிடித்துக் கொண்டான். அவனை இழுத்துப் போட்டுவிட்டு அவளால் குதிக்க முடியும் என்றாலும், உயிர் பயத்தாலோ அல்லது அவன் கண்களில் தோன்றிய அவனின் அன்பு முத்திரைக்குக் கட்டுப்பட்டோ சிறிது பேசாது நின்றாள். உடனே, அவன் அவளைச் செல்லமாக இழுத்து வாசலோரத்திற்கும் ரயில் பெட்டியின் பின்பகுதி முடியும் இடத்திற்கும் இடைப்பட்ட முக்கோணப்பகுதியில் நிற்க வைத்தான். அவள் லேசாய் நடந்து ரயில் பெட்டியின் வழிப்பகுதியை எச்சரிக்கையோடு பார்த்துவிட்டு அங்கு யாரும் இல்லை என்ற சோக திருப்தியோடு மீண்டும் நின்ற இடத்திற்கு வந்தாள். அவள் கண்களில் நீர்ச் சொட்டுக்கள் துளித்துளிகளாக விழுந்து கொண்டிருந்தன. பயல், அவள் பக்கத்தில் போனான். அவள் வலது கையைப் பற்றிக் கொண்டான். பிறகு, தனது வலது கையை முஷ்டியாக்கிப் பெருவிரலை மட்டும் நீட்டி, காதுக்கருகே உயர்த்தி என்ன விஷயம்' என்பதுபோல் சைகை செய்தான். பிறகு, நானிருக்க பயம் ஏன் என்ற தோரணையில் தனது வலதுகையால் தன் மார்பைத் தட்டினான். கையைச் செங்குத்தாக நிறுத்திக்காட்டினான்.

அவளால் தாள முடியவில்லை.

மார்பளவு உயரத்திற்கிருந்த அந்தப் பயலின் தலைமேல் தன் முகத்தைச் சாய்த்தாள். அப்போது பயலின் பின் கழுத்தில் அவளது கண்ணீர் சுடச்சுட விழுந்து கொண்டிருந்தது. அவள் சட்டென்று தலையைத் தூக்கி அவனிடமிருந்து விடுபட்டாள். அந்த சின்னப் பையனைப் பெரிய மனிதனாகப் பார்த்தபடியே அவனிடம் சொல்லித்தான் ஆகவேண்டும் என்பதுபோல் அவன் தோளில் கை போட்டு அவலக்குரலில் அழுகை ஒலிக்க முறையிட்டாள்.

"மனிதங்க செத்துப் போயிட்டதா நான் தீர்மானிச்ச போது தெய்வம்போல வந்தப்பா... இந்த ரயில்ல பெட்டி பெட்டியாய் போய் 'என்னைக் காப்பாத்துங்க... காப்பாத்துங்க'ன்னு கேட்டேன். அஞ்சாறு பேர் அரிவாளும், கம்புமாய்க் என்னைக் கொல்ல வராங்கன்னு கையெடுத்துக்கும்பிட்டேன். என்னைப் பார்த்த கண்கள் மூடிற்று... கேட்ட காதுகள் திரும்பிற்று ஏதோ

கேட்கப்போன சிலரையும் இவள் யாரோ, என்ன தப்பு செய்தாளோ, இவளுக்காக நம்ம உயிரும் போகணுமா! என்று இரக்கத்தை கழுத்த நெறிச்சுக் கொன்னுட்டாங்கப்பா... இவ்வளவு பெரிய கூட்டத்தில ஆளு இல்லாத அனாதையாய் ஆயிட்டேன்பா. நீ கூட அந்தப் பாவிப் பயலுக நோட்டம் பார்க்க அனுப்பின ஆளா இருப்பியோன்னு சந்தேகப்பட்டுத்தான் இந்த ரயிலுல இருந்து கீழே குதிக்கப்போனேன். என்னை மன்னிச்சிடுப்பா... நீயாவது நான் இருக்கேன்னு சொன்னியே அது போதும் எனக்கு. இந்த சந்தோஷத்திலேயே அந்தப் பாவிங்க கையில சம்மதத்தோட கூட சாவேன்."

அவள், அந்தப் பையனை மீண்டும் அணைத்துக் கொண்டாள். நீரில் மூழ்குபவர்கள் ஒரு துரும்பைக்கூட ஆதாரமாகப் பிடிப்பார்களாமே... அப்படிப்பட்ட பிடியல்ல... அதற்கும் மேலான பிடி; அன்பென்னும் கைக்குள் அகப்பட்ட பிடி

அந்தப் பையன் அவளிடமிருந்து விடுபடாமலேயே கால்களைத் தூக்கிக் குதிகால்களில் நின்றபடி அவள் கண்ணீரைத் துடைத்தான். இந்த அன்புப் பிரவாகத்தின் இன்ப அதிர்ச்சியில் அவள் அந்தப் பயலின் பூஞ்சை உடம்பு வலிக்கும்படி தன்னோடு சேர்த்து அணைத்துக் கொண்டாள்.

அவளுக்கு இருபத்தி நான்கு வயது இருக்கலாம். ஒல்லியன்றோ அல்லது தடிப்பு என்றோ சொல்ல முடியாத மேனி. சாம்பல் பூத்த கண்கள்தான். ஆனால், அதற்குள் ஏதோ எரியப் போகிற ஜோதி போன்ற ஒரு தோற்றம். வட்டமும், நீளவாகுவும் சேர்ந்தமைத்த முகம். தரைக்குப் பளிங்கு போட்டது போல் அந்த முகத்தில் ஏதோ ஒரு அழகு மின்னியது. காமத்தைத் தூண்டும் கவர்ச்சி அல்ல. கையெடுத்துக் கும்பிடத் தோன்றும் ஒருவித கம்பீரம். அந்த பீதியிலும் நிதானத்தோரணை. சில பெண்களுக்கு உடம்பின் ஒவ்வொரு உறுப்பும் ஒட்டி வைத்தது போல் துருத்திக் கொண்டு நிற்கும். ஆனால், இவளுக்கோ ஒரு பெண் இப்படித்தான் இருக்க வேண்டும் என்பது போன்ற அமைப்பு. அந்த சோகப் பார்வையில் கூடப், பயல் ஒரு சுகப் பார்வையைக் கண்டான்.

அவள் மீண்டும் அங்குமிங்குமாக நடக்கப் போனாள். பயல் நடுவழியில் அவள் முன்னால் போய் நின்றான். அவளின் இரண்டு கைகளையும் சேர்த்துப் பிடித்தபடி தன்னோடு வரும்படி மோவாயை ஆட்டினான். தேரை இழுப்பதுபோல அவளை லேசாய் இழுத்தான். அவள் பேசாமல் நின்றாள். உடனே, பையன் தானிருந்த பெட்டியைச் சுட்டிக்காட்டி அவளை ஊளையிட்டபடி இழுத்தான். இப்போ அவளும் அவன் இழுத்த இழுப்பிற்கு நடந்தாள்

இருவரும் எஸ்-11க்குள் வந்தார்கள். நவாப்ஜானும் பலராமனும் ஒருவர் தோளில் இன்னொருவர் தோள் போட்டுத் தூங்கிக் கொண்டிருந்தார்கள். பயல், பலராமனின் தலையைத் தூக்கினான். கண்கள் விழிப்பதற்குப் பதில் வாய்தான் குறட்டை போட்டது. நவாப்ஜானின் தோளைக் கிள்ளினான். பலனில்லை. எல்லோருமே தூங்கிக் கொண்டிருந்ததால் யாரிடம் முறையிடலாம் என்பதுபோல் சுற்றும் முற்றும் பார்த்தான். பிறகு, "அப்... அப்..." என்று கத்தினான். அந்தோணியிடம் இடம் பிடிபடாமல் இருக்க அப்போது எப்படி நரிபோல் ஊளையிட்டானோ அதேபோல் இப்போதும் ஊளை யிட்டான். இந்த சமயத்தில் எங்கேயோ வெளியே போயிருந்த ரயில்வே தொழிலாளர்கள் நாராயணனும், கோவிந்தனும் உள்ளே வந்தார்கள். அந்தப் பெண்ணையும் பயலையும் பார்த்தபடியே நின்றார்கள். உடனே, பயல் அந்தப் பெண்ணின் கையை ஒரு கையால் பிடித்துக் கொண்டு இன்னொரு கையால் அவர்களிடம் 'சொல்லு' என்று சமிக்ஞை செய்தான். எத்தனையோ சத்தங்களுக்கும் தூங்கிப்போகும் நவாப்ஜானும், பலராமனும் அந்தப் பயல் இன்னொரு தடவை போட்ட ஊளைச் சத்தத்தில், அந்த அபயக் குரலை அடையாளம் கண்டவர்கள்போல் எழுந்து விட்டார்கள். இளம் பெண்களும் தெலுங்கம்மாவும் மற்றும் பலரும் தூக்கம் கலைந்தார்கள்.

எல்லோரும் அந்தப் பெண்ணை அர்த்தத்தோடு பார்த்தபோது அவள் அழப்போனாள். பிறகு, அதைக் கட்டுப்படுத்திக் கொண்டாள். தட்டுத் தடுமாறி சொல்லலாமா... வேண்டாமா... என்பது போல் யோசித்து, யோசித்துப் பேசினாள்.

"ஐந்தாறு பேர் என்னைக் கொலை செய்யறதுக்காக இந்த ரயிலுல வந்திருக்காங்க. நீங்க எனக்கு அடைக்கலம் கொடுக்கணும். முடியுமுன்னா செய்யுங்க. ஒருவேளை மற்ற பெட்டிகளில் இருந்தவங்க நினைக்கிற மாதிரி அவங்க இங்கே வந்து என்னைக் கொலை செய்யற முயற்சியில் உங்களையும் ஏதாவது செய்திடு வாங்கன்னு பயப்பட்டால், இப்பவே சொல்லிடுங்க. எனக்குன்னு ஒரு வழி இருக்கு. அதுல இறங்கிக்குவேன்."

நவாப்ஜானுக்கு ரோஷம் ஏறியது. எல்லோருமே உயிருக்கு ஆபத்தான அந்த வேளையிலும் கம்பீரம் கலையாமல் பேசிய அந்தப் பெண்ணை ஆச்சரியமாகப் பார்த்தார்கள். அங்கே ஒரு கொலையே நடக்கலாம் என்பதை அனுமானித்து தாங்களே கொலை செய்யப்பட்டு விடுவோமோ என்பதுபோல் மிரள மிரளப் பார்த்த அந்த இரண்டு இளம் பெண்களும் ஒருவரை ஒருவர் கண்களால் உஷார் படுத்திக் கொண்டார்கள் நவாப்ஜான் எழுந்து நின்றே பேசினான்.

"கவலைப்படாதீங்கம்மா! எப்போ இந்தப் பெட்டிக்குள்ள வந்தீங்களோ, அப்பவே உங்க உயிருக்கு ஆபத்தில்லன்னு அர்த்தம்; எப்போ இந்தப் பய உங்களைக் கூட்டிக்கிட்டு வந்தானோ அப்பவே நீங்க எங்கள்ல ஒருத்தர்ன்னு அர்த்தம். எங்க உயிரைக் கொடுத்தாவது உங்களைக் காப்பாற்றுவோம். இல்லையாடா பலராமா? அப்படித்தானே கோவிந்து!"

"இதைச் சொல்லிக் காட்டணுமாடா? எதுக்கும் அடுத்த ஸ்டேஷன்ல நம்மளைத் தயார் பண்ணிக்குவோம்."

அரும்பு மீசை சீனிவாசன், கல்யாணமாகாத காஞ்சனாவிடம் கிசுகிசுத்தான்.

"இவள் யாரோ, எவளோ? என்ன தப்பு செய்தாளோ! இப்படிப்பட்டவளுங்க நாகரிகமான திருடிகளாக் கூட இருக்கலாம். ராத்திரிக்கு உங்க கம்மலையோ, செயினையோ பறிச்சுக்கிட்டு ஓடினா யார் பொறுப்பு? பறிச்சுக்கிட்டு போனாக்கூடப் பரவாயில்லை. நீங்க கண் விழிச்சுக் கத்தப்படாதுன்னு கழுத்த நெறிச்சுக் கொன்னுட்டுக்கூட உங்களுக்கு அழகுக்கு அழகு சேர்க்கிற இந்த நகைகளை எடுத்திட்டு ஓடிட்டால் யார் பொறுப்பு? பாத்திரம் அறிந்து பிச்சை போடணுமுன்னு ஏன் இவங்களுக்குத் தெரிய மாட்டேன்கிறது?"

மெக்கானிக் நாராயணன் இப்போது முதல் தடவையாக அந்த வாலிபனிடம் பேசினான்.

"யோவ்... மண்பான்னை! நான் உன்னை அப்ப பிடிச்சே கவனிக்கிறேன். உன் மனசில நல்ல எண்ணமே வராதா? ஒருத்தரப் பார்த்தவுடனேயே எங்களால கண்டுபிடிக்க முடியும். ஏன்னா, நாங்க காலேஜ்ல படிக்காதவங்க. இதோ நிக்கறானே எங்க பயல்... இவனுக்கு ஒருத்தர் எப்படிப் பட்டவங்கன்னு கண்டுபிடிக்கிற சக்தி இருக்கு. உன்கிட்ட இன்னும் அவன் முகம் கொடுத்துப் பேசல பார்த்தியா. அந்தப் பொண்ணு எப்படித் தவியா தவிக்குதுன்னுப் பாருய்யா... உனக்குக் கண் கலங்கலன்னாலும் வாயையாவது கலக்காமல் இரு. வெந்த புண்ணுல வேலப் பாய்ச்சாதய்யா!"

அரும்பு மீசைக்காரனுக்கும் ஆத்திரம் வந்தது. அது சொல்லில் தெரிந்தது.

"நான் இவங்க கிட்டதான் பேசினேன்."

காஞ்சனா, தர்மசங்கடப்பட்டாள். 'ஆசாமி எனக்கும் அவனுக்கும் ஏதோ இருக்கிறது மாதிரி பேசுறானே. யாராவது கொலகாரங்க வந்தா காப்பாத்தப் போறது அவங்கதான்... இவன் இல்ல.' காஞ்சனா அவன் மீது வார்த்தைகள் வழியாகப் பாய்ந்தாள்

“உங்களுக்கு என்கிட்டே என்ன சார் பேச்சு? இனிமேல் எது பேசணும்னுன்னாலும், எல்லோரையும் பார்த்துப் பொதுப்படையாப் பேசுங்க.”

அரும்புமீசை சீனிவாசன், அவளை அதிர்ச்சியோடு பார்த்தான் பிறகு கோபப்பட்டது போல் எழுந்து, அங்கிருக்கப் பிடிக்காதது போல் வெளியே போனான். உடனே, ரயில் பயல் அந்தப் பெண்ணை அவன் இருந்த இடத்தில் உட்காரும்படி அவள் கையைப் பிடித்துப் பிடித்து இழுத்தான். அவள் தயங்கியபோது பலராமன், “உட்காரு தங்கச்சி” என்று சொல்லவேண்டிய அனைத்தையும் அந்த இரண்டு வார்த்தைகளிலேயே சொல்லி விட்டான். அவளும் தயங்காமலே உட்கார்ந்தாள்.

நாராயணன், கேட்டான்:

“இன்னிக்கி முழுவதும் சாப்பிட்டிருக்க மாட்டேன்னு நினைக்கிறேன். ஏதாவது வேணுமா? நாங்க உன் கூடப் பிறக்காத பிறப்புகள். எங்க மேல கத்தி விழுந்தாலும் கவலையில்லை. உன் மேல ஒரு துரும்பு விழக்கூட சம்மதிக்க மாட்டோம்.”

அவள் நெகிழ்ந்து போனாள். அந்தத் தொழிலாளர்களின் இருந்த வரிசையை நோக்கிக் கையெடுத்துக் கும்பிட்டபடியே அழுதுவிட்டாள். மனச்சுமையைக் கரைப்பது போன்ற கண்ணீர் வெள்ளம். மனிதாபிமானத்தைக் கண்டது போன்ற நெகிழ்வு. காஞ்சனா அவள் தோளைப் பற்றினாள். தெலுங்கம்மா அவள் முதுகைத் தட்டினாள். அப்போது அந்த ரயில் பயல் வெளியே நடக்கப்போனான். பலராமன் அவன் கையைப் பிடித்து இழுத்து எங்கடா என்றான். உடனே பயல் மடிக்குள் திணிக்கப்பட்டதே இரண்டு ரூபாய் நோட்டைச் சுட்டிக் காட்டி அவளுக்கு சாப்பிட ஏதாவது வாங்கிக் கொண்டு வரப்போவதாக வாய்க்கருகே கையைக் கொண்டு போய் தனக்குத்தானே செய்கையால் ஊட்டிக் கொண்டான். பலராமன், கத்தினான்.

“ஏண்டா பெரிய மனுஷா! எங்களுக்குத் தெரியாதா? உட்காருடா. இந்தச் சமயத்துல அவங்களுக்கு சாப்பாடு முக்கியமில்ல. அவங்களைச் சாப்பிட வாரவங்களைச் சாம்பாராய் ஆக்குறதுதான் முக்கியம். ஆமாம்... உங்களுக்கு எந்த ஊரும்மா? என்ன நடந்தது?

“ஏம்ப்பா! கேள்விக்கு பதில் சொல்ற நிலைமையிலேயா அந்தப் பொண்ணு இருக்குது? எதுக்கும் நேரம் காலம் வேணாம்.”

அந்தப் பெண் சொன்னவனையும் சொல்லப்பட்டவனையும் ஏறிட்டுப் பார்த்துவிட்டுத் தலையைத் தாழ்த்திக் கொண்டாள்.

ஆயிற்று... அரைமணி நேரம் ஆயிற்று.

பலராமனும் நவாப்ஜானும் மீண்டும் அவளிடம் எதையோ கேட்கப்போனார்கள். பலராமனைக் கேட்கும்படி நவாப்ஜானும், நவாப்ஜானைக் கேட்கும்படி பலராமனும் தூண்டிவிட்டார்கள். இதைப் புரிந்து கொண்டவள்போல் அந்தப் பெண் சோகமாய்ச் சிரித்தாள். பலராமன் பையப் பைய... கேட்டான்.

"நாங்க யாரைப் பற்றியும் கேட்கமாட்டோம். ஆனா உங்க விஷயத்துல கொலை பேச்சு விவகாரம் அடிபடுது பாருங்க... நீங்க சொல்ல வேண்டியத மட்டும் சொன்னாப் போதும். உங்க ஊரு எதும்மா?"

இப்போது அந்தப் பெண் முகத்தில் லேசான தெளிவு. ஓரளவு நம்பிக்கை பெற்றவள்போல் தலையை லேசாய் ஆட்டியபடியே சொன்னாள்:

"நான் வெளிநாட்டுக்காரி... மலேசியாக் காரி..."

"நீ எங்க இருந்தாலும் தமிழச்சிதான்; இத மறந்துவிடக் கூடாதம்மா."

"உண்மைதான்; ஆனா மறக்க வைச்சுட்டாங்க. நான் மலேசியாவில இருக்கும்போது யாரும் எனக்கு எந்த ஊருன்னு கேட்டால் தமிழ்நாடுன்னு சொன்னவள்நான். இவ்வளவுக்கும் நான் பிறந்தது மலேசியாவில். எங்க அம்மாவுக்கும் அப்பாவுக்கும் மூதாதையர்களும் பிறந்தபூமி என்கிற வகையில் தமிழ்நாட்டு மேலே ஒரு தனிப்பிடிப்பு இருந்தது. மலேசியா, பர்மா, இலங்கை, மொரிசீயஸ் நாடுகள்ல தமிழ்க்குலம் பலவிதமாய் இருந்தாலும் அதனோட வேர் இந்த தமிழ்நாடு என்கிறதுல ஏற்பட்ட பாசம். ஆனா தமிழ்நாட்டுக்கு வந்த இந்த ஏழெட்டு வருஷத்துல இப்ப யாராவது என் ஊரைக் கேட்டா மலேசியான்னு சொல்றேன். அப்படிப் பேசும்படியா ஆக்கிட்டாங்க. ஆனா நான் பட்டபாடும் படுத்தப்பட்ட பாடும் உங்களை சந்திச்ச இந்த அரைமணி நேர்த்துல மனசுல இருந்து போயிடுத்து. தமிழ்க்குலம் இன்னும் சாகல என்கிறத நிரூபிச்சிட்டீங்க...."

எல்லோரும், அவளை அண்ணாந்து பார்த்தார்கள். ஏதோ கொலை வெறியர்களின் தாக்குதல்களுக்கு உட்பட்ட ஒரு சாதாரண அல்லது மோசமான பெண் என்ற அனுமானத்தில் அவளைப் பார்த்த அந்த இரண்டு பெண்களும் கூட நிமிர்ந்து உட்கார்ந்தார்கள். அவளின் சோகக் கதையின் சுவையைப் பகிர்ந்து கொள்வதை விட அவளின் சுமையைப் பங்கிட்டுக் கொள்ள விரும்பியவர்கள் போல தொழிலாளர்கள் அவளைப் பார்த்தார்கள்.

அவள் பேசுவதற்கு ஆயத்தமாக உதட்டோர முனைகளைத் துடைத்துக் கொண்டாள். கண்ணில் தேங்கிய நீராலேயே முகத்தைக் கழுவிக் கொண்டாள். பிறகு, நிதானமாகப் பேசினாள். அவள் பேசப் பேச, தமிழே அவள் வடிவில் பெண்ணாகிப் பேசுவது போலத் தோன்றியது. பழைய பாட்டியாகவும், புதிய பேத்தியாகவும் பேசினாள்.

"பழைய காலத்துல தமிழ்க் குலம் பல நாடுகளுக்குப் போய் அந்த நாடுகளின் வளர்ச்சிக்கு அடித்தளம் போட்டது. இதை நான் ஆணவமாய் சொல்லல. பாரதியார் பாடல்களில் வெளி நாட்டுக்குப் போன நம்முடைய இனம் பட்டபாடும் பெற்ற நோய்களும் சோகத்தோடு ஒலிக்குது. தமிழினம் உழைத்தது மாதிரி - அந்த உழைப்புக்காக அவர்கள் கொடுத்த விலை மாதிரி வேறு எந்த இனமும் கொடுத்திருக்குமோ என்கிறது சந்தேகம். காசுக்கு விலையாகிப்போன தமிழினம் எத்தனையோ விலைகளைத் திருப்பிக் கொடுத்திருக்கு. பாரதியார் வெளிநாட்டுக்குப் போன தமிழர்களைப் பற்றிய பாடல்களை தாம் கண்ட அனுபவத்தின் மூலம் பாடியதாய் இலங்கை தமிழறிஞர் சிவதம்பி சொல்லக் கேட்டிருக்கேன்."

"உதாரணமாய் முன்னாலே ஒரு சமயம், திருநெல்வேலியில் ஒரு இளம் விதவைப்பெண் தன் மகளுடைய நல்வாழ்வுக்காக பிஜித்தீவுக்குக் கப்பல் ஏறிக் கரும்புத் தோட்டத்துல வேலைக்குப் போயிருக்காள். அருமை மகளுக்கு அங்கிருந்தபடியே பணம் அனுப்பியிருக்கிறாள். இந்த உழைப்பில அவளுக்குக் குஷ்டரோகம் வந்துட்டு. கடைசிக் காலத்துல கண்ணுக்குள் நின்ன மகளைப் பார்ப்பதற்கு திருநெல்வேலிக்குத் திரும்பி வந்திருக்கிறாள். ஆனால், மகளிடம் ஒரு குஷ்டரோகத் தாயாகப்போக அவள் விரும்பவில்லை. நெல்லைக்கு வந்ததும் உறவினர் ஒருவர் மூலம் பெற்ற மகளைத் தாம்பரபரணி நதிக்கரைக்கு வரவழைத்து அவளைக் கண்கொண்ட மட்டும் பார்த்தாளாம். மகளுக்கு அவள்தான் தாய் என்று தெரியாது. கடைசியில், மகள் போனதும் அந்த ஆற்றங்கரையில் ஒரு புளியமரத்தில் தூக்குப் போட்டுச் செத்தாளாம். இந்த நிகழ்ச்சியைக் கேள்விப்பட்ட பாரதியார் "கரும்புத் தோட்டத்திலே கால்களும் கைகளும் சோர்ந்து வருந்துகின்றனரே" என்று பாடினாராம்; பாடிவிட்டு, பிறகு மயங்கி விட்டாராம்.

"இதேபோல் அந்தக் காலத்தில் தூத்துக்குடியிலும் ஒரு சம்பவம் மலேசியாவில் தோட்டத்துல வேலை பார்க்கிறதுக்காக் கங்காணிக் கூலித் தொழிலாளர்களைக் கொண்டு சேர்க்கிறதுக்குக் காசு வாங்கிட்டான். கப்பல்ல ஆட்கள் ஏறிற்று. ஆனால், தொழிலாளர் எண்ணிக்கையில் ஒன்று குறைந்ததாம். இதனால் கங்காணி,

துறைமுக அதிகாரி ஒருவர் வீட்டுக்கு வந்த அவர் மனைவிகிட்ட உங்க புருஷன் விபத்துல சிக்கிக்கிட்டார்ன்னு சொல்லியிருக்கான். அந்த அம்மா அடிச்சுப்புரண்டு துறைமுகத்திற்கு வந்ததும் அவரோட புருஷன் கப்பல்ல இருக்கார் என்று கதை சொல்லி இருக்கான். அந்தப் பெண் கப்பல்ல ஏறியவள் ஏறியவள்தான்; வெளியில வரமுடியவில்லை. கூலித் தொழிலாளியாக ஏற்றுமதி ஆனாள். இப்படித் தமிழினம் எப்படியெல்லாமோ அலைக்கழிக்கப் பட்டது இதனாலதான் பாரதியார்,

> **"நாட்டை நினைப்பாரோ எந்த**
> **நாளினில் போய் காண்தென்றே அன்னை**
> **விம்மி விம்மி அழும் குரல் கேட்டிருப்பாய் சங்கே**
> **வீட்டை நினைப்பாரோ-அவர்**
> **விம்மி விம்மி அழும் குரல்."**

என்று பாடினார். தமிழ் ரத்தம் கடலைத் துளைத்து பல்வேறு பூமிகளில் விளைந்தது. இந்த ரத்தபாசம் வெளிநாட்டுத் தமிழர்கள் எல்லோரிடமும் இருக்கிறது. இதே பாசம் இங்க இருக்குமுன்னு நம்பித்தான் எல்லோரும் நினைக்கிறாங்க. இந்தப் பின்னணியில் என் கதையைச் சொல்லப்போறேன்.

"திருநெல்வேலியில் தூக்குப்போட்ட மூதாட்டியோட கதை மாதிரி தூத்துக்குடியில ஒரு குடும்பப் பெண்ணுக்கு ஏற்பட்டதே அந்த மாதிரியான கதைதான் என் கதை. அப்போ தமிழனும், தமிழச்சியும் தமிழ்நாட்டுல இருந்து போறோமேன்னு கப்பல்களில் தவிச்சாங்க. இப்ப என்னை மாதிரி பெண்கள் தமிழ்நாட்டுக்கு வந்துட்டேனேன்னு தவிக்கிறேன். சரி என்னோட கதைக்கு வாரேன்; இதுக்குமேல சுற்றி வளைக்காமலே சொல்லப் போறேன்."



அந்த ரயில், ஏதோ சோககீதத்தை இசைப்பதுபோல, ஒரு ஆற்றுக்கு மேலேயுள்ள வராவதி பாலம் ஒன்றில் அது பாய்ந்த போது, அந்தப் பாலம், இதன் சோகத்திற்கு ஒப்பாரியிட்டு மாரடிப்பது போலிருந்தது.

அவள்பட்ட துன்பக் கதையைக் கேட்க, ரெயில்வே தொழிலாளர்களும் டில்லிப் பெண்களும் இதர பயணிகளும் உன்னிப்பானார்கள். நவாப்ஜான், இரண்டு காதுகளுக்கும் பின்னால்

கரங்களை வைத்துக் கொண்டான். ஏதோ பேசப்போன தோழியை காஞ்சனா கண்களை உருட்டி அடக்கினாள். அந்த ரயில் பயல், அந்தப் பெண்ணையே உற்றுப் பார்த்தான். அவள் எல்லோரையும் பொதுப்படையாகப் பார்த்து விட்டுப் பேசத் துவங்கினாள்.

"என் பெயர்... நாடோ வீடோ... இல்லாதவளுக்கு... பெயர் எதுக்கு... வீடோ நாடோ இல்லாதவளுக்கு பெயர் ஒரு கேடா.... சரி சொல்றேன்.... தமிழ்நாடு ஞாபகமாய் எனக்கு தமிழ்ச் செல்வின்னு பெயர் வைத்தார் என் தாத்தா.... அவரும் இப்படித்தான் கங்காணி மூலமாக கப்பலில் தள்ளப்பட்டு 'கலீங்' என்ற இடத்தில் இடறி விழுந்திருக்கார். ஆனாலும் என் தாத்தா தன்னோட தங்கைகளைக் கல்யாணக்கரையில் ஏற்றுவதற்குத்தான் கடல் கப்பலுக்குள் ஏறியிருக்கார். கெட்டு நொறுங்கின குடும்பமாம் தாத்தா குடும்பம். அவங்க அப்பா... சொத்து பத்து எல்லாவற்றையும் கள்ளாயும், பெண்களாயும் மாற்றி கடன்பட்டுட்டாராம். அதுவரைக்கும் அரங்கு வீட்டுக்குள்ளேயே' இருந்த என் தாத்தாவின் தங்கைகளுக்கு கூலி வேலை செய்ய வேண்டிய கட்டாயம் ஏற்பட்டிருக்கு... இதை மூத்த சகோதரரான வேல்மயிலால் தாங்க முடியவில்லை. தங்கைகளுக்கு வாழ்வளிப்பதற்காகத் தன்னோட வாழ்க்கையை அர்ப்பணித்து இனம் தெரியா நாட்டில் முகமறியா மக்களோடு வாழப் போனார்... 'கலீங்' என்ற இடத்தில் ரப்பர் தோட்டத்தில் கூலியாளாய் சேர்ந்திருக்கிறார்."

"அவரும் அவரைப் போன்ற இதர தமிழர்களும் குற்றேவல்காரர்களாய் வேலை பார்த்த இந்த இடத்திற்கு 'கலீங்' என்று எப்படிப் பேர் வந்தது தெரியுமா? தமிழ்ப் பெண்கள், கால்களில் தண்டைகளோடு நடக்கும்போது 'கலீங் கலீங்' என்று சத்தம் வந்திருக்கு... அந்த சத்தத்தை வைத்தே அவர்கள் நடமாடிய அந்த இடத்துக்கு 'கலீங்' என்று பெயர் வைத்திருக்காங்க...."

ஏதோ குறுக்கே பேசப்போன பலராமனை, நவாப்ஜான், தலையில் ஒரு போடு போட்டான். அவள், லேசாய் சிரித்தபடியே தொடர்ந்தாள்.

"சரி... ஊர்க் கதையில் உங்களுக்கு இஷ்டம் இருக்காது. என் கதைக்கு வர்றேன். ரப்பர்த் தோட்டத்தில் வேல்மயில் அல்லும் பகலுமாய் வேலை பார்த்தார். சில கங்காணிப் பயல்கள் அழகான தமிழ்ப் பெண்களை அடர்ந்த காட்டுக்குள்ளே வேலை செய்யச் சொல்லியிருக்காங்க.... இது உங்களுக்கு ஏன்னு புரியுமுன்னு நினைக்கேன். இதைத் தாத்தா எதிர்த்திருக்கிறார். அவர்களுக்குப் பலியாகப்போன அப்பாவித் தமிழ்ப் பெண்களை வேல்மயில் காப்பாற்றி இருக்கிறார். இதனாலேயே பல கஷ்டங்களுக்கு

உள்ளாகி அப்புறம் பினாங்கில் குடியேறியிருக்கிறார். ஒரு தேயிலைத் தோட்டத்தில் தேநீர்க் கடை வைத்திருக்கார். கடைக்கு யோகம் அடிக்க அடிக்க ஊரில் இருந்த அவருடைய தங்கைகளுக்கும் யோகமடிச்சுது. மாதா மாதம் பணம் அனுப்பியிருக்கிறார். தெரிந்த ஆட்கள் மூலம் நகை நட்டுகள் அனுப்பியிருக்கார்.

"ஊரில் தாத்தாவின் அப்பா - அதாவது என் கொள்ளுத்தாத்தா குடிகாரத்தனத்தையும் ஓரளவு திருத்தி மகன் அனுப்பிய பணத்தில் இழந்துபோன சொத்துக்களையும் மீட்டார். இரண்டு மகள்களுக்குத் திருமணமும் செய்துவிட்டார். கடைசி மகளோட கல்யாணத்திற்கு என் தாத்தாவும் போயிருக்கார்... அங்கே அவருக்கும் கால்கட்டுப் போட நினைத்திருக்கிறார்கள்... தாத்தாவோ பினாங்கிலே ஒரு மலேயப் பெண்ணை நேசித்திருக்கிறார். அவளையே திருமணம் செய்துகொள்ள ஆசைப்பட்டிருக்கார்."

ஆனால், ஊரில் அவரோட அப்பாவும் தங்கைகளும் பிடிவாதமாய் அவரைத் திருமணம் செய்ய நிர்ப்பந்தம் செய்தார் ளாம். சொந்தம் அறுபட்டுப் போகக்கூடாது என்பதற்காகவும் தாத்தா சொந்தத் தாய்மாமன் மகளைக் கட்டினார். அப்படிக் கட்ட வில்லையானால் அவளோட அண்ணனுக்குக் கட்டிக் கொடுத்த அவரோட தங்கையோட எதிர்காலத்திற்கு அபாயம் ஏற்பட்டிருக்குமாம். எப்படியோ கல்யாணம் முடிந்து, கட்டுன மனைவியோட மலேயாவிற்கு வந்தார். பாவம்... தாத்தாவின் காதலியான அந்த மலேயாப் பாட்டி, சாகிறது வரைக்கும் எங்களை வாஞ்சையோடுதான் பார்ப்பாள். நம் தமிழர்கள் பலருக்குக் கெட்ட பேர் வந்ததுக்கு "வாழ்கிற இடத்துல காதல்... பிறந்த இடத்துல கல்யாணம்" என்று நடந்து கொண்டதுதான் காரணம்."

"எப்படி இருந்தாலும் தாத்தா மனைவியோடு சந்தோஷமாய் தான் வாழ்ந்தார். அதோடு பாட்டி, மனைவிக்கு-மனைவி சொந்தத்துக்குச் சொந்தம் என்கிறதால பிரச்சினை ஏதும் இல்லை. அதோடு அந்த மலேயப் பாட்டியும் தாத்தாவும் தொட்டதில்லை. கெட்டதில்லை. அவளும் கடைசிவரை கல்யாணம் செய்து கொள்ளவில்லை. அதேசமயம் ஒதுங்கிக் கொண்டாள். கிராமத்துப் பொண்டாட்டி வந்த நேரமோ என்னவோ தாத்தாவோட தேநீர்க்கடை ஹோட்டலாயிட்டு. கிராமத்தில் தங்கைகளுக்கும் மைத்துனர்களுக்கும் தாத்தா எவ்வளவோ செய்தார். அவரோட தங்கை பெண்கள் போட்டதெல்லாம் மலேயா நகைகள்தான். உடுத்துனதும் அந்த நாட்டு உடைகள்தான். அந்தக் கிராமத்திலேயே எங்க தாத்தா உபகாரத்தில் முதல் தடவையா சைக்கிள் ஓட்டியது எங்க பாட்டியோட குடும்பம். அதனாலேயே அவங்க குடும்பத்துக்கு

இதுநாள் வரைக்கும் சைக்கிள்காரன் குடும்பமுன்னு பேர்... தாத்தா இதோட விடல... தன்னோட ஒரு மகனுக்கு... அதுதான் எங்கப்பாவுக்கு, எங்க பாட்டியோட அண்ணன் மகளைக் கல்யாணம் செய்துவைத்தார். எங்கப்பா, தயங்குனப்போ, 'எப்போதாவது நாம ஊர்ல போய்த்தாண்டா வாழப்போறாம்... அந்நிய பூமியில சிங்கத்துக்கு வால்ாய் இருக்கிறதைவிட சொந்த ஊர்ல நாய்க்குத் தலையாய் இருக்கிறது எவ்வளவோ மேலடா'ன்னு சொல்லியிருக்கார். அதோட, 'நீ கட்டிக்கப் போறவள் யாரு? ஒன்னோட அத்தை மகள்தானே...' என்று அறிவுறுத்தி இருக்கார். ஆக மூன்றாவது தலைமுறையிலும் ஊருக்கும் எங்களுக்கும் பந்தம் ஏற்பட்டது. எங்கப்பா கோலாலம்பூரில் ஜவுளிக்கடை வைத்தார். என் பேர்ல - 'தமிழ்ச்செல்வி சில்க் பேலஸ்...' என்று பெயர் வைத்தார்."

"எங்கப்பா எப்படி மலேய வாழ்க்கையில் ஒன்றிட்டாரோ அப்படி எங்கம்மா மலேயாவில் இருந்தபடியே, தான் பிறந்த குட்டாம்பட்டியிலேயே மானசீகமாக வாழ்ந்தார். அவ்ரால் எழுதப் படும் கடிதங்கள் அன்னியச் சுமையோடு போகும். மாமாக்களிடம் இருந்து வரும் கடிதங்கள் மண்வாசனையுடன் வரும். தாத்தாவும் அம்மாவும் ஊருக்குத் தனித்தனியாய்க் கடிதம் எழுதுவார்கள். ஒரே கடிதத்தில் எழுதுங்களேன் என்று அப்பா சொன்னால் கேட்க மாட்டார்கள். எழுதுறதுக்கு அவ்வளவு விஷயமாம். தாத்தா 'குற்றாலம் ஏரி குளம் பெருகிட்டா...?' என்று கேட்டு எழுதுவார். அம்மா, 'உலவுப்பாட்டி பேத்தி வயதுக்கு வந்துட்டாளா...?' என்று விசாரிப்பாள். 'முடிதீர்த்தான் குளத்தில் "பள்ள மாடன்" குடும்பத்து ஆறுமுகம் வயலை வாங்கிப் போடலாமே...?' என்று தாத்தா கேட்டதும், "அப்படித்தான் நினைக்கோம், உடனே பணம் அனுப்புங்கள்" என்று பதில் கடிதம் வரும்."

"நான் பிறந்து மூன்று ஆண்டுகளில் பாட்டி இறந்து விட்டாள். எப்போ நான் பிறந்தேனோ, அப்பவே எங்கம்மா, 'இவள் எங்க பெரியண்ணா மகன் தாமரைப்பாண்டிக்குன்னு சொல்லிட்டாளாம். என்னோட எல்லாப் பெண் குழந்தைகளும் எங்க அண்ணாச்சிகள் பயல்களுக்கு; அவங்க பெத்துப் போடுற பொட்டைக் கழுதைகள் என்னோட பசங்களுக்குன்னு அந்தப் பசங்களைப் பெத்துப் போடுறதுக்கு முன்னாலயே அம்மா சொல்வாங்களாம். இதனால் தானோ என்னமோ அல்லது நான் ஒருத்தி படப்போகிற பாட்டை நினைத்தோ அம்மா அடுத்த குழந்தை பெறல.. அண்ணன்கள் வீட்டில சம்பந்தம் எடுக்கணும் என்கிறதுக்காகவே டாக்டர்களைக் கூடப் பார்த்தாளாம். நான் சிசேரியன் ஆப்பரேஷனில் பிறந்ததால அம்மாவலே அப்புறம் முடியலன்னும் முடியக்கூடாதுன்னும்

டாக்டர்கள் சொல்லி விட்டதாய் அப்பாம்மா பேச்சுவாக்கில் கேள்விப்பட்டேன்...”

“தாத்தாவோட தூண்டுதல்ல அம்மாவோட நச்சரிப்புல அப்பா ஊருக்குப் பணம் அனுப்பி நிலம் வாங்கிப்போட்டார். அந்தக் காலத்துலயே மாதாமாதம் ஆயிரம்ரூபாய் வரைக்கும் அனுப்பினார். முடிதீர்த்தான்குளத்தில் சுடலைமாடரோட ஒரு கிணத்துப் பாசம். வந்ததில் தாத்தாவுக்கும் சந்தோஷம். தாத்தா பெயரில்தான் வாங்கிப் போட்டதாகக் கடிதம். இதேபோல் சந்திரப்பேட்டை என்ற இடத்தில் தாத்தா பேருக்கு நிலம். அப்புறம் நில உச்சவரம்புச் சட்டத்திற்கு டிமிக்கி கொடுப்பதற்காக அப்பா பேர்ல ஒரு ஏக்கர் நிலம் பதிவாச்சு. பக்கத்தில இருந்த கோணச்சத்திரம் டவுன்ல நாற்பதாயிரம் ரூபாய்ல பழைய வீடு வாங்கி முப்பதாயிரம் ரூபாய் செலவுல புதுப்பிச்சாங்க. வீட்டு வாசலிலேயே ‘வேல்மயில் குடியிருப்பு’ என்று போர்ட் மாட்டியிருந்தது. அதுக்குப் பின்பக்கம் ஒரு மாந்தோப்பையும் வாங்கியாச்சு... ஆக அப்பாவுக்கே இப்போ ஊரில ஒரு பிடிப்பு வந்துட்டு...”

“எங்கம்மா சொல்லுக்குச் சொல் எங்க அத்தமகன் தாமரைப் பாண்டியனைப் பற்றியே பேசுவாள்... இதனால் அம்மா மேல் எனக்குக் கோபம் வரும்போது, அவன் மேல கோபம் வரும்... அம்மா மேல் அன்பு வரும்போது அவன் கிட்டயும் பாசம் வரும். எங்க குடும்பம் நாலு தடவை ஊருக்குப் போயிருக்கோம்... எனக்கு ஒன்பதாவது வயது வந்தப்போ ஊரில், அம்மா சொன்ன தாமரைப் பாண்டியனைப் பார்த்தேன். அந்தச் சின்ன வயதுல அவன் என் கையைத் தற்செயலாய்ப் பிடிச்சப்போ சொந்தக்காரர்கள் கிண்டலும் கேலியுமாய்க் குலவையிட்டார்கள். எனக்கு அப்போ வெட்கப்பட்டது இப்போகூட நினைவுக்கு வருது. காதலாய் இல்ல அவமானமாய்.... போகட்டும்...”

“ஒன்பது வயசுக்கு அப்புறம் பதினாறு வயசுல பழையபடியும் ஊருக்குப் போனோம். அதுக்கு இடையிலே அம்மா ரெண்டு தடவை போயிட்டு வந்துட்டாங்க... நான் ரெண்டாவது தடவையாய் ஊருக்குப்போனப்போ கேம்பிரிட்ஜ் படிக்கேன்.... தாமரைப்பாண்டி இப்போ எப்படித்தான் இருக்கான்னு பார்க்க ஒரு ஆசை... தாத்தா, அம்மா, நானுமாய் ஊருக்குப் போறோம். தாமரைப்பாண்டி நல்லாத்தான் இருந்தான். என்னைப் பார்த்து நல்லாத்தான் சிரிச்சான். அப்பா கொடுத்தனுப்புன ஃபாரின் துணியை அம்மா கொடுக்கப்போனாள். நான் வெட்கத்தையும் விட்டு, அவசரப்பட்டு அவன்கிட்டே நீட்டினேன். அப்புறம் ஒருவாரம் கழித்து அந்தத் துணியில் தைத்த பேண்ட் சட்டையிலேயே அவனை அழகு பார்த்தேன்.”

நி. 4.

"எனக்கு மூன்று மாமாக்கள். இவன் மூத்த மாமா மகன். ரெண்டாவது மாமா மகன் ரத்தினவேல். என்னைவிட ஒரு வயசு அதிகம். அவனுக்கு என்மேல் ஒரு கண். நான், தாமரைப் பாண்டி கிட்டே சிரிச்சுப் பேசும் போதெல்லாம் அவன் கைகளை நெறித்துக் கொள்வான். தாமரைப்பாண்டியை வம்புச் சண்டைக்கு இழுப்பான். அவன், அப்பாகிட்டே வாங்குன திட்டுக்களையும் காலேஜ்ல வாத்தியார்கிட்டே வாங்குன அடிகளையும் நினைவுபடுத்துவான். எனக்கு தர்மசங்கடமாய் இருக்கும்."

"நான் மலேயாவுல பிறந்த தமிழ்ப் பெண் என்பதாலோ என்னவோ நேரிடையாய்ப் பேசிப் பழக்கப்பட்டவள். ஒருநாள் ரத்தினவேலை தோட்டத்தில் தனியாய்ச் சந்திக்க வேண்டிய சந்தர்ப்பம் வந்தது. அவன்கிட்டே "ரத்து.... நான் தாமரைப் பாண்டியனை எவ்வளவு விரும்புகிறேனோ அந்த அளவுக்கு நான் ஒன்னை விரும்புறேன். ஆனால் அது "குடித்தனப்" பாசம். ஒன்மேல வச்சுருக்கது மாமா மகன் என்ற பாசம் என்று சொன்னேன். அவன் புரிந்து கொண்டான். இந்தச் சமயத்தில் தாமரைப் பாண்டியன் எங்கிருந்தோ வந்தான். ரத்னவேல், முன்பு, எப்படி வம்புச் சண்டை இழுப்பானோ அப்படி தாமரைப்பாண்டி, இழுக்கப்போனான். அவன் பத்தாவது வகுப்போடு படிப்பை நிறுத்திவிட்டு நிற்பதையும் தான் காலேஜில் படிப்பதையும் அவனுக்குச் சொல்வதுபோல் எனக்குச் சொன்னான். நான் விவகாரத்தைப் புரிந்து கொண்டேன். உடனே ரத்தினவேலின் முன்னிலையில், தாமரைப்பாண்டியன் தோளில் கைபோட்டபடியே, "என்ன தாமரை.. என் கொழுந்தானை அதான் என் மைத்துனனை குட்டாம்பட்டி வழக்கப்படியே நானும் அந்த வார்த்தையைப் பயன்படுத்தி என் கொழுந்தனை இப்படி மிரட்டுறியே....? நாளைக்கு அத்தை மகள் வீட்ல சாப்பிடலாமுன்னு வந்தால் நீ என்னைத் தடுப்பே போலுக்கே...?" என்று செல்லமாகக் கத்தினேன். சூதுவாதில்லாமல் இருவர் கரங்களையும் பிடித்துக் கொண்டு கிணற்றுப் பக்கம் போனேன்."

ரயிலுக்குள் பேசிக்கொண்டே போனவள், திடீரென்று பேச்சை நிறுத்தினாள். அவள் உணர்ச்சி வசப்பட்டு இருப்பதாகவும், அது தணியட்டும் என்பது போலவும் எல்லோரும் அவளை ஓரஞ்சாரமாய்ப் பார்த்தபடி உட்கார்ந்திருந்தார்கள். அவள் எல்லோருடைய கண்களையும் எதிர்ப்பட்டு எடை போட்டன. பிறகு, எடுத்த எடுப்பிலேயே வேகமாகவும் அதே சமயம் நிதானமாகவும் கேட்டாள்.

"என்னடா இது, ஒரு வயசுப் பொண்ணு... ரகசியமாய் வைக்க வேண்டிய விவகாரத்தை இப்படி வெட்கம் இல்லாமல் பட்டுன்னு

உடைக்காளேன்னு யோசிக்கீங்களா? அல்லது இந்தக் காலத்து மலிவு எழுத்தாளர்கள் மாதிரி முக்கோணக் காதலான்னு. நினைக்கீங்களா... ஆசைக்கு எப்படி வெட்கமில்லையோ... அப்படித் துக்கத்துக்கும் .வெட்கமில்ல..."

அவள் மீண்டும் சட்டென்று பேச்சை நிறுத்திவிட்டு, அவர்களைப் பார்த்தாள். பலராமன் உணர்ச்சிப் பிழம்பானான்.

"நீ நினைக்கிறது மாதிரி அநியாயமாய் சந்தேகப்படுறது மாதிரியான் ஆளுங்க இல்லம்மா நாங்க. நட்பையே உறவாய் நினைக்கிற தமிழர்கள். பேசும்மா. ஒன் பிரச்சினைக்கும் வழி பிறக்கும் என்கிற நம்பிக்கையோட பேசும்மா."

இதற்குள், அந்த ரயில் பயல், அவள் உள்ளங்கையைப் பிடித்து அழுத்தியபடியே "உம்... உம்..." என்றான். அவளும் தொடர்ந்தாள்.

"எனக்கும் ஒங்ககிட்டே பேசுறதுல சுமை குறைஞ்சது மாதிரி இருக்குது.... ஊர்ல இந்த மாதிரி யாருமே காது கொடுத்தது இல்ல..."

"ஊர்ப்பயலுக கிடக்கான்க... சொல்லும்மா..."

"சொல்றேன்... எப்படியோ தாமரைப்பாண்டியனுக்கும் எனக்கும் பிடிப்பு ஏற்பட்டது. ஒரு தடவை அவன் தங்கை "ஏண்ணி! ஒங்க கழுத்துல செயினை எங்கண்ணா கழுத்துலதான் போடேன்... ஒங்க ஞாபகத்தோடு இருப்பான்" என்றாள். உடனே நான் அம்மாவிடம் கூடக் கேளாமல், அதைக் கழட்டி அவனிடம் நீட்டினேன். அவனும் மாட்டிக் கொண்டான். இதேபோல் எனக்குப் பிடித்தமான ஒரு சீனப்புடவையை வைத்திருந்தேன். தொட்டாலே பூவைத் தொடுவது மாதிரியான சுகம் கொடுக்கும் புடவை. அதையும் தாமரைப் பாண்டியின் தங்கை தமயந்தி பார்த்த பார்வையிலே புரிந்து கொண்டு கொடுத்துவிட்டேன்..."

"மன்னிக்கவும். இப்படி செய்த உதவியைச் சொல்லிக் காட்டுவது தப்புத்தான். ஆனால் அவற்றை உதவிப் பொருட்களாய் கொடுக்காமல்... பந்த பாசத்தோட உருவகமாய் கொடுத்ததால்தான் இதைச் சொல்லவந்தேன்.... எப்படியோ... ஊர்ல ஆனந்தமாய் விடுமுறையைக் கழித்துவிட்டு.... கோலாலும்பூருக்குத் திரும்பி வந்தோம்... அங்கே சிறிது காலத்திற்குள் ஒரு பயங்கரம் எங்களுக்காகவே காத்திருந்தது...."

6

அவள் சொல்லப்போவதைத் தெரிந்து வைத்திருப்பது போல், ரயிலும் இப்போது குகைப் பாதைக்குள் நுழைந்தது.

எங்கும் இருள்மயம். ஏதோ ஒருவித பயப்பீதி. அனைத்தும் ஆடி அடங்கி, அந்த குகையும் ரயிலும் மட்டுமே மிஞ்சியிருப்பது போன்ற அந்தகாரம். ஆனாலும், அவள் தன் கதையைத் தொடர்ந்தாள். முன்பு, பயண நண்பர்களுக்குச் சொல்லிக் கொண்டிருந்தவள், இப்போது தனக்குத்தானே சொல்லிக் கொள்பவள்போல், லேசாய்க் கண்களை மூடி, முகத்தை ஒருச்சாய்த்து வைத்தபடி பேசிக் கொண்டே போனாள்.

"ஊரில் இருந்து திரும்பிய ஒரு வார காலம்வரை அம்மா அழுதுகொண்டே இருந்தாள். தூக்கத்தில் திடுக்கிட்டு எழுந்து "அம்மா" என்று கத்துவாள். ஒரு சமயம், "அப்பா" என்று அலறுவாள். பிறிதொரு சமயம் "அண்ணாச்சி" என்பாள். ஒவ்வொரு சமயமும் ஒவ்வொரு அண்ணாச்சியைப் பெயர் சொல்லியபடியே எழுவாள். பிறகு சூன்யமாகப் பார்ப்பாள். "இனிமேல் இந்த நாட்ல இருக்கப்படாது... நம்ம சாதி சனங்களோடு போயிடலாம்" என்பாள். உடனே "இதுக்குத்தான் ஒன்னை ஊர்ப்பக்கமே அனுப்பப்படாது என்கிறது" என்று அப்பா கண்டிப்பார். அதைக் கேட்ட அம்மா, "அப்படியா! பார்த்துடலாம்... அனுப்ப மாட்டிங்களா... அனுப்பவே மாட்டிங்களா?" என்று மூன்று வருடங்களுக்குப் பிறகு போக வேண்டிய பயணத்துக்கு அப்பவே உறுதிப்படுத்த முயற்சிப்பாள். அந்த பரிதாபம் தாங்கமுடியாமல் அப்பாவும் அம்மாவின் முதுகைத் தட்டிக்கொடுப்பார். தாத்தாவும் இப்படித்தான் தனியாக மருகிக் கொண்டிருப்பார். நான் அவர் பக்கம் போகும் போதெல்லாம், "பேசாமல் இந்தத் தடவை போனபோது நான் ஊர்லயே ஒதுங்கி இருக்கணும்" என்பார். உடனே நான், 'இக்கரைக்கு அக்கரை பச்சை... என்னைப் பார்க்காமல் உங்களால இருக்க முடியுமா?' என்று சவால் குரலில் கேட்பேன். உடனே அவர் என் தலையைக் கோதிவிட்ட படியே "அதுக்கும் ஒரு வழி கண்டு பிடித்திருக்கேன்... ஒனக்கும் தாமரைப்பாண்டிக்கும் கல்யாணம் ஆனதும், நானும் உன்னோட ஒன்றாய் ஊர்லயே இருந்துக்குவேன்" என்று கண்களைச் சிமிட்டி கேட்க, வெட்கிப் போகும் எனக்கும்."

"எனக்கும் ஊரின் நினைவு வரும்போதெல்லாம், என்னை வேடிக்கை பார்ப்பதுபோல் பார்த்த விவசாயப் பெண்கள்... இமிடேஷன் செய்யப்பார்க்கும் மாணவிகள்... கண்களால் கலாட்டா

செய்யும் இளைஞர்கள்... ஆகியோர் நினைவு வரும். ஊர் வீடுகளும், எந்தவித எதிர்பார்ப்புமின்றி அன்பு காட்டிய ஏழை எளியவர்களின் முகங்கள். என் தாத்தா பாட்டி வரலாற்றைச் சொல்லும் உள்ளூர் கல்வெட்டு மாதிரியான உயரமான தாத்தா ஆகிய எல்லோருடைய நினைவும் வரும். எல்லாவற்றிற்கும் எல்லோருக்கும் மேலாக, என்னை நிழல்போல் சுற்றிய தாமரைப்பாண்டி அத்தான் நினைவு வந்து, அதிலேயே மனம் நிலைக்கும். எல்லாம் நான் வீட்டில் இருக்கும்போதுதான். பள்ளிக்கூடம் போய்விட்டால்... அங்குள்ள என் சீன, மலேய, தமிழ் சக மாணவிகளுடன் உரையாடுவதினால் ஊர் வாசனை மறந்துபோகும்."

"காலம் மற்றவர்களுக்கு எப்படியோ எங்களுக்கு என்னமோ நல்ல படியாகத்தான் நடந்து கொண்டிருந்தது. நான் சீனியர் கேம்பிரிட்ஜ் முடித்து விட்டேன். பொதுவாக வெளி நாட்டுப் பாஸ்போர்ட் வைத்திருப்பவர்களுக்கு கோலாலும்பூர் பல்கலைக் கழகத்தில் இடம் கிடைப்பது கடினம். எங்கள் குடும்பமும், மலேயக் குடிமக்களாகாமல் இந்திய பாஸ்போர்ட்களையே வைத்திருந்தார்கள். என்றாலும், நான் எல்லா பாடங்களிலும் நல்ல மார்க் எடுத்திருந்ததால், எனக்கு இந்த பாஸ்போர்ட் விவகாரத்தையும் மீறி இடம் கிடைத்தது."

"நான் பல்கலைக் கழகத்திற்குப் போகத் துவங்கியபோது_ எங்கள் வீட்டில் எல்லோர் தலையிலும் இடி விழுந்தது. என் அருமைத் தந்தை மாரடைப்பால் காலமானார். ஜவுளிக்கடையில் ஒரு ஒரு புடவையைச் சுருட்டிக் கொண்டிருக்கும்போதே சுருண்டு விழுந்தார். மருத்துவமனைக்கு அவரைத் தூக்கிக் கொண்டுபோன கார் அங்கு போகாமலே வீட்டுக்கு வந்தது... காலையில் கலகலப்பு மனிதராகப் போனவர், மத்தியானம் பிணமாக வந்தார். அப்பாவிற்கு ஐம்பத்தைந்து வயதிருக்கும். அந்தக் காலத்திலேயே கேம்பிரிட்ஜ் படித்தவர். அரசு அலுவலகத்தில் கைகட்டி உத்தியோகம் பார்க்க விரும்பாமல் தாத்தாவின் சம்மதத்துடன் ஜவுளிக்கடை வைத்தார். அப்பா அம்மா ஊருக்கு வரும்போதெல்லாம் ஜவுளிக்கடையில் கிட்டத்தட்ட கால்வாசியை காலி செய்து அம்மாவிடம் கொடுத்து விடுவார். எப்போதும் சிரிப்பும் கும்மாளமுமாக இருந்தவர்; என்னிடம் நேரிடையாகவே பல தடவை பேசியிருக்கிறார். "ஒம்மாவுக்காக நீ தாமரைப்பாண்டியனையோ, தடிப் பாண்டியனையோ கட்டக்கூடாது... கட்டிக்கறதாய் இருந்தால் ஒனக்காகக் கட்டிக்கணும்... இந்த மலேயாவுல கிடைக்காத மாப்பிள்ளையா..." என்பார்."

"உடனே ஏதோ ஒரு மூலையில் இருந்து, கண்ணுக்குத் தெரியாத இடத்தில் இருந்து 'தாத்தா மகள்கிட்ட பேசுற பேச்சா இது... ஏய்...

பூவம்மா' என்று மருமகளை - என் அம்மாவைக் கூப்பிடுவார். அப்பா அடங்கிப்போவார். அப்பாவிடம்தானே அப்பாவாகிப் போன பிறகுகூட, நேரிடையாகப் பேசமாட்டார்."

சீனிவாசன், அவள் நீண்ட கதையை கேட்க மனமில்லாமல் முணுமுணுத்தபடியே வெளியே போனான். உடனே பலராமன், "இந்தத் பீடை ஒழிஞ்சது மாதிரி, ஒன் பீடையும் ஒழிஞ்சுடும்மா...." என்றான். என்றாலும், அந்தச் சூழலில் எவராலும் சிரிக்க முடிய வில்லை. முருக்கு, வேர்க்கடலை, வெள்ளரிக்காய் வகையறாக்களை கொண்டு வந்த சில்லரை வியாபாரிகளை, ரயில்பயல் 'போ... போ...' என்பது மாதிரி விரட்டினான். அவர்கள், அவனை முறைத்தபோது, நவாப்ஜான், 'அடப் போங்கண்ணா போங்கப்பா... அப்புறமா வாங்க... இழவு வீட்டுக்கு பட்டு உடுத்திட்டு வந்தமாதிரி வந்துட்டானுக...' என்றான்.

தமிழ்ச்செல்வி, தொடர்ந்தாள்.

"அப்படிப்பட்ட அப்பா, வீட்டில் மல்லாந்து கிடத்தப்பட்டார். இந்திய நண்பர்கள் மட்டுமல்லாது, சீன மலேயா நண்பர்களும் வீட்டில் மொய்த்திருக்க அம்மா மயங்கிப்போய் அவர் மார்பிலேயே சாய்ந்தாள். தாத்தா, பெத்த மகனை மடியில் போட்டுக் கொண்டு எங்கேயோ வெறித்துப் பார்த்தார். அவ்வப்போது 'எங்களையும் கூட்டிட்டுப் போடா... என்னையும் கூட்டிட்டுப் போடா...' என்று புலம்பினார். நான் ஒருத்திதான், கொஞ்ச நஞ்ச தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, அப்பாவின் கால்மாட்டில் உட்கார்ந்தேன். சிறிது நேரத்திற்குப் பிறகு தாத்தா என்னைப் பார்த்தபடியே இருந்தார். பிறகு மடியில் கிடந்த மகனின் தலையைக் கோதிய படியே, "டேய் என் பேத்திக்கு வழி சொல்லாமல் போயிட்டியேடா" என்று புலம்பினார். உடனே, அப்பாவின் மார்பில் சாய்ந்து கிடந்த அம்மா என் பக்கமாய் விழுந்தடித்து என்னை மார்போடு சாய்த்த படியே அழுதபோது அதுவரை கண்களை இழுத்துப் பிடித்தும், வாயை தம் பிடித்தும் என்னையே அடக்கிக் கொண்ட நான் கதறினேன். தொண்டை கட்டும்வரை, மூச்சு முட்டும் வரை கத்தினேன்... முட்டி மோதினேன்."

"நல்லவன் செய்யாததை நாள் செய்யும் என்பார்கள். விருப்பு வெறுப்புக்களுக்கும் வேண்டுதல் வேண்டாமைக்கும் அப்பாற் பாட்டது. காலம் - மனித மனதை தனக்கு ஏற்றாற்போல் தான் மாறியது போல் ஒரு மனோ பிரமையான மாயையை உருவாக்கும் காலம்... எங்களையும் மாற்றியமைத்தது. ஊரில் இருந்து வந்த கடிதங்கள், துன்பச் சுமையைப் பகிர்ந்து கொண்டன."

"காலம் தன் சுயரூபத்தை மீண்டும் காட்டியது."

"தாத்தா, தள்ளாடும் வயதிலும் ஜவுளிக்கடைக்குப் போனார். அப்பா இறந்த ஆறு மாத இடைவெளிக்குள் அவரும் போய் விட்டார். தள்ளாமை வயதில், இயல்பாக இறந்துவிட்டவர்போல் மற்றவர்களுக்குத் தெரிந்தாலும், எனக்கும் அம்மாவுக்கும் வைரப் பட்ட மேனிக்காரனான அவர் இறந்ததன் காரணம் புரிந்தது. அவர் இறந்தபோது "மகளை விட்டுட்டுப் போயிட்டார்னு மகனைத் திட்டுனீங்களே மாமா... இப்போ நீங்களும் ஒங்க பேத்திக்கு வழி செய்யாமல் போயிட்டீங்களே" என்று அம்மா அரற்றினாள். எனக்குத் தாத்தா இறந்ததுகூடப் பெரிதாகத் தெரியவில்லை. கடைசி ஒருவார காலமாய் வீட்டில் கட்டிலில் முடங்கிக் கிடந்தார். அப்போது அவரைப் பார்க்கவரும் அத்தனை ஆண்களையும் கட்டிப்பிடித்து அவர்களைத் தன் மகனாகப் பாவித்து "என் தங்க மகனே, எப்படிடா இருக்கே...? பேத்திக்கு எப்போடா கல்யாணம் நடத்துறது...? சொல்லுடா... சொல்லுடா..." என்று அவர்களின் சட்டைகளைப் பிடித்து உலுக்கியதை இன்னும் என்னால் மறக்க முடியல...."

"நான் ஏற்கெனவே சொன்னது போல காலம் ஒரு மாதம் எட்டி நடந்து, எங்களையும் இழுத்துக் கொண்டதுபோல், விவகாரத்தை விஞ்ஞான பூர்வமாகச் சிந்திக்க வைத்தது."

"கண்போலப் பாவித்த கணவரும், அந்தக் கணவரைப் பிறப்பித்த தாய்மாமனும் இல்லாத வீடு அம்மாவுக்கு நரகமாகியது. அவன் ஜவுளிக்கடையை விற்கப் போனபோது நான் வேண்டாம் என்றேன். அம்மா எனக்கு உபதேசித்தாள்."

"நான் இனிமேல் வாழறதே ஒனக்காகத் தானம்மா... ஊர்ல நாம் தலைமுறை தலைமுறையாய் சாப்பிடுவதற்கு நிலம் இருக்கு.... நாம் தங்கி இருக்க டவுனுலேயே வீடு இருக்கு... கண்ணுக்கு அழகான என் அண்ணன் மகன் தாமரைப்பாண்டி இருக்கான். நீ திருநெல்வேலியிலேயோ தூத்துக் குடியிலேயோ காலேஜ் படிக்கலாம். அவனைக் கட்டிய பிறகுகூட படிக்கலாம். நீ படிக்கணு முன்னு சொல்லும்போது அவன் தடுக்கவா போறான்? ஆனாலும் எல்லாம் உன் இஷ்டம். நீ என்ன சொல்றியோ அதுப்படி நடக்கேன். அதே சமயத்துல என்கிட்டே ஒரு உண்மையும் சொல்லியாகணும். என் தெய்வமும், அந்த தெய்வத்தோட தெய்வமும் நடமாடுன இடத்தில என்னால் அதிக நாளைக்கு நடமாட முடியாது... நான் சொல்றது புரியுதாம்மா..."

"எனக்குப் புரிந்தது. அம்மாவுக்கும், எனக்கும் புரிந்துவிட்டது என்பது புரியட்டும் என்பதுபோல், என் தாயைக் கட்டிப் பிடித்துக் கதறினேன். அவள் உயிரோடு இருப்பதற்காக நான் இந்த ஊரில்

சாகவும் துணிந்து விட்டேன். அதே சமயம், எனக்கும் இப்போது தாமரைப்பாண்டி மீது பிடிப்பு அதிகமாகிவிட்டது. அவன் தோளில் சாய்ந்து எனக்கு ஏற்பட்ட இழப்புகளை சொல்லிச் சொல்லி ஆறுதல் தேடுவதுபோல், கற்பனை செய்தேன்."

"கோலாலும்பூரில் இருந்த ஜவுளிக்கடையை விற்றோம். அப்பாவின் கடைசிக் காலத்தில், கிராமத்தில் மேலும் ஒரு ஏக்கர் நஞ்சை வாங்கிப் போட்டோம். தாமரைப்பாண்டி அப்பாதான் அந்தப் பொறுப்பை ஏற்றிருந்தார். ஜவுளிக்கடைக்குக் கடன் இருந்தது. கடன்காரர்களிடமே அதை ஒப்படைத்தோம். மூன்று லட்சம் ரூபாய் கைக்கு வந்தது. பணமாகக் கொண்டுபோக முடியாது என்பதால், அந்தப் பணத்தை நகைகளாக மாற்றிக் கொண்டோம். அப்பா இறந்த பிறகும் இப்படிக் கட்டாயத்தின் பேரில் நகை போடுவதற்கு அம்மா யோசித்தாள்... ஒரு காலத்தில் சிரித்தபடியே தன்னை அலங்கரித்துக் கொண்டவள் இப்போது அழுதபடியே அலங்காரியானாள். இரண்டு டெக்குகளையும், விசிஆர், மிசின்களையும் வாங்கிக் கொண்டோம். என் மாமா சொக்காரர் களுக்கும் விதவிதமாகத் துணி எடுத்தோம். தாமரைப்பாண்டிக்கும், ரத்தினவேலுக்கும் நல்ல கடிகாரங்களாக வாங்கிக் கொண்டோம்."

பலராமன், பழையபடியும் இடைமறித்தான்.

"முதல் சொக்காரர்கள்னு சொல்றீங்களே.... அப்படின்னா என்னம்மா...?"

"அவங்களைப் பேச விடுடா... எது கேட்கணுமுன்னாலும் இடையிலே கேட்காதடா. அப்பால கேளு..."

பலராமனும், நவாப்ஜானும், சில்லறைச் சண்டையை பரிமாறிய போது, லேசாய் இளைப்பாறியவள் மீண்டும் தொடர்ந்தாள்.

"சொல்றேன்.... பிராமணர்கள் கோத்திரமுன்னு சொல்றது மாதிரியான வார்த்தை சொக்காரன் என்கிறது... இதையே தமிழ்நாட்ல மலைவாழ் மக்கள் மநித் என்று சொல்வாங்க... இதுபோல திருநெல்வேலி மாவட்டத்துல சொக்ககாரங்கன்னால் சித்தப்பா பெரியப்பா..... சின்ன தாத்தா பெரிய தாத்தா வகையறாக்கள்... அதுல முதல் சொக்காரங்க என்கிறது சித்தப்பா பெரியப்பா பிள்ளிங்க..."

"அவங்க எப்படியும் உறவு வச்சு, ஒப்பாரி வைக்கட்டும். ஒன் கதைய சொல்லுமா..."

"அம்மாவும் நானுமாய்ப் புறப்பட்டோம். என் சிநேகிதிகள் ரொம்பத் தடுத்தாங்க. சிலர் எனக்காக அழக்கூடச் செய்தாங்க.

பழையபடியும் மலேசியாவுக்கு வரமுடியாதுன்னு பயமுறுத்திக் கூடப் பார்த்தாங்க. அவங்களை எப்படியோ சமாளிச்சு பிளேன்ல வந்தோம். சென்னையில் இருந்து தென்காசிக்குப் போனோம். நாங்க வருவதை முன்கூட்டியே தெரிவித்திருந்ததனால் ரயில் நிலையத்தில் என்னோட தாய்மாமா... அதுதான் தாமரைப்பாண்டியின் அப்பா வந்திருந்தார். முன்பெல்லாம் ரயில் நிலையத்துக்கு ஒரு பட்டாளமே வரும். அப்போ தாமரைப்பாண்டியனும், ரத்னவேலும் போட்டி போட்டுக்கொண்டு முன்னால நிப்பாங்க. ஆனால் அப்போ மாமா மட்டும்தான் வந்திருந்தார். அம்மா அண்ணனைக் கட்டிப் பிடித்து அழப்போனாள். நான் அண்ணனையும், தங்கையையும் பார்த்து ஆறுதல் சொல்லுனுமுன்னு நினைத்தேன். அம்மாதான் அவர் தோளில் சாய்ந்து அழுதாள். மாமாவும் லேசாய்க் கண்ணீர் விட்டதாய் ஞாபகம். ஆனாலும் அது பெரும் அளவுக்கு இல்லை."

"மூணு பேரும் ஒரு காரில் ஏறினோம். மாமா... அப்பா செத்ததை ஏதோ பரீட்சைக் கேள்வி மாதிரி கேட்டார். அம்மா பதில் சொல்லிக் கொண்டிருக்கும் போதே இன்னொரு கேள்வி கேட்டார். "ஆமாம்மா... நொடித்து வந்திருக்கியே... கப்புலுல வந்திருக்கலாமே.... எதுக்காகப் பணத்தைக் கொட்டி பிளேன்ல வரணும்.... அப்புறம் கஷ்டப் படப்போறது நீதானே..." என்றார்.

"அம்மா ஆடிப்போய் விட்டாள். சொல்ல வேண்டியதைச் சொல்லிவிட்ட திருப்தியில் மாமா, விரல்களுக்குச் சொடக்குப் போட்டார். பிறகு, 'ஒனக்கு இந்த மாதிரி நிலமை ஏற்பட்டதை நினைக்கும்போது மனசு என்னவோ செய்யுது' என்றார் மாமா. உடனே அம்மாவுக்குப் போன உயிர் திரும்பியது. அண்ணணின் தோளில் சாய்ந்தபடியே 'இனிமேல் நீதான் எல்லாமே' என்று அழுதுத் தீர்த்தாள்."

"கிராமத்திற்குப் போகிற வழியில் கார், கோணச் சத்திரத்தில் நாங்கள் வாங்கிப்போட்ட வீட்டின் முன்னால் வந்து நின்றது. அந்த வீட்டைப் பார்த்ததும் அம்மாவும் நானும் அதிர்ச்சி அடைந்தோம். நான் மாமாவை நேருக்கு நேராய்ப் பார்த்து, கோபத்துடன் கேட்கப் போனேன்."

# 7

அந்த ரயில், இப்போது ஏதோ ஒரு இரண்டு நிமிட தகர டப்பா ரயில் நிலையத்தில் நின்றது.

இந்த மாதிரி சமயத்தில், எழுந்து ரயில் கதவருகே போய் நிற்கும் பலராமனும், நவாப்ஜானும், அவள் வாயையே பார்த்தபடி நின்றார்கள். அவளோ, பேச்சை சட்டென்று நிறுத்தினாள். ரயில் புறப்படுவது வரைக்கும் பேச விரும்பாதவள்போல், அவர்களை சோகமாகப் பார்த்தாள். இதற்குள் அந்த ரயில் பயல், அவளைப் பேசும்படி பிராண்டி எடுத்தான். உடனே அவளும் அந்தப் பயலின் கையை, தன் கைக்குள் மூடியபடியே மீண்டும் வாய் திறந்தாள்.

"கோணச்சத்திரத்தில் நாங்க வாங்கிப் போட்ட வீடு மிகப்பெரியது. வீட்டு மூலையில் "வேல் மயில் இல்லம்" என்று பெயர் ஒரு பலகையில் எழுதப்பட்டிருந்தது. அந்தப் பலகையை மாட்டியதே எங்க மாமாதான். அதற்கு இரு பொருள் இருப்பது, ஊருக்குக் போன பிறகுதான் புரிந்தது. வீட்டின் முன்பக்கம் என் தாத்தாவோட பெரிய போட்டோ மாட்டப்பட்டிருந்தது. போட்டோ என்னமோ சிரித்தது. ஒருவேளை தாத்தா மாமாவுக்குத் தாய்மாமா என்பதால் இருக்கலாம். ஆனால் தாத்தாவின் பெயரில் உள்ள பலகைக்குப் பதிலாக 'தாமரைப் பாண்டியன், பி.ஏ.' என்ற பலகை வண்ணத்தில் மின்னியது."

"எனக்கு ஏதோ இது அதிகப்படியாகவும், ஏதோ சூதிருப்பது போலவும் தோன்றியது. எனக்குக் கோபம் வரும் போதெல்லாம், என்னை அறியாமலே முன் வரிசைப் பற்களால் பின் உதட்டைக் கடித்து, என் காதுகளை என் கைகளாலேயே திருகிக் கொள்வேன். இதைப் பார்த்த என் அம்மா, என்னை ஒரு பக்கமாய் இழுத்துக் கொண்டு விஷயத்தைக் கேட்டாள். நான் உடனே அந்தப் பலகையின் விபரீத எழுத்துக்களைச் சொன்னேன். அம்மா கலகல வென்று கலக்கத்தோடு சிரிப்பதுபோல் சிரித்தாள். அல்லது நடித்தாள் என்று சொல்லலாம். எப்படியோ தன்னைத்தானே அடக்கிக்கொண்டு, 'மூளை இருக்குதா உனக்கு...? தாமரைப் பாண்டியன் யாரு.... உன்னைக் கட்டிக்கப் போகிறவன்... அவன் போர்ட் இருக்கது நமக்குப் பெருமைதானே...? இதில், அவன் நம்மிடம் உரிமை எடுத்திருக்கான் என்று தானே அர்த்தம்?' என்று அனர்த்தம் கூறினாள்."

"இந்த இடத்தில் நான் ஒரு விஷயத்தைச் சொல்லியாக வேண்டும். தமிழ்நாட்டில் எல்லோரும் ஏமாற்றுக்காரர்கள் என்று நான் சொல்லவரவில்லை... இன்னிக்குக்கூட பேப்பர்ல ஒரு செய்தி வந்தது... புதுச்சேரியிலேர்ந்து குவைத் போய் அம்மாவுக்கு பணம் பணமா அனுப்பிய ஒரு வாலிபரைப் பற்றிய செய்தி... மகன் புதுவைக்குத் திரும்பினதும் தாய்க்கும் மகனுக்கும் ஒரு வீடு வாங்கியதில் தகராறு. விவகாரம் இப்போ உயர்நீதிமன்றத்துக்கு வந்திருக்கு.... பெத்த மகனுக்குகே இப்படின்னா எங்களுக்கு ஏற்பட்டது பெரிசில்லே... பெரிசோ, சிறிதோ அனுபவகிக்கிறது நான் என்பதாலேயே இதைச் சொல்றேன்."

"சும்மா சொல்லக் கூடாது.... நாங்கள் ஊரில் போய் இறங்கியதும் ஊர் மக்களே திரண்டு வந்தார்கள். எங்கள் மாமா குடும்பத்துக்கு ஆகாதவர்கள்கூட திரண்டு வந்தார்கள். என் அம்மாவின் பழைய சிநேகிதிகள் அவளைக் கட்டிப் பிடித்து ஒப்பாரி இட்டார்கள். என் அப்பாவின் பங்காளிகளும் தேம்பித் தேம்பி அழுதார்கள். இதைப் பார்த்து ரயில் நிலையத்தில் அதிகமாய் அழாத என் மாமாகூட அழுதார். இந்த இரண்டு மாமாக்களும் அழுத்தார்கள். ஆனால் மாமாக்களின் மனைவிமாரும் பிள்ளை குட்டிகளும் ஒப்புக்கு அழுவது போலிருந்தது. மாமிகள் மூவரும் அழுது கொண்டே ஒருத்திக்கு ஒருத்தி பேசிக் கொண்டார்கள்... ஆனால் வண்ணாத்தி வடிவும், குடிமகள் மாரியம்மாவும், சேரிப் பெண் ராமக்காவும் அழுத அழுகை ஏழேழு தலைமுறைக்கும் போதும். இவ்வளவுக்கும் இந்த எளிய மக்களுக்கோ ஊர்க்காரங் களுக்கோ நாங்கள் பெரிதாக ஒன்றும் செய்து விடவில்லை. எங்கள் மீது அவர்கள் வைத்திருந்த அன்பைக்கண்டு நான் திகைத்து விட்டேன். அந்தச் சமயத்தில் நான் பிறந்த மலேசியாவின் ஞாபகமே வரவில்லை என்று சொல்லலாம்."

"எப்படியோ ஒரு மாதம் ஓடியது."

"என் மாமா மகளுக்குக் கல்யாணம். அதாவது எனது பெரிய மாமா மகளுக்கு. என்னையும் தாமரைப் பாண்டியனையும், ஒன்றாகப் பார்த்துப் பார்த்து, சிரித்துச் சிரித்து குலவை போட்டாளே அவளுக்குத்தான். டில்லி மாப்பிள்ளை. என் மேல் கொள்ளைப் பிரியம் அவளுக்கு... கல்யாணம் நிச்சயமாகிவிட்டது. இருபது பவுன் நகை குறைகிறது என்று மாமா மூக்கால் அழுதார். அம்மாவிடம் ஜாடை மாடையாகச் சொன்னார். அம்மா கண்டுக்காதபோது நான் கண்டு விட்டேன் மனிதக் கல்யாணத்திற்கு முன்னால் கேவலம் உலோகம் குறுக்கே நிற்கக்கூடாது. எங்களிடம் இருந்த முப்பது பவுனில் இருபதை அவள் கழுத்தில் போட்டேன்.

அவளும் "நீ மட்டும் இல்லையானால் அப்பா என்னை ஒரு விவசாயிக்குத் தள்ளியிருப்பார்" என்று சொன்னபடியே என்னைக் கட்டிப் பிடித்தாள்."

"இந்தச் சமயத்தில், என் இரண்டாவது மாமா மகளைப் பெண் பார்க்க வந்தார்கள். அழகில் சுமாரான அவளைப் பிரமாதமாக ஜோடித்துக் காட்ட விரும்பினார்கள். நான் கழுத்தில் போட்டிருந்த நெக்லஸையும் கையில் போட்டிருந்த காப்புக்களையும் ஒருநாள் கடனாகக் கேட்டார்கள். அம்மாவின் எதிர்ப்பையும் பொருட் படுத்தாது கழட்டிக் கொடுத்தேன். இந்த நேரத்தில், அம்மாவின் பங்காளிகள் சில்லறை சில்லறையாக சில ஆயிரங்களை வாங்கிக் கொண்டார்கள். பெரிய மாமா, மகளோட கல்யாணத்திற்குப் பணம் கேட்டார். "நீ செய்யாமல் யார் செய்வா...?" என்று தாமரைப் பாண்டியனையும் என்னையும் கண்களால் இணைத்துப் பார்த்த படியே கேட்டார். நான் மிச்சம் மீதியாய் இருந்ததைக் கொடுத்து விட்டேன்."

"அப்படி கொடுத்து நாலு மாதமாகிவிட்டது. என்னிடம் நெக்லஸும், தங்க வளையல்களும் வாங்கிய இரண்டாவது மாமா வீட்டில் அதைப் பற்றியே பேச்சில்லை. ஒரு தடவை தயங்கியபடியே கேட்டபோது, "நிச்சய தாம்பூலம் ஆகட்டும்.... திருப்பித் தந்துடுறோம். இல்லாட்டால் அடிக்கடிக் கேட்க வேண்டிய திருக்கும்... நெக்லஸைக் கடித்தா தின்னுடப் போகிறோம்" என்று மாமா அதட்டலாகச் சொன்னார். நாங்கள் பெரிய மாமா வீட்டில் தான் இருந்தோம். நடுல மாமா வீட்டுக்கும், சின்ன மாமா வீட்டுக்கும் அடிக்கடி போவோம். சின்ன மாமா அப்பாவி.... அவருக்கு பதினெட்டு வயதில் ஒரு பையனும், பத்து வயதில் ஒரு பொண்ணும் இருந்தார்கள். அவர் வாய் பேசி நான் பார்த்ததில்லை. எங்கம்மா அவரைப் பார்த்து, "எப்படிடா இருக்கே?" என்று கேட்டவுடனேயே மாமா பல் தெரியச் சிரிப்பார். அக்காவைப் பாசத்தோடு பார்த்துக் கொண்டேயிருப்பார். அதோடு சரி... அதுதான் சரியென்பது மாதிரியான சிரிப்பு..."

"நான்கு மாதத்திற்குள், என் பெரிய மாமாவின் மனைவி லேசாய் முணுமுணுக்கத் துவங்கினாள். அம்மாவின் முன்னால், எல்லா எச்சில் பாத்திரங்களையும் கொட்டுவாள். அது முடிந்ததும், அழுக்குத் துணிகளை அள்ளிப் போடுவாள். நாங்கள் மலேசியாவில் வாஷிங் மெஷின் வைத்திருந்தோம்; இந்த மாதிரியான வேலையைச் செய்தறியாதவள் என் அம்மா. ஆனால் மாமியோ, அம்மாவைத் தொடர்ந்து இந்த மாதிரியான காரியங்களை செய்யச் சொன்னாள். நான் வெகுண்டெழுப் போனேன். உடனே அம்மா, "எனக்காகப்

பொறுக்க முடியாவிட்டாலும், உனக்காகவாவது பொறுத்துக்கடி" என்று சூசகமாகச் சொன்னாள். ஆனால், அந்தப் பேச்சை என்னால் சுவைக்க முடியவில்லை."

"காரணம், தாமரைப்பாண்டியன் என்னிடம் ஏனோ தானோவென்று நடந்தான். ஒரு தடவை, நான் கல்லூரியில் படிக்கப் போவதாய் சொன்னபோது அவன், "கல்யாண வயசில் காலேஜ் எதுக்கு" என்று கண்சிமிட்டிச் சொன்னான். உடனே, அவன், எனக்குத் தாலி கட்டப்போவதை சுட்டிக் காட்டுவதாக நினைத்து, நானும் கல்லூரிப் பேச்சை எடுக்கவே இல்லை. ஆனால், அவனோ பட்டும் படாமலும் நடந்தான். ஒருவேளை கிணற்றுத் தண்ணீரை வெள்ளம் கொண்டு போகாது என்று அனுமானத்தில் நடந்து கொள்கிறான் என்று ஆறுதல். வேண்டுமென்றே எனக்கு நானே சொல்லிக்கொண்ட ஆறுதல்..."

"ஆனால், அந்த எண்ணத்திற்கும் மண் விழுந்தது. ஒருநாள் வழக்கம் போல அம்மா, பெரிய மாமா வீட்டுத் துணிகளைத் துவைத்துக் கொண்டிருந்தாள். துணிகள் கிடந்த துணிக் கல்லில் அவள் கைபட்டு ஒரே ரத்தம். என்னால் தாள முடியவில்லை. அம்மாவைப் பலவந்தமாக அப்புற படுத்தி விட்டு, நானே அந்தத் துணிகளைத் துவைத்துக் கொண்டிருந்தேன். அப்போது வெளியூர்க் காரர் ஒருவரும், பெரிய மாமாவும் பேசிக் கொண்டிருந்தார்கள்... தாமரைப்பாண்டியனுக்குப் பக்கத்து ஊரில் பெண் பார்க்கிறார் களாம். பெண் பிடித்ததோ இல்லையோ. மாமா, ஐம்பது பவுன் நகையும் ஐம்பதாயிரமும் கேட்டாராம். முதலில் தயங்கிய பெண் வீட்டார், இப்போது அதுக்குச் சம்மதித்து விட்டார்களாம். மாமா, அந்த வெளியூர் ஆசாமியிடம் சந்தோஷமாகத் தலையாட்டிப் பேசினார். இந்த ஆடி மாதம் போனதும் ஆவணியில் கல்யாணத்தை முடித்துவிடலாம் என்று மாமி குறுக்கே வந்து சொன்னாள். இந்த லட்சணத்தில் என்னைப் பார்த்து "துணியை இப்பவே துவைக்காதே. கொஞ்சம் ஊற வை" என்றாள்."

"எனக்குப் பற்றி எரிந்தது. ஒவ்வொரு துணியும் ஒரு டன் எடையாகத் தோன்றியது. அந்த வேலையை நான் மருமகள் மாதிரி செய்தபோது, அத்தை, அவள் வீட்டில் நான் வேலைக்காரியாய்... உண்ணும் உணவுக்குக் கூலியாய் செய்வதுபோல் நினைப்பது தெரிந்தது. தெரியத் தெரிய... எனக்கு அவமானமாக இருந்தது. என்னுடைய சுயநலத்திற்காக தாமரைப்பாண்டித் தடியனை மணக்க வேண்டும் என்பதற்காக, என் அம்மா, நாத்தம் பிடித்த துணிகளை துவைப்பதைக்கூட அனுமதித்திருக்கிறேன். என் சுயநலம் எனக்கு நன்றாய் வெளிப்பட்டது. கூனிக் குறுகிப் போனேன். இறுதியாய்

சுய மரியாதை விஸ்வரூபம் எடுத்தது. துணிகளைக் கல்லிலேயே போட்டுவிட்டு எழுந்தேன். மாமி அதட்டினாள்."

'என்னடி இது... வெயில் அடிக்கிற நேரமாய்... துணியைத் துவைக்காமல்...'

'என்னால முடியலை அத்தே...'

'அப்போ எப்போதான் துவைக்கப் போறே...?'

"இது என்னோட வேலையில்லே..."

'பார்த்தீங்களா... ஒங்க தங்கச்சி பொண்ணு பேசுறதை.... இதுக்குத்தான் நாயைக் குளிப்பாட்டி...'

"அத்தை பேச்சை முடிக்கும் முன்பாகவே, நான் பெரிய மாமாவை நேரிடையாக்க் கேட்டேன்."

'என்னையும் எங்கம்மாவையும் இனிமேலும் நடுவீட்ல வைக்க வேண்டிய அவசியம் இல்ல மாமா... இன்னைக்கே கோணச் சத்திரத்தில இருக்கிற எங்க வீட்டுக்குப் போயிடப் போறோம்... எங்க நிலபுலத்தை நாங்களே ஆள் விட்டுப் பயிர் செய்துக்கப் போறோம்.... சாவியைக் கொடுங்க மாமா...'

"பெரிய மாமா, என்னை அழுத்தமாகப் பார்த்தார். பிறகு, இதை எதிர்பார்த்தவர்போல், சிரித்துக் கொண்டார். அப்புறம் என்னைப் பொருட்படுத்தாதவர் மாதிரி மனைவியிடம் சம்பந்தா சம்பந்தம் இல்லாமல் பேசிக் கொண்டிருந்தார். நான் பொறுமையைக் காட்டிக் கொடுத்துவிட்டேன்."

'மாமா... ஒங்களைத்தான்! கோணச்சத்திரத்துல இருக்கிற எங்க வீட்டோட சாவியைக் கொடுங்கோ....'

அத்தை குறுக்கிட்டாள்: 'இவளுக்கு யார் சாவி கொடுத்ததுன்னு கேளுங்களேன். ஏன் பேசாமல் குத்துக்கல் மாதிரி நிற்கீங்க....?'

"மாமா லேசாய் வாயசைத்தார், என் அம்மாவை நோக்கி..."

'பூவம்மா.... ஒன் மகள் பேசுற பேச்சைப் பார்த்தியா...?'

'அவள் பேசுறதுல என்னண்ணாச்சி தப்பு...?'

"மாமா இப்போது ஆங்கார, ஓங்காரமாய்க் கத்தினார். பேச்சில் நியாயம் தாழ்ந்தவர்கள் குரலை உயர்த்திக் கத்துவதுபோல் மாமாவும் கத்தினார். அப்போது எங்களுக்குள்ளேகூட, நாங்களே ஏதோ தப்பு செய்தது மாதிரி ஒரு மாதிரி ஒரு நடுக்கம்."

'இந்தா பாரு பூவம்மா... எப்போ நீ சட்டம் பேசத் துவங்கினியோ அப்பவே நானும் சட்டம் பேசியாகணும்.. ஒன்

புருஷன் வெளிநாட்ல இருந்துக்கிட்டே உள் நாட்ல சொத்து வாங்கிப்போட்டால் சட்டச்சிக்கல் வருமுன்னுதான் ஒங்களோட நன்மைக்காக கோணச்சத்திர வீட்டையும், முடிதீர்த்தான் குற்றாலப் பேரிடை சத்திரப்பட்டை நிலத்தையும் என் பெயருக்கே வாங்கிப் போட்டேன்.'

'அடக்கடவுளே... சரி... இப்போதாவது என் பெயருக்கு எழுதிக் கொடு அண்ணாச்சி.'

'அதுதான் நடக்காது. ஒன் தம்பி கிட்டே பத்து பவுன் நகையை இழந்துட்டே..... பங்காளிங்ககிட்டே ஆயிரக்கணக்குல ரூபாயை இழந்துட்டே..... இந்தச் சொத்தையும் ஒன் பேருக்கு எழுதி வச்சால் அவ்வளவுதான்... ஒரு வருஷத்துல எல்லாச் சொத்தையும் இழந்துடுவே.... அதனால சொத்தெல்லாம் என் பேருக்கே இருக்கும்

"அம்மா தட்டுத் தடுமாறிப் பதிலளித்தாள். அப்போது தாமரைப்பாண்டி அங்கு வந்து நின்றான். அவனைப் பார்த்ததும், அம்மா கேவிக் கேவி அழுதாள்... அவனது இரண்டு கரங்களையும் பற்றிக் கொண்டு அழுதழுது பேசினாள்."

'பாரு தாமரை... ஒங்கப்பா வாழவும் விட மாட்டங்கான்... சாகவும் விடமாட்டங்கான்... ஒண்ணு இவளை ஒனக்குக் கட்டி வைக்கணும்... அப்போ கணக்குப் பார்க்க வேண்டிய அவசியமில்ல... இல்லன்னால் கணக்குப் பார்த்து.... சொத்தையாவது தரணும்... நீயாவது சொல்லுப்பா... நான் ஒன்னோட அப்பாகூடப் பிறந்த அத்தை.... இவள் ஒனக்கு அத்தை மகள் மட்டுமில்ல. ஒன்னையே நம்பியிருக்கிறவள்.... சொல்லு ராசா...'

'ராசா' தாமரைப்பாண்டி கம்பீரமாய்ப் பதிலளித்தான்.

'சொத்து பத்து விவகாரம் நமக்குத் தெரியாது... ஆனால் ஒங்க மகளைக் கல்யாணம் மட்டும் செய்துக்க முடியாது...'

'காரணத்தையாவது....'

'அதைச் சொன்னால் நீங்களே ஒங்க மகளைக் காறித் துப்புவீங்க... ஆனாலும் நீங்க கேட்கிறதால சொல்றேன்... நான் அவளுக்குத் தாலி போட்டாலும், அவளைக் கொஞ்சப் போகிறவன் சித்தப்பா மகன் ரத்தினவேல்தான்... முன்னால ஊருக்கு வந்திருக்கும்போது என் கண்ணாலயே நான் பார்த்தேன்...'

அம்மா, என்னை பயந்தும் பயமுறுத்துவது போலவும் பார்த்தாள். எனக்கு எங்கிருந்துதான் அவ்வளவு கோபம் வந்ததோ.... எப்படித்தான் அந்த வார்த்தைகள் வந்ததோ...

'டேய் தடிப்பயலே... ஒன் வாய் அழுகாமல் போகாதுடா...'

"நான் குலுங்கிக் குலுங்கி அழுதபோது, தலை சுள்ளென்று வலித்தது. தாமரைப்பாண்டி, என் தலை முடியைப் பற்றிக் கொண்டு என்னை அங்குமிங்குமாகச் சுற்றுகிறான். என் விலாவைக் காலால் இடறினான். மாமாவும், அத்தையும் பேசாமல் நிற்கிறார்கள். அம்மா, அவனிடம் கெஞ்சுகிறாள்... 'விட்டுடுப்பா... விட்டுடுப்பா...' என்று பிச்சை கேட்கிறாள். தாமரைத் தடியன், என் உடம்பை ரத்தச் சேறாய் ஆக்குகிறான். எனக்குப் பிராணவலி. ஆடை கலந்த அவமானம். அப்போது_

இன்னொருத்தன் வெட்டரிவாளோடு அங்கே வருகிறான். அந்த ஆயுதத்தால் எதையோ செய்யப் போகிறவன்போல், ஆவேசத்தைக் குறைத்து, அழுத்தத்தை அதிகரித்து நடந்து வருகிறான்.



அந்த ரயில், இப்போது நடுக்காட்டுக்குள் ஒருவித நடுக்கத்துடன் முனங்கியபடியே நின்றது.

அப்படி அது நிற்பதற்கான காரணம் புரியாமல், பலர் எழுந்தார்கள். எழுந்தவர்களில் சிலர் கீழே இறங்கினார்கள். ஒருவேளை இந்தக் காரணத்தைக் கண்டுபிடித்துச் சொல்லக்கூடிய நவாப்ஜானும், பலராமனும், தங்களைப் பொறுத்த அளவில் சுற்றுப் புறச்சூழல் அற்றுப் போனவர்கள்போல், அவளையே பார்ர்த்துக் கொண்டிருந்தார்கள். அதே டில்லிப் பெண்களும், தங்கள் தலைமுடியையும் யாரோ பற்றுவதுபோல் முகம் கொண்டார்கள். அந்த ரயில் பயலும், கண்களைத் துடைத்துக் கொண்டு அவளை ஒட்டிக் கொள்வதுபோல் நெருங்கிக் கொண்டான். ரயிலோடு ஓடிய காடுகளும், குன்றுகளும் அப்படியே உறைந்து போனது போன்ற அலாதியான சூழல். மேடு பள்ளங்களை நிரப்பிய காட்டு மரங்கள்; கீழே விழப்போவது போன்ற மலைச்சரியல்... அந்த வனாந்தரக் காட்டின் சூன்யச் சூட்டைத் தாங்க முடியாதவர்கள் போல், ரயிலி ல் இருந்து இறங்கியவர்கள் ஏறிக் கொண்டார்கள்.

ரயில் ஊளையிட்டது. ஊளையிட்டபடியே, தமிழ்ச்செல்வியின் கால்கள் தாமரைப் பாண்டியனிடம் சிக்கி எப்படி நொண்டியடித்து இருக்குமோ, அப்படி, சக்கரக் கால்களை தண்டவாளத்தில்

அழுந்தப்பதித்து அழுகைக் குரலெழுப்ப அடிபோட்டது. தமிழ்ச்செல்வி, தனது சோக வரலாற்றைத் தொடர்ந்தாள். அவளையறியாமலே கண்கள் நீரைக் கொட்டின. தலை அப்போதும் பிடிபட்டதுபோல் அங்குமிங்கும் ஆடியது. ஓலப் புலம்பலோடு நடந்ததை ஒப்புவித்தாள்.

"வெட்டரிவாளோடு வந்தவன் என் சின்ன மாமா மகன் வைத்தியலிங்கம். பதினெட்டு வயதுப் பையன். சாட்டைக் கம்பின் இறுக்கம் மாதிரியான தோரணை. அரிவாளால் மரத்தையும், ஓலைகளையும், கம்புகளையும் சீவிச்சீவி அரிவாள்போல் கூர்பட்ட கைகள்... கோடரியால், பனையையும் தென்னையையும் வெட்டி வெட்டி அந்தக் கோடாரி போல் வைரம் பாய்ந்த உடம்பு. மண் வெட்டியால், மண்ணையும், சரலையும் வெட்டி வெட்டி அந்த மண் வெட்டிபோல் காணப்பட்ட கால்பாதங்கள்... பால் மாறாத முகம் காட்டிய அவன், இப்போது கொதிக்கும் பால்போல் பொங்கினான். வெட்டரிவாளை தாமரைப் பாண்டியை நோக்கி ஓங்கியபடியே கத்தினான்."

'டேய் தாமரை! அண்ணிய விடுடா.. அஞ்சு வரைக்கும் எண்ணப் போறேன்... அதுக்குள்ளே நீ எங்கண்ணியை விடல, ஒன் தலை... உடம்புல இருந்து விடுபட்டுடும்... ஒண்ணு... ரெண்டு... மூணு...'

தாமரைப்பாண்டி, அதிர்ந்து விட்டான். அவனைப் பார்க்கும் போதெல்லாம் முட்டி வரைக்கும் உள்ள வேட்டியை முழங்கால் வரைக்கும் இழுத்துப் போட்டபடி, ஒரு ஓரமாய் அவனை ஏறிட்டுப் பார்க்க முடியாமல் பார்த்தபடியே நடக்கும் சித்தப்பா மகன் வைத்தியலிங்கத்தின் புதிய பரிணாமம் கண்டு பதறிப்போனான். அந்த அதிர்ச்சியில், அவன் "நாலு" என்று சொல்வதற்கு முன்பே, என்னை விட்டு விடுகிறவன்போல் பிடித்துத் தள்ளினான். நான், அந்த உந்தலில் என் சின்ன மாமா மகன்மேல் விழப்போனேன். அவன் என்னைத் தாங்கிப் பிடித்தபோது, அவன் தோளில் முகம் போட்டு, குலுங்கிக் குலுங்கி அழுதேன். அதனால் மேலும் உணர்ச்சி வசப்பட்டவன்போல், வைத்தியலிங்கம் வெட்டரிவாளை விடாமலே வீறாப்பாய்க் கேட்டான்.

'டேய்... தாமர... அண்ணியோட செயினை கழுத்துல போட்டுக்கிட்டு, பண்ணி மாதிரி சுத்துற அயோக்கியா... அவங்களைப் போய் அடிக்கிறதுக்கு எப்டிடா ஒனக்கு மனசு வந்தது...? உண்மையிலேயே நீ ஆம்புளைன்னால் எங்க அண்ணியை ஒரு தடவ தொடு பார்க்கலாம்... இதை ஒனக்கு மட்டும் சொல்லல... ஒப்பனுக்கும் சேர்த்துத்தான் சொல்லுறேன்...'

பெரிய மாமா, வைத்தியலிங்கத்தை இடைமறித்துக் கேட்டார்.

'என்னல... பேய்ப் பயல் மாதிரி ஆடுற... பெரியவன் சின்னவன் என்கிற தராதரம் தெரியாமல்...'

'இனிமேல் நீங்க எனக்கு வயசுல மட்டும்தான் பெரியவரு... மனசுலயோ மரியாதையிலயோ இல்ல... கூடப் பிறந்த தங்கச்சிக்கு துரோகம் செய்த நீரு உருப்படப் போறதுல்ல.... ஒன் மவனும் கல்யாணம் செய்தாலும் அவன் பெண்டாட்டி இன்னொருத்தனைக் கூட்டிட்டு ஓடித்தான் போவாள்... மனுஷங்களாய்யா... நீங்க? உங்க உடம்புல ஓடுற ஒவ்வொரு துளி ரத்தமும் எங்கத்தை புருஷனோட வேர்வை... அவங்களை நடுரோட்ல கொண்டு வந்து நிறுத்திட்டு... நீ அரங்கு வீட்ல வாழ்ந்துடலாமுன்னு நினைக்காதிங்கப்பா... இந்த ஊர்ல ஒங்க வீட்டுக்கு மட்டும் பூகம்பம் வரும்... பாருடா... எப்படி இருந்த அண்ணியை இப்படிப் பண்ணிட்டே.... ஒவ்வொரு முடியையும் கோடு கோடாய் நினைச்சு வைக்கிற எங்க அண்ணியோட தலையைப் பாருங்கய்யா... நீங்களே நியாயம் சொல்லுங்கய்யா...'

"இதற்குள் கூட்டம் கூடிவிட்டது மாதிரி எனக்குத் தோன்றியது. வைத்தியலிங்கம் அந்தக் கூட்டத்தைப் பார்த்துத்தான் கேட்டுக் கொண்டிருந்தான். 'நேற்று பிறந்த' பயல், இப்படி அவமானமாய்ப் பேசிவிட்ட அவமானத்தில் தாமரைப்பயல் நின்றபோது, உள்ளூர் கிருஷ்ண பரமாத்மாவான ஒருத்தர் 'சரி... தாமரை... அப்படி அடித்து இருக்கப்படாது.... அடித்ததுக்கு வருத்தப்பட்டு நிற்கான் பாருங்க' என்று சம்பந்தமில்லாத ஒன்றை சம்பந்தப்படுத்திப் பேசினார். அவர் பேசிய தெம்பில், என் பெரிய மாமா மனைவி, 'பாவிப்பய பொம்புளை... ஆமை புகுந்தது மாதிரி வந்துட்டாளுகளே... வைத்தியலிங்கம் பயலை ஏவி விட்டுட்டாகளே. இவ்வளவு நடந்த பிறகும் இவளுக என் வீட்ல இருக்கப்படாது... இருக்கப்படாது' என்று கிளி மாதிரி... சீ... இவங்களா கிளி... ஆந்தை மாதிரி அலறினாள்."

அப்போது, கூட்டத்திற்குள் இருந்து திடீரென்று ஒருத்தர் முன்னால் வந்தார். என் சின்ன மாமா... வைத்தியலிங்கத்தின் தந்தை... அந்த வாயில்லாப் பூச்சி, இப்போது ராட்சதப் பல்லிபோல் பேசியது... பெரியண்ணன் மனைவியின் வாய் கிழிந்த கேள்விக்கு, காது செவிடாகப் பதிலளித்தார்.

"இனிமேலும்... ஒன் வீட்ல என் அக்கா இருக்கதுக்கு அவள் ஒன்னை மாதிரி வெட்கங்கெட்டுப் போனவள் இல்ல... ஒன்னை மாதிரி தட்டுக்கெட்டவ இல்ல... ஏக்கா... ஒன்னத்தாக்கா... என் வீட்டுக்கு வாங்கோ.. கூழோ விஷமோ ஒண்ணா குடிப்போம். இந்தப்

பயல்கள்... ஒன் சொத்தையும் பணத்தையும் தந்தால் தரட்டும். தராட்டால் நாசமாப் போகட்டும்.... வாக்கா... இன்னுமாக்கா இந்த வீட்ல நிக்கே...? இது நம்ம அண்ணன் வீடு இல்லக்கா... நம்பிக்கையையும் பாசத்தையும் பிணமாக்கி வச்சுறுக்கிற சமாதி."

எங்கம்மா அப்படியே பாய்ந்து போய் சின்னமாமாவைக் கட்டிப் பிடித்துக்கொண்டாள். அந்தப் பாச வேகத்தில், அம்மாவின் கை நரம்புகள் தெறித்துக் தெரிந்தன. ஊர்க்கூட்டமோ என் சின்ன மாமா, இதுவரை ஊமையாக இருந்தது போலவும், இப்போதுதான் பேசிப் பார்க்கிறரா என்பது போலவும் அதிசயித்துப் பார்த்து, என் அம்மாவோ, தம்பியை விடாப்பிடியாகப் பிடித்துக்கொண்டு 'தம்பி... தம்பி... இந்த பாவி உனக்கு எதுவுமே செய்யலியே தம்பி. உனக்கு எதுவும் செய்யாத இந்த பாவியை சேர்த்துக்காதே தம்பி...' என்று ஒப்பாரியிட்டாள். உடனே என் மாமா, 'நீ செய்திருக்கத்தான் செய்யுற... ஒன் அழுகையை இதோட நிறுத்திக்கக்கா. கிருஷ்ணன் குசேலரோட அவலைத் தின்று அவரை உயர்த்தினான். ஆனால், நீ அழ அழ இவன் அடியோடு போயிடுவான்... அவனுக்கு நீ தங்கச்சி இல்ல... ஆனால் ஒனக்கு அவன் அண்ணன்தானே... விட்டுத் தள்ளு... சாகும்போது அவன் எவ்வளவு நிலத்தைத் தூக்கிட்டு போகப் போறான்னு பார்த்துடலாம்..."

தாமரைப் பாண்டியனிடம் பட்ட அடியாலும், அவமானத்தாலும் குன்றிப்போன எனக்கு லேசான ஏமாற்றம்... வீறாப்பாய்ப் பேசிய சின்ன மாமா, சுருதி இறங்கியதைப் புரிந்து கொண்டேன். அவர் மூலம் எங்கள் சொத்துக்களை மீட்க நினைத்த எனக்கு, அவரது வேதாந்தம் வேதனையைக் கொடுத்தது. ஆனால் இதுதான் மாமாவின் சுபாவம்... "சிறியன சிந்தியாதார்" என்று சான்றோர்களைச் சொல்வார்களே, அந்த ரகம் சின்ன மாமா. வெறும் சின்ன மாமா இல்ல... அவர் மனிதாபிமானம்போல் தோன்றினார்.

இதற்குள், ஊரார் ஆளுக்கு ஒன்றாகப் பேசத் துவங்கினார்கள். சிலர், அந்த நிலையிலும், எனக்கும் தாமரைப்பாண்டிக்கும் கல்யாணம் நடத்த வேண்டும் என்றார்கள். அதாவது கட்டிய பிறகு என்னை அடிக்க வேண்டியவன், கட்டுவதற்கு முன்பு அடித்ததில் தப்பில்லை என்பதுபோல். இன்னும் சிலர், "பாவம்... அந்தப் பொண்ணு... அநாதரவாய் நிற்குது... தாமரைப்பாண்டிக்கு முடிச்சுப் போடுவதில் அருத்தமில்ல... பேசாமல் ரத்தினவேலுவுக்குக் கட்டி வச்சுடலாம்.." என்றார்கள். அப்போது ரத்தினவேலும் பேசினான்... இப்போதுதான் அவனைப் பார்க்கிறேன்... ஒருவேளை, 'நான் அடிபட்டபோது வந்தானோ... அதற்குப் பிறகு வந்தானோ... பேசாமல் நடத்திடலாம் என்றவருக்குப் பேசிப் பதிலளித்தான்.

"நல்லா இருக்குதே... நான் மட்டும் இளிச்சவயானா....?"

இதற்குள் அவன் அம்மா அந்தப் பக்கம் வந்தாள். "ஒனக்கு இங்க என்னடா வேலை?" என்று சொல்லி, அவனை மாட்டை இழுப்பது போல் இழுத்துக்கொண்டு போனாள்... நான் உச்சி முதல் உள்ளங்கால் வரை அவமானப்பட்டேன். அந்தக் காலத்து நீக்ரோ அடிமைபோல் மனதுக்குள் துள்ளித் துடித்தேன். அதிலும் மனதுக்குள் ஒரு ஆறுதல்... நல்லவேளை... இந்த சுடு சொல்லிலும், ரத்தினவேல் அடிக்காமல் விட்டானே... நன்றி சொல்லணும் அவனுக்கு. இவ்வளவு சொன்ன பிறகும் அவன் அடித்தால் வலிக்குமா என்ன... இதற்கு மேல் எந்த அவமானம் வந்தால் என்ன... வராவிட்டால் என்ன... அய்யோ என்னை வேசியைவிடக் கேவலமாக ரெண்டு பேரும் நினைச்சுட்டாங்களே... என் சீனச் சிநேகிதி லிங்யூ சொன்னாள்.... 'ஒனக்கு பிறந்த ஊர்தான் தாயகமின்'னு..... என் மலேயா சிநேகிதி அரட்டினாள். அங்கே போகாதே... அவஸ்தைப்படாதே... என் தமிழ் சோதரிகள் சொன்னார்கள் ஏண்டி.... நாங்கல்லாம் தமிழ்ப் பெண்களாய் தோணலியா? நாம் இருக்கிற இடம் தமிழ்க்குடியிருப்பு இல்லையா?"

நான் பேசுவதறியாமல், பிழை செய்தவள்போல் நின்றபோது, என் அம்மா ஊர்க்காரர்களிடம் மன்றாடினாள்... அவள் கையெடுத்துக் கும்பிட்டுப் பிச்சை கேட்பது போல் கேட்டாள்.

"நான் கொடுத்த எல்லாத்தையும் கேட்கலய்யா... பாதியையாவது கொடுக்கச் சொல்லுங்கய்யா... கோணச்சத்திரத்து வீட்ல எங்களை இருக்க வையுங்கய்யா... இல்லான்ன எங்க ரெண்டு பேரையும் மலேசியாவுக்கு அனுப்பி வையுங்க. அதையாவது செய்யுங்க... அங்கே இருக்கிற ரத்தம் சம்பந்தமில்லாத-அதேசமயம் அதைவிட மேலாய் எங்களுக்கு உதவினவங்க எங்களைக் காப்பாத்து வாங்கய்யா..."

அந்த ஊரில் விவகாரம் பேசுகிறவர்கள், எந்த ஊரிலும் விவகாரம் பேசுகிறவர்கள்போல், ஊர்ச் சொத்தை எடுத்து தங்கள் வீட்டு உலையிலே போட்டவர்கள். மோசடி செய்வதில் என் பெரிய மாமாவுக்கு இணையானவர்கள்... அம்மாமீது சிறிப் பாய்ந்தார்கள்.

"ஒனக்கு அந்நிய நாட்டுக்காரங்கதான் பெரிசுன்னா அங்கேயே இருக்க வேண்டியதுதானே... நாங்க மட்டமுன்னு சொல்லாமல் சொல்லிட்டுப்பிறகு ஏன் நியாயம் கேட்கிறே...? 'வாங்கடா போகலாம்... அண்ணன் தங்கச்சிக்குள்ள ஆயிரம் இருக்கும், நமக்கு என்ன..."

கூட்டத்தில் நின்ற பெரிய மனிதர்கள், தாங்கள் போனபிறகு எந்த சின்ன மனிதர்களும் நிற்கப்படாது என்பதுபோல், அவர்களை விரட்டினார்கள்.

நான் அவமானச் சிந்தனையை, பொருளாதாரச் சிந்தனையால் விரட்டிவிட்டு, கலையப் போன கூட்டத்தின் முன்னால், கலந்து போய் நின்றேன். கையெடுத்துக் கும்பிட்டபடிக் கேட்டேன்.

"அம்மா தப்பா பேசியிருந்தால் மன்னிச்சிடுங்க... இனிமேல் எங்கம்மாவுக்கு நீங்கதான் அண்ணன் தம்பிங்க...."

"அப்போ ஒன்னை வீட்டுக்குக் கூப்பிடுகிறானே, சின்னமாமன், அவன் ஒங்கம்மாவுக்குத் தம்பியாய்த் தெரியலையோ...? காலம் கலிகாலம்பா... அவன் ஒரு பைத்தியக்காரன்..."

நான் என்னை மடக்கியவரைப் பார்த்தேன். என் பெரிய மாமாவின் மனைவியோட அண்ணன். ஊரில் அவருக்குப் பெயர்... சாணிப்பெட்டி... கோள் சொல்லி, எப்படியாவது எங்களைத் திக்ககற்றவர்களாகிவிட வேண்டும் என்பதற்காகவே என் பேச்சுக்கு அனர்த்தச் சொல்லிக் கொண்டிருந்தார்... நான் அவருக்கும் சொல்வதுபோல் எல்லோருக்கும் சொன்னேன்.

"தயவு செய்து ஏற்கெனவே பொறிகலங்கி நிற்கிற எங்களை நோகடிக்காதீங்க... பெரியப்பா... ஒங்க தங்கச்சி புருஷனுக்கு நாங்க கொடுத்த பணத்தையும் சொத்தையும் மீட்டுக் கொடுங்க பெரியப்பா...."

"பேசுறதப் பாரு... தங்கச்சி புருஷனாம்... மாமான்னு வாய்ல வராதோ..."

"இன்னும் அனார்த்தமாய்ப் பேசினால் என்ன பெரியப்பா அர்த்தம்... நீங்களும் எங்கப்பாவுக்குப் பெரிய தாத்தா பேரன்... ஒங்க தாத்தாவும் எங்கப்பா தாத்தாவும் அண்ணன் தம்பிங்க.... எங்களுக்காக பேச வேண்டிய நீங்க, இப்படிப் பேசினால் எப்படிப் பெரியப்பா..."

"ஆமா... என் வீட்லதானே கொட்டுனே....?"

"கொட்டுன இடத்துலக் கொட்டுப்பட்டு நிற்கிற எங்களை குட்டாதீங்க பெரியப்பா. எங்க சொத்தை மீட்டுக் கொடுங்க... எங்க நடுல மாமாகிட்டப் பதினைந்து பவுன் நகை கொடுத்தோம்... அதையும் வாங்கிக் கொடுங்க..."

என் இரண்டாவது மாமாவின் மனைவி, மகன் ரத்தினவேலை இழுத்துக்கொண்டு போய்விட்டாள் என்று தான் நினைத்தேன். ஆனால், அவன் எங்கிருந்தோ திடீரென்று தோன்றினான். என் கண்ணின் பக்கமாய் விரலை ஆட்டியபடியே கேட்டான்.

"அந்த மனுஷன்தான் குடிகாரன்... லோலன்னு தெரியுமே... யாரைக் கேட்டு அவன்கிட்டே கொடுத்தே...? கொடுத்தவரை மட்டும் கேளு.. எங்ககிட்ட கேட்காதே... கேட்கிறதுக்குச் சட்டமில்ல..."

நடுல அத்தை பேசி முடித்ததும், ஊர்ப் பெரிய மனிதர்களில் ஒருவரான என் பெரிய மாமா இறுதியாகப் பேசுகிறவர்போல் பேசினார்.

"வீட்டு விவகாரம் வெளில வந்த பிறகு... இனிமேல் பேசிப் பிரயோஜனம் இல்ல... இனிமேல், இவங்க உன் வீட்ல இருக்கப் படாது... இவங்க... சொத்துப் பத்துக்கு பணம் அனுப்புவது வாஸ்தவம்தான்... அந்தப் பணத்தை அனுப்புனவரு என் தாய்மாமா வேல்மயில்... அவரோட தங்கச்சிதான் என்னோட அம்மா. வேல்மயில் தங்கச்சிக்கும் தங்கச்சி மகனுக்கும் செய்தார். இனிமேல் என்கிட்ட எது கேட்கணுமுன்னாலும் அவர்தான் கேட்கணும். இவளுக ரெண்டு பேருக்கும் உரிமை இல்லை. வேணுமுன்னால் கோர்ட்டுக்குப் போகட்டும்."

"என்னால் சும்மா இருக்க முடியவில்லை. பெரிய மாமாவுக்கும் அவர் மகன் தாமரைப்பாண்டிக்கும் முன்னால் போய் நின்றேன். சின்ன மாமா மகன் வைத்தியலிங்கம் என் மெய்க்காவலன்போல் என் அருகே வந்து நின்றான். நான் சவால் குரலில் கத்தினேன்."

"ஒங்களை ஜெயிலுக்கு அனுப்புற அளவுக்கு என்கிட்டே ஆதாரம் இருக்குது... உங்களை குற்றவாளிக் கூண்டில் நிறுத்தி எங்க சொத்துக்களை மீட்டிக் காட்டலன்னா என் பெயர் தமிழ்ச்செல்வி இல்ல மாமா..."

"மாமா மகன் தாமரைப்பாண்டி, என்னை அடிக்க வருவது போல் வந்தான். உடனே சின்னமாமா மகன் "டேய் முதல்ல என்கிட்டே வாடா" என்றான்."



அந்த ரயில், காலதாமதத்தை ஈடுகட்டுவதற்காக அலறியடித்த படி ஓடினாலும், பட்ட காலிலேயேபடும் என்பதுபோல், தாமதப் பட்டுபோன அந்த ரயில், ஊர் பேர் தெரியாத ஒரு ரயில் நிலையத்தில் நிறுத்தப்பட்டது.

அரைமணி நேரமாகியும் நகர்ந்த பாடில்லை. எதிர்த்திசையில் ஒரு சரக்கு ரயில் வருகிறதாம். அது இங்கே வந்த பிறகுதான், இந்தத் துரிதரயில் அங்கு போகமுடியுமாம். எல்லா பயணிகளும் முணுமுணுத்துக் கொண்டு, கொடிக்கம்ப விளக்கை குற்றவாளி

போல் எட்டியும், இறங்கியும் பார்த்தபோது, நவாப்ஜான் குழுவினர் நகராமலேயே இருந்தார்கள். அவர்கள் கண்களைக்கூட நகர்த்தவில்லை.

தமிழ்ச்செல்வி, தன் சுமையை அவர்கள் தோளில் சுமையை இறக்கிக்கொண்டே இருந்தாள்.

''எப்படியோ நியாமாப் பேசமுடியாத ஊரார், மாமா மகன்களுக்கு இடையே விலக்குத் தீர்த்தார்கள். வைத்தியலிங்கத்தை அவன் தந்தை பிடித்துக் கொண்டார். இதற்குள் பெரிய மாமா நடுல மாமாவின் மனைவிகளும், அவர்களது மக்கள் புடைசூழ வந்து எங்களைத் திட்டித் தீர்த்தார்கள். ஒழுங்காக - ஒற்றுமையாக இருந்த அண்ணன் தம்பி மூவர் குடும்பத்தையும் நாங்கள் சீர்குலைத்து விட்டோமாம். நாங்கள் போகிற இடத்தில் புல் முளைக்காதாம். மலேசியாவில் நாங்கள் 'எவன்கூட எப்படியோ போய்விட்டு' இப்போது இருக்க முடியாமல் துடிக்கிறோமாம். இவ்வளவு பேச்சையும் என் அத்தைகள் நாங்கள் கொடுத்த சேலைகளைக் கட்டியபடியே திட்டினார்கள். என் நடுல மாமா மகள் நான் கொடுத்த நெக்லஸையும் தங்கக் காப்புகளையும் குலுக்கியபடியே திட்டினாள். சின்ன மாமா 'நானும் அரிவாளை எடுக்க வேண்டியது இருக்கும்' என்றதும் எல்லோரும் அடங்கினார்கள்."

"உடனே, சின்ன மாமாவின் ஆணைப்படி பெரிய மாமா வீட்டில் இருந்து புறப்பட்டோம். ஒரு சமயம் கனமாக இருந்த சூட்கேஸ்களை ஒரு கையால், தூக்கியபடியே நடந்தோம். எங்களை அந்தக் கோலத்தில் பார்த்துவிட்டுப் பல பெண்கள் அழுது விட்டார்கள். தெருவில் நடந்தபோது அம்மாவின் சிநேகிதிகள் பெரிய மாமா வீட்டை நோக்கி மண்ணை அள்ளிப் போட்டார்கள்."

"எப்படியோ சின்ன மாமா வீட்டுக்கு வந்து விட்டோம். மாமா வீடு ஓலை வீடு. அதுவும் ஆடிக்காற்றில் அந்த ஓலைகள் பிய்த்துக் கொண்டு ஓடும். மழைக் காலத்தில் ஓலைக் கசிவுகளையும் சுமந்து கொண்டு, மழைத்துளிகள் வீட்டுக்குள் கரிக்கரியாய் விழும். சின்ன மாமாவுக்கும் நிலத்தில் இறங்காமலே வேலையாட்களை வைத்து சாகுபடி செய்யும் அளவுக்கு நிலம் இருந்ததாம். ஆனால், மனைவி ரூபத்தில் அவருக்கு வஞ்சகமும் அண்ணன் ரூபத்தில் கெட்ட காலமும் வந்து சேர்ந்தன. அவரது முதல் மனைவி கல்யாணத்திற்கு முன்பே ஒரு மாதிரியாம்... அவளும் உள்ளூர்க்காரிதான். பெரிய மாமா அவளை, தெரிந்தே தம்பி தலையில் கட்டியிருக்கார். அதற்காகப் பெண் வீட்டில் ''நாலு மரக்கால்'' நிலத்தை லஞ்சமாகவும் வாங்கிக் கொண்டாராம். சின்ன மாமா மனைவி கல்யாணம் ஆன பிறகும் பழைய புத்தியை விடவில்லையாம்.

கடைசியில் அவளே, ஊர் அவமானத்திற்கு உட்பட்டோ அல்லது வேறு காரணத்தாலோ தற்கொலை செய்து கொள்ள, அது சின்ன மாமா மீது கொலைக் குற்றமாக விழுந்திருக்கிறது. வழக்கை பெரிய மாமா முன்னின்று நடத்தியிருக்கிறார். முடிவில் சின்னமாமா விடுதலையாகிவிட்டார். அதற்கு விலையாக அவரது சொத்து முழுதும் வழக்குச்செலவு என்ற பெயரில் பெரிய மாமாவுக்கு அடிமையாகிவிட்டது."

"மாமாவின் இரண்டாவது மனைவி, எளிய குடும்பத்தைச் சேர்ந்தவள். வாயடி வழக்கடி செய்யாத அப்பாவி... எப்போதோ எங்கம்மா ஒரு தங்க வளையல் கொடுத்தாளாம். அதையே அத்தை சொல்லிச் சொல்லிக் காட்டுவாள். அப்போதெல்லாம் எங்கம்மா அல்லாடுவாள்... தாமரைப் பாண்டியனைக் கருதி, அவன் அப்பாவிற்கும் அம்மாவிற்கும் செய்த அளவில், ஒரு சதவீதம்கூடத் தம்பிக்குச் செய்யவில்லையே என்ற ஆதங்கம்; கொஞ்சம் செய்திருந்தால், தம்பியை கைதூக்கி விட்டிருக்கலாமே என்ற ஏக்கம்."

"ஆனால், மாமா இதை கண்டுக்கவே இல்லை. அவருடைய மகன் வைத்தியலிங்கமும், மனதை அற்ப எண்ணங்களுக்கு அடகு வைக்காதவன். அப்பாவும், மகனும், வந்ததும், வராததுமாக நாங்கள் சாப்பிட்டோமா என்றுதான் கேட்பார்கள். ஒருநாள் பெரிய மாமாவிற்கும் நடுல மாமாவிற்கும் வாய்ச்சண்டை.... அவர்களது குடும்பத்தினருக்குள் அடிதடி சண்டை. தாமரைப் பாண்டியனுக்கும், ரத்தினவேலுக்கும் குஸ்தி சண்டை. விசாரித்துப் பார்த்ததில் விவகாரம் எங்களைப் பற்றியது. என் அப்பா அனுப்பிய பணத்தைத் தாத்தா அனுப்பியதாகக் கூறி, தாய் மாமன் சொத்தில் தனக்கு உரிமையுண்டு என்று என் பெரிய மாமா சொன்னாரே அந்த வாக்குமூலத்தை நடுல மாமா பிடித்துக் கொண்டாராம். தாய் மாமா அனுப்பிய எல்லாப் பணத்தையும் நகையையும் கணக்குப் போட்டு சரிசமமாகப் பிரித்துக் கொள்ள வேண்டுமாம். இதில்கூட என் சின்ன மாமா... லிஸ்டில் வரவில்லை."

"இந்த அற்பத்தனத்தைப் பார்த்து, நான் வெகுண்டு எழுந்தேன். எங்கள் சொத்துக்களை மீட்க உறுதி பூண்டேன். ஊர்ப் பெரியவர்களால் ஒன்றும் ஆகாது என்பது தெரிந்துவிட்டது. வைத்தியலிங்கத்தைத் துணைக்கு வைத்துக் கொண்டு தாசில்தாரைப் பார்த்தோம். அவர், என் கேஸ் கிரிமினல் என்றும், வேண்டுமானால் போலீஸிடம் போகலாம் என்றும் கருத்துத் தெரிவித்தார். காவல் நிலையத்திற்குப் போனோம். விஷயத்தை எடுத்துச் சொன்னோம். விவகாரத்தை அனுதாபமாகக் கேட்டவர்கள், என் பெரிய மாமா பெயரைக் கேட்டதும், வீரத்தை விலக்கிக் கொண்டார்கள்.

விவகாரம் சிக்கல் என்றும், ஆகையால் நான் கோர்ட்டுக்குத்தான் போகலாம் என்றும் சொன்னார்கள்."

"என் சின்ன மாமா மகன் வைத்தியலிங்கம், 'என்ன ஸார் இப்படி இழுத்தடிக்கீங்க' என்று சாதாரணமாகத்தான் கேட்டான். உடனே ஏட்டய்யா "என்னடா தம்பி எண்ணணுமா. மட்டு மரியாதையில்லாமல் பேசுறே... டேய் லாக்கப்பைத் திறங்கடா" என்றார். நான் அவரைச் சமாதானப்படுத்தினேன். என் பெரிய மாமா என் தந்தை பேரில் அவர் அனுப்பிய பணத்தில் நிலம் வாங்கியதாக எழுதிய பல கடிதங்கள் என்னிடம் இருப்பதாகச் சொல்லி, ஆகையால் பெரிய மாமா மோசடி செய்தார் என்றும், அவர் மீது காவல்துறை நடிவடிக்கை எடுக்க வேண்டும் என்றும் வாதாடினேன். அவர், இன்ஸ்பெக்டர்கிட்ட சொல்றேன் என்று சொல்லிவிட்டு, லாக்கப் வாசி ஒருவரை, கெட்ட கெட்ட வார்த்தை களால் திட்டினார். அது எனக்குத்தான் என்பதைப் புரிந்து கொண்டு, அங்கிருந்து வெளியேறி விட்டேன்."

"நான் விடவில்லை. கவர்னரில் இருந்து ரெவின்யூ இன்ஸ்பெக்டர் வரைக்கும் மனுமனுவாகப் போட்டேன். கிராமத்துத் தபால் நிலையத்தில் இடக்கு மடக்கு நடக்கலாம் என்று நகரத்துத் தபால் நிலையத்தில் போட்டேன். ஒவ்வொரு வாரமும் பதிலை எதிர்பார்த்தேன். தபால்காரரே எனக்குத் தெய்வமானார். அவர் நடமாடும் இடமே எனக்குத் திருத்தலமானது. நான் புளித்துப் போன சமயத்தில், அதே அந்த ஏட்டய்யா வந்தான். ஐந்தரையடி உடம்பை ஐந்தடியாகச் சுருக்கிக் குழைந்தான். காவல் நிலையம், என் பெரிய மாமா மீது நடவடிக்கை எடுத்து, என் சொத்துக்களை மீட்பதற்கு உறுதி பூண்டிருப்பதாகத் தெரிவித்தான். மீசையில்லாத உதட்டைத் தடவிவிட்டபடி, பருத்த வயிற்றில் மத்தளம் மாதிரிக் கைகளால் கொட்டியபடி, அநேகமாக என் மாமா, ஐந்தாண்டுக் காலம் சிறைக்குப் போகவேண்டியது இருக்கும் என்றதும் அம்மா பயந்துவிட்டாள். என்னைக் கோபமாகக்கூடப் பார்த்தாள். 'எங்களோட சொத்துக்களை வாங்கிக் கொடுங்க... அண்ணனுக்கு "அதை" வாங்கிக் கொடுக்க வேண்டாம்' என்று மன்றாடினாள். ஏட்டய்யா, நீதிபதி அப்படி ஒரு தீர்ப்பளித்தால், தானே அதை ரத்து செய்ய முடியும் என்பதுபோல், தலையை மேலும் கீழும் ஆட்டினார். பிறகு வந்த விஷயம் அப்போதுதான் நினைவுக்கு வந்தவர்போல், தலையை மாடு உதறுவது மாதிரி உதறிக் கொண்டே 'சரிம்மா.... ஒன் அப்பாவுக்குச் சொத்து வாங்குவது சம்பந்தமாய் ஒன் பெரிய மாமா எழுதின லெட்டர்களை ஒன்று விடாமல் கொடு... இன்ஸ்பெக்டர் வாங்கிட்டு வரச்சொன்னார்... ஒன் மாமனை விடப் போறதில்ல....' என்றார்."

"எனக்கு மகிழ்ச்சியாக இருந்தது. கடைசியில் கவர்னருக்குப் போட்ட மனுவோ அல்லது தலைமைச் செயலாளருக்குப் போட்ட மனுவோ, காவல் நிலையத்தை இயங்கச் செய்துவிட்டது. நான், அம்மாவின் எதிர்ப்பையும் மீறி, தனியாக எடுத்து வைத்திருந்த முப்பத்து மூன்று கடிதங்களை எடுத்துக் கொடுத்தேன். அம்மா ஊர் நினைவு வரும்போதெல்லாம், படிப்பதற்காக வைக்கப்பட்ட கடிதங்கள், இப்போது மாமாவுக்கு படிப்பினையாகப் போவதில் அம்மாவுக்கு அதிர்ச்சி. எனக்கு மகிழ்ச்சி."

"கடைசியில் நியாயம் வெல்கிறது என்ற மகிழ்ச்சியில் நான் தூங்கவே இல்லை; அம்மாவும் தூங்கவில்லை. ஆனால் நோக்கங்களோ எதிரெதிர்... நான், மாமா வீட்டிற்கு போலீஸ் வரப்போவதை எதிர்பார்த்து எதிர்பார்த்து தூக்கத்தையும் துக்கத்தையும் விரட்டி விட்டேன். ஆனாலும், போலீஸ் வரவில்லை. ஒவ்வொரு நாளும் அடுத்தநாள் வருவார்கள் என்று எதிர் பார்த்தேன். இடையே மாமா வீட்டில் சிரிப்புச் சப்தம் தான் பலமாய்க் கேட்டது. எப்படியோ, ஒரு வாரம் வரைப் பல்லைக் கடித்துக் கொண்டேன். மறுநாள் வாய் திறக்கத் தீர்மானித்தேன். வைத்தியலிங்கத்தைக் கூட்டிக் கொண்டு, கோணச்சத்திரம் காவல் நிலையத்திற்குப் போனேன். ஊர்க் காரர்களில் பலர் எங்களை விநோதமாகப் பார்த்தார்கள். வழியில் தென்பட்ட பெரிய மாமா, காறித் துப்பப் போனார். என் பக்கத்தில் வைத்தியலிங்கம் வருவதைப் பார்த்து விட்டோ என்னமோ, பயந்து போனவர்போல எச்சிலை விழுங்கிக் கொண்டார். எதிரே வந்த தாமரைப் பாண்டி வேறுபக்கமாக முகத்தைத் திருப்பிக் கொண்டான்."

"காவல் நிலையக் காம்பவுண்டுக்குள் நுழைந்ததும், வைத்தியலிங்கத்தை ஒரு மரத்துப் பக்கமாக நிற்கச் சொன்னேன். ஏதாவது ஏடாகோடமாய்ப் பேசிக் காரியத்தைக் கெடுத்து விடக் கூடாதே என்ற எண்ணம். காரியம் கெட்டாலும் பரவாயில்லை.... அந்த அப்பாவிப் பையனைக் காவல்துறை "காலி" செய்துவிடக் கூடாதே என்ற பயம்."

"ஏட்டய்யா என்னைப் பார்த்துவிட்டு இன்னொரு பெண்ணைத் திட்டினார். "ஒனக்கெல்லாம் எதுக்குடி....." அய்யய்யோ இந்தக் காவல் நிலையத்தை நினைத்தாலே என் உடல் நடுங்குது... பணக் காரங்களுக்கு பல்லுக் காட்டுற, அதே பல்லை ஏழைகளைப் பார்த்துக் கடிப்பதும் காவல்துறையின் கலை... நான் போன சமயத்தில், ஒருத்தரை ஒரு போலீஸ்காரர் ரூல்தடியால் விளாசிக் கொண்டிருந்தார். அந்த அப்பாவி, ரெவின்யூ இன்ஸ்பெக்டர் வீட்டுப் பக்கம் சந்தேகத்திற்கு இடமளிக்கும் வகையில் நடமாடிக் கொண்டிருந்தானாம். அந்த அப்பாவியோ 'என் பையனுக்கு சாதி

சர்ட்டிபிகேட் வாங்கப் போனேன் ஸார்... சத்தியமாய் அதைத்தான் ஸார் வாங்கப் போனேன்' என்று கதறினான். அவனின் கெஞ்சலுக்குக் காது கொடுக்காமலே, போலீஸ்காரர், அந்த எளியவரை ரூல்தடியால் வாங்கு வாங்கென்று வாங்கிக் கொண்டிருந்தார்."

"எனக்கு கேட்கவேண்டும் என்று நினைத்தோ என்னமோ ஏட்டய்யா அந்த அப்பாவியை அடிப்பதை நிறுத்தச் சொன்னார். பிறகு, என்னை, உறுமலோடு பார்த்தார். வீட்டுக்குக் குழைவாய் வந்த ஏட்டய்யா, இப்போது வீறாப்பாய்ப் பார்த்தார். நான்தான் பேச்சைத் துவங்கினேன்."

'ஸார்... எங்க மாமாமேல்... இன்னும் நடவடிக்கை எடுக்கலியே...?'

'யார்மேல எப்போ நடவடிக்கை எடுக்கணுமுன்னு எங்களுக்குத் தெரியும்.'

'விஷயம் எந்த அளவுல இருக்குதுன்னு தெரிஞ்சுக்க எனக்கு உரிமை இருப்பதாய் நினைக்கேன்.'

"இதோ பாரும்மா! எது பேசணுமுன்னாலும் இன்ஸ்பெக்டர் கிட்டே பேசிக்கோ."

"அவர் எப்போ வருவார்..."

"எப்பவும் வருவார். இப்பதான் வருவார்ன்னு சொல்ல முடியாது. டேய்.. ஏண்டா... அந்தத் திருட்டுப் பயலை அடிக்கறதை விட்டுட்டீங்க... காசு நீட்டுனானா..."

"காசு நீட்ட முடியாத அந்த "சந்தேகப் பேர்வழி"யின் கால்களை நீட்டச்சொன்னான். அதன்மேல் ரூல் தடியை குறுக்காய்ப் போட்டார்கள். ஒரு கான்ஸ்டபிள் அதில் ஏறி நின்றார்."

"அந்த அப்பாவி, வெட்டப்பட்ட ஆடுபோல் துடித்தார். கரைக்கு வந்த மீன்போல் துள்ளினார். எனக்கு எதிர்த்துப் பேச வேண்டும் என்ற துடிப்பு. ஆனால் வாயைத் திறக்க முடியவில்லை. கான்ஸ்டபிள், இப்போது அந்த அப்பாவியை விட்டுவிட்டார். காரணம், காக்கிச் சட்டைக்காரருக்கு அவனை அடித்து அடித்துக் களைப்பு ஏற்பட்டு விட்டது. சோடா குடிப்பதற்காகப் போவதாய்ச் சொல்லிக் கொண்டு புறப்பட்டார்."

"இந்தச் சமயத்தில அட்டகாசமாக ஒரு மோட்டார் சைக்கிள் வந்தது. சினிமா நடிகர் மாதிரி ஒருத்தர். ஆனால், போலீஸ் டிரஸ். எல்லோரும் சல்யூட் அடித்தார்கள். அந்த ஆசாமி இன்ஸ்பெக்டரே தான் வாகனத்தில் இருந்து இறங்கும்போதே, "அந்தப் பயல்

யாருய்யா... ரெளடி மாதிரி நிற்கான்" என்றதும், போலீஸ்காரர்கள் லத்திக் கம்புகளோடு, அவனை நோக்கிப் போகப் போனார்கள். உடனே நான் குறுக்கிட்டு "என்னோட மாமா மகன் ஸார்... என் பெயர் தமிழ்ச்செல்வி ஸார்... மலேசியாவில் இருந்து வந்தவள் ஸார்..." என்றேன். அவர் என்னை எடைபோட்டுப் பார்த்தார். பிறகு உள்ளே போய் விட்டார்."

"இன்ஸ்பெக்டர் கூப்பிடுவார் என்று நான் காத்திருந்தேன். கூப்பிடவில்லை. நீண்ட நேரத்திற்குப் பிறகு, நானே உள்ளே போனேன். எதிர் நாற்காலியில் உட்காரப் போனேன். ஆனால் அவர் பார்த்த பார்வையால் எனக்கு உட்கார மனம் வரவில்லை. நான் பயபக்தியுடன் கேட்டேன்."

"ஏட்டய்யா என் வீட்டில் இருந்து பெரிய மாமா எழுதின லெட்டர்களை வாங்கிட்டு வந்தார் ஸார்..."

"எனக்குத் தெரியும்..."

"அதோட நிலமை, இப்போ எப்படி இருக்கு சார்!"

இன்ஸ்பெக்டர், அலட்சியமாய்ப் பதிலளித்தார்.

"எல்லா லெட்டரையும் படித்தேன்... ஒன்றுகூட பிராஸிகியூஷனுக்குக் தேறாது... ஒவ்வொரு லட்டர்லயும் முன்னுக்குப்பின் முரணான வரிகள். இதை நீங்கள் பேசாமல் விடுறதே நல்லது... உங்களுக்கும்...."

"சரி ஸார்... நான் கோர்ட் மூலம் பார்த்துக்கிறேன்... அந்த லெட்டருங்களைக் கொடுங்க."

"எங்கேயோ பழைய குப்பையில கிடக்கும். தேடிப் பார்த்துத் தாரோம்..."

இதற்குள் ஏட்டய்யா அங்கிருந்தபடியே பணிவன்புடன் கத்தினார்.

"முந்தா நாள் குப்பைகளை எரிச்சோம் பாருங்க... அதுல படுகுப்பையாய்க் கசங்கிப் போன அந்த லெட்டருங்களையும் எரிச்சிட்டோம்... மொதல்லயே இந்தம்மா லட்டருங்களைத் திருப்பித் தரணுமுன்னு சொல்லியிருந்தால், லட்டருங்க தப்பியிருக்கும்..."

"ஒவ்வொரு விஷயத்தையும் ஒங்களுக்குச் சொல்லிக் கொடுக்கணுமா ஸார்... கடிதங்களை எரித்ததுக்குப் பதிலாய் நீங்க என்னையே எரிச்சிருக்கலாம் ஸார். இது அக்கிரமம்... அடாவடித்தனம்..."

இன்ஸ்பெக்டர் என்னை ஏறிட்டுப் பார்த்தார். பிறகு எழுந்து என்னை எதிரியைப் பார்ப்பதுபோல் பார்த்தார். அப்புறம் அட்டகாசமாக தனக்கும் மனைவி மக்கள் இருக்கிறார்கள் என்பதை மறந்து 'பேட்டை ரௌடி' மாதிரி கேட்டார்.

"என்னடி ஒன் மனசுல நினைச்சுக்கிட்டே....? அதோ அந்தச் சின்னப் பயலோட ஒனக்கு உறவாம்...?. ஊர்ல கள்ளச்சாராயம் வேற காய்ச்சுறியாம்...? இந்தாப்பா! இவளைப் பிராத்தல் கேஸ்ல புக் பண்ணு... ஒன் மனசுலே என்னடி நினைச்சுக்கிட்டே?"



அந்த ரயில், ஓட்டப் பந்தயத்தில் குதிகாலில் உட்கார்ந்தபடி தயார் நிலையில் இருப்பார்களே, அப்படி நிற்பது ஓடுவதற்கே என்பதுபோல், ஒரே ஒரு ஊளைச் சத்தத்தை மட்டும் போட்டுவிட்டு பாய்ந்தது.

பள்ளமான ரயில் பாதை. அதில் குப்புற ஓடுவதுபோல் ஓடியது. இந்த தலைகீழ்ப் பாய்ச்சலை அனுமானித்து "பலார்ஷா ஸ்டேஷன் வரப்போகுது. வரப்போகுது' என்றான் நவாப்ஜான். இப்போது பலராமனுக்கு ஒரு சந்தர்ப்பம். "டேய்... டேய்... சாப்பாட்டை நினைக்க இதுவா சமயம்... இப்போ அந்த எண்ணம் ஒனக்கு வரலாமா கயிதே" என்றான். பதிலுக்குப் பேசப் போன நவாப்ஜான் - "வண்டியில் பிரயாணிகளுக்கு சாப்பாட்டு நேரமுன்னு சொல்ல வந்தேண்டா சோமாறி" என்று சொல்லப்போனான். தமிழ்ச்செல்வி தன்கதையை மீண்டும் தொடரப் போவதைப் பார்த்து வாயடைத்தான். எங்கோ ஒரு ரயிலில் போய்க் கொண்டிருக்கிறோம் என்பதை மறந்து ஏதோ உறவினர் வீட்டில் இருப்பது போல், அவள் சொன்னாள். சோகக் கதையைச் சொல்லிக் கொண்டே போனாள்.

"இன்ஸ்பெக்டர் என்னை நெருங்கி வந்தார். ஏட்டய்யா எதுவுமே நடக்காததுபோல், அப்படி ஏதும் நடந்தால், அதைப் பார்க்கக்கூடாது என்பதுபோல் அவசர அவசரமாக வெளியே புறப்படப் போனார். நான் பயந்து போனேன். உடம்பெல்லாம் ஆடியது. இன்ஸ்பெக்டரைக் கையெடுத்துக் கும்பிடக்கூடப் போனேன். அவரோ ஒரு கண்ணில் குரூரத்தையும், இன்னொரு கண்ணில் ஏதோ ஒரு ஆசையையும் வைத்திருப்பவர்போல், என்னை தொடக்கூடிய இடத்திற்கு வந்துவிட்டார். திடீரென்று எனக்

குள்ளே ஒரு மாறுதல்... பாரதியின் புதுமைப்பெண் என் மனதுக்குள் ரூபம் பெற்றாள். நெஞ்சிலே உருப்பெற்று கண்களில் ஜோதி ஆனாள். பாரதிதாசனின் தமிழச்சி, முகத்திலே உருவமானாள். நான், இன்ஸ்பெக்டரை நேருக்கு நேராய்ப் பார்த்து "நீயாச்சி... நானாச்சு..." என்பது மாதிரி கண்ணோடு கண்ணை மோதவிட்டேன். திடீரென்று அந்த இன்ஸ்பெக்டர் பின் வாங்கினார். இப்படி நடந்து கொள்ளும் பல இன்ஸ்பெக்டர்களுக்கு, ஏற்பட்ட கதி, அவன் நினைவுக்கு வந்ததோ அல்லது இன்னும் இருட்டவில்லை என்ற யதார்த்த எண்ணமோ. ஆசாமி, லெப்ட் ரைட் போடாக் குறையாகப் பின்வாங்கினார். அதே சமயம், ஏதோ தர்மத்துக்கு என்னை விட்டு விட்டதுபோல், இருக்கைக்கு அருகே சென்று, என்னை முறைத்தபடியே லத்திக் கம்பை உருட்டியபடியே உட்கார்ந்தார்.

எனக்கு, காவல்துறையினரின் சதி புரிந்துவிட்டது. என் பெரிய மாமாவின் சட்டைப் பைக்குள், இந்தப் போலீஸ்காரர்கள் போய் விட்டார்கள். எங்கள் பணத்தை வைத்தே, அவர் வீசிய வசிய மந்திரத்தில், கட்டுண்டார்கள். காசுக்கு விலை போனவர்களிடம், வேசிகூடப் பேசமாட்டாள். இன்ஸ்பெக்டர், கடிதங்களை மாமாவிடம் கொடுத்திருப்பார். ஒவ்வொரு கடிதத்திற்கும் ஒரு விலை விதித்திருப்பார். அடேடே... என் கடிதங்களுக்குக்கூட விலை இருக்குதா...? இவன் முன்னால் நியாயம் பேசுவது, ஆட்டுக்குட்டி ஓநாயிடம் பேசுவது மாதிரி.

நான், வெறுமனே வெளியே வந்தேன். வைத்தியலிங்கம், என்னை நோக்கி நடந்தபோது, நான் கூச்சத்தோடு ஒதுங்கினேன். பிறகு, அந்த இன்ஸ்பெக்டரின் அருவெருப்பான வார்த்தைகளை உதாசீனம் செய்வதாய்க் காட்ட விரும்பி, அவன் விரல்களைப் பிடித்துக்கொண்டேன். ஆனாலும் எந்த விவரத்தையும், அவனிடம் சொல்லாமல் மழுப்பிவிட்டேன். உண்மையைச் சொல்லி இருந்தால், அவன் கொலைகாரனாகி இருப்பான். அல்லது இன்ஸ்பெக்டரிடம் அவன் ஏதோ கேட்கப் போய் இறுதியில் எங்கோ நடந்த கொலைக்கோ அல்லது கொள்ளைக்கோ அவன் சுமை தாங்கியாக மாறிப் போவான். ஆனாலும், அவன் புரிந்து கொண்டான். "இந்தச் செறுக்கி மவன்களே இப்படித்தான் அண்ணி... ஏட்டு பெரியப்பன் வீட்டுக்கும், பெரியப்பன் இங்கேயும் நடமாடும்போதே எனக்குத் தெரியும்" என்றான்.

ஒருவார காலம், சின்ன மாமா வீட்டுக்குள்ளேயே, முடங்கிக் கிடந்தோம். பெரிய மாமா வீட்டில் சிரிப்பும் கும்மாளமும் தினசரி நிகழ்ச்சிகளாயின. அவற்றை விமர்சித்து நடுல மாமா வீட்டில் திட்டுக்கள்.... திருடன்... தீயவன் என்ற பட்டங்கள்... ஒம்ம தாய் மாமா வேல்மயில் அனுப்புன, சொத்து பத்தை, ஒண்ணன் மட்டுமே எப்படி

அனுபவிக்கிறதாம்'' என்று நடுல அத்தை, புருஷனை ரேக்கி விடுவாள். பதிலுக்குப் "பட்டைச் சாராயத்தோடு நிற்கவா இல்ல பட்டாக் கத்தியையும் எடுக்கவா" என்று நடுல மாமா பெரிய மாமா வீட்டுக்குப் கேட்கும்படி போதையில் உளறுவார்.

"சின்ன மாமா மனைவி, சொந்தமாய் இருந்த புஞ்சை நிலத்தில் பாடுபட்டுவிட்டு, கூலி வேலைக்கும் போகிறவள். மாமாவும் வாடகை வண்டி அடிப்பார். கூலிக்கு ஏர் உழப் போகிறவர். வைத்தியலிங்கம், அப்பா, அம்மா பணிகளைச் சேர்த்து செய்பவன். சில சமயம், மலைக்குப்போய் விறகு வெட்டி, அதைக் கோணச் சத்திரத்தில் விற்றுவிட்டு, வீட்டுக்கு எட்டோ பத்தோ கொண்டு வருபவன். இப்படிக் அந்தக் குடும்பத்தில் எல்லோரும் இயங்கிக் கொண்டிருக்கும்போது, அம்மாவால் சும்மா இருக்க முடியல... என்னால் சமையல் வேலையைக் கவனிக்க முடியும்; ஆனால் மாமாவோ, மைத்துனனோ சாயங்காலம் வந்து காசு கொடுத்த பிறகு தான். அடுப்புக்குச் சூடு வரும். அப்போது அத்தை என்னைத் தடுத்து விடுவாள்... நான் குற்றவுணர்வில் தவித்தேன். சின்னமாமா குடும்பத்தில் ஒட்டுண்ணியாய் இருப்பதை விடலாம் போலிருந்தது."

"இந்தச் சமயத்தில் அம்மாவும் என்னை நோகடித்து விட்டாள். சின்ன மாமாவுக்கு, இரண்டு பசு மாடுகள். அத்தை கூலி வேலைக்குப் போய்விட்டுத் திரும்பும்போது, அதுகளுக்குப் புல் கொண்டு வருவாள். ஒரு சுமைப் புல்லில், அந்த வாயில்லா ஜீவன் களுக்கு வயிறு தேறவில்லை. அம்மா, இதைப் புரிந்து கொண்டாள். மாமாவின் மாடுகளை, மானாவாரி இடங்களுக்குத் தனியாகப் பற்றிக் கொண்டு போனாள். பிறகு மாடு மேய்க்கும் மனிதர்களோடு சேர்ந்து போனாள். இந்தத் தொழிலில் அம்மா ஊர்மாடுகளையும் கவனித்துக் கொள்கிறாள். இதற்காக வீட்டுக்கு இருபது ரூபாயாம். மாமா தடுத்துப் பார்த்தார்; திட்டிப் பார்த்தார். அம்மா கேட்கவில்லை."

"அம்மாவின் இந்தக் கோலத்தைப் பார்த்துவிட்ட பிறகு, நான் எப்படி நடந்திருப்பேன்னு சொல்ல வேண்டியதில்லை. தூக்குப் போட்டுச் சாகப்போனேன். அதுக்கு ஒரு நல்ல கயிறு கூடக் கிடைக்கலே. என் அம்மாவை - கோலாலும்பூரில் எங்கே போனாலும் காரில் போன என் தாயை, கோலாலும்பூரில் இருந்து இந்தியாவிற்கு விமானத்தில் வரும் என் தாயை, மாடு மேய்ச்சியாகப் பார்க்கப் பார்க்க எனக்கு பார்வையே தேவையற்றதுபோல் தோன்றியது. எனக்கோ வயல்வேலை செய்ய முடியவில்லை. ஒரு தடவை நடுவதற்காகப் போனேன். சேற்றுக்குள் விழுந்ததுதான் மிச்சம். என் அம்மா, எனக்கும் சேர்த்து மாடு மேய்த்தாள். ஒருவேளை, அந்த அப்பாவி மாடுகளைப் பார்த்து, மனிதரிடம்

பட்ட கஷ்டங்களைச் சொல்லாமல் சொன்னாளோ என்னவோ... இதைப் பார்த்த என் பெரிய அத்தை "இவளுக்கு இதுவும் வேண்டும்... இன்னமும் வேண்டும்..." என்றாளாம். நடுல அத்தையோ "நம்ம மாடுகளையும் மலேயாக்காரிகிட்டே விடு" என்று மகனைப் பார்த்துச் சொன்னாளாம்."

"எனக்கு ஒரு சந்தேகம்... அம்மா இப்படி மாடு மேய்த்து அண்ணன்களை அவமானப்படுத்தி பழி வாங்குகிறாளோ... இல்லவே இல்லை. அம்மா, அப்படிப்பட்டவள் இல்லை. ஒரு காலத்தில் அம்மாவை, ஒரு கண் போட்டுப் பார்த்த ஊரார், இப்போதும் இன்னொரு கண் போட்டுப் பார்க்கிறார்கள். மலேயாக் காரி, மாடு மேய்ச்சியாகி விட்டாள். அம்மா அப்போது வி.ஐ.பி.; இப்போதோ வெறும் ஐ.பி. நான், அம்மாவிடம் ஒரு தடவை மாடு மேய்ப்பதை நிறுத்த வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருந்தேன். அவள் பதில் பேசாமல் இருந்தாள். அம்மா மாடு மேய்ச்சியான பிறகு, அவளை முழுமையாகப் பார்க்கமுடியாமல், முகத்தைக் திருப்பிக்கொள்ளும் நான், இப்போது அம்மாவின் முகத்தைத் திருப்பிப் பார்த்தேன். அய்யோ... கடவுளே... அம்மாவின் முகத்தில் எந்தச் சலனமும் இல்லை. கண்கள் மட்டும் துடித்தன. வாய் மூடிக் கிடந்தது. வாழ்ந்து கொண்டே செத்தவள் மாதிரியான தோரணை. ஒவ்வொரு சொல்லுக்கும் ஒவ்வொரு அசைவைக் காட்டும் முகம், இப்போது ரப்பர் மாதிரித் தோன்றியது. குடிசைத் தொழிலில் தயாரான ஏதோ ஒரு பெண் பொம்மைக்கு, அசைந்தாட பேட்டரி வைத்த மாதிரி ஆகிவிட்டாள். அழுதழுது அழுகையைத் தாண்டி விட்டாளோ.... நினைத்து நினைத்து நினைப்பற்றுப் போய் விட்டாளோ... அம்மா, என்னைக்கூட மகளென்று அங்கீகரிக்காதது போல், பார்த்தாள்."

"நான், ஏதோ வேற்று மனுஷி போலவும், அந்த மாடு மேய்ச்சியின் மகளல்ல என்பது போலவும் பார்த்தாள். சாயங்காலம் மாடுகளைக் கட்டிவிட்டு, அந்த மாடுகளின் முதுகிலேயே நின்றபடி சாய்ந்து தூங்குவாள்... நான் அந்தப் பக்கமாய் போய் 'அம்மா' என்றால்கூட, அவளிடம் ஓசையிருக்காது. உடல் இயங்கியது. ஆனால் உள்ளம் இயங்கவில்லை. அதாவது உணர்வு பூர்வமாகச் செத்துவிட்டாள். இனிமேல், நான், ஒருவேளை செல்வமும் செல்வாக்குமாகி அம்மாவின் முன் நின்றாலும் அவளால் பழைய நிலைக்கு வர முடியுமா என்பது சந்தேகம். என் அம்மா வரமாட்டாள். அவள் மாடு மேய்ச்சியாகிவிட்டாள். மலேயாக் காரியாய் ஆக மாட்டாள். ஆகவே மாட்டாள். பாவிகள் அவளைக் கொல்லாமல் கொன்றுவிட்டார்கள். கடவுளே....கடவுளே.... எனக்கு எதுவும் வேண்டாம்... என் அம்மாவை எனக்கு அம்மாவாய்க்

கொடு.. அந்த மாடு மேய்ச்சியை, மலேயாக்காரியாய் மாற்றிக் காட்டு.... அப்போதான் நீ கடவுள்... நீ இருப்பதாய் அர்த்தம்."

நவாப்ஜான், ஆறுதல் கூறினான்.

"கடவுள் இருக்காரோ... இல்லியோ... உன் அம்மா பழைய நிலைக்கு வருவாம்மா. நான் சொல்றதை நம்பு தங்கச்சி... அல்லா கைவிட மாட்டார்..."

தமிழ்ச்செல்வியின் கைகளை உணர்ச்சி வசப்பட்டு பிடித்துக் கொண்ட நவாப்ஜான், பிறகு தன் கண்களைத் துடைத்துக் கொண்டான். எல்லோரும் அவள் சொன்ன தகவலைத் தாங்க மாட்டாது, ஜன்னலுக்கு வெளியே பார்த்தார்கள். அந்த ரயில் பயல், அவள் தோளிலே கை போட்டான். பிறகு, அவள் கண்களைத் துடைக்கப்போனான். அதனால் இயல்பாக முகத்தைத் திருப்பிய தமிழ்ச்செல்வியின், கண்கள் கொட்டின. ஆனாலும் அவள் நிதானத்திற்கு வந்து, முகத்தை முந்தானையால் துடைத்தபடி, இப்போது போர்க்குரலில் பேசினாள்.

"என் அம்மாவை இந்த நிலைக்கு ஆளாக்கியவர்களை சும்மா விடுவது, நான் என் அன்னைக்கும், நீதிக்கும் செய்யும் துரோகமாக நினைத்தேன். உலகத்திலேயே மிகப் பெரிய கொடுமை, நியாயமான உணர்வுகளுக்கு வெளிப்பாடு கிடைக்காமல், இருப்பதுதான். அஃதொடு, இந்தக் கொடுமைகளுக்கு எதிராக, நான் போர் தொடுக்காத நிலையில், நானும் அம்மாவைப்போல் ஆகிக் கொண்டிருந்தேன். நல்லவேளையோ அல்லது கெட்ட வேளையோ, வைத்தியலிங்கம் என் காதில் ஒரு சேதி சொன்னான். எங்கள் கிராமத்துக்காரர் - சென்னையில் புகழ்பெற்ற வக்கீலாம். நானும் அவரைப் பற்றிக கேள்விப்பட்டிருக்கிறேன். பெயர் முத்துச்சாமி. ஊரில் அவருக்கு நல்ல பெயர் இல்லை. இதுக்கு அவர் காரணமாக இருப்பாரா என்பது சந்தேகம். ஏனென்றால், எங்க ஊர்க்காரங்க, வினோதமானவங்க. சென்னையிலோ அல்லது டில்லியிலோ, வேலை பார்க்கும் பட்டதாரிகள், கிராத்தில் வேலையில்லாமல் இருக்கும் இளம் பட்டதாரிகளுக்கு வேலை வாங்கிக் கொடுக்க வில்லையானால், அவர்கள் மனிதர்களே இல்லை என்பார்கள். அதுமட்டுமல்ல, அவர்களுடைய சொந்தக்காரர்களை சொத்துப் பத்துக்களில் •தூண்டி விடுவார்கள்."

"இதன் காரணத்தால் வெளியே வேலை பார்க்கும் பலர் தங்கள் பெயரில் பட்டாவாக உள்ள நிலத்தைக்கூட விற்க முடியாது. இப்படி இந்த வக்கீலுக்கும் நிலவகையில் சிக்கல். அண்ணன் தம்பிகள், ஆளுக்கு ஒரு துண்டாகப் போட்டுக் கொண்டார்கள். ஆனால் வக்கீல் முத்துசாமி விடவில்லை. ஊருக்கு வந்து, காவல்

துறையினரைக் கொண்டு வந்து மிரட்டி, சர்வேயர்களைக் கொண்டு வந்து, காணாமல்போன நிலத்தைக் கண்டுபிடித்து விட்டார். ஆனால், அவர் நிலத்தை வாங்க எவரும் முன் வரவில்லை. "கொடுக்கதே கொடுக்கே.... உன் அண்ணாச்சிக் கிட்டேயே விலைக்குக் கொடு" என்கிறார்களாம். அந்த அண்ணாச்சியோ, கொஞ்சம் கொஞ்சமாத்தான் பணம் தருவேன் என்று கொஞ்சிக் கொஞ்சிப் பேசுகிறாராம். என் பெரிய மாமா வேறு, இந்த அண்ணாச்சிக்கு வக்காலத்தாம். இந்தப் பின்னணியில், வைத்தியலிங்கம் வழக்கறிஞரை, நேரில் பார்த்து, என் கதையைச் சொல்லி இருக்கிறான். உடனே என்னைச் சந்திக்கும்படிச் சொல்லி விட்டார்."

"நான் அவரைப் போய்ப் பார்த்தேன். காவல்துறையினர் போக்கைச் சொன்னபோது, அப்படி நடப்பதுதான் அவர்கள் கடமை என்பதுபோல், சும்மா இருந்தார். என் மாமாவின் துரோகத்தைச் சொன்னபோது, விடப்படாது என்று கூறிவிட்டு, என் கதை ஏற்கெனவே தெரியும் என்பதுபோல் கேட்டார். பிறகு, இவரது நிலத்தை, வெளியாட்கள் வாங்கவிடாமல் என் பெரிய மாமா செய்யும் சில்மிஷங்களைச் சுட்டிக் காட்டி, அவரும் என் நிலையில் இருப்பதுபோல் பாவித்துக்கொண்டார். எப்படியோ, என்னை சென்னைக்கு வரும்படியும், அங்கிருந்து பெரிய மாமாமீது வழக்குப் போடலாம் என்றும், செலவைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம் என்றும் சொன்னார். அதேசமயம், என் பெரிய மாமா நிலம் வாங்குவதற்குப் பணம் கேட்டு மலேசியாவிற்கு எழுதிய ஒரு கடிதமாவது வேண்டும் என்றார். பெரிய மாமனுக்கு ஐந்தாண்டு வாங்கிக் கொடுக்காமலோ எங்கள் சொத்தை மீட்டுக் கொடுக்காமலோ இருந்தால், தன் பெயர் முத்துசாமி இல்லை என்று சூளுரைத்தார்."

"நான் வீட்டிற்கு வந்தேன். பெரிய மாமா எழுதிய கடிதங்களை கோணச்சத்திரத்துக்காரன் கிழித்து விட்டான். எதற்கும் தேடிப் பார்க்கலாம் என்று சூட்கேஸையும், இதர பைகளையும் அலசினேன். சூட்கேஸின் மேல் பகுதியை வேண்டா வெறுப்பாய் ஜிப்பைத் திறந்து துளாவினேன். கடவுள் காட்டிக் கொடுத்து விட்டார். எப்போதோ வைத்த கடிதங்கள் கிடந்தன. அத்தனையும் பெரிய மாமா, தன் கைப்பட எழுதிய கடிதங்கள். அதுவும் சொத்துப் பத்துப் பற்றியவை. எனக்கு, ஆனந்தம் தாங்க முடியவில்லை. அதே ஆனந்தத்தில் கனம் தாங்க முடியாமல் நீர் நீராய்க் கீழே விழுகிறது. வக்கீல் என்னமோ ஓசி... ஆனால் சென்னைக்குப் போகவும் அங்கே தங்கி இருக்கவும் பணம் வேண்டுமே....?"

"நான், மீண்டும், சின்னமாமாவின் வீட்டுக்குள்ளேயே முடங்கினேன். வக்கீலும் போய்விட்டார். வைத்தியலிங்கம் கேட்டதற்கு, "கோர்ட்டில் போனால் ஜெயிக்காதாம்" என்று சொல்லிவிட்டேன். ஆனால், எப்படியோ சின்ன மாமாவுக்கு, விஷயம் தெரிந்துவிட்டது. வக்கீல் என்னிடம் பேசிய விஷயத்தை, எப்படியோ யாரோ சொல்லி விட்டார்கள். அசல் அப்பாவிபோல் தோன்றும் மாமா, நான் போகாமல் இருப்பதற்கான காரணத்தையும் கண்டுபிடித்து விட்டார். ஒருநாள் சின்ன அத்தையும் மாமாவும் என்னிடம் வந்தார்கள். அத்தையின் கையில் கிடந்த தங்க வளையல் மாமாவின் விரல்களில் ஆடியது. அதை மாமா நீட்டியபோது நான் விழித்தேன். உடனே அத்தை, "மெட்ராஸ் போய் வழக்குப் போடும்மா... இவங்களை விடப்படாது... வாங்கிக்கோம்மா... இது ஒன் அம்மா போட்ட வளையல்தான்" என்றாள். நான் விம்மி விம்மி அழுது, மாமியின் மார்பிலே சாய்ந்தேன். அவள், என் முதுகைத் தட்டிக் கொடுத்தாள். அத்தையின் இரண்டு பவுன் வளையலை கோணச்சத்திரத்து மார்வாடியிடம் இரண்டாயிரம் ரூபாய்க்கு அடகு வைத்தேன். மாமா வீட்டில், ஆயிரம் ரூபாயை நீட்டினேன். அவர்கள் ஐநூறு ரூபாயை மட்டும் வாங்கிக் கொண்டார்கள்."

"நான் புறப்பட்டேன். கண்ணகி கால் சிலம்போடு பாண்டிய மன்னனிடம் நீதிகேட்கப் போனதுபோல், நான் அடகு வைத்த வளையல் பணத்தோடு, நீதிமன்றத்தில் அது இல்லாததைத் கேட்கப் புறப்பட்டேன். தொழுவில் பசுமாடுகளை அவிழ்த்துக் கொண்டு இருந்த அம்மாவிடம் என் திட்டத்தைச் சொன்னேன். அம்மா என்னை ஏறிட்டு மட்டுமே பார்த்தாள். அப்படியும் பேசவில்லை. இப்படியும் பேசவில்லை." திடீரென்று என்னைப் பார்த்த முகம் அந்த மாடுகளைப் பார்த்தது. பிறகு அவற்றைக் கட்டிப் போட்ட கயிறுகளை அவிழ்க்கக் குனிந்தது, நான் அம்மாவைக் கட்டிப் பிடித்தழுதேன். அம்மா... அம்மா... பேசும்மா... பேசும்மா... என்று பேசினேன். மலேசியாவில், பள்ளிக்கூட மாணவிகளோடு நான் இரண்டே இரண்டுநாள் சுற்றுலா போகும் போதுகூட, என்னை கட்டிப் பிடித்துக் கண்ணைக் கசக்கும் அம்மா, இப்போதோ காலவரம்பற்ற என் பயணத்தைப் பற்றி, கண்டுக்கவில்லை.... கண்ணீர் சிந்தவில்லை. அவள் இப்போது விருப்பு வெறுப்புக்கு அப்பாற் பட்ட பெண் திருமூலராகி விட்டாள். திருமந்திரத்தைத் தந்த திருமூலரும், மாடு மேய்த்த இடையர்தானே..."

"நான், எந்த வேகத்தில், எதிர்பார்ப்புடன் சென்னை வந்தேனோ, அந்த வேகத்திலேயே ஏமாந்தேன். வழக்கறிஞர் முத்துசாமியைப்

பார்த்தேன். வீட்டுக்குப் போனால் ஆபீசுக்கு வரும்படியும், ஆபீஸ் போனால் வீட்டுக்கு வரும்படியும் இழுத்தடித்தார். ஒருநாள், அவரை வலுக்கட்டாயமாகச் சந்தித்தேன். என் பெரிய மாமா என்னை எப்படிப் பார்த்தாரோ, அப்படிப் பார்த்தார். எதிரி வக்கீலின் கட்சிக்காரரைப் பார்ப்பது போலவே பார்த்தார்."



அந்த ரயில் இப்போது இருட்டைக் கிழித்துக்கொண்டு எங்கோ தொலைவில் தெரிந்த வெளிச்சத்தை இல்க்காக வைத்து ஓடுவதுபோல் தோன்றியது.

அங்கிங்கு என்று சொல்லமுடியாத இருளோட்டம். சுற்றிலும் கருமையின் மொய்ப்பு. காடுகளும், மலைகளும், காரிருளில் உருவங்களை இழந்து நின்றன. அந்த இருளிற்கு, இருள் சேர்த்தன. ஆனாலும், ஆங்காங்கே வெளிச்சத் திட்டுக்கள். மின்மினிப் பூச்சிகள் மாதிரியான ஒளிப்பானங்கள். அடிக் கருத்தாலும், மேல் வானத்தில் பல்ப் வெளிச்சங்கள் மாதிரி, கருமேகங்களுக்கு இடையே நட்சத்திரங்கள் கண் சிமிட்டின. அந்த எஸ். 11 பெட்டியில் தவிர இதரப் பெட்டிகளில் எந்த நடமாட்டமும் இல்லை. தூங்கி விட்டார்களோ அல்லது மையிருளில் மனமும் அடைபட்டதோ என்னமோ...

தமிழ்ச்செல்வி, மஞ்சள் வெயில்போல் வீசிய பல்ப் வெளிச்சத்தில் தனது சோகச்சுமையைப் பகிர்ந்து கொண்டிருந்தாள்.

"முத்துசாமி வக்கீல் என்னை உட்காரச்கூடச் சொல்லவில்லை. இவ்வளவுக்கும் அவர், எனக்குப் பங்காளி முறை வேண்டும். பெரியப்பாவோ, சித்தப்பாவோ... தாத்தா முறையோ... என் அப்பா பிறந்த குடும்பத்தைச் சேர்ந்தவர். அந்த முறையிலாவது என்னை உட்காரச் சொல்லியிருக்கலாம். இவ்வளவுக்கும், நான் அவருக்குக் கடிதம் எழுதிப் போட்டுத்தான் வந்தேன். அவர் முகத்தில் தோன்றிய ஏதோ ஒருவித அந்நியத் தன்மையில், சூட்டைக் கண்டு, நான் நின்றபடியே, அவரைப் பார்த்தேன். அவரோ, நான் அங்கே இல்லாததுபோல் அனுமானித்து, யார் யாருக்கோ டெலிபோன் செய்தார். பார்க்க வந்த பல்வேறு மனிதர்களிடம் அவர்களை உட்கார வைத்தும், நிற்க வைத்தும், பணம் கொடுத்தும், பணம் வாங்கியும், கோபப்பட்டும், சாந்தப்பட்டும், பேசியும் பேசாமலுமாய்,

நேரத்தைச் செலவழித்தார். இது அவருடைய டெக்னிக் போலும்.... எனக்கு, கால்கூட வலிக்கத் துவங்கிவிட்டது. லேசாக இருமினேன். அவர், உடனே என் மீது எரிந்து விழப் போகிறவர்போல் பேசினார்."

"இந்த பாரும்மா... ஒன் பெயரென்ன தமிழ்ச்செல்வியா...? சொல்லுறதைக் கேள்... தமிழ்ச்செல்வி.... கோர்ட் வழக்குல்லாம் முடியாது. உன்கிட்டே பேசின பிறகு நான் இங்கே வந்து, சட்டப் புத்தகங்களைப் புரட்டிப் பார்த்தேன். ஒங்கப்பா... தாத்தா வந்தாக் கூட முடியாது... சட்டம் அப்படி. ஒன் பெரிய மாமா கையில காலுல விழுந்து அவர் தர்றதை வாங்கு... இல்லின்னா நஷ்டம் உனக்குத்தான். அப்புறம் வேற ஏதாவது விஷயம் உண்டா? எனக்கு நிறைய கேஸ் வேலை இருக்குது.... நீயே பார்க்கத்தானே செய்யுறே..."

"நான் அவர் போகச் சொல்லுமுன்னாலேயே புறப்பட்டு விட்டேன். என் விதியை நொந்து கொண்டேன். இல்லை... கோபித்துக்கொண்டேன். இருளில் தவிக்கும் எனக்கு, அவ்வப் போது ஒளித் தூறலைக்காட்டி, அது காட்டும் இடத்தை நான் அடைந்தவுடனேயே அந்த ஒளிக் கீறல்களை அணைத்துவிடும் விதியைத் திட்டித் தீர்த்தேன். ஆனால் விதியோ, அந்த ஒளியை அணைக்காமல் சிறிது, அப்புறப் படுத்தியதுபோல் தோன்றியது."

"சென்னைக்கு வந்த நான், வட சென்னையில் என் தாத்தாவுக்கு வேண்டியவர் வீட்டில்தான் தங்கினேன். தாத்தாவும், அப்பாவும் சென்னைக்கு வரும்போது, இந்த வீட்டில்தான் ஓரிரு நாட்களுக்கு நாங்கள் தங்குவோம். இவ்வளவுக்கும் அவர்கள் எங்கள் சாதியில்லை; எங்கள் ஊரும் இல்லை. எப்படிப்பட்ட பந்தம் ஏற்பட்டது என்பது எனக்கே தெரியாது. ஆனாலும், அந்த வீட்டில் இருக்கும் பரந்தாமன் தாத்தா, நேற்றுகூட என் தலையை வருடிக் கொடுத்தார். அவர் மகனும், மருமகளும், என்னை சொந்த மகள் மாதிரியே நடத்தினார்கள். நான் பட்ட கதையைச் சொன்னதும், துடிதுடித்துப் போனார்கள். எவ்வளவு நாள் வேண்டுமானாலும் நான் அவர்களோடு இருக்கலாம் என்றார்கள். வழக்கறிஞர் என்று சொல்லப்படும் முத்துசாமி நடந்து கொண்ட விதத்தை நான் சொன்னதும், தாத்தாவின் மகன் சுப்பாராவ் மாமா கொதித்துப் போனார். துறைமுகக் காண்டிராக்டர் அவர். என்னை ஒரு வக்கீலிடம் கூட்டிப் போனார். நான் சொன்னதைக் கேட்டு, நீட்டிய கடிதங்களைப் படித்த அந்த வக்கீல், என் மாமா மீது மோசடி செய்ததாகக் கிரிமினல் வழக்கும், போடலாம் என்றார். அதற்கு முதல்படியாக சொத்துக்களை ஒப்படைக்கும்படி நோட்டீஸ் அனுப்பலாம் என்று சொன்னபடியே "என்னய்யா அந்த ஆளு காசு கொடுத்தானா" என்று குமாஸ்தாவைப் பார்த்துக் கேட்டார். நான்

எவ்வளவு கொடுக்க வேண்டும் என்று தெரியாமல் அவரைப் பார்த்தபோது "இருநூறு ரூபாய் இப்போதைக்கு கொடுங்கள்" என்று வாங்கிக்கொண்டார்."

"பிறகு, மறுநாள் வரும்படி சொல்லிவிட்டார். ஒருவார காலம், அவர் அலுவலகத்திற்கு நடையாய் நடந்தேன். எப்படியோ பெரிய மாமாவுக்கு நோட்டீஸ் அனுப்பி விட்டார். அவரது பதிலுக்காகக் காத்திருந்தேன்... ஒரு மாதம் உப்புச் சப்பில்லாமல் ஓடியது... நோட்டீஸ் திரும்பி வரவில்லை. மாமா அதை வாங்கிக் கொண்டதற்காக அடையாளக் கார்டு வந்தது. அப்புறம் மாமாவின் பதில் நோட்டீஸ் சாவகாசமாக வந்தது. இந்த நோட்டீஸை யார் அனுப்பியது தெரியுமா...? முத்துசாமி. வழக்கறிஞர் முத்துசாமி. கோர்ட்டுக்குப் போனால் ஜெயிக்கும் என்றும், என் மாமாவுக்கு ஐந்தாண்டு சிறைத்தண்டனை வாங்கிக் கொடுப்பதாகவும் சபதம் போட்ட அதே அந்த வீர வக்கீல்தான். 'இப்படிப்பட்ட மனிதர் எப்படி வக்கீலாக இருக்கலாம்...?' என்று நான் என் வக்கீலிடம் கோபமாகக் கேட்டபோது, அவர் என் கேள்வியை அதிகமாக ரசிக்க வில்லை. நான் என்னமோ, அவரைத் திட்டுவதுபோல் அனுமானித்த படி வாயை உப்பியபடியே இருந்தார்."

"நானோ, நான் தங்கியிருக்கும் நட்பு வீட்டுக்கு சிரமம் கொடுக்கக்கூடாது என்று, பெரும்பாலான நேரத்தை, வழக்கறிஞர் அலுவலகத்திலேயே செலவழித்தேன். ஹோட்டல்களிலேயே சாப்பிட்டேன். மாமாமீது வழக்குப் போடுவதைத் தவிர, வேறு வழியில்லை. ஆனால், எனது வழக்கறிஞரோ, நாளை தள்ளிப் போட்டுக் கொண்டே போனார். இந்தச் சந்தர்ப்பத்தில் என் கையில் இருந்த பணம் குறைந்து கொண்டே இருந்தது. வழக்கறிஞரிடம் சற்றுக் கண்டிப்பாகவே பேசி விட்டேன். அவர், லேசாய் கோபப்பட போனார். பிறகு சுப்பாராவ் மாமா சிபாரிசு செய்த 'கிளையண்ட்' என்பதால், என்மீது ஏவப்பட்ட கோபத்தை புன்முறுவலாக்கினார். முந்தா நாள் வரச்சொன்னார்.... "அப்பிடவிட்" - வழக்குத் தொடுக்கும் மனுவைத் தயாரித்துவிடலாம் என்றார். அதற்கு மறுநாளே, அதை நீதிமன்றத்தில் தாக்கல் செய்துவிடலாம் என்றும் தெரிவித்தார். எனக்கு மகிழ்ச்சி தாங்க முடியவில்லை. சுப்பாராவ் மாமாவும் 'விடப்படாது' என்றும் காலையில் 'விஷ் யூ பெஸ்ட்' என்று சொல்லி என்னை வழியனுப்பினார்."

"நான், காலையிலேயே புறப்பட்டேன். என் வக்கீலின் அலுவலகம், உயர்நீதிமன்றக் கட்டிட வளாகத்திற்குள் ஒரு மாடிக் கட்டிடத்தில் இருந்தது. அங்கே போவதற்காக, சென்ட்ரலுக்குப் பஸ்ஸில் வந்தேன். கடிதங்களைக் கொண்ட ஜோல்னா பையைத் தோளில் போட்டுக் கொண்டேன். ரயில் நிலையம் ஓரமாக இருந்த

பஸ் நிலையத்தில் இறங்கி, தெற்குப் பக்கமாய் நடந்து, கிழக்குப் பக்கமாய் நடக்கப்போனேன். சாலையைக் கடப்பது சிரமமாகத் தோன்றியதால், மேற்குப் பக்கமாக நடந்து, சாலைக்கு அடியில் போடப்பட்டுள்ள பாதாளப் பாதையின் படிக்கட்டுக்களில் இறங்கினேன். செருப்புச் சத்தம் கேட்டு நிமிர்ந்தபோது, எனக்கு முன்னாலும், பின்னாலும் இரு பக்கமும் நாலைந்து பேர் என்னைச் சூழ்ந்து நடந்தார்கள். அவர்களில் ஒருத்தன் நல்ல பழக்கம் அல்லது கெட்ட பழக்கம். பெரிய மாமாவின் மகன் தாமரைப்பாண்டி. இன்னொருத்தன் பண்ணையார். மூன்று பேர் ஒருவேளை மெட்ராஸ் ரௌடிகளாக இருக்கலாம். நான் வீறாப்பாக அவர்களைப் பார்த்தபோது, தாமரைப் பாண்டி "வழக்காடி போடப்போறே...? அதையும் பார்த்துடலாம்... கூச்சல் போட்டே ஒரே வெட்டு... மரியாதையா இப்படியே நட..." என்றான்."

"இதற்குள் ஒருத்தர் இடுப்பில் சொருகியிருந்த பாளை அரிவாளைச் சட்டையைத் தூக்கிக் காட்டினார். ஒருத்தன் பிச்சுவாச் கத்தியை எடுத்துக் காட்டினான். எனக்கு உயிர் பயம் வந்தது. அந்தப் பயத்தில், கூச்சல்போட முடியவில்லை. சொத்தும் வேண்டாம். சுகமும் வேண்டாம்... உயிர் பிழைத்தால் போதும்... என்பது மாதிரியான பயம். அந்த பாதாள்ப் பாதையிலோ ஆள் நடமாட்டம் அதிகமாக இல்லை. தாமரைப்பாண்டி எல்லோருக்கும் தெரியும்படிச் சிரித்தபடியே பேசாததுபோல் பேசினான்."

"மொதலில் பைக்குள்ள இருக்கிற லட்டருங்களைக் கொடுடி... கொடுக்கிறியா...? இல்ல பிச்சுவாக் கத்திதான் பேசணுமா...?"

"நான், என் ஜோல்னா பையின் ஜிப்பைத் திறப்பது மாதிரி, பாவனை செய்தேன். லேசாகக் குனிந்தேன். இப்போது இரண்டு பேருக்கு இடையே ஒரு சின்ன இடைவெளி கிடைத்தது. உயிரைக் காப்பாற்றவேண்டும் என்பதைவிட, அந்தக் கடிதங்களைக் காப்பாற்ற வேண்டும் என்ற வேகத்தில் எப்படித் தப்பித்தேனோ...! எனக்கே தெரியாது... சென்ட்ரல் ரயில் நிலையத்தின் முகப்பில் நின்றபடி மூச்சுவிட்டபோது, எதுவும் நடக்காததுபோல் என்னை நோக்கி இருவர் நடந்து வந்தார்கள். மற்றவர்கள் எந்தப் பக்கம் நின்றார்களோ. நான் ரயில் நிலையத்திற்குள் ஓடினேன். அங்கே நின்றால் ஆபத்து என்பதை உணர்ந்து, வடக்கு நோக்கி நின்ற ரயிலில் ஏறிவிட்டேன். ஏதோ ஒரு வேகம் என்னை நானே மறைத்துக் கொண்டேன். நல்லவேளையாக நான் ஏறிய உடனேயே ரயிலும் ஓடியது. டிக்கட் பரிசோதகர் ஏதாவது கேட்பாரே என்ற எண்ணம்கூட எனக்கில்லை. எங்கேயாவது போனால் சரிதான் என்ற எண்ணம். என் வக்கீல் வேறு ஏனோ தானோ என்று இருந்ததால், அந்த ரயில் கொண்டுபோகும் எந்த இடத்திற்கும்

போய்த் தொலைந்தால், சரிதான் என்று எண்ணியபடியே அந்த ரயிலுக்குள்ளேயே இருந்துவிட்டேன். துக்கச் சுமை, தூக்கச் சுமையாகியது. இரவு வந்தது எனக்குத் தெரியவே தெரியாது."

"மறுநாள் தூக்கக் கலக்கத்தில் பல ரயில் நிலையங்களைப் பார்த்தேன். நாக்பூர் வந்த பிறகுதான், சுயநினைவு ஏற்பட்டது. தாமரைப்பாண்டிக்குப் பயந்து விடக்கூடாது என்று எனக்குள் ஒரு வைராக்கியம் ஏற்பட்டது. இந்தக் கொலைவெறி மிருகங்களைப் பற்றியும் கோர்ட்டில் சொல்லவேண்டும் என்று ஒரு வைராக்கியம் பிறந்தது. நாக்பூரில் இறங்கினேன். சென்னைக்குப் போகும் ரயிலை விசாரித்துத் தெரிந்தபடி, நான் நடந்தபோது, "ஏய்" என்ற சத்தம் கேட்டுத் திரும்பினேன். பழையபடியும் ஒரு பாதாளப் பாதையில் வழிமறித்த அதே அந்தக் கும்பல், என்னைச் சுற்றிச் சூழ்ந்து இருப்பதைப் பார்த்தேன். தாமரைப்பாண்டியைத்தான் காண வில்லை. ஒருவேளை, என்னை அடையாளம் காட்டியதுடன் சென்னையிலேயே நின்று விட்டானோ என்னவோ... நான் அந்தக் கும்பலுக்கு இடையே நடந்து கொண்டிருந்தேன். என் முதுகில், இடுப்பில், கூர்மையாக, ஏதோ இடித்துக் கொண்டிருந்தது. "சத்தம் போட்டே..... குளோஷ்" என்று பேட்டை ரௌடி பிச்சுவாக் கத்தியால் இடுப்பில் லேசாகக் கூர் பார்த்தான்."

"நான் என்ன செய்வது என்று புரியாமல் விழித்தபோது, பிளாட்பாரத்தில் ஒரு பிரமுகருக்கு மலர்மாலை போடப்பட்டு, மரியாதை செய்யப்பட்டு வந்தது. அந்த மரியாதைக்குரிய மனிதரைச் சுற்றி, ஒரே கூட்டம். இதற்கிடையே எதிரே தள்ளு வண்டி..... என்னைச் சுற்றிய கும்பல் லேசாய் பிரிந்தபோது... நான் அந்தக் கூட்டத்திற்குள் புகுந்து, இந்த ரயிலில் ஒரு பெட்டிக்குள் ஏறினேன். பின்னால் திரும்பினால் அந்தக் கும்பலும், நான் இருந்த பெட்டிக்குள்ளேயே ஏறியது.... நான் பெட்டி பெட்டியாக உயிர்பிச்சை கேட்டு ஓடினேன். ஓடி ஓடி உங்ககிட்டேயே வந்துட்டேன்... ஒங்க கிட்ட வந்ததால், இந்த ஒரு ராத்திரியாவது என் உயிர் பிழைக்கும்."

எல்லோரும், அவளையே வைத்த கண் வைத்தபடி பார்த்தார்கள். கூட்டுச் சோற்றைப் பிரிக்கப் போன தெலுங்குக் கிழவி, என்ன நினைத்தாளோ, அதை அப்படியே கூடைக்குள் வைத்துவிட்டாள். டில்லிப் பெண்கள் வாயடைத்தபடியே அவளைப் பார்த்தார்கள். ரயில் பயல், தனது மடியில் இருந்த ரூபாய் நோட்டைத் தொட்டுக்காட்டி, வெளியே புறப்பட எழுந்தான். அவளுக்கு ஏதாவது வாங்கிக் கொண்டு வரப்போகிறனாம். உடனே, தமிழ்ச்செல்வி, அவன் கையைப் பிடித்து, இழுத்து, மடியில் உட்கார

வைத்துக் கொண்டாள். பலராமன் அவளிடம் பேசினான். கண் கலங்கி, பரிதாபத்தைப் பார்வையில் காட்டியபடியே பேசினான்.

“நீங்க தப்பு செய்திட்டிங்கம்மா... அந்தப் பசங்களை ஐஸாவா போக்குக்காட்டி நைஸா போலீஸ்ல பிடித்துக் கொடுத்திருக்கணும்...”

நவாப்ஜான், பலராமன் தலையில் ஒரு போடு போட்டபடியே கத்தினான்.

“மூளை இருக்காடா... பல்ராமா... அந்தப் பொண்ணு என்ன சினிமா நடிகையா...? நடிக்கிறதுக்கு... என்ன புத்தியடா ஒன் புத்தி...?”

“என் புத்தி கெடக்கட்டுண்டா சாய்பு. அந்தப் பசங்க நாம தூங்கும்போது இங்கே வந்து எதினாச்சும் செய்துடப்படாதே... அதுக்கு என்ன பிளான் வச்சிருக்கே? அதைச் சொல்லுடா மச்சான்.”

“ஏண்டா நீ மட்டும் எழுபது கிலோ உடம்பை வச்சிருக்கே... நானு அறுபது கிலோ மாமிசத்தை வச்சிருக்கேன்... மெக்கானிக் நாராயணன் அறுபத்தஞ்சு கிலோ. நம்மை மீறி அந்தப் பசங்களால வர முடியுமா... அப்படி வந்துட்டால்... நாம உயிரோட இருக்கதுக்கு என்னடா மச்சான் அர்த்தம்...?”

“இல்லாட்டியும் நீ உயிரோட இருக்கதுல அர்த்தமில்லடா மச்சான்...”

“டேய் டமாஷ் செய்யுறதுக்கு இதுவாடா சமயம்... தங்கச்சியோட கதையைக் கேட்ட பிறகும், டமாஷ் வந்தால்... நீ என்னடா மனுஷன்...?-கவலப்படாதம்மா... எங்க உயிர் போகுமுன்னால ஒரு பயலும் உள்ளே வர முடியாது... தைரியமாய் இரும்மா... ஒன் கதைதான் இந்த நாட்ல உள்ள ஏழை எளியவங்க கதைம்மா... நாம்தாம்மா ஒருத்தருக்கு ஒருத்தர் ஆதரவு. நான் இருக்கேன்... பல்ராமன் இருக்கான்... மெக்கானிக் நாராயணன் இருக்கார்... கவலப்படாதம்மா.”

தமிழ்ச்செல்வியின் மடியில் இருந்த ரயில் பயல், திடீரென்று எழுந்தான். அவளைப் பார்த்துத் தன் தோளைத் தட்டிக் காட்டினான். உடனே, அவள் தன்னையறியாமலேயே சிரித்து விட்டாள். ஏதோ சிந்தனை வசப்பட்டிருந்த மெக்கானிக் நாராயணன் கோபமாகப் பேசினார்.

“நாட்ல நியாயமோ நீதியோ இல்லாமப் போயிட்டுப் பார்த்தியா...? பாவம் இந்தப் பொண்ணை என்ன பாடு படுத்தியிருக்காங்க பாரு... இந்தப் பொண்ணுக்கு இவ்வளவு நடந்த பிறகு நாம மனுஷங்கன்னு சொல்லிக்க நியாயமே இல்ல. தமிழ் நாடாம்... தமிழாம்... தமிழர்களாம்...”

“அப்டி இல்லே அண்ணே.... இதுக்குல்லாம் நாடோ, மொழியோ காரணமில்லை.... சமூக அமைப்புதான் காரணம்... நம்மோட சமூக அமைப்பு ஒரு வியாபாரத்தனமான அமைப்பு இப்படி மலேசியாவில் இருந்தாலும்... அங்கேயும் இப்படித்தான் இருக்கும்...”

பலரும் பலவிதமாய்ப் பேசிக் கொண்டிருந்தார்கள். அந்தப் பேச்சு தன்னைப்பற்றி மையம் கொண்டிருப்பதைக் கண்ட தமிழ்ச்செல்வி, நெகிழ்ந்தாள். இப்போதும் அவளுக்கு அழுகை வந்தது. ஆனால், அது வேறுவிதமான அழுகை. வித்தியாசமான அழுகை. அப்போது பழைய சீனிவாசன், புதிய வேகத்தில் வந்தான். அவன் இருக்கையைக் கொடுப்பதற்காகத் தமிழ்ச்செல்வி எழுந்தபோது, அவன் “இருக்கட்டும் இருக்கட்டும்” என்று... சொன்ன படியே எதிர்ப் பெஞ்சில் உட்கார்ந்து கொண்டு, காஞ்சனாவையே பார்த்தான். “ஒங்களுக்கும் எனக்கும் என்ன ஸார் பேச்சு” என்று சொல்லி அவனை விரட்டி விட்டவள் இப்போது அவனைப் பார்த்துவிட்டு மெல்லச்சிரித்தாள். சீனிவாசனுக்குக் கொண்டாட்டம். காஞ்சனா தனது தவறுக்கு வருந்துகிறாள்.... அவளை மன்னிக்கும்படி கண்களால் கேட்டுக் கொள்கிறாள். ‘அய்யோ... அத்தான் ஒங்கள் மனதைப் புண்படுத்தி விட்டேனே’ என்று சொல்லாமல் சொல்கிறாளாக்கும்.

சீனிவாசனுக்கு, மகிழ்ச்சி மட்டற்றுப் போனது... பரோபகாரி என்று, காஞ்சனா முன் தன்னைக் காட்டிக் கொள்வதற்காக, பைக்குள் இருந்த ஐந்து ரூபாய் நோட்டை எடுத்து, அந்த ரயில் பயலிடம் நீட்டினான். பயல், அதை வாங்கிக் கொள்ள மறுப்பவன் போல், பலராமனைப் பார்த்தபோது, அதே அந்த காஞ்சனா, “வாங்கிக்கோடா” என்றாள். பயலும், அந்த ரூபாய் நோட்டை வாங்கிக்கொண்டான். ஒருவேளை, மலேயா அம்மாவுக்குத் தேவைப் படலாம். ‘அம்மாவுக்கு எவ்வளவு சேர்க்க முடியுமோ, அவ்வளவு சேர்க்கணும்.’

சீனிவாசன், காஞ்சனாவை நன்றியுடன் பார்க்கப் பார்க்க, அவனுள் உற்சாகம் ஏற்பட்டுவிட்டது. காதல் வயப்பட்டு விட்டான்... ஆமாம்... காதல் வயப்பட்டு விட்டான்... அவன் உற்சாக உந்தலில் நகைச்சுவையாகச் சொல்வதுபோல் சொன்னான்.

“எனக்கென்னமோ... இந்த சர்தார்ஜி மேல சந்தேகமாய் இருக்குது... ஏதாவது கண்ணிவெடி வைத்தாலும் வைப்பான் ஓசைப்படாமல் வச்சுட்டு... ஓடிடப் போறான்.. நாமதான், கை வேறு, கால் வேறாய் ஆகப் போறோம்... யாருக்குமே பயம் இல்லியா...?”

காஞ்சனா பயந்து போனவள்போல், கல்யாணியைக் கட்டிப் பிடித்தாள். கல்யாணி, சீனிவாசனைப் பார்த்தபடியே, "சீ என்ன ஜென்மமோ" என்று சொன்னபடியே அவளைப் பிடித்துத் தள்ளினாள். இதற்குள் மெக்கானிக் நாராயணனும் சீனிவாசனை நேரடியாகவே திட்டப்போனான். அதற்குள் ஒரு முரடன் உள்ளே வந்தான். அங்கிருந்த எல்லோரையும் ஏற இறங்கப் பார்த்தான். பிறகு, அந்த ரயில் பயலை, தன்னை நோக்கிப் பிடித்துக் கொண்டு முதுகில் பட்டென்று அடித்தான். தமிழ்ச்செல்வி பயந்துவிட்டாள். 'யாரது... தன்னைத் துரத்தி வந்தவர்களில் ஒருத்தனோ...?'



அந்த ரயில், இப்போது இருட்டை உதறிவிட்டு, வெளிச்சத்திற்கு வந்தது.

இரண்டு பக்கமும் சின்னச் சின்ன வெளிச்சங்கள் ஏற்பட்டு அவை, பெரிதாயின. இரு புறங்களிலும் கட்டிடங்கள், வெளிச்சம் போட்டுக்காட்டின. சரவிளக்குகளாலோ அல்லது மின்சார விளக்குகளாலோ கோபுரம் ஒன்று தொலைவில் தெரிந்தது. வெளியே வாகனங்களின் நடமாட்டங்கள்... பெட்டிக்குள்ளே மனிதப் பேச்சுக்கள். மயங்கிக் கிடந்த அரக்கன் மறுபடி சுயவுணர்வு பெற்றது போன்ற கலகலப்பு... ரயில், குலுங்கியபடியே மெள்ளச் சென்றது. எவ்வொரு குலுக்களுக்கும் ஒரு டங்க் சத்தம். "வந்தேன் பார் வந்தேன் பார்" என்று சொல்வது மாதிரியான ஓசை.

ரயில் பயல் முதுகில், அந்த முரடன் போட்ட அடிச்சத்தம், ரயில் சத்தத்தையும் மீறி வலித்தது. அந்த முரடனுக்கு முப்பது வயதிருக்கும். சட்டை மாதிரியான பனியன் போட்டிருந்தான். இடுப்பிலே பனியனுக்கு மேலே சேர்த்துக் கட்டிய லுங்கி. அதற்கு மேல் ஒரு சென்டி மீட்டர் அகலமுள்ள பெல்ட்.

தமிழ்ச் செல்விக்கு லேசான திருப்தி. வந்தவன், அவ்ளைக் கொல்ல வந்த முரடர் குழுவைச் சேர்ந்தவன் அல்ல. இவன் பெல்ட் போட்டிருக்கான். எதற்காக இந்தச் சின்னப் பயலை இப்படிப் போட்டு அடிக்கிறான். இவர்கள் ஏன் பேசாமல் இருக்கிறார்கள்? தமிழ்ச்செல்வி, தாறுமாறாக எழுந்தாள். அடித்த தடியனுக்கு முதுகைக் காட்டிக் கொண்டிருந்த ரயில் பயலை, தன் பக்கம்

இழுத்துக்கொண்டு, அவனைக் கோபமாகப் பார்த்தாள். அவனும், அவளை முறைத்துப் பார்த்தான். உடனே பலராமன் அவளுக்கு விளக்கினான்.

“இந்தப் பயலும் எங்களோட தோஸ்த்துதான். சமையலறையில்... குக்காய்... அதுதான் சமையல்காரனாய் இருக்கான்... இந்தப் பயல்... நைட்ல சாப்பிடப் போகாமல் போக்குக் காட்டுவான்... பலார்ஷா ஸ்டேஷன் வாரதுக்கு முன்னாடியே இவனுக்கு சாப்பாடு போட்டாகணும்... அப்புறம் கிடைக்காது... இந்தப் பயல் அங்கே போகல... அதனால்தான், இந்த அண்ணாமலைப் பயல் இங்கே வந்து இவனை இழுத்துட்டுப் போறதுக்கு வந்திருக்கான். டேய் பயலே... ஒப்பன் வந்து அடிக்கிற அளவுக்கா போகாமல் இருக்கது...? போடா... போய்ச் சாப்பிடு....”

தமிழ்ச்செல்விக்கு, அப்படியும் மனசு கேட்கவில்லை.

“இருந்தாலும் இப்படியா அடிக்கது...?”

அண்ணாமலை, அவளைச் சிறிது குற்றவுணர்வோடுதான் பார்த்தான். அவள் முகத்தில் கல்மிஷம் இல்லாததைப் புரிந்து கொண்டவன்போல் விளக்கினான்... உள்ளங்கையைக் குவித்தபடி விளக்கினான்....

“இப்படி கையை குவிச்சுக்கிட்டு அடித்தால் மத்தாப்பு வெடி மாதிரி சத்தந்தான் பெரிசாய் கேட்குமே தவிர வலிக்காது. ஏண்டா சோம்பேறி... அப்பா அடிச்சது ஒனக்கு வலிச்சுதா?”

ரயில் பயல், இல்லையென்று கையாட்டினான். பிறகு, தமிழ்ச் செல்வியைச் சுட்டிக்காட்டி, வாய்வரை கையைக் கொண்டு போனான். பிறகு “அம்... அம்...” என்றான். அதாவது அவளுக்குச் சாப்பாடு கொடுத்தால் போதும்... தனக்கு வேண்டாம் என்று சைகை செய்தான்... உடனே அண்ணாமலை, அவனை ஆச்சரியமாகப் பார்த்தான். பார்த்தவனுக்கு நவாப்ஜான் விளக்கினான்.

“இந்த தங்கச்சியோட கதை... ஒன் சிஸ்டரோட கதையைவிட மோசமான கதை... வாழ்ந்து கெட்ட குடும்பத்தைச் சேர்ந்தவங்க.... நாலைஞ்சு ரௌடிப் பசங்க... இதை தீர்த்துக் கட்டுறதுக்காக இந்த ரயிலுக்குள்ளேயே இருக்காங்க... இந்தப் பொண்ணைக் காப்பாற்ற வேண்டியது நம்மோட பொறுப்பு... அதனால் சமையல் பெட்டிக்குக் கூட்டிப்போ... பாவம் சாப்பிட்டு இருக்காது... சாப்பிடச் சொல்லு... நைட்ல அங்கேயே தூங்கட்டும்... அதுதான் பாதுகாப்பு...”

பலராமன், நவாப்ஜானை அதட்டினான்.

“அடேய் சோம்பேறி... நாமெல்லாம் பொம்மனாட்டி... இந்த அண்ணாமலைக் கயிதே மட்டும் ஆம்புள்ளையா.. நீயும் நானும்... அட

ஒன்னை விடு, நான் உயிரோட இருக்கது வரைக்கும் தங்கச்சியை, எந்தப் பயலாலும் நெருங்க முடியுமா? தொடை நடுங்கிப் பயல்டா நீ..."

"ஒனக்கு மூளையே கிடையாதுன்னு இந்த நாராயணன் சொல்றது சரிதாண்டா... சமையல் பெட்டி பாதுகாப்பான இடம்.... உள்ளே தாழ்ப்பாள் போட்டுக்கலாம்... தங்கச்சியை இங்கே தங்க வச்சால் நாம் தூங்காமல் ஷிப்ட்ல காவல் காக்கலாம்தான்... லேசாய் கண்ணை மூடும்போது... ஏதாவது நடந்துட்டால்... அட அதைவிடு... இந்த பலார்ஷோ ஸ்டேஷன்ல இறங்கி வழக்கம்போல் 'போடப்' போறோம்... இவங்களை விட்டுட்டு நம்மாலே வெளில போகத்தான் மனசு வருமா..."

"அட போடா... இன்னிக்கு மட்டும் "பூடாமல்" இருக்கது? செத்தா பூடுவோம்...?"

"ஒன்கிட்டே எவண்டா பேசுவான்...?"

"இதே கேள்வியை நானும் கேட்டதாய் வச்சுக்கோடா..."

மெக்கானிக் நாராயணன் குறுக்கிட்டான்.

"என்னடா... சின்னப் பசங்க மாதிரி சண்டை போடுறீங்க...? தமிழ்ச்செல்வி, சமையல் அறைக்குப் போறதுதான் சரி. நாம் என்னதான் காவல் காத்தாலும் அவங்களுக்குப் பயம் போகாது.... சமையல் அறை, வீடு மாதிரி... இங்கே ஸ்குவாட்காரன் அதுதான் டிக்கட் பரிசோதனைக்காரங்க திடீர் சோதனை போட்டுட்டால் வம்பு."

தமிழ்ச்செல்வி, தன் பொருட்டு எழுந்த வாதப்பிரதிவாதங்களை, மெய்யுருகக் கேட்டுக் கொண்டிருந்தாள். அவர்களுக்கு, தான் சுமையாகி விட்டோமே என்பதுபோல் மோவாயை நீட்டி, உதடுகளைக் குவித்து துணுக்குற்று நின்றாள். அவள் சந்தேகத்தைக் கலைப்பது போல், அண்ணாமலை கர்ஜித்தான்.

"புறப்படலாமா தங்கச்சி... ஏம்மா. அப்படி பார்க்கே? நீயும் எனக்குத் தங்கச்சிதான். எனக்கு ரெண்டு பேரு... ஒன்றுகூடப் பிறந்த தங்கச்சி... நீ கூடப் பிறக்காத தங்கச்சி... வீட்ல ஒரேயடியாய் வந்து உட்கார்ந்துட்ட தங்கச்சியும் ஒன்முகச்சாயலில்தான்... இருப்பாள்... புறப்படும்மா... நைட்ல அங்கேயே தங்கிக்கலாம்... ஏம்மா என்மேல சந்தேகமா...?"

தமிழ்ச்செல்வி, "அண்" என்று சொல்லிவிட்டு அந்த முடிக்க முடியாமல் அழுதுவிட்டாள். பிறகு தட்டுத் தடுமாறி, "ஒங்களைச் சந்தேகப்பட்டால் என் கண்ணு அழுகிடுண்ணா" என்று தழுதழுத்த குரலில் சொன்னபோது, அண்ணாமலை ஆடிப்போய் விட்டான்.

அவள் முகத்தில் தோன்றிய அன்பெனும் ஜோதியில் அண்ணனாகக் கட்டுண்டான். அந்த கண்களில் தோன்றிய நம்பிக்கைக்கு, நடுநாயகனாகக் காட்சி காட்டினான். இதற்குள், ரயில் பயல், ஒரு கையால் அண்ணாமலையையும், இன்னொரு கையால் தமிழ்ச் செல்வியையும் இழுத்தான். பிறகு, அவர்களை விட்டுவிட்டு, தனது வலது கையை எடுத்து, வயிற்றில் இடித்து அதே கையை வாய்க்குக் கொண்டு போனான். பயலுக்கும் பசியாம். மெக்கானிக் நாராயணன், தமிழ்ச்செல்விக்கு விளக்கம் அளித்தான்.

"இந்தப் பயலுக்குப் பசிக்கல... இவன் பசியில்லாத பயல்... காரணம் இந்தப் பூஞ்சை உடம்பால ஒரு கப் பாலைக்கூடத் தாங்கிக்க முடியாது... நீ சாப்பிடணும் என்கிறதுக்காக இல்லாத பசியை வரவழைக்கான்."

தமிழ்ச்செல்விக்கு, மீண்டும் அழுகை வரும் போலிந்தது... எப்படியோ அதை அடக்கிக் கொண்டாள். 'அம்... அம்.." என்று தன்னைப் பார்த்துக் கூவிய அந்தப் பயலை, தன் உடம்போடு உடம்பாகச் சேர்த்துக்கொண்டாள். அவனுக்குள் அவளும், அவளுக்குள் அவனும் அடங்கிப் போனது மாதிரியான அன்புப் பிரவாகம். அந்த இருவரும் அண்ணாமலை முன் நடக்க, பின் நடந்தார்கள். உடனே, பலராமனும், நவாப்ஜானும், பெட்டிக்கு வெளியே வந்து அவளை யாரும் பின்பற்றுகிறார்களோ என்று அங்கும் இங்குமாய்ப் பார்த்தார்கள். சிறிது நேரம் வீறாப்போடு நின்றார்கள். பிறகு, இருக்கையில் வந்து உட்கார்ந்தார்கள்.



## 13

அந்த ரயில், குதியும் கும்மாளமுமாய் பலார்ஷா என்ற ரயில் நிலையத்தில் நின்றது.

மராட்டிய மண்ணைச் சேர்ந்த இடம் அது. சற்று தொலைவில் ரயில் வரும்போதே, ஆகாய நட்சத்திரங்கள் அனைத்தும் வெள்ளைப் பிரகாசம் குறையாமல், தரை இறங்கி, விட்டனவோ என்பது மாதிரியான மின்சார விளக்குகள், ரயிலை வரவேற்றன. ரயிலே, ஆகாய கூரைக்குள் போய் விட்டதோ என்பது மாதிரி, அந்த ரயில் நிலைய மேல் வட்டத்தில் ஜோதிச் சிதறல்கள். ஆனாலும் ரயில், நிர்வாகத்திற்குள் அடைபட்டதும், அந்த நிலையம் தவிர,

இந்த இடங்களில் வெளிச்சம் இல்லை... பலார்ஷா நகரம், நகர்ந்து போய்விட்டது மாதிரியான இருட்டு.

ரயில் நின்றதும், நவாப்ஜானும், பலராமனும் எழுந்தார்கள் மெக்கானிக் நாராயணனைப் பார்த்து "வாறியா... வாத்தியாரே... லேசா பூடலாம்." என்றார்கள். உடனே அந்த மெக்கானிக், ஸ்பேனர்களோடு எழுந்தான். ரயிலில் நட்டுக்களைச் சரிபார்க்க வேண்டும்... "போகுறதுக்கு" ஏது நேரம்? அவர்களைப் பார்த்து, "நட்டு கழலாமல் வாங்கோடா" என்றார் சங்கேத மொழியில்.

பலராமனும், நவாப்ஜானும் நடக்கப் போனார்கள். உடனே காஞ்சனா, கல்யாணியிடம் ஏதோ பேசினாள். பிறகு, பலராமனுக்கு முன்னால் போய் நின்று பேசினாள்.

"தமிழ்ச்செல்வி கதையைக் கேட்ட வேகத்துல சாப்பாட்டுக்கு ஆர்டர் கொடுக்கல... எங்களுக்கும் ஏதாவது வாங்கிட்டு வாங்கோ."

"என்னெல்லாம் வேணும்...? இந்த ஊர்ல பிரியாணி பிரசித்தி."

"எனக்குப் பிரியாணி.... இவளுக்கு தயிர்சாதம்... முடியுமானால்... ஒரு ஸ்பெஷல் மசாலா தோசை... கொஞ்சம் ஆப்பிள்... இல்லாட்டி ஆரஞ்ச்."

"சரி வாங்கிட்டு வாறோம்... வேற எதும் வேணுமா...?"

"இதுவே அதிகம்... என்னங்க பணம் வாங்காமல் போறீங்க...?"

"ஒங்க பணம்தான் எங்ககிட்டே இருக்குதே... ஒங்களை நாக்பூரில் ரயிலேற்றிவிட வந்தாரே அவர் கொடுத்த பணம்..."

"அய்யோ அது பெர்த்துக்காக கொடுத்த பணமாக்கும். நீங்க உங்களோட படுக்கை இடத்தை, எங்களுக்கு கொடுத்ததுக்காக தந்த ரூபாயாக்கும்."

"ஆமாம்மா... லஞ்சமாத்தான் வாங்குறோம்... எல்லார்கிட்டேயும் வாங்குவது மாதிரி... எங்க வசதிகளை உங்களுக்குத் திருட்டுத் தனமாய் விற்றது நெசந்தான். ஆனால், இப்போ நாம் அண்ணன் தங்கையாய் பழகிட்டோம். ஒங்ககிட்டே லஞ்சம் வாங்குறது எங்க சிஸ்டருங்ககிட்டே லஞ்சம் வாங்குறது மாதிரி..."

"நல்லா இருக்குதே நியாயம்... அது வேறு... இது வேறு... இந்தாங்க ரூபாய்... பணம் வாங்காமல் எதுவும் வாங்கப்படாது..."

"சரி... வாங்கிக்கிறேன். அப்படின்னால் நீங்க ரெண்டு பேரும் எங்களை ஒங்களோட பிரதரா ஏத்துக்கலன்னு அர்த்தம்... அப்படின்னா கொடுங்கோ...."

"இது என்னடா வம்பாச் போச்சு..."

"அடேய் சாய்பு... நாம் தோட்டிங்க... அவங்க பிராமணங்க... எப்படிடா அண்ணன் தங்கை உறவு வரும்... நமக்கு வரும். அவங்களுக்கு அது வரணுமுன்னு எப்படிடா நினைக்கலாம்?"

கல்யாணி திடுக்கிட்டு, தோழி காஞ்சனாவை அதட்டினாள்.

"இங்கே வாடி... பணத்தோட வாடி... அவங்க நம்மோட பிரதர்ஸ் மாதிரி... அவங்க வாங்கித் தந்தால் தப்பில்ல..."

நவாப்ஜானும், பலராமனும் புறப்பட்டார்கள். சீனிவாசனுக்கு லேசான வருத்தம். காஞ்சனா, தன்னை ஏதாவது வாங்கிக் கொண்டு வரச் சொல்லவில்லையே என்று. அதேசமயம், அப்படி வாங்கப் போய் தனக்கு 'பிரதர்' பட்டம் கிடைக்காமல் போன மகிழ்ச்சி... அவனுக்கு அங்கிருந்து போக 'மனமில்லை. அதேசமயம், வயிறு கேட்கவில்லை. ஆகையால், இடத்திலிருந்து ஓடி, பலராமனை வழிமறித்து, "எனக்கும் ஏதாவது வாங்கிட்டு வாங்க" என்றான்.

உடனே நவாப்ஜான், "நீயும் பொம்மனாட்டியாய்யா...?" என்றான். பலராமனுக்கு, நவாப்ஜான் அப்படிப் பேசியது கேட்க வில்லை. அவனை அதட்டியபடியே, "மடையா... அவரை அப்படியா கேட்கிறது... வாறியா ஸாரே... சாராயம் பூட்டுட்டு வர்லாம்... யோசிக்காதே... ஒனக்கு ஜின் கிடைக்கும். இல்லாட்டி விஸ்கி கிடைக்கும்' என்றான். சீனிவாசன் அலறியடித்தபடி பெட்டிக்குள் வந்தான். அந்தப் பெண்களிடம் "சாராயம் குடிக்கப் போறாங்க.... குடிகாரங்களைப் போய் வாங்கிட்டு வரச் சொல்லிட்டிகளே... அவங்க வாங்கிட்டு வாறதுல... சாராய வாடை அடிக்கப் போகுது பாருங்க..." என்று பத்துப் பதினைந்து தடவை சொல்லிவிட்டான். அந்தப் பெண்கள், முகம் சுளித்தார்கள். சீனிவாசன், மனதில் வெற்றிப் பெருமிதம். குடிக்காத வாலிபன் என்று தன்னைக் காட்டிக் கொண்டதில் பெருமகிழ்ச்சி.

ரயிலுக்குக் கீழே இரும்புச் சத்தம். மெக்கானிக்குகள், சக்கரங்களைத் தட்டிப் பார்த்து சரிபார்க்கும் சத்தம்... டீ, காப்பி சத்தங்கள்... பிறகு சக்கரச் சத்தம் தவிர எல்லாம் அடங்கின. ரயில் புறப்படவில்லை. அரைமணி நேரத்தில் புறப்பட வேண்டிய ரயில், முக்கால் மணி நேரமாகியும் புறப்படவில்லை. சற்று நேரத்திற்கு முன்பு, உள்ளே வந்து பெட்டிக்குள் உட்கார்ந்த நாராயணன் பெட்டியின் வாசலில் போய் நின்றான்.

இதற்குள், நவாப்ஜானும் பலராமனும் லேசாய்த் தள்ளாடியே நடந்து வந்தார்கள். இருக்கைகளில் பொத்தென்று விழுந்தார்கள்.

பிறகு ஒருவரை ஒருவர் நிதானப்படுத்த முயற்சி செய்தார்கள். இதற்குள் மெக்கானிக் நாராயணன், அங்கே வந்து அவர்களை அதட்டினான்.

"ஏண்டா இவ்வளவு நேரம் லேட்டு... ஒங்களுக்காக, ரயிலை, மணியடித்து கால்மணி நேரமாகியும் நிறுத்தி வச்சேன். நம்ம பசங்களை நீங்க கண்ணுல படுறது வரைக்கும் சக்கரங்களை தட்டிப் பார்க்கச் சொன்னேன்... ஒங்க மனசல என்னடா நினைக்கிங்க... அடுத்த வாட்டி இப்படி செய்திங்க... நீங்க ஏறுறதுக்கு ரயில் நிற்காது..."

"மன்னிச்சிடு நாராயணா... நீ நெசமாவே ஸ்ரீமான் நாராயணன்தான்.... இல்லாட்டி பூலோகத்தை இல்ல... இல்ல... இந்த ரயில நிறுத்தி வைக்க முடியுமா...? மன்னிச்சிடு... சிஸ்டருங்களுக்கு வாங்கிட்டு வாரதுல லேட்டாயிட்டு.... சிஸ்டருங்கோ இந்தாருங்கோ வாங்கிக்கங்கோ... இதுல எது பிரியாணி சிஸ்டரு? எது தயிர்சாதம் சிஸ்டர்?"

நவாப்ஜான், அதட்டினான்.

"அடேய்... பல்ராமா... நீயே உன்னைக் காட்டிக் கொடுக்காதேடா... கம்மனாட்டி."

ஆனாலும், பலராமன் 'உளறலாகவும் குழறலாகவும் உடலாட்டியும் தன்னைக் காட்டிக் கொண்டிருந்தான்.... நவாப்ஜானால், நடமாட முடியவில்லை. தள்ளாடி, அல்லாடினான். உடனே நாராயணன், பலராமன் கையில் இருந்த பொட்டலங்களை எடுத்து, அந்தப் பெண்களிடம் நீட்டினான். அப்போது சீனிவாசன், காஞ்சனாவைப் பார்த்து கண் சிமிட்டினான்.... சாராயம் பட்ட சாப்பாடு... அதைச் சாப்பிடுவது சாராயம் சாப்பிடுவது மாதிரி என்பது போல் கண் சிமிட்டினான். காஞ்சனா, கல்யாணியைப் பார்த்தாள்... கல்யாணி, சீனிவாசனைப் பார்த்தாள்... பிறகு இரண்டு பெண்களும் அந்தப் பொட்டலங்களை ஒதுக்கி வைத்துவிட்டு, படுப்பதற்கு ஆயத்தம் செய்தார்கள்.

பலராமனும், நவாப்ஜானும், கீழே கம்பளி விரித்துப் படுத்துக் கொண்டார்கள். நாராயணன், ஒரு பெர்த்தில் படுத்துக் கொண்டான். சர்தார்ஜி, தெலுங்கம்மா, டில்லிப் பெண்கள், சீனிவாசன் - ஆக எல்லோரும் படுத்துக் கொண்டார்கள்... ரயில் இரவைக் கிழித்து தோள்தட்டிச் சென்றது. ரயில் தொட்டிலில் எல்லோரும் தூங்கி விட்டார்கள். திடீரென்று காஞ்சனா கத்தினாள். 'பொறுக்கிப் பயல்கள்... புறம்போக்குப் பயல்கள்... காட்டு மிராண்டிப் பயல்கள்... சீ இவங்கெல்லாம் மனுஷாளா... பன்றிப் பயல்கள்...'

கீழே படுத்திருந்த பலராமனை, காஞ்சனாவின் திட்டுக்கள் எழுப்பிவிட்டன. அவன் கோபத்தோடு எழப் போனான். 'என்னதான் நினைச்சுட்டாள்? ரெண்டுல ஒன்றைப் பார்த்துடலாம்... திருட்டுக் கழுத... பேசுறான் பாரு... குடிச்சுட்டுப் படுக்கிறவனை திட்டுறாள் பாரு... குடிகாரன் என்கிறதைக் காட்டுறேன் பாரு...'



அந்த ரயில், சந்திரபூர் ரயில் நிலையத்தில் சிறிது நேரம் நின்று விட்டு, சக்கரங்கள் இருளின் ஓசையாக, பயணிகள், தொட்டில் குழந்தைகளாக தான் மட்டுமே தூங்காமலே ஓடியது.

அப்படி ஓடிய ரயில், ஒரு இடத்தில் நின்றபோது, தாலாட்டு சுகம் கெட்ட குழந்தைபோல் பலர் தூக்கம் கலைந்தார்கள். அந்த ரயில் நின்ற ராமகுண்டம், ஆந்திராவிற்கு உரியது... அந்த மாநிலத்திற்கே இயல்பான காரத்தை எல்லோருமே சூடாக உணர்ந்தார்கள். இந்தியாவிலேயே மிக அதிக அளவிற்கு, அதாவது 40 டிகிரி வெயிலைக் கொண்டது, இந்த ராமகுண்டம். ஆகையால் இதைச் சிலர் "அனல் குண்டம்" என்றும் கூறுவதுண்டு. பூமியே, எரிசட்டியானது போன்ற சூடு... மின்விசிறிகள், அக்கினிக் காற்றை உமிழ்ந்து கொண்டிருந்தன.

அந்தச் சூட்டைவிட, காஞ்சனாவின் சொல்சூட்டில் கிளர்ந்தெழுந்த பலராமனை, நவாப்ஜான் அமுக்கிப்பிடித்தான். ஆனால் காஞ்சனாவோ, சென்னை நகர மண்வாசனையை ஊதிக் கொண்டிருந்தாள். "புறம்போக்குப் பயல்கள்... பொறுக்கிகள்... கஸ்மாலங்கள்... கண்றாவிகள்..."

பலராமன், மீண்டும் எழப்போனான். அவன் தலையைத் தரையோடு போட்டு பிடித்தபடியே, நவாப்ஜான் தோழனின் காதில் கிசுகிசுத்தான். "பேசாமல் தூங்குடா டோய்... எப்போ அவளை நாம் சிஸ்டர்னு சொன்னோமோ.... அப்பவோ, நாம் அண்ணனா யிட்டோம். அவள் தங்கச்சியாகாட்டியும் பரவாயில்லை.... நாம் அண்ணனாவே நடந்துக்குவோம்!" என்றான். பலராமன், அடங்கிப் படுத்தான். இப்போது கல்யாணி, திட்டத் துவங்கினாள். சென்னைத் தமிழிற்குப் பதிலாகத் தஞ்சைத் தமிழ்... 'பண்பில்லாதவங்க... பழகத் தெரியாதவங்க... அக்காள்... தங்கையோடு பிறக்காதவங்க... அடுத்துக் கெடுக்கிற துரோகிங்க....'

இப்போது நவாப்ஜான் கோபப்பட்டு எழுந்திருக்கப் போனான். கல்யாணியின் வசவு வார்த்தைகள், அவன் போட்ட சாராயத்திற்குப் போதையானது. "விடுடா மச்சான்... பார்த்திட வேண்டியதுதான்" என்று எழுந்திருக்கப் போனவனை, இப்போது பலராமனை அமுக்குப்பிடி போட்டுப் பிடித்தான். கீழே சண்டை போடுவது போல் புரண்டு கொண்டிருந்தவர்களைப் பார்த்த மெக்கானிக் நாராயணன், "வெளில வாங்கடா' என்று சொன்னபடியே எழுந்தான். லைட்டைப் போட்டான். சுற்றுமுற்றும் பார்த்தான். சர்தார்ஜி சரிந்து விட்டார். சீனிவாசன் குப்புறப்படுத்துக் கொண்டு கிடந்தான். நவாப்பும், பலராமனும், நாராயணனிடம் அந்தப் பெண்களைச் சுட்டிக்காட்டி சைகை செய்தார்கள். உடனே நாராயணன் அந்த இருவரையும் வெளியே வரும்படி சைகை செய்தான். அவர்கள் முன்னங்கையை ஊன்றி, உள்ளங்கையில் தலை வைத்து, அந்தப் பெண்களையே பார்த்தார்கள்.

அவர்களோ, விளக்குக் கூச்சத்தை மறைப்பதுபோல், கரங்களை கண்களில் மூடி, படுத்துக் கிடந்தார்கள். நாராயணன், நவாப்பின் கால்களையும், பலராமனின் காலையும், கைக்கு ஒன்றாகப் பிடித்து கிடாவை இழுப்பதுபோல் இழுத்தான். உடனே இருவரும் எழுந்தார்கள். பின்னர் அந்த மூவரும், ரயிலுக்கு வெளியே வந்தார்கள். பீடியைப் பற்ற வைக்கப்போன பலராமன் அந்த ராமகுண்ட அக்கினி நெடிக்கு அடிபணிந்து, பீடியைக் காதில் சொருகிக் கொண்டே கேட்டான்.

"இன்னா வார்த்தை கேட்டுட்டா... பார்த்தியா... வாத்தியாரே... பொறுக்கியாம்... புறம்போக்காம்... கேட்கக்கூடிய கேள்வியா இது...?"

"அவள் கேட்டதுல என்னடா தப்பு... நான் உங்களுக்கு எத்தன வாட்டி சொல்லியிருக்கேன்... குடிச்சிட்டு பப்ளிக்கா வரப் படாதுன்னு சொல்லிச் சொல்லி எனக்கு வாயே வலிச்சுப் போச்சு... கேட்டீங்களாடா... அவள்க முன்னால அண்ணங்களாய் ஒழுங்காய் நடந்தீங்க.. அவள்களும் தங்கச்சிகளாக நடந்தாங்க... அப்புறம் குடிகாரனாய் காட்டுனிங்க... அவளுக நீங்க ஏடாகோடமாய் நடந்துடப் படாதேன்னு எச்சரிக்கையாய் கத்தினாங்க. இது என்னடா தப்பு...?"

"என்னப்பா இது... ஒரு வாட்டியா...? ரெண்டு வாட்டியா...? எத்தன வாட்டி கேட்டுட்டாளுக...? பொறுக்கியாம்... புறம்போக்காம்... டேய் சாய்பு பையா விடுடா மச்சான்..."

"என்னடா செய்யப் போற...?"

"குடிக்கிறது தப்பா...? குடிச்சுட்டு ஒன் கையை பிடிச்சு இழுத்தோமா? காலைப் புடிச்சு இழுத்தோமான்னு அவளண்ட கேட்கப் போறேன்..."

"சரி... அப்படியே கேட்கேன்னு வச்சுக்கோ... அவளுகளும், பதிலுக்கு ஏதோ சொல்ல... அதுவே ரகளையாகி... ரயில்வே போலீஸ் வந்தால், ஆருக்குடா நஷ்டம்...? விவகாரமுன்னு வரும்போது, எல்லாப் பயல்களும், பொம்மனாட்டிக்குத்தான் சப்போர்ட் பண்ணுவாங்க. போலீஸ்காரன் நீங்க குடித்திருக்கீங்கன்னு ஒங்களைத்தான் கூட்டிப் போவான்... புரியுதுங்களாடா...?"

"புரியுது... புரியுது..."

"பேசாமல், வாயையும் கண்ணையும் மூடிட்டுப் படுங்கடா... காத்தால பார்த்துக்கலாம்."

"காத்தால அவளுகளைப் பார்த்துக்கிறேன்னு காரண்டி கொடு... படுத்துக்கிறோம்."

"நீங்களும் பேசாமப் படுப்போமுன்னு காரண்டி கொடுங்கோ..."

"கொடுத்துட்டோம்... கொடுத்துட்டோம்.... கரண்டி கொடுத்துட்டோம்."

"சரியான குடிகாரப் பயல்கடா... ஏறுங்கடா ரயிலுல..."

நாராயணன் தள்ளாடிய இருவரையும் ரயிலில் ஏற்றி விட்டான்.... 'மனசு கேட்க மாட்டேங்கடா மச்சான்' என்ற பலராமனும், 'கேட்டாளே ஒரு கேள்வி. கேட்கக்கூடிய கேள்வியா அது?' என்று நவாப்ஜானும், கிளிப்பிள்ளை மாதிரி சொன்னதையே சொன்னபடி நின்றார்கள். நாராயணன், அவர்களை, பெட்டிக்குள் கொண்டு செல்லாமல், வாசலோரம், வால்பேஷின் பக்கத்தில் படுக்க வைத்தான்... பெட்டிக்குள் வந்து இரண்டு தலையணை கொண்டு போய், அவர்களது தலையைத் தூக்கி, அவற்றில் போட்டான். அவர்களையே, சிறிது நேரம், பார்த்துச் சிரித்துவிட்டு, பெட்டிக்குள் வந்து படுத்துக் கொண்டான்.

ரயில் மூச்சுவிட்டது; பிறகு சத்தம் போட்டது; அப்புறம் ஓடியது.

பலராமன், உளறிக் கொட்டியபடியே தூங்கினான்.

"பிரியாணி வாங்கிக் கொடுத்த நானாம்மே பொறுக்கி...? தயிர் சாதத்துக்கு ஊறுகாய் நிறைய போடுன்னு கடைக்காரன்கிட்டே, சண்டைக்குப் போன இந்த நவாப் பயலாம்மே பொறுக்கி...? நாங்க இல்ல, கண்ணு நீதான். எங்களைப் பொம்புள பொறுக்கின்னு சொன்ன நீ, பெர்த் கொடுத்த எங்களை டெத்தாகிட்டியே... சிஸ்டர்களே... சிஸ்டர்களே... சிஸ்டம் இல்லாத சிஸ்டர்களே..."

நவாப்ஜானுக்கு, நல்ல தூக்கம். அதைக் கெடுத்துக் கொண்டு இருந்த பலராமனின் வாய்மேல் கைபோட்டான். அப்படியும் அவன்

உளறிக் கொட்டியபோது, நவாப்ஜான் நண்பனின் உதடுகளை அசையவிடாமல் பிடித்துக் கொண்டான்.

அந்த ரயிலும் தூக்கக் கலக்கத்தோடு ஓடுவது போலிருந்தது... நள்ளிரவில் காசிபேட்டில் குறிப்பிட்ட நேரத்திற்குமேல் அரைமணி நேரமோ, ஒரு மணி நேரமோ அதிகமாக நின்றது... அந்த ரயில் நின்ற வடபகுதிக்களில் அதிகமாக ஒலித்த இந்தி சத்தம் குறைவாகவும், குறைவாக ஒலித்த தெலுங்குச் சத்தம் அதிகமாகவும் இப்போது ஒலித்தன. ஆங்காங்கே பயணிகளின் இருமல் சத்தமும், கொட்டாவிச் சத்தமும், பிளாட்பாரச் சத்தத்துடன் கலந்தன. சிறிது நேரத்தில், ரயில் பின்னோக்கி ஓடுவது போல் ஓடியது... எல்லோருமே தூங்கிப் போனார்கள்.

காலையில் ஆறுமணி அளவில், நவாப்ஜானும், பலராமனும் கண் விழிக்கவும், அந்த ரயில் ஏதோ ஒரு ரயில் நிலையத்தில் நிற்கவும் சரியாக இருந்தது... அவர்கள் இருவரும் முகம் அலம்பிவிட்டு, எஸ். 11க்குள் தர்ம சங்கடத்துடன் வந்தார்கள். அந்த டில்லிப் பெண்களைக் கோபத்தோடு பார்த்தார்கள். திடீரென்று பலராமன் கத்தினான்.

"என்னடா ரயில்வே ஸ்டேஷன் புச்சா தோணுது...?. இன்னா ஸ்டேஷன்யா இது...? ரெய்ச்சூர் ஸ்டேஷன்னு போர்ட்ல போட்டிருக்கு... என்னாய்யா சமாச்சாரம்..?."

அந்தப் பக்கமாய் வந்த டிக்கெட் பரிசோதகர் விளக்கினார்.

"சரியான தூங்குமூஞ்சுப் பசங்கடா நீங்க. ரயிலை காசிபேட்டில் இருந்து வேற பாதையில் விட்டுட்டாங்க. கூடுர் பக்கம் ஏதோ ஒரு ரயில் விபத்தாம். அதனால் விஜயவாடா பாதையில் ரயில் ஓடல... நல்லவேளையாய்... இந்த ரயிலை வாடி வழியாய் ரெய்ச்சூர் குண்டக்கல் வழியாய் சென்னைக்கு விடுறாங்க... மெட்ராஸ் போய்ச் சேர ராத்திரி ஒன்பது மணியாகும்."

விஜயவாடாவுக்கு டிக்கட் எடுத்திருந்த தெலுங்கம்மா எழுந்து நின்றே கத்தினாள். "விதவல்லாறா... புத்திலேதா மீக்கு.... கொஞ்சமுன்னு ஞான முண்டே.... ஈ ரயிலு எக்கடக்கி போதுன்னதே செப்பப்கூடாதா.... நேனு எட்ல விஜயவாடாக்கு போவாளி...? ஓ.... பகவான் துடா.... தேனு எட்ல விஜயவாடாக்கு போவேது.... ரயிலு ஆபீஸருல மீரு நரகானிக்கி போத்தாரு...."

டிக்கெட் பரிசோதகர், அந்த அம்மாவின் கையைப் பிடித்துச் சமாதானப்படுத்தினார். அந்தம்மாவை, ரயில் கடப்பாவிற்கு வந்ததும், அங்கிருந்து பஸ் மூலமாக விஜயவாடாவிற்கு அனுப்பி வைப்பதாக வாக்களித்தார். அந்தம்மா சமாதானப்படாமல்,

கைகளை நெறித்தாள். உடனே பலராமன் "ஒங்களை பத்திரமாய் வீட்டுக்கு அனுப்பிடுறோம்... கவலப்படாதீங்கம்மா... எத்தனையோ தறுதலைகளுக்கு உதவி செய்திருக்கோம்... ஒங்களுக்கு செய்ய மாட்டோமா" என்று சொன்னாலும், அந்தம்மா, "நேனு எட்ல விஜயவாடாக்கு போவாலி" என்று மாறி மாறிப் புலம்பிக் கொண்டிருந்தாள்.

அந்தப் பெட்டிக்குள், இன்னொரு புது மனிதர் இருந்தார். காசிப்பேட்டில் ஏறி, கூடுரில் இறங்கப் போகிறவர். அந்த ரெய்ச்சூரைப் பற்றி யாரும் கேளாமலே விளக்கம் கொடுத்தார்.

"இந்த ரெய்ச்சூர் ஒரு காலத்துல விஜயநகர சாம்ராஜ்யத்துல கொடி கட்டிப் பறந்தது. அதோ புகையாய் தெரியுது பாருங்க... அது அனல் மின்சார நிலையம்... இந்தப் பகுதியில் கிருஷ்ணாநதி ஓடுது... வெறுமையாய் ஓடுது... இந்த கன்னடத்துக்காரங்களுக்கு இந்த நதியைப் பயன்படுத்தி விவசாயம் செய்யத் தெரியலே... கேட்டால் உப்புக் கறிக்கிற நீரு... விவசாயத்துக்கு ஆகாதுன்னு சோம்பேறித் தனமாய் சொல்றாங்க... இதிலிருந்து ஐம்பது மைல் தொலைவில் ராகவேந்திரா சுவாமிகள் சமாதியடைந்த இடம் இருக்கு... துங்கபத்ரா ஆற்றுக்கரைமேல இருக்குது... தல்லி... அம்மா... மீரு... ஏமி பயப்பட ஒத்து. நேநு கடப்பாக்கு போந்து நான்னு.... அக்கட நின்டி நின்னு, விஜயவாடாக்கு பஸ்ஸு எக்கிஸ் தாலு..." என்று தமிழும் தெலுங்குமாய் ஐமாய்த்தார்.

எல்லோரும் அந்த மனிதரையே பார்த்தார்கள். நாற்பத்தைந்து வயது எண்ணெய்க்கறுப்பு மனிதர்... யார் கேட்கிறார்களோ இல்லையோ... அவராகவே பேசிக் கொண்டிருந்தார். இதற்குள் பலராமன், நவாப்ஜானின் காதைக் கடித்துவிட்டுப் பொதுப் படையாகப் பேசுவது போல், அந்தப் பெண்களுக்குக் கேட்கும்படிக் கத்தினான்.

''நாங்க யார் யாருக்கெல்லாம் எங்க இடங்களைக் கொடுத்தோமோ அதை இப்பவே காலி செய்திடணும்... ஏன்னா ஸ்கோட்காரன் வாரான். நாங்க சீட் கொடுத்தது தெரிஞ்சா எங்க வேலை போயிடும்... அதனால அல்லாரும்... இப்பவே இறங்கி ரிசர்வ் செய்யப்படாத பெட்டிக்குள்ளே ஏறிக்கணும்."

அந்த டில்லிப் பெண்கள், ஒருவரை ஒருவர் பார்த்துவிட்டு, பலராமனை ஆச்சரியத்தோடு பார்த்தார்கள். சீனிவாசனோ, தனது ஒற்றை இடத்தை அந்தப் பெண்களுக்கு விட்டுக் கொடுப்பவன் போல் எழுந்து நின்றான். பலராமன், நேரடியாகவே அந்தப் பெண்களிடம் இடத்தைக் காலி செய்யுங்கள் என்று சொல்லப்

போனபோது, அந்த ரயில் பயலும், சமையல்கார அண்ணாமலையும், தமிழ்ச்செல்வியும் வந்தார்கள்... தமிழ்ச்செல்வி, தெலுங்கம்மா பக்கத்தில் உட்கார்ந்தாள். உடனே அந்தம்மா "ரயிலு ஆபீஸர்லு அந்தகு நரகானிக்கு போவுதுரு' என்று கத்தினாள்... கத்திக் கொண்டே இருந்தாள்... அண்ணாமலை தனது தோழர்களிடம் பேசினான்.

"இன்னிக்கு தமிழ்ச்செல்வி தங்கச்சிதான்... எல்லா பாத்திரங்களையும் கழுவிச்சு..."

"அறிவுகெட்ட மடையா... அதுகிட்டே ஏண்டா வேலை வாங்கினே...?"

"நான் எவ்வளவோ சொல்லிப் பார்த்தேண்டா... இது கேட்கல... இந்தப் பயல்கூடத் தடுத்துப் பார்த்தான். அது, பாத்திரம் கழுவறதைத் தடுக்கும்படி என்னை கோபமாய் அடித்தான். ஆனால் தமிழ்ச்செல்வி, தங்கச்சி சாப்பிட்ட சோற்றுல பாதியளவுக்காவது வேலை பார்க்காண்டாமா"ன்னு சொல்லிச் சிரிக்குது... ஆமா... ரெய்ச்சூர் இருக்கது ஆந்திரத்திலேயா அல்லது கர்நாடகத்துலயா?"

எண்ணெய் கறுப்பு ஜிப்பாக்காரர், முந்திரிக் கொட்டையானார்.

"இந்த ரயில்வே நிலையத்துல சாக்கடையும் பன்றிகளும் இல்லாததில் இருந்து இது ஆந்திரத்தில் இல்லன்னு அறியப் படணும்..."

"ஸாருக்கு எந்த ஊரு?"

"பூர்வீகம் தமிழ்நாடு... கர்நாடகாவுல பெங்களூர்ல வாசம்... இப்போ கடப்பாவுல பிஸினஸ்...."

"அப்போ நீங்க அசல் திராவிடர்தான்."

தமிழ்ச்செல்வியின் கேள்வியையும், கடைசிக் கருத்தையும் எல்லோரும் ரசித்துச் சிரித்தார்கள். பலராமன், அந்த டில்லிப் பெண்களைக் காலி செய்யும்படிச் சொல்லப்போனான். அது தமிழ்ச்செல்விக்கும் பொருந்தும் என்று நினைத்து, பிறகு சும்மா இருந்தான்.

அந்த ரயில் கார்டுகளைக் கடந்து, பகல் பன்னிரண்டு மணியளவில் கடப்பாவில் வந்து நின்றது. எண்ணெய்க் கறுப்பர் அந்த தெலுங்குக் கிழவியைப் பார்த்து, "அம்மா கடப்பா ஸ்டேஷன் ஒச்சிந்தி... மீரு திகண்டி" என்றார். அந்தம்மாவின் பெட்டியைத் தூக்கினார்; "மீரு திகண்டி" என்றார். மீண்டும் அந்தம்மாவும் அவரது ஆத்மார்த்த அன்பில் கட்டுப்பட்டு இறங்கப்போனாள்.

உடனே ஜிப்பாக்காரர், "இந்த கடப்பா... பளிங்குக் கற்களுக்குப் பெயர் போனது... அதோடு இது நம்ம ராமநாதபுரம் மாதிரி... இங்கே கொலை சர்வசாதாரணம்... ஒரு கொலை வழக்குல 144 பேர் குற்றவாளிங்கன்னா பார்த்துக்கங்களேன்... அற்ப காரணத்துக்காகக் கூட கொலை செய்வாங்க. உதாரணமாய்.... ஒருத்தன் மணி என்னவென்று கடிகாரம் கட்டியவனைப் பார்த்துப் கேட்பான்... கடிகாரக்காரன் நேரத்தைச் சொல்ல லேட்டாகுதுன்னு வச்சுக்குவோம்... அவ்வளவுதான். கடிகாரக்காரனின் கை இருக்காது..."

அந்த தெலுங்கம்மா, தமிழ்ச்செல்வியைப் பார்த்தாள். பிறகு அவள் தலையைக் கோதிவிட்டாள். "தேவுடுமேனு யு சேகாக்கா... பகவன்துடு நின்னு காப்பாடு காகா" என்று சொன்னபடியே நகர்ந்தாள். தமிழ்ச்செல்வியும், அந்தம்மாவும் ஒருவரை ஒருவர், ஆடாமல், அசையாமல் பார்த்துக் கொண்டார்கள்.

தெலுங்கம்மாவும், ஜிப்பாக்காரரும் கீழே இறங்கி விட்டார்கள். நவாப்பும், பலராமனும், இறங்கப் போனார்கள். போகிற போக்கில், தமிழ்ச் செல்வியைப் பார்த்து, "உங்களுக்கு என்னம்மா வேணும்" என்று கேட்டபோது, அவள் எதுவும் வேண்டாமென்று சைகை செய்தாள். உடனே நேற்றிரவு திட்டிய, அதே அந்த காஞ்சனா, அவர்களைப் பார்த்துக் கேட்டாள்.

"எங்களுக்கு ஏதாவது வாங்கிட்டு வரப்படாதா...? கேட்கப்படாதா...?"

பலராமனும், நவாப்ஜானும் அவளை முகச் சருக்கத்தோடு பார்த்தார்கள். பிறகு பலராமன் மடமட வென்று கொட்டினான்.

"நல்லா கேளுங்கம்மா.... நான் ஜாதில பறையன்தான்... இவன் சாய்புதான்... தொழில் என்னமோ பெட்டியைக் கழுவுறதுதான். ஆனாலும் நீங்க நினைக்கிறது மாதிரி பொறுக்கிங்க இல்ல... குடித்தது... தப்புத்தான்... இல்லங்கல... அதுக்காக இப்படியா திட்டுறது..."

கல்யாணியும், காஞ்சனாவும் தங்களுக்குள் ஏதோ பேசிக் கொண்டார்கள். பிறகு பலராமனிடம் பேசப் போன வெறுங் கழுத்தை, கல்யாணக் கழுத்து தடுத்துப் பார்த்தது. அதையும் மீறி காஞ்சனா, ரகசியக் குரலில் பேசினாள். அவர்கள் இருவரையும் தன் பக்கம் வரவழைத்துப் பேசினாள்...

"நேற்று ராத்திரி என்ன நடந்தது தெரியுமா...?"

அந்த ரயில், கடப்பா ரயில் நிலையத்தில், ஆமைபோல் பதுங்கிக் கிடந்தது.

இவ்வளவுக்கும் இது வழி தவறிய ரயில் என்பதால், ஏறுவோர் யாருமில்லை. இறங்குபவர்களும் ஒரு சிலரே... ஒருவேளை பிரயாணிகள் சாப்பாட்டிற்காகக் காத்து நிற்கிறதோ என்னவோ... வேறு பாதையில் இது விடப் பட்டதால், சமையலறைவாசிகள்கூட ரயில் நிலையத்தில்தான் சாப்பிட்டாக வேண்டும். தெலுங்கர் களுக்கே உரிய பச்சை மிளகாய் தோய்த்த பொறியலும், சப்பாத்தி களும் பல்வேறு வண்டிகளில் கண் சிமிட்டின. இது, தெலுங்கு நாட்டில் நிற்பதைக் குறிப்பது போல், அதோ, தெலுங்கம்மாவுடன் போகிற ஜிப்பாக்காரர் சொன்னதுபோல், ரயில்வே பிளாட்பாரம் முடிவடையும் இடத்தில் சாக்கடை ஆரம்பமாகி, பன்றிகள் அதில் பதுங்கிக் கிடந்தன. சற்று தொலைவில், பளபளப்பான பளிங்குக் கற்கள், பல்வேறு வண்ணத்தில் பல கடைகளில் சதுரம் சதுரமாக அடுக்கப்பட்டிருந்தன. வெளிமாநிலங்களைச் சேர்ந்த பல கட்டிட ஒப்பந்தக்காரர்கள் பட்டாக் கத்திக்கும் பளிங்குக் கல்லுக்கும் பெயர் போன இந்த நகரத்தில், முன்னதுக்குப் பயந்து பின்னதைச் சொன்ன விலையில் வாங்கிப் போவார்களாம்.

நவாப்ஜானுக்கும், பலராமனுக்கும் நேற்று ராத்திரி காஞ்சனாவும், கல்யாணியும் தங்களைத் திட்டவில்லை என்பதில் பெருமகிழ்ச்சி. பலராமன், ஆச்சரியம் தாங்க முடியாமல் குதிகாலில் நின்றான். நவாப்ஜான் 'சொல்லும்மா... என்ன நடந்தது" என்றான். காஞ்சனா பேசத் துவங்கினாள்.

"நீங்க படித்த பையன்... பாவம். அப்பாவின்னு நினைக் கிறிங்களே.. அந்தப் பயல் சீனிவாசன், நேற்று ராத்திரி எல்லோரும் தூங்கிய பிறகு..."

எதிர்ச்சீட்டு சீனிவாசன், சாப்பிடப் போவதுபோல் எழுந்திருக்கப் போனான். விவகாரத்தை ஓரளவு யூகித்துக் கொண்ட நவாப்ஜான், ""மொத்தமாய் சாப்பிடப் போகலாம் வாத்யாரே... இப்போ என்ன அவசரம்" என்று சொன்னபடியே, சீனிவாசனைக் கழுத்தோடு சேர்த்துப் பிடித்து, அவனை இருக்கையில் இருத்தி விட்டு, தானும் உட்கார்ந்து கொண்டான். வாசனின் தொடையில், தனது வலது கையை ஊன்றிக் கொண்டு, "உம் அப்புறம்" என்றான் காஞ்சனாவைப் பார்த்து... அவள் வெளுத்து வாங்கினாள். சத்தம் போட்டுக் கை கால்களை ஆட்டி ஆட்டி, உரக்கப் பேசினாள்.

“நல்லவேளையாய்... வெளிப்படையாய்... கேட்டுட்டிங்க. ராத்திரியே ஒங்ககிட்டே சொல்லணுமுன்னு நெனச்சேன்.... இந்தப் புண்ணியவதி கல்யாணி கெடுத்துட்டாள். நீங்க யோக்கியன்னு நினைச்சுப் பேசுறீங்க... பாருங்க... இந்தப் புறம்போக்கு சீனிவாசப் பயல்... நேற்று ராத்திரி என்ன செய்தான் தெரியுமா...? தண்ணீர் குடிக்கிற சாக்கில் என் தலைமாட்டுப் பக்கம் வந்தான். என் முகத்தில் தண்ணீர்பட்டது. ஒருவேளை தற்செயலாய் கொட்டியிருப் பாரோன்னு சும்மா இருந்தேன். கொஞ்ச நேரத்துல இந்தக் காட்டு மிராண்டி என் முகத்தைத் தடவிவிடுறான். அதோ பாருங்க அவன் ஆள்காட்டி விரலுல வீக்கம். பொறுக்கிப் பயலை நல்லா கடிச்சு விட்டுட்டேன்...”

கல்யாணியும், தன் பங்குக்கு அமைதியாக, சீனிவாசனைப் போன்றவர்கள் அப்படித்தான் நடப்பார்கள் என்று அனுமானத்துடன் விளக்கினாள்.

“நீங்க ரெண்டு பேரும் கொண்டு வருகிற சாப்பாட்டுல சாராயம் கலந்திருக்குமுன்னு சொல்லி... நீங்க அன்போட வாங்கிக் கொடுத்த பொருட்களைச் சாப்பிட விடாமல் எங்களைப் பட்டினி போட்டான். இவள் முகத்தைத் துடைச்சது மாதிரி என் காலையும் பிடித்தான். ஒரே சமயத்துல ரெண்டு பேரை... பண்பில்லாதவங்க.... தாகத்துக்குத் தண்ணி குடிக்கிறதாய்ப் பம்மாத்து செய்த... முட்டாள் மிஸ்டர்...”

“வாத்தியாருக்குத் தண்ணியா கேக்குது...? இப்போ நான் அவனுக்குத் தண்ணி காட்டப்போறேன் பாரு... டேய்...”

நவாப்ஜான், பலராமனைப் பிடித்துக் கொண்டான். சீனிவாசன், மெல்லவும் முடியாமல் விழுங்கவும் முடியாமல் தவித்தான். அவன் தலை தானாகக் கவிழ்ந்தது. பிறகு தலையை நிமிர்த்தி, ஏதோ ‘சூதுவாதில்லாமல்’ என்று சொல்லப்போனபோது “ஒரு பெண்ணோட முகத்தைத் தடவி விடுறதாடா சூதுவாதில்லாமல் செய்யுற காரியம்...? உன்னை நேற்றிலிருந்தே கவனிச்சுட்டு வாறேன்... ஒன் வாயிலதான் நல்ல வார்த்தை வராதுன்னு நினைத்தேன்... கடைசியில் என்னடான்னா... ஒன் கையிலகூட நல்ல செயல் வராது போலுக்கே... வாயைத் திறந்தே... பிச்சுப் புடுவேன் ராஸ்கோல்’ என்றான் மெக்கானிக் நாராயணன்.

நாராயணன் பேசி முடித்ததும் சர்தார்ஜி கத்தினார்... பஞ்சாபிலோ இந்தியிலோ அல்ல. அசல் தமிழில் - அதுவும் நல்ல தமிழில்...

“ஏண்டா... என்னையாடா டெர்ரரிஸ்ட்டுன்னு சொன்னே... நானாடா.. கண்ணி வெடி வைக்கிறவன்? நானாடா... எல்லோரையும்

வெடி வச்சுக் கொன்னுட்டு... ஓடிப் போறவன்? சொல்வதைக் கேளடா... சோமாறி... மகனே... கன்னி வெடியயைவிடக் கண்ணிவெடி மேலுடா... என்னை... நல்லாப் பாருடா... ஒன்னைவிட நான்தாண்டா உசத்தி தமிழன்... மெட்ராஸ்ல பிறந்தவண்டா... பெண்டாட்டிக் கிட்டேகூடத் தமிழ்லயே பேசுறவண்டா... எனக்குத் தமிழ் தெரியாது என்கிற தைரியத்துலயாடா வாய்க்கு வந்தபடி பேசுறே... மகனே... தமிழ்ல வல்லினம் எத்தனடா...? மெல்லினம் எத்தனடா...? கசட தபற என்ன இனண்டா....? நிசமான தமிழன்னா சொல்லுடா...?"

எல்லோரும், சீனிவாசனை விட்டுவிட்டு... அந்த சர்தார்ஜியையே பார்த்தார்கள். இன்ன வயசு என்று சொல்ல முடியாத வயது... இந்தப் பூனையும் பால் குடிக்குமா என்று இருந்தவர், இப்போது புலிபோல சீறி நின்றார்... "போய் உடனடியா ரயில்வே போலீஸைக் கூட்டிட்டு வாறேன்.... அம்மா இல்லாமலே பிறந்த இந்தப் பயலைப் பிடித்து வையுங்கள்" என்று மேலும் கத்திய சர்தார்ஜியை, பலராமன், அவர் கைகளைப் பிடித்துக் கொண்டான். அப்படியும், சர்தார்ஜி முண்டியடித்துப் போகப் போனபோது, தமிழ்ச்செல்வி அவரைத் தடுத்தாட் கொண்டாள்.

"ஒழிஞ்சு போறார்... விடுங்க ஸார்... இதுக்கு இவர் மட்டும் குற்றவாளியில்ல... ஒரு பெண்ணை ஒரு ஆண் தொட்டவுடனே சம்மதிச்சுடுவாள் என்கிற மாதிரி இப்போது தமிழில் வெளிவருகிற மாத நாவல்களும், ஆபாச சினிமாக்களும், வியாபார வாரப் பத்திரிகைகளும் ஒரு காரணம்... இவரோட கையில இருந்த மாத நாவலைப் பார்த்தவுடனேயே, இவரு மோசமாய் ஏதாவது பண்ணு வார்னு நெனைத்தேன். விட்டுத் தள்ளுங்க... போலீஸ் வந்தால்.... இவங்களுக்குக் கெட்ட பேர் வாரதோடு... இந்த ஆசாமியும் ஒரு கிரிமினலாய் மாறி விடுவார்... காரணம் இந்த நாட்டுப் போலீஸிடம் இந்த சீனிவாசன் மாதிரிதான்... தம்பி சீனி... வேற கம்பார்ட் மெண்ட்ல போய் உட்காருப்பா... இது உனக்கு நல்லது... உட்காருங்க... சர்தார்ஜி அண்ணா."

சர்தார்ஜி, தமிழ்ச்செல்விக்குக் கட்டுப்பட்டு, உட்கார்ந்தபோது, சீனிவாசன் மௌனமாக எழுந்தான். காஞ்சனாவை அழுத்தமாகப் பார்த்தான். இப்போதாவது காதலிப்பாளா என்பது மாதிரி; இப்படி பல சினிமாக்களில், கதாநாயகர்களை நாலு பேருக்கு முன்னால்... அவமானப்படுத்தி, அதற்குப் பிறகு... அவர்கள் மீது அனுதாபப்பட்டு அப்புறம் காதல் வயப்பட்ட கதாநாயகிப் பெண்களையும், அவர்களின் நிழலாகிய சினிமாக்களையும் நினைத்தபடியே நடக்கப் போனான். காஞ்சனா, எப்படியும், அவனைக் காதலிப்பாள் என்பதில், அவனுக்கு இப்போதுதான் நம்பிக்கை அதிகமாகியது போல் அவளையே திரும்பத் திரும்பப் பார்த்து நடந்தான்.

அப்போது ரயில் பயல்... எழுந்தான்... சீனிவாசன் கையைப் பிடித்து இழுத்தான். பிறகு தனது வேட்டி, மடிப்பிற்குள் இருந்த ஐந்து ரூபாய் நோட்டை எடுத்து எக்கி எக்கிக் குதித்து, சீனிவாசன் பைக்குள் போட்டான். உடனே நவாப்ஜான், "எங்க பயல் அயோக்கியப் பயல்க, கொடுக்கிற காசைத் திருப்பிக் கொடுத்துடுவான்" என்று கமெண்ட்டு அடித்தான். சீனிவாசன், ஓசைப்படாமலே போய்விட்டான்... பலராமன், தன் பங்குக்கும் ஏதோ சொல்லப்போனான். அவனை தமிழ்ச்செல்வி தலையாட்டித் தடுத்தாள்.

"தயவு செய்து, விஷயத்தை இதோடு விட்டுடலாம்; ஏன்னா, ஒரு பெண்ணையே கலாட்டா செய்தாலும், அந்தப் பெண்ணாலேயே கலாட்டா வாரதாய் நினைக்கிற உலகம்... இது... அதனாலதான்.... இந்திரன் கெட்டதும் பெண்ணால... சந்திரன் கெட்டதும் பெண்ணாலன்னு கெடுக்கப்பட்ட பெண்களைக், கெட்டுப் போனவர்களாய் இப்பவும் பேசுறோம்..."

எல்லோரும்; இப்போது சர்தார்ஜியை விட்டுவிட்டு, தமிழ்ச்செல்வியையே பார்த்தார்கள். நவாப்ஜானும், பலராமனும், அவளை பயபக்தியோடு பார்த்தார்கள். ரயில் பயல்... "அம்... அம்..." என்று சொல்லிக் கொண்டு, பலராமன் இடுப்பை குத்துக் குத்தி சொல்லிக் காட்டினான். தமிழ்ச்செல்வி, அவனை தம் உடம்போடு சேர்த்து ஒட்ட வைத்துக்கொண்டாள். அவன் ஐந்து ரூபாயைத் தியாகம் செய்ததால் நெகிழ்ந்து போன காஞ்சனா, அந்த அழுக்குப் பயலை, தமிழ்ச்செல்வியிடமிருந்து பிடித்திழுத்து தன்னை நோக்கி இழுத்து அணைத்துக் கொண்டாள். பிறகு தனது பைக்குள் இருந்து பத்து ரூபாய் நோட்டை எடுத்து, அவன் இடுப்பில் சொருகினாள். அவன் வாங்க மறுத்தபோது, காஞ்சனா முகம் சுழித்தாள். உடனே அவன் அவளை மகிழ வைக்க வேண்டும் என்ற ஒரே நோக்கத்தோடு, அந்த ரூபாயை மடியில் சுருட்டி வைத்துக் கொண்டான். காஞ்சனா, அவன் தலையைக் கோதி விட்டாள். சிறிது நேரம்வரை, அருவெருப்பாகத் தெரிந்த பையன், இப்போது அவளுக்கு அமிர்தம் போல் தென்பட்டான். காஞ்சனாவையும் ரயில் பயலையும் ஒரு சேர பார்த்தபடி, பலராமன் கேள்வி இல்லாமலே பதிலளித்தான்.

"பயலுக்கு வாய்தான் ஊமை... ஆனால் காது பாம்புக் காது..."

"ஆமா... செவிடாய் இருக்கவங்களால பேசமுடியாது. இவனுக்கு எப்படிக் காது கேட்குது சர்தார்ஜி..."

"சின்ன வயசுலே... ஏதாவது அதிர்ச்சி ஏற்பட்டிருக்கலாம்... அதாவது இவன் பிறவி ஊமையாய் இருக்கமாட்டான்... ஏதோ ஒரு அதிர்ச்சி ஏற்பட்டிருக்கும்... டேய் பையா... என்ன அதிர்ச்சி

ஏற்பட்டது... வாயால சொல்ல முடியாட்டியும், சைகையால சொல்லிக் காட்டுடா..."

இதுவரை சிரித்துக் கொண்டிருந்த அந்தப் பயல்... அப்போது தான் அதிர்ச்சியடைந்தவன் போல, வாயை மூடினான். கண்களை, கைகளால் மூடிக் கொண்டான். தமிழ்ச்செல்வி, இருக்கையில் இருந்து எழும்பி, அவனைத் தன்னருகே கொண்டு வந்தாள். சர்தார்ஜி, ஒரு கேள்வி கேட்டார்.

''டிக்கெட் இல்லாமல் வாரானே... ரயிலுல பிடிக்க மாட்டாங்களா..."

''பிச்சுப்புட மாட்டோம்... பிச்சு... இவனுக்கு டிக்கெட் பரிசோதகர்... ரயில் கார்டு, ரயில்வே போலீஸ் எல்லாருமே அத்துப்படி... எங்களுக்குத் தெரிஞ்சவங்களை விட, இவனுக்குத் தெரிஞ்சவங்களே அதிகம். எல்லாரும்... இவன்கிட்ட இதுவரைக்கும் அன்பாய்த்தான் நடத்துக்கிறாங்க. அடடே... என்னம்மா இது... ரயிலு சொல்லாமல் கொள்ளாமல் ஓடுது... பாரு..."

ரயில் வேகமாய் நகர்ந்தபோது, காஞ்சனா பாதி பசியோடும், மீதி ருசியோடும் செல்லமாகப் பேசினாள்.

"அய்யோ... சாப்பாட போயிட்டு. சாப்பாடு போயிட்டு... ராத்திரியும் சாப்பிடல... காலையிலயும் சாப்பிடல... இப்பவும் சாப்பிடல..."

"இன்னிக்கு ஜென்மாஷ்டமி... அதனால பகவானாப் பார்த்து நம்மைச் சாப்பிடாமல் வச்சுட்டார்."

"எந்த பகவான்... சீனிவாசப் பகவான்தானே...?"

தமிழ்ச்செல்வி, கடைசியாகச் சொன்னதைக் கேட்டு, எல்லோரும் சிரித்தார்கள். ரயில் பயல், சற்று லேட்டாகச் சிரித்து, கை தட்டினான். இதற்குள், அந்த ரயில் படுவேகமாக ஓடியது.... கொளுத்தும் வெயிலில் கொதிக்கக் கொதிக்க ஓடியது... பார்த்த இடமெல்லாம், வடநாட்டுப் பச்சையல்ல. தென்னாட்டுப் பாறைகள்... மரங்கள் செடிகள் இல்லாமல் மொட்டையா நிற்கும் குன்றுகள். ஜாக்கெட்டைத் தூக்கிப் பிடித்து வாயால் ஊதி, கொதிக்கும் சூட்டைக் குளிர வைக்கப்போன காஞ்சனாவை, கல்யாணி, சட்டென்று, தலையிலடித்து, தடுத்தாள்.

பூகம்பப் பூமியில், போய்க் கொண்டிருந்த ரயிலுக்குள், மூன்று மணியளவில் லேசாய் காற்று வீசியது. வெளியே... சில இடங்களில் பச்சைத் தோற்றங்கள்... டில்லிப் பெண்கள் வயிற்றைக் கையில் பிடிந்திருந்தார்கள். ரயில் பயல், பெஞ்சுக்குக் கீழே அடக்கமாகத்

தூங்கிக் கொண்டிருந்தான். தக்காரும் மிக்காருமின்றி வேகவேகமாக ஓடிய ரயில், நான்கு மணியளவில் எக்கி எக்கிப் போனது... மேட்டுப் பகுதி... மலைப்பகுதி...

ரயில் ரேணிகுண்டாவுக்குள் நுழைந்தது. சற்று தொலைவில்... அடுக்கடுக்கான ஏழு குன்றுகளுக்கு மேல்... இருந்த திருப்பதி கோவிலைப் பார்த்ததும், டில்லிப் பெண்கள் எழுந்து நின்று கும்பிட்டார்கள். அந்த சர்தார்ஜியும் எழுந்து நின்று கும்பிட்டார். முன்னாலும், பின்னாலும் இருந்த பெட்டிகளில் 'பகவாண்டு பகவாண்டு' 'தேவ்டு தேவ்டு' என்று பக்திப் பரவசத்தில் கத்தினார்கள். சிலர் திருப்பதிக்குப் போவதாகக் கூறிய வாக்களிப்பை சுமைவிட்டது என்பது மாதிரி இந்த ரயிலில் இருந்தே நிறை வேற்றுவது போல் தோன்றியது.

"என்ன விசேஷம்?" என்றாள் தமிழ்ச்செல்வி. கல்யாணி விளக்கினாள்.

"திருப்பதி கோயில் அதோ தெரியுது பாருங்க... பகவான் தன்னோட கல்யாணத்துக்கு குபேரன்கிட்ட கடன்பட்டு... அந்தக் கடனை அடைக்க முடியாமல்... இந்த மலையில் வெறுப்போட வந்து நின்னுட்டார். கட்டுன பெண்டாட்டி கிட்டவும், சண்டை போட்டுட்டார்.... அலர்மேல் மங்கை அம்மாவோட கோவில் திருப்பதியில் இருந்து பத்து கிலோமீட்டர் தள்ளி இருக்குது... இதனால் தான் வெங்கடேச பகவானுக்கு குடும்பச் சிக்கலும், பணச் சிலவும் புரியுது... அதனாலதான் இந்தச் சிக்கல்களில் மாட்டிக்கிறவங் களுக்கு அள்ளி அள்ளிக் கொடுக்கார்..."

கல்யாணி பேசுவதை பொறுமையோடு கேட்ட தமிழ்ச்செல்வி, "புராணங்கள் அசிங்கப்படுத்துவது மாதிரி பகவானை வேறு எதுவும் அசிங்கமாக்கவில்லை" என்று சொன்னாள். மிகப்பெரிய உபன்யாசம் செய்துவிட்ட திருப்தியில் இருந்த கல்யாணியின் முகம், அந்தப் பெயருக்கு எதிராகப் போனது. கோபம் வந்தது. அந்தச் சமயம் பார்த்து, ரயில் ரேணிகுண்டா ரயில் நிலையத்தில் நின்றது. உடனே அவளுக்குப் பசி வந்துவிட்டது.

நவாப்ஜானும், பலராமனும் எழுந்தார்கள். அந்தப் பெண்களிடம் இப்போது பணம் வாங்கிக் கொண்டே கீழே இறங்கினார்கள். ரயில் பயல், எழும்பி உட்கார்ந்து முகத்தைத் துடைத்தான். தமிழ்ச் செல்வியும், எழுந்தாள். அவள் கையைப் பிடித்த பயலைப் பார்த்து, கொஞ்சம் கீழே இறங்கிக் காலாற நடந்துட்டு வாறேன்" என்று அவனிடமிருந்து விடுபட்டுக் கீழே இறங்கினாள்.

கால்மணி நேரம் கடந்தது.

பலராமனும், நவாப்ஜானும், பொட்டலங்களோடு உள்ளே வந்தார்கள். திடீரென்று அங்குமிங்குமாய் தடுமாறினார்கள். ரயில் புறப்பட்டு விட்டது. லேசாய் சறுக்கி விழுவது போல் ஒரு ஆட்டு ஆட்டி 'படியே ரயில் வேகவேகமாய் நகர்ந்தது... ரயில் பயல், வெளியே வந்து, அங்குமிங்குமாய் பார்த்துவிட்டு, "அம்... அம்..." என்றான். அப்போதுதான் தமிழ்ச்செல்வி அங்கே இல்லாததைக் கண்டார்கள். அந்தப் பயல் இப்போது "அம்... அம்..." என்று சொல்லியபடியே கைகளை வெளியே நீட்டிக் காட்டினான். வெளியே விழப் போகிறவன்போல வயிற்றை ஜன்னலில் வைத்து அழுத்தினான். பலராமன், அவன் பார்த்த பக்கமாய்ப் பார்த்தான்.

வெளியே பிளாட்பாரத்தில், தமிழ்ச்செல்வியை நான்கைந்து பேர் இழுத்துக் கொண்டு போனார்கள். இந்த ரயிலோ, அவளையும், அவளைப் பிடித்த எதிரிகளையும் கடந்து எதிர்த்திசையில் போய்க்கொண்டிருக்கிறது. தமிழ்ச்செல்வி தட்டுத் தடுமாறி தலையை அங்குமிங்குமாய் ஆட்டிக் கொண்டிருக்கிறாள்.



அந்த ரயில், எந்தப்பக்கம் விழலாம் என்பதுபோல், அங்குமிங்குமாக ஆடி, உருள்வது தெரியாமல் உருண்டு கொண்டிருந்த சக்கரங்கள், இப்போது வேக வேகமாய் நிறுத்தப் பட்டதால், சில சக்கரங்கள் தண்டவாளத்தில் உரசிய அழுத்தத்தில் தீப்பொறிகள்கூட பறந்தன.

ரயில் பெட்டியில் தாறுமாறாக வைக்கப்பட்டிருந்த கூஜா, தட்டுமுட்டுச் சாமான்கள் கீழே விழுந்து ஓலம் போட்டன. ஆங்காங்கே மனிதக் குரல்கள் சேர்ந்து கொண்டன.

அந்த ரயில், ரயில் நிலைய பிளாட்பாரத்தைத் தாண்டி நின்று விட்டாலும், நவாப்ஜான் அகாரணமாய் உபயோகப்படுத்தக்கூடாத அந்த அபாயச் சங்கிலியை இன்னும் பிடித்தபடியே நின்றான். அது போதாது என்பதுபோல் அவன் கையை பலராமன் பிடித்துக் கீழ் நோக்கி இழுத்தான். ரயில் நின்ற அமர்க்களத்தை உணர்ந்து இருவரும் பிரேக் சங்கிலியை விட்டு விட்டு ஓடினார்கள். டில்லிப் பெண்கள் வாசலோரத்திற்கு வந்து, கீழே இறங்கலாமா வேண்டாமா என்று ஆழம் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

தமிழ்ச்செல்வியை பிடித்திருந்த கும்பலை நோக்கி, பலராமனும், நவாப்ஜானும் தலைதெறிக்க ஓடினார்கள். இதற்கு முன்பாக, அந்த ரயில் பயல் ஓடினான். இவர்களுக்குப் பின்னால் மெக்கானிக் நாராயணனும், சர்தார்ஜியும் ஓட முடியாமல் சிறிது இடைவெளி விட்டு ஓடினார்கள். ரயில் பெட்டிக்குள் பொம்மைத் தலைகள் சொருகி வைக்கப்பட்டது போல, பல தலைகள் ஜன்னலுக்கு வெளியே நீண்டன. இதற்குள் ஒரு சிலர் கீழே இறங்கப் போனார்கள். பின்னால் சர்தார்ஜி ஓடுவதைப் பார்த்துவிட்டு, சிலர், "டெர்ரரிஸ்ட் டெர்ரரிஸ்ட்" என்று ஆங்கிலத்திலும், "அய்யய்யோ... சீக்கியப் பயங்கரவாதி... எத்தன பேரைச் சுட்டானோ... இன்னும் எத்தனை பேரை சுடப் போறானோ" என்று அலறினார்கள். சிலர் ரயிலுக்குள் பெஞ்சுக்கு அடியில் கூடப் படுத்துக் கொண்டார்கள். இதில் ஒரு கொடுமை என்னவென்றால், கீழே இறங்கப்போன ஆயுதந்தரிந்த ரயில்வே போலீஸ்காரர்கள்கூட, அந்த நிராயுதபாணி சர்தார்ஜிக்குப் பயந்து பெட்டிக்குள் பம்மிக் கொண்டார்கள். சும்மா சொல்லக் கூடாது. அவர்களும் வீரர்கள்தான். சாதாரணப் பிரயாணிகள் போல், பெஞ்சுகளுக்கு அடியில் படுக்காமல், நின்று கொண்டு இருந்தார்கள்.

இந்த அமளியைப் பற்றிக் கவலைப்படாமல், நவாப்ஜானும், பலராமனும் முன்தொடர, நாராயணனும் சர்தார்ஜியும் பின் தொடர்ந்தார்கள். இடையிடையே ஒரு சிலர் சேர்ந்து கொண்டார்கள். இதற்கிடையே, அந்த முரடர்களிடம் போராடிக் களைத்தோ அல்லது போராடிப் பயனில்லை என்று நினைத்தோ, அவர்கள் இழுத்த இழுப்பிற்குக் கால்களை நகர்த்திய தமிழ்ச் செல்வியின் காதுகளில் "டேய்.. டாய்" என்று பரிச்சயமான குரல்கள் ஒரு அசுர பலத்தைக் கொடுத்தது. முரடர்களிடம் சிக்கிய தனது இரண்டு கரங்களையும் சுண்டியிழுத்தாள். இதனால் ஒருத்தன் குப்புற விழுந்தான். ஒருத்தன் அவள் கையை விட்டுவிட்டு இரும்புக் கிராதி வேலியில் இருந்த ஒரு இடைவெளிக்குள் உடம்பைத் திணித்துக் கொண்டிருந்தான்.

இதற்குள், நவாப்ஜானும் பலராமனும் இரண்டு பேரைப் பிடித்துக் கொண்டார்கள். பின்பக்கமாக ஓடிய இரண்டு பேரை சர்தார்ஜியும், நாராயணனும் பிடித்து இழுத்துக் கொண்டார்கள். தமிழ்ச்செல்வியைக் கைப்பற்றிய அந்தக் கூட்டத்தைச் சுற்றி மனித வட்டம் ஏற்பட்டது. இரும்புக் கிராதிக்குள் உடம்பைக் கொடுத்தவன் எப்படியோ நெளிந்து வெளியேறி விட்டான். ஆசாமி இந்த மாதிரி கடத்தல் விவகாரங்களில் அனுபவசாலி என்பது போல், வெளியே போனதும் ஓடாமல் ஏதும் அறியாதவன் போல், நிதானமாகவும் திரும்பிப் பாராமலும் நடந்தான்.

நவாப்ஜானும், பலராமனும், தங்களின் கைவசம் இருந்தவர்களின் தலைகளை ஒன்றோடு ஒன்று மோத விட்டார்கள். இருவரின் இடுப்பிலும், பின்கால்களிலும் முட்டிக் கால்களால் உதைத்தபடியே, இருவரையும் ஒருவர் பக்கம் ஒருவராகத் தள்ளி, தலைகளை மோத விட்டார்கள். அப்புறம் பலராமன், அந்த இருவருக்கும் பின்புறமாகச் சென்று அவர்கள் கைகளை வளைத்துப் பிடித்துக் கொண்டான். நவாப்ஜான், இரண்டுபேர் தலையையும் செங்குத்தாகப் பிடித்தான். சர்தார்ஜி கையில் அகப்பட்ட ஒருத்தன், கழுத்து வலி தாங்காமல் தவித்தான். அவன் நாக்கு வெளியே தொங்கியது. தாடிக்காரரின் வலது கைப்பிடிக்குள் அவன் பிடறியும் கழுத்துக்குழலும் பிதுங்கிக் கொண்டு இருந்தன. மெக்கானிக் நாராணயன், 'இன்னொருத்தனை கஷ்டப்பட்டு இழுத்தான். அவனோ, சண்டிமாடு மாதிரி, கால்கள் நகர்த்தாமல் இருந்தான். அந்தக் கால்கள் தரையில் கோடு போட்டபடியே நகர்த்தப்பட்டன. உடனே, இரண்டுபேர் அவனைப் பின்புறம் இழுத்துத் தள்ளியதால், நாராயணனுக்கு இப்போது அவனை இழுப்பது எளிதாக இருந்தது.

எப்படியோ, அந்தக் கும்பல் ஒரு பக்கமாக நிறுத்தப்பட்டது. இவர்கள் தப்பிக்காமல் இருப்பதற்காக, நவாப்ஜான் வகையறாக்கள் கைகோர்த்து வட்டமாக நின்றார்கள். இந்த வட்டத்தைச் சுற்றி, கைகளைக் கோர்க்காமலே, இன்னொரு மனித வட்டம், வேடிக்கை வட்டம். இவற்றிற்கு மையமாகவும், காரணமாகவும், தமிழ்ச்செல்வி-முடிகலைந்து, விழி பிதுங்கி, பித்துப் பிடித்தவள்போல் நின்று கொண்டிருந்தாள். இதற்குள் அந்த நால்வரில் ஒருத்தன் வீறாப்பாகப் பேசினான்.

“வீட்ல இருந்த நகைகளையும், ஆயிரக்கணக்கான ரூபாயையும் இவள் திருடிட்டு வந்துட்டாள். அத்தை மகள் என்கிறதுக்காக வீட்ல அடைக்கலம் கொடுத்தால், ராத்திரியோட ராத்திரியா கையில அகப்பட்டதைச் சுருட்டிக்கிட்டு ஓடிட்டாள். நான் கஷ்டப் பட்டு கண்டு பிடிச்சேன். நகைகளைக் கொடுத்துடச் சொல்லுங்க... விட்டுடுறேன்...”

வேடிக்கை வட்டம், அவன் சொல்வதில் நியாயம் இருக்கலாம் என்பதுபோல், அவளை ஆமோதிப்பாய், கண்களை ஏற்றி இறக்கிப் பார்த்துவிட்டு, தமிழ்ச் செல்வியை, எதிரி வக்கீல் பார்ப்பதுபோல் பார்த்தது. தமிழ்ச்செல்வி, சொன்னவனையும் பார்க்காமல், சுற்றி நின்றவர்களையும் பார்க்காமல், உதடுகளைக் கடித்து விட்டுக் காறித் துப்புவது போல் சொன்னாள்.

“பலராமண்ணா... நவாப்பண்ணா... இவன்தான் தாமரைப் பாண்டி....”

நி.8.

பலராமனும், நவாப்ஜானும், ஆளுக்கொரு பக்கமாக நின்று, அவனை முறைத்துப் பார்த்தார்கள். வாட்ட சாட்டமான உடம்புக்காரன்தான். தலைமுடியை வேண்டுமென்றே தூக்கிவிடப் பட்டதுபோல் தோன்றியது. வித்தியாசமான கண்கள். லேசாகத் துருத்தியும், ஆகாயத்தில் பறக்கும் கழுகு, கீழே கோழிக் குஞ்சு களையோ, அல்லது இதர இரைகளையோ கண்டு பிடிப்பதற்காக இறக்கைகளை ஆடாமல் வைத்தபடியே பறக்குமே, அப்படிப்பட்ட பறக்கும் கண்கள்... விழிகளை ஒதுக்கி, கண்களை மட்டும் தனியே காட்டும் தோரணை. இந்தத் தோரணையில் தந்திரமும், கயவாளித்தனமும் தெரியப்படுத்தப்பட்டன. பலராமன், தாமரைப் பாண்டியின் குரல் வளையோடு அவன் சட்டைக் காலரைப் பிடித்து, இறுக்கியபோது, நவாப்ஜான் இளக்காரமாகக் கேட்டான்.

"இந்தப் பொண்ணு ஒன் வீட்ல திருடி வச்ச நகையும் பணமும் ரயிலுக்குள்ளே இருக்குது. நீ எப்போ வருவே... ஒனக்குக் கொடுக்கலாமுன்னுதான் காத்திருந்தோம்... வாடா கண்ணு...."

இதற்குள், சர்தார்ஜியின் கைக்குள் கழுத்தை அடகு வைத்தவன், கத்தினான், ஒல்லியானவன்... கொக்குத் தலையன்... நாற்பது வயதுக்காரன்...

"நான் ஒரு பாவமும் அறியாதவன்யா... பண்ணையார் மகன் சொன்னாரேன்னு தெரியாத்தனமா வந்துட்டோம்யா..."

"பண்ணையார் மகன் எதெல்லாமோ கேட்பான்... அதெல்லாம் கொடுப்பியா...?"

"நான் யோக்கியன் சார். இந்த படிச்ச மனுசனால கெட்டுப்போய், இப்போதான் சாமி அயோக்கியனா போயிட்டேன்... என்னை விட்டுடுங்க சாமி..."

"எப்டிய்யா விடுறது...? தமிழ்ச்செல்வி திருடுன நகையில கொஞ்சத்தை ஒனக்கும் தாறோம். கொஞ்சம் பொறுத்துக்கோ..."

"தமிழ்ச்செல்வியை திருடின்னு சொன்னா, வாய் அழுகிடும் சாமி. இந்தம்மா சொத்தைத்தான் அந்தச் சண்டாளனும் அவன் அப்பனும் திருடியிருக்காங்க..."

"அவன் அயோக்கியன்னு தெரிஞ்சுக்கிட்டே அவனுக்கு ஒத்தாசை செய்திருக்கே... இதுக்கே ஒனக்கு ஒன்பது வருஷம் தீட்டணும்."

"அய்யோ சாமி... அப்டிச் சொல்லாதீங்க சாமி. ஒங்க வாயில நல்ல வார்த்தை மட்டும்தான் வரணும் சாமி... ஏதோ கூப்பிட்டாரேன்னு வந்துட்டேன் சாமி... ஒரு வேலைக்காரன் ஒரு

பண்ணை வீட்ல சேர்ந்தபிறகு, அந்த குடும்பத்தோட நல்லதுக்கும் கெட்டதுக்கும் கூடயே நிக்கணுமுன்னு எங்கய்யா சொல்லிட்டு செத்தாரு சாமி... அதனாலதான் இவனோட கெட்டதுக்கும் கூட நின்னேன் சாமி..."

"ஏண்டா... சாமர்த்தியமாய் பேசுறதாய் நெனப்பா... எலும்பு கழண்டுடும்..."

"இப்போவே கழண்டு போய்தான் நிக்குது சாமி. நான் ரெண்டு மூணு வாரமாய்த்தான் அயோக்கியனாயிட்டேன் அய்யா... அதுக்கு முன்னால யோக்கியமய்யா... வேணுமுன்னால் தமிழ்ச்செல்வி அம்மாகிட்டே கேட்டுப் பாருங்கய்யா... ஏம்மா... ஒங்களத்தான்... என்னைப்பத்தி சொல்லுங்கம்மா..."

"ஏண்டா அந்தம்மாவை கசாப்பு ஆட்டைப் பிடிச்சு இழுக்கது மாதிரி இழுத்துட்டு, அதையே இப்போ வேற கூப்புடுறியா...? பாருங்க சர்தார்ஜி இந்தப் பயலை... இறுக்கிப் பிடிங்க..."

"பார்த்துட்டுத்தான் இருக்கேம்மா... இவன் சொல்றதுல கொஞ்சம் நிசமும் இருக்குது. பெரும்பாலான ஏழைகள் என்ன செய்யுறேமுன்னு தெரியாமலே, செயல்படுறாங்க. இவனுக்கு இந்தம்மாவை கடத்துறதுக்கு இவன் ஒத்தாசை செய்தான்... ஆனால் அது எதுல கொண்டு போய் விடும் என்கிற உணர்வே இவனுக்குக் கிடையாது... இந்த நாட்டு பிரபுத்துவமும், முதலாளி வர்க்கமும், பாட்டாளி வர்க்கத்துல விவசாயத் தொழிலாளர் வர்க்கத்தை காயடிச்சு வச்சுட்டு... இந்த அப்பாவி மக்கள் இதயங்களை மட்டும் தங்க கிட்டே வைத்துக் கொண்டு அவற்றை துடிக்க வைக்கிற பொறுப்பை பண்ணையார்கள்கிட்டே விட்டுட்டாங்க... இவங்க உடம்பால மட்டுமில்லாமல், உள்ளத்தாலும் சிறைப்பிடிக்கப் பட்டவங்க... இதுல ஒருத்தன்தான் இவன். இவனுக்காகப் பரிதாப் படுறேன்..."

சர்தார்ஜி தனது கைக்குள் சங்கமித்தவன் பிடரியை விட்டார். அவனைப் பிடித்து, நவாப்ஜான் பக்கமாகத் தள்ளினார். இதற்குள், நாராயணனால் பிடிபட்டவன் பேசப்போனான். அவன் கன்னத்தில் ஒரு வெட்டுக்காயம். சர்க்கரை வள்ளிக் கிழங்கை வேக வைத்தால் எந்த நிறமோ அந்த நிறம். உருண்டு திரண்ட உடம்பு... மூன்று பத்து வருடங்களை விழுங்கியவன் பிறப்பில் இருந்தே, இப்போது அவனும் தன் பங்குக்குப் பிச்சை கேட்டான்.

"எனக்கு மெட்ராஸ்ப்பா... எதுவும் தெரியாதுப்பா... அப்போவே ஓடி ஒளிஞ்சுட்டானே படா கில்லாடி... அவன்தான் வந்து "வாத்தியாரே... வாத்தியாரே... மலேயாக்காரப் பொண்ணு ஒருத்தி

மாமன் வீட்டு நகைகளை திருடிட்டு... இந்த மெட்ராஸ்ல ஒளிஞ்சிருக்காள். நீ காட்டி அதை பிடிச்சே... ஒனிக்கு சாராயத்துக்கு சாராயம்... நகையிலயும் ஒரு பெர்ஷண்டு'ன்னு சொன்னான் சோமாறி. நம்பி ஏமாத்துட்டேம்பா... அடேய் ஒட்டகச் சிவிங்கி! இந்தப் பொண்ணு நல்லப் பொண்ணுன்னு இப்போ சொல்றதை அப்போ ஏண்டா சொல்லல... கஸ்மாலம்... என்னை விட்டுடுங்கப்பா..."

"மெட்ராஸ் வாத்தியார் பேசுறதைப் பாருங்க... சர்தார்ஜியாரே இதுக்கும் ஒரு விளக்கம் வச்சிருக்கீங்களா...?"

"இருக்குது... இவர்களுக்குப் பெயர்தான் லும்பன் என்கிறது. கண்டதே காட்சி... கொண்டதே கோலமுன்னு திரியுறவங்க.. எப்படியாவது வாழணும் என்று நினைக்கிறவங்க. சமூகத்திலே கடைநிலையில விடப்பட்டவங்க... இவங்க. பிறக்கும்போதே பிளாட்பாரத்துல பிறந்து, சமூக விரோதிகளால் பேணப் படுறவங்க. இவங்களுக்கு தர்மமும் ஒண்ணுதான். அதர்மமும் ஒண்ணுதான். அடி வாங்கிக்கிறதும் ஒண்ணுதான். அடிக்கிறதும் ஒண்ணுதான். இவங்களைப் பாட்டாளி வர்க்கத்தோடு சம்பந்தப் படுத்திப் பேசுறது தப்பு... இவர்கள் அர்த்தமுள்ள மனிதர்கள் இல்ல. வாழ்க்கையின் அசுத்தத்தில் இருப்பவர்கள்..."

இதற்குள், ஒரு ரயில் பெட்டியில் இருந்து, துப்பாக்கிகள் கொண்ட போலீஸார் இறங்கலாமா வேண்டாமா என்று யோசித்த போது, ரயில் பயல், இப்போதும் நரி மாதிரி ஊளையிட்டான். ஒருத்தனின் பெருவிரலை, எக்கி நின்று பிடித்தான். தமிழ்ச்செல்வி நின்ற கூட்டத்தைச் சுட்டிக் காட்டினான்.

ரயில்வே போலீஸாரும், ரயில்வே காப்பாளரும், டிக்கெட் பரிசோதகர்களும் எதிரெதிர் திசையில் ஓடி வந்தார்கள். வெள்ளை சீருடை அணிந்த ரயில்வே கார்ட், பச்சைக் கொடியை ஆட்டிய படியே ஓடி வந்தால், அவர் தனக்குத்தானே, " சிக்னல்" காட்டி ஓடி வருவதைப் பார்க்க வேடிக்கையாய் இருந்தது.

இப்படியாக எல்லா அதிகாரிகளும் அந்தக் கூட்டத்திடம் ஆற அமர வந்தார்கள். அவர்களைப் பார்த்து, நவாப்ஜான், அடக்கமாக ஒதுங்கிக் கொண்டு நாராயணனைப் பேசச் சொன்னான். நாராயணன் அவர்களிடம் பேசிக்கொண்டிருந்தபோது, நவாப்ஜான், ஏற்கனவே பரிச்சயமான ரயில்வே போலீஸாரிடம் விவகாரத்தை விளக்கிக் கொண்டு இருந்தான். திடீரென்று தாமரைப்பாண்டி, அந்த போலீஸ் படையைப் பார்த்து, அரைகுறை ஆங்கிலத்தில் கத்தினான்.

"ஐ ஜென்டில்மேன்... ஷி தீப்... எங்க வீட்டு இருபது பவுன் நகையை திருடிட்டு வந்துட்டாள்... பதினையாயிரம் ரூபாயை ஸ்டீல் பண்ணிட்டாள்."

ரயில்வே போலீஸார், தாமரைப்பாண்டியைப் பார்த்தார்கள். பிறகு தமிழ்ச்செல்வியை உற்றுப் பார்த்தார்கள். பிறகு தங்களுக்குள்ளேயே கிசுகிசுத்தார்கள். இதற்கும் பிறகு தனியாய் போய் நின்று கொண்டார்கள். அவர்களின் அதிகாரியான ஒருத்தர் ஆள் காட்டி விரலை ஆட்டியபடியே கத்தினார்...

"இந்தாம்மா... இங்கே வா..."



அந்த ரயில், தண்டவாளத்தில் இன்னும் அட்டை மாதிரி ஒட்டிக் கொண்டிருந்தது.

ரயில் பெட்டிகளுக்குள்ளும் அட்டைகளான பயணிகளில் பலர், மெள்ள மெள்ள வெளியே வந்தார்கள். அந்த சர்தார்ஜி, வெறுங்கையுடன் சர்வசாதாரணமாக நின்றதில் அவர்களுக்குத் திருப்தி. "எவ்வளவு நேரமய்யா... ரயில நிறுத்து வைக்கிறது" என்று ஆங்காங்கே முகம் தெரியா பின்னணி கோபக் குரல்கள்.... அந்தக் குரலுக்குரிய சிலர், அந்தக் கூட்டத்தில் முன்னணியில் போய் கத்துவதற்காக, கீழே இறங்கி வந்தார்கள்... கூட்டத்துக்குள் போய்ச் சேர்ந்ததும், சராசரி இந்தியராகி, வாய்ச்சொல் வீரம்கூட அற்றுப் போய், அனாதைகளாய் அங்குமிங்குமாய் ஊடாடினார்கள்.

ரயில்வே போலீஸாரின் அலட்டலைப் பற்றி அலட்டிக்காமல், தமிழ்ச்செல்வி ஆகாயத்தையும், பூமியையும் சாட்சிக்கு அழைப்பவள்போல் மாறிமாறி வெறித்துப் பார்த்தாள். போலீஸ் அதிகாரி, இதற்குள் இன்னொரு தடவை கூச்சல் போட்டார். அந்தக் குரலோனை ஏறிட்டுப் பார்க்காமலே, அந்தக் குரல் வந்த திசை நோக்கி நகரப்போன தமிழ்ச்செல்வியின் கைகளை, பலராமன் பிடித்திழுத்துக் கொண்டே கத்தினான்.

"இவங்களை அங்கே எதுக்கு ஸார் கூப்புடுறீங்க...?"

"அவங்ககிட்டே விசாரணை நடத்தணும்."

"என்ன விசாரணை...? எதுக்கு விசாரணை...?"

"அவள் நகைகளைத் திருடிட்டதாய் இவர் சொல்றாரே..."

"என்ன அநியாயம் ஸார்... இது? அப்பாவிப் பொண்ணு... முரடர்களோட பலாத்காரத்துல மிரண்டு போய் நிற்காங்க... கடத்தப்பட்டவளை அவள்னு சொல்றீங்க... கடத்துனவனை அவர்னு சொல்றீங்க... என்ன நியாயம் இது...?"

"ஒன் கிட்டே எனக்குப் பேச்சில்லை... இந்தாம்மா... இங்கே வா..."

"வேணுமுன்னால் நீங்க இங்கே வாங்க... அவங்க வரமாட்டாங்கோ..."

"யோவ் திருட்டுக்கு உடந்தைன்னு ஒன்னையும் சார்ஜ் செய்யுவேன்..."

"ஒரு பெண்ணைக் கடத்துவதுக்கு உடந்தைன்னு ஒன்மேலயும் புகார் கொடுக்கத் தெரியும்..."

பலராமனுக்கும், ரயில்வே போலீஸ் அதிகாரிகளுக்கும் வாய்த் தகராறு முற்றிக்கொண்டே போனது. இருவருக்கும் இடையே இடைவெளி குறைந்து, ஒருவரை ஒருவர் நெருங்கிக்கொண்டு இருந்தார்கள். இந்தச் சயமத்தில், ரயில் பயல், நவாப்ஜானையும் சர்தார்ஜியையும் ஒரு பக்கமாகக் கூட்டிப் போனான். அந்த ரயில்வே அதிகாரியையும் தாமரைப்பாண்டியனையும் கையை நீட்டி மடக்கிச் சுட்டிக் காட்டியபடியே, வலது கண்ணை இழுத்து மூடினான். அதைப் பார்க்காமல், நவாப்ஜான், "என்னடா... என்னடா..." என்றான்... பயலுக்குக் லேசாக கோபம்கூட வந்தது. நவாப்ஜான் கையைப்பிடித்து, தனது வலது கை விழியில் வைத்தான். பிறகு, அந்தக் கையை விலக்கிவிட்டு, கண்களைச் சுருக்கிச் சுருக்கி மூடினான். அந்த வேகத்தில் தாமரைப்பாண்டியனையும், பலராமனிடம் தாவா கொடுத்த போலீஸ் அதிகாரியையும் சுட்டிக் காட்டினான். நவாப்ஜானுக்குக் கோபம். தோழனுக்குத் தோள் கொடுக்க முடியாமல், இந்தப் பயல், இழுத்துப் பிடித்து வைக்கிறானே என்று கோபத்தோடு நவாப்ஜான் கேட்கவும், சர்தார்ஜி விளக்கமளித்தார்.

"என்னடா கண்ணடிக்கே...? ஒன்னோட பேஜாராப் போச்சு..."

"எனக்கு ஒன்று தோணுது... தாமரைப்பாண்டி, ரயில் இன்ஸ்பெக்டரைப் பார்த்துப் பேசும்போது... கண்ணடிச்சபடியே... பேசியிருக்கான்... அதாவ்து அவருக்கு லஞ்சம் கொடுக்கிறதாய் குறிப்பாய் சொல்லியிருக்கான்..."

"அப்படியா கழுதே...?"

அப்படியேதான் என்பதுபோல், அந்தப் பயல், அசல் கழுதை மாதிரியே குதித்தான். 'ஆமாம் ஆமாம்' என்பது போல், தலையையும் மேலும் கீழுமாகவும் குதிக்க வைத்தான். இந்தச் சமயத்தில் பலராமனுக்கும், ரயில்வே போலீஸ் அதிகாரிக்கும், விவாதம், வாதமாகியது. சில போலீஸ்காரர்கள், அவளை அடித்து நொறுக்கக் கூட ஆயத்தம் செய்வதுபோல், வலது கைகளில் பிடித்த துப்பாக்கி களை இடது கைக்கு மாற்றினார்கள்... நவாப்ஜான், அந்த போலீஸ் அதிகாரிக்கும், பலராமனுக்கும் இடையே போய் நின்று, நிதானமாகப் பேசினான்.

“நீங்க நடந்துக்கிற முறை சரியில்ல சார்... இந்தப் பொண்ணை அந்தப் பசங்க கடத்த முயற்சித்ததை நாங்க பார்த்தோம். ஒருவேளை இந்தம்மா அவங்ககிட்டே சிக்கியிருந்தால், இந்தப் பொண்ணை அடித்துக் கொன்னுருப்பாங்க... பிடித்தவங்களை விட்டுட்டு, பிடிபட்டதை... அதட்ட ஒங்களுக்கு உரிமை இல்ல...”

“என்னோட உரிமை... கடமையைப் பத்தி நீ சொல்ல வேண்டியதில்ல...”

“ஆயிரந்தடவை... சொல்லுவேன்... நாங்களும் ரயில்வே ஊழியர்கள்தான்... ரயிலுலயோ... ரயில்வே ஸ்டேஷன்லயோ... திருட்டு நடந்தால்... அவங்களைப் பிடித்து விசாரிக்க வேண்டியது ரயில்வே போலீஸ் கடமை. இப்போ நடந்தது திருடு இல்ல... கொள்ளையில்ல... ஒரு ரயில்வே பயணியை எங்கிருந்தோ வந்த முரடர்கள் கடத்திட்டுப் போக முயற்சி செய்தாங்க. எந்தப் பயலையும், கூடுமானவரை பாதுகாப்போடு அவங்க போகிற ரயில் நிலையத்தோட பொது எல்லை வரைக்கும் சேர்க்கிற கடமை ரயில்வே போலீசுக்கு...”

“இப்போ என்ன செய்யணுங்றே...?”

“ஒங்க கடமையைச் செய்யுங்க என்கிறேன்... இந்தப் பசங்களைப் பிடித்து ரயிலுல ஏத்துங்க... சட்டப்படி இப்படிப்பட்டவர்களை மிக பக்கத்துல இருக்கிற போலீஸ் ஸ்டேஷன்ல ஒப்படைக்கிறதுதான் ரயில்வே போலீஸ் கடமை...”

“சரி... புறப்படுங்கய்யா... அந்தம்மாவும் வரணும்... அவங்க திருடுவதாய் கூறப்படுற குற்றச்சாட்டையும் விசாரிக்கணும்...”

இப்போது, பண்ணையாள், தாமரைப்பாண்டியனைக் கோபத்தோடு பார்த்தபடி, தமிழ்ச்செல்வியின் அருகே வந்து நின்று கத்தினான்.

"ஏய்.. போலீஸ்! திருடனது என்று குற்றச்சாட்டு வந்தால், இந்தத் தாமரைப்பாண்டிதான் ஒருவகையில் குற்றவாளி... மலேசியாவுலே ஓகோன்னு வாழ்ந்த இந்தப் பெண்ணையும், இதோட குடும்பத்தையும் தமிழ்நாட்டில குட்டாம்பட்டியில நடுத்தெருவுல நிறுத்துனவன் இவனும் இவன் அப்பனும்... ஏண்டா... என்னை முறைக்கே... நீயுமாச்சு.... ஒன் அப்பனுமாச்சு.... ஒன்னோட சேர்ந்தால் எனக்கும் கிடைக்கும்... எத்தன வருஷய்யா.... ஒன்பது வருஷந்தானே..."

சர்தார்ஜி, சமரசக் குரலில் பேசினார். அவர் ஆங்கிலத்தில் பேசியதால், போலீஸ்காரர்கள் அடக்க ஒடுக்கமாகக் கேட்டார்கள்.

"இன்ஸ்பெக்டர்! இந்தம்மா... திருடுனதாய் வாதத்துக்கு ஒப்புக் கொண்டாலும், அது குட்டாம்பட்டியில் நடந்த சமாச்சாரம்... ஒங்களுக்கு சம்பந்தமில்லாதது... இங்கே என்ன நடந்தது என்கிறதுதான் ஒங்க சமாச்சாரம். மிக சமீபமாய் இருக்கிற போலீஸ் ஸ்டேஷன்ல இவங்களை ஒப்படைக்கணும்... இதுதான் ஒங்க டூட்டி..."

"ஓ.கே. ரேணிகுண்டா போலீஸ் ஸ்டேஷன்ல ஒப்படைக்கேன். அந்தம்மாவையும் வரச் சொல்லுங்க... புகார் எழுதிக் கொடுக்கணும்."

"என்ன ஸார் நீ சும்மாச் சும்மா வம்பன் மாதிரியே பேசுறே... மிக சமீபமாய் இருக்கிற போலீஸ் ஸ்டேஷன்... மெட்ராஸ் சென்ட்ரல்தான்... ரேணிகுண்டா டவுனுக்குள்ளே இருக்கிற போலீஸ் ஸ்டேஷனுக்கு போகிறதுக்கு முன்னாடி, ரயிலுல சென்னை போயிடலாம்...."

"நோ... நோ... ரேணிகுண்டாதான்..."

"நை... நை.... மெட்ராஸ் சென்ட்ரல்தான்."

இதற்குள் ரயில் சீக்கிரம் புறப்பட வேண்டும் என்று நினைத்த பயணிகள், நவாப்ஜான் கோஷ்டியுடன் சேர்ந்து "சென்ட்ரல் போலீஸ் ஸ்டேஷன்... சென்ட்ரல்" என்று கத்தினார்கள். சில ஊர் அபிமானிகள் "ரேணிகுண்டா ரேணிகுண்டா" என்று காரணம் புரியாமல் கத்தினார்கள். ஒரே கூச்சல். இதனால் பிளாட்பாரத்திற்கு வருவதை கௌரவக் குறைச்சலாக நினைத்த ஒரு அதிகாரி, முதல் வகுப்புப் பெட்டியில் இருந்து இறங்கினார். முன்பு, தமிழக அரசில் எஸ்.பி.யாக இருந்தவர். சிவிலியன் ஆடையில் இருந்த அவரைப் பார்த்து ரயில்வே போலீஸார் சலூட் அடித்தார்கள். பலராமன், அவர் முன்பே பௌவியமாகப் போய் நின்றான். நவாப்ஜான், அர்த்தத்துடன் சலூட் அடித்தான். அவரும் புரிந்து கொண்டார். ஒரு தடவை, சொந்த முறையில் டில்லிக்குப் போகும்போது, டிக்கெட் இல்லாமல் அல்லாடியவர், நவாப்ஜானால் ரயிலில் இடம் பெற்றவர். நவாப்ஜான் அவருக்கருகே போய் நின்றபடி,

விவகாரத்தை விளக்கினான். பிறகு, "இந்த கிரிமினல் தாமரைப் பாண்டி இன்ஸ்பெக்டரைப் பார்த்து, சங்கேத பாஷையில் கண்ணடிச்சுருக்கான். இதனால இன்ஸ்பெக்டர் அய்யா சம்திங்காய் குதிக்கார்" என்றான்.

அந்த உயர் போலீஸ் அதிகாரி, இன்ஸ்பெக்டரை முறைத்தார். "அந்தப் பெண்கிட்டே கம்ப்ளெயிண்ட் மட்டும் வாங்கிக்கோ... இந்தப் பசங்களை சென்ட்ரல் போலீஸ்ல ஒப்படைச்சிடு... அப்புறம் என்னை ஆபீஸ்ல வந்து பார்... ஓ.கே." என்று சொல்லிவிட்டு இன்ஸ்பெக்டரின் பதிலுக்குக் காத்திராமல் மடமடவென்று போய்விட்டார்.

ரயில்வே இன்ஸ்பெக்டர், அந்தப் போலீஸ் அதிகாரி மீதும், பலராமன் வகையறாக்கள் மீதும் இருந்த கோபதாபங்களை தாமரைப்பாண்டி மேல் காட்டினார். "என்னை எதுக்காகப் பார்த்துடா கண்ணடித்தே.... கண்ணடிச்சே..." என்று அவன் கழுத்திலும், பிடறியிலும் விளாசித் தள்ளினார்.

இந்தச் சமயத்தில் ரயில்வே கார்ட் நீட்டிய புத்தகத்தில், நவாப்ஜானும், பலராமனும் கையெழுத்துப் போட்டார்கள். எல்லோரும் ரயிலுக்குள் ஏறிக் கொண்டார்கள்... கும்பலோடு கும்பலாக நின்ற டில்லிப் பெண்கள், தமிழ்ச்செல்வியை அணைத்த படியே போனார்கள்.

இன்ஸ்பெக்டர் அந்த நால்வரின் கைகளையும் பின்புறமாக வளைத்துக்கட்டி, வேறு ஒரு ரயில் பெட்டிக்குள் ஏற்றினார். ரயில்வே நிலைய அதிகாரி நீட்டிய ஒரு நோட்டு புத்தகத்தில் கையெழுத்துப் போட்ட ரயில் கார்ட், அவசரத்தில் இன்னொரு பெட்டிக்குள் ஏறியபடியே, பச்சைக்கொடியை ஆட்டினார். ரயில் சத்தம் போடாமலே புறப்பட்டது. இதனால் பலர் தடுமாறி தடுமாறி பெட்டிக்குள் ஏறினார்கள். இடறினார்கள்.

அந்த ரயிலின் எஸ்.11 பெட்டி, மீண்டும் முழுமை பெற்றது. தமிழ்ச்செல்வி, இன்னும் பிரமை கலையாமல் பித்துப் பிடித்தவள் போலவே இருந்தாள். கண்கள் குகைகள் போல் ஒளியிழந்து தோன்றின. பக்கத்துப் பெட்டியில் இருந்த மாணவர்களும், மற்ற வர்களும் அந்தப் பெட்டியின் வெளிப்புறத்தை அடைத்து நின்றபடி அவளையே வைத்த கண் வைத்தபடி பார்த்தார்கள். பலராமன் அவர்களை விரட்டினான்.

"அங்கே வந்து இந்த அநியாயத்தைத் தட்டிக் கேட்கத் தெரியல... வேடிக்கையா பார்க்கீங்க... இப்போ நாட்ல எல்லாமோ நல்லாத்தான் நடக்குது... போய் அங்கமுத்து தங்கமுத்து பாடலைப் பாடுங்க... போங்கய்யா.. அட, கொஞ்சம் காத்து வரட்டும் போங்கய்யா."

எல்லோரும் போய்விட்டார்கள். எல்லாமே மாமூலாக இயங்கத் துவங்கின. தமிழ்ச்செல்வியையே உற்று நோக்கிய காஞ்சனா, "இந்த சீனிவாசனை மாதிரி ரொம்ப மோசமான பயல்களாய் இருப்பானுக போலுக்கே" என்றாள். இதற்கு எவரும் பதில் சொல்லாததால், மீண்டும் ஒரு கேள்வியை வலியக் கேட்டாள்.

"நம்ம ரயில் பயல், இந்தக் கலாட்டாவுல என்ன செய்தான்?"

"அதை ஏன் கேட்கிறீங்க.... தமிழ்ச்செல்வி பிடிபட்டதைச் சொன்னவனும் இவன். இன்ஸ்பெக்டர்கிட்டே தாமரைப்பாண்டி கண்ணடித்ததையும் சொன்னவன் இவன். இவன் சொன்னதை வச்சித்தான் இன்ஸ்பெக்டரை மடக்க முடிஞ்சது..."

"இவ்வளவு அநியாயம் கண்முன்னால நடந்தும் போலீஸ்காரன் நடந்துகிட்ட விதத்தைப் பாருங்க..."

"இதுக்குப் பேர்தான் போலீஸ்... இவங்க வச்சுருக்கிற ஆயுதங்கள் தங்களைக் காப்பாத்திக்கவும், அப்பாவிகளை மிரட்டவும்தான். தமிழ்ச்செல்வியை விசாரிக்கணுமுன்னு சொன்னான் பாருங்க."

எல்லோரும் தமிழ்ச்செல்வியையே சொல்லி வைத்ததுபோல் பார்த்தார்கள். அவளோ, குனிந்த தலையை நிமிர்த்தாமல் அந்தப் பேச்சுக்கும் தனக்கும் சம்பந்தம் இல்லை என்பது போலிருந்தாள். அவர்களுக்கு, நன்றி சொல்லவேண்டும் என்றுகூட அவளுக்குத் தோன்றவில்லை. நவாப்ஜான், அவள் மனப்போக்கைப் புரிந்து கொண்டான்.

"ஏம்மா... கலங்குறே... எல்லாமே நல்லா முடிஞ்சுட்டு... இன்னும் கவலைப்பட்டால் எப்படிம்மா..."

"ஒன்னைத் திருடின்னு சொல்லிட்டானேன்னு வருத்தப் படுறியா?"

தமிழ்ச்செல்வி, 'ஆமாம்' என்பதுபோல் தலையாட்டினாள். அப்போது கண்களில் தேங்கிய நீர், அவள் பாதத்தில் பட்டுத் தெறித்தது. ரயில் பயல், மீண்டும் நரி மாதிரி ஊளையிட்டபடியே, அவள் கண்ணீரை, தன் அழுக்கு வேட்டியால் துடைத்து விட்டான். நவாப்ஜான் ஆன்மீகச் சொற்பொழிவை நிகழ்த்தினான்.

"சத்தியம் வெல்லும் என்பது நிரூபணமாயிட்டும்மா. எந்தப் தாமரைப்பாண்டி, நம் தமிழ்ச்செல்வியை குட்டாம்பட்டியில் நாலுபேர் முன்னால அடித்தானோ அவனை அல்லா அடிக்க வச்சுட்டார் பாருங்கோ... எந்தக் கைகளை நீட்டி, ஒரு அபலைப் பெண்ணை அடித்தானோ.... அந்தக் கைகளை அல்லா கட்டிப்

போட்டுட்டார். தமிழ்ச்செல்வி! நீ திருட்டுப் பட்டத்தைப் பற்றிக் கவலைப்படாமல் தர்மம் ஜெயிச்சதற்காகப் பெருமைப்படணும்."

தமிழ்ச்செல்வி, நவாப்ஜானை நேருக்கு நேராகப் பார்த்தாள். அவள் கண்கள், நன்றியில் நனைந்தன. அவன் சொன்னதை யோசித்துப் பார்த்து, ஆமோதிப்பது போல் தலையாட்டினாள். அந்தச் சமயத்தில் ரயில்வே போலீஸ்காரர் உள்ளே வந்தார். வந்ததும் வராததுமாக தமிழ்ச்செல்வியிடம் பேசினார்.

"எம்மா... தாமரைப்பாண்டி உங்களைப் பார்க்கணுமுன்னு சொல்லுறான்... நான் முடியாதுன்னு சொன்னேன்... மனுஷன் ஒரேயடியாய் அழுகிறான்."



அந்த ரயில், திருப்பதி ஆண்டவனின் ரேணிகுண்டாவைத் தாண்டி, முருகனின் அறுபடை வீடுகளில் ஒன்றா அல்லது இல்லையா என்று புராணப் பேச்சாளர்களால் உறுதியாகச் சொல்ல முடியாத திருத்தணி ரயில் நிலையத்தைக் கடந்து கொண்டிருந்தது.

கோவில் இருக்கும் இடத்தில் குடிசைகள் இருக்கும் என்பது போல், தண்டவாளக் கோடுகள் நெடுக ஒரே குடிசைமயம். தொலைவில் கம்பீரமான வேலோடு விளங்கிய கோபுரமும், மலைக்குப் போகும் படிகளும், மற்றொரு பக்கம் தார் ரோடும் மங்கலாகத் தெரிந்தன. சிலர், "முருகா... முருகா" என்று சொன்ன படியே தலையில் குட்டிக் கொண்டார்கள்.

தமிழ்ச்செல்வி, தாமரைப்பாண்டியன் தூதனுப்பிய போலீஸ் காரரை நிமிர்ந்து பார்த்தாள். அதே வேகத்தில், நிமிர்த்திய தலையை, தரை நோக்கிச் சாய்த்தாள். நவாப்ஜான், அந்த போலீஸ் மனிதரைப் பார்த்து அசல் போலீஸ்காரன்போல் அதட்டினான்.

"எதுக்காக அந்தப் பொறுக்கிப் பயலை இவங்க பார்க்கணும்? இவ்வளவு அட்டூழியம் செய்துட்டும் கூப்பிடுறான்னா... அவனுக்கு என்ன தைரியம் இருக்கணும்...? என்ன திமிரு இருக்கணும்...?"

"திமிராய்க் கூப்புடலீங்க.. அந்தப் பயலைப் பார்த்தால் நீங்களே பாவப்படுவீங்க... என் காலைத் தொட்டுக் கும்பிட்டு.. அனுப்பி

வைத்தார்னா... பாருங்களேன்.... என்னம்மா சொல்றீங்க...? உங்க இஷ்டம்..."

தமிழ்ச்செல்வி, இஷ்டப்படாதவள்போல், போலீஸ்காரரை ஏறிட்டுப் பார்க்காமலே கீழே விழுந்த பம்பரம் போல் ஒருச்சாய்ந்து உட்கார்ந்தாள். சர்தார்ஜி, அவளை ஒரு நோக்காய் நோக்கிவிட்டு, பின்னர் நவாப்ஜானைப் பார்த்துப் பேசினார்.

''எனக்கென்னமோ தமிழ்ச்செல்வி அவனைப் போய் பார்க்கிறது நல்லதுன்னு தெரியுது..."

"அந்தக் கொலைகாரப் பயலையா...? கூடாது... கூடாது...."

"மாமா மகன்னு பார்க்க வேண்டியதில்ல. எதிரி எதுக்காகக் கூப்பிட்டான் என்ன நினைக்கான்னு தெரிந்து கொள்றதுல தப்பில்லையே..."

''நீங்க சொல்றது ஒரு வகையில சரிதான்... ஆனாலும் தமிழ்ச்செல்வியின் இஷ்டம்... என்னம்மா சொல்றே...?"

தமிழ்ச்செல்வி, சர்தார்ஜியை நேருக்கு நேராகப் பார்த்தாள். நவாப்ஜானையும், பலராமனையும், பக்கவாட்டில் பார்த்தாள். அந்த ரயில் பயல், அவள் முகத்திற்கு எதிராய் நின்றபடி, 'போகாதே போகாதே' என்று பாம்பு படமெடுத்து ஆடுவதுபோல் கையை ஆட்டினான். தமிழ்ச்செல்வி, சிறிது நேரம் யோசித்தாள். இப்போது அவளிடம் லேசான தெம்பு. பழையது கழிந்து புதியன புகுந்தது போன்ற தீர்க்கப் பார்வை... திட்டவட்டமாகப் பேசினாள்.

"அவனுக்கும் எனக்கும் இனிமேல் தனியாய் எதுவும் இல்லை. எது பேசணுமுன்னாலும் ஒங்க முன்னாலயே அவன் பேசட்டும். நீங்க வாரதாய் இருந்தால்..."

சர்தார்ஜி, தலைப்பாகையைச் சரி செய்தபடியே எழுந்தார். பலராமனும், நவாப்ஜானும் கூடவே எழுந்தார்கள். தமிழ்ச்செல்வியின் பார்வைக்கு இணங்கியதுபோல், மெக்கானிக்கு நாராயணனும் எழுந்தான். ரயில் பயல், தமிழ்ச்செல்வியின் கையைப் பிடித்துக்கொண்டு புறப்பட்டான்.

எல்லோரும் முன்னோக்கிச் சென்ற ரயிலில், பின் நோக்கிச் சென்றார்கள். நான்கைந்து பெட்டிகளைக் கடந்தார்கள். ஒரு பெட்டியின் வாசல் பக்கம், தாமரைப்பாண்டியன், பண்ணையாள், மெட்ராஸ் 'வாத்தியார்', இன்னொரு மீசைக்காரன், குத்துக் காலிட்டு உட்கார்ந்திருந்தார்கள். அவர்கள் கைகள், இப்போது முன் பக்கமாகக் கட்டப்பட்டிருந்தன. இரண்டு பக்கமும் இரண்டு ஆயுதப் போலீஸார் காவல் வேறு . தமிழ்ச்செல்வியை மட்டும் எதிர்பார்த்த

ரயில்வே இன்ஸ்பெக்டர் மெள்ள நழுவி, இன்னொரு பெட்டிக்குள் போய்விட்டார்.

தமிழ்ச்செல்வி கை கட்டப்பட்ட தாமரைப் பாண்டியனை, கண்களை உருட்டிப் பார்த்தாள். பண்ணையாளை நேராய்ப் பார்த்தாள். எதுவும் பேசாமல், சீக்கிரம் புறப்படப் போகிறவள் போல், ஒரு கால் பாதத்திற்குப் பின்னால், இன்னொரு பாதத்தை வைத்தபடி நின்றாள். சர்தார்ஜி, அவள் சார்பில் ஏதோ பேசப் போனார். அதற்குள் தாமரைப்பாண்டியன், தவளை மாதிரி, முகத்தை முன்னால் நிமிர்த்திக்கொண்டு கண்ணீரும் கம்பலையுமாகக் கதறினான்.

"தமிழ்ச்செல்வி... தமிழ்ச்செல்வி... நான் ஒன்கிட்ட நடந்த விதம் தப்புத்தாம்மா... ஒன்னை ஊர்ல கை நீட்டி அடித்த பாவத்துக்கு வட்டியும் முதலுமாய் வாங்கிட்டேம்மா. ஒன் காலுல வேணுமுன்னாலும் விழுறேம்மா. என்னை இதோட விட்டுடும்மா. ஒன்னைக் கையெடுத்துக் கும்பிடுறேம்மா."

தாமரைப்பாண்டி, கட்டிப் போட்ட கைகளை மேலே தூக்கினான். தமிழ்ச்செல்வியின் பாதங்களை நோக்கி, நகர்ந்து நகர்ந்து போனான். தமிழ்ச்செல்வி, லேசாய் விலகிக் கொண்டாள். அவனைக் குனிந்து பார்த்தாள். பார்வையை விலக்காமலே நின்றாள். பிறகு, முகத்தைத் திருப்பிக்கொண்டாள். தாமரைப்பாண்டி, பிச்சைக்காரப் பாண்டியானான்.

"பழையதை மறந்துடும்மா. எங்கப்பன் பேச்சைக் கேட்டு... கெட்டுப் போயிட்டேன், செல்வி. ஆயிரந்தான் இருந்தாலும், நான் உன் மாமா மகன். நீ என்ன சொன்னாலும் கட்டுப்படுறேன். ஊருக்குப் போனதும் ஒன் சொத்து முழுசையும் தந்துடுறேன் செல்வி... தயவு செய்து கருணைக் காட்டு செல்வி. என் கையெல்லாம் வலிக்கு...."

பலராமன், கத்தினான்.

"இப்பவே வலிக்குன்னா எப்படிடா... சென்ட்ரல் வரட்டும். அங்கே இருக்கிற போலீஸ் ஸ்டேஷன்லதானே ஒனக்கு மரியாதை இருக்குது... இப்பவே கத்துனால் எப்டி?"

நவாப்ஜான் பலராமனை அதட்டினான்.

"பேசாமல் இருடா... அந்தக் கஸ்மாலத்தைப் பார்க்க கண்ராவியாய் இருக்குது."

"எனக்குக் கூடத்தான். ஆனாலும்... நம்ம ஸிஸ்டரை என்ன பாடு படுத்தினான்."

தமிழ்ச்செல்வி, எல்லோருக்கும் முதுகைக் காட்டியவாறே, ரயில் ஜன்னலைக் குனிந்து பார்த்து, வெளியே நகராமலே நகர்வதுபோல் காட்டிய மரங்களையும், மலைகளையும் பார்த்தாள். தாமரைப் பாண்டியன், "செல்வி... செல்வி... தப்புச் செய்தவனுக்கு மன்னிப்பே கிடையாதா....? கிடையாதா....? " என்று கேள்விமேல் கேள்வியாகக் கேட்டுக் கொண்டிருந்தான். பண்ணையாள், "இந்தப் பையன் திருந்திட்டாம்மா..." என்று அவ்வப்போது குரல் கொடுத்தான். மெட்ராஸ் 'வாத்தியார்' "கஸ்மாலத்தைக் காலால உதறி எறிம்மா. அந்தக் கயிதையை, நீ என்ன சொன்னாலும், அதுக்குக் கட்டுப்பட வைக்கேன்." என்றான்.

தமிழ்ச்செல்வி, சட்டென்று திரும்பினாள். அந்தச் சமயத்தில் விவகாரத்தை ஆழம் பார்ப்பதற்காக உடம்பை எங்கேயோ மறைத்து வைத்துக்கொண்டு, முகத்தை மட்டும் காட்டிய ரயில்வே இன்ஸ்பெக்டரைப் பார்த்து, அமைதியாகச் சொன்னாள்.

"இன்ஸ்பெக்டர் ஸார்... அவங்களை விட்டுடுங்க..."

"விட்டுடலாம்... ஆனால், இது குடும்ப விவகாரமுன்னு நீங்க... வாக்குமூலம் மாதிரி எழுதிக் கொடுக்கணும்...."

"எது எழுதி வாங்கணுமுன்னாலும் எஸ்.11 பெட்டிக்கு வந்து எழுதி வாங்கிக்கலாம்."

தமிழ்ச்செல்வி, புறப்படப் போனாள். தாமரைப்பாண்டி, "ஊருக்குப் போனதும், ஒன் சொத்தை ஒப்படைக்கேன்... ஒன் மனசு... பெரிய் மனசு..." என்று உளறிக் கொட்டினான். உடனே அவள், "நான் யார்கிட்டேயும் இப்போ எதையும் கேட்கிற நிலையில் இல்லை.... மனச்சாட்சி இருந்தால்... அது சொல்றபடி நடந்தால் போதும்..." என்று சொல்லிவிட்டுத் திரும்பிப் பாராமலே தனியாய் நடந்தாள். ரயில் பயல் மட்டும், அவள் பின்னால் நடக்க முடியாமல் ஓடினான்.

இதற்குள் ரயில்வே இன்ஸ்பெக்டர் சொல்லப் பொறுக்காதது போல் தாமரைப்பாண்டியன் கையில் கட்டிய கயிற்றை அவிழ்க்கப் போனார். சர்தார்ஜி, இன்ஸ்பெக்டர் கைகள் இரண்டையும் கெட்டியாகப் பிடித்தபடியே, ஆணித்தரமாகப் பேசினார்.

"மொதல்ல.... இந்த ஆசாமி... அந்தப் பொண்ணோட சொத்து முழுவதையும் ஒப்படைக்கறதாய் எழுதித் தரணும்... தமிழ்ச் செல்வியை, கடத்த முயற்சி செய்ததை ஒப்புக்கொள்ளணும். அப்போதான் கட்டை அவிழ்க்கலாம்."

"கண்டிப்பாய் எழுதிக் கொடுக்கேன்... இந்தக் கட்டை அவிழ்த்த உடனேயே எழுதிக் கொடுத்துடுறேன், ஸார்...""

"சரி... எழுதி முடிச்சுட்டு நாங்க இருக்கிற இடத்துக்கு வாங்கோ."

சர்தார்ஜியும் நவாப்ஜான் கோஷ்டியும், கட்டவிழ்த்த இன்ஸ்பெக்டரையே சிறிது நேரம் பார்த்துவிட்டு, வெளியேறினார்கள். அவர்கள் தத்தம் இருக்கையில் உட்கார்ந்ததும், தமிழ்ச்செல்வி அவர்களைத் தெளிவாகப் பார்த்தாள். பலராமன் மனங்கேளாமல் கொட்டினான்.

"எனக்கென்னமோ நீ அவசரப்பட்டுட்டேன்னு தோணுதும்மா..."

சர்தார்ஜி, விளக்கினார்.

"எனக்கு அப்படித் தோணல... இப்போ தமிழ்ச்செல்வி சம்மதிக்கலன்னு வச்சுக்குவோம்... தாமரைப் பாண்டியனை போலீஸ்ல ஒப்படைப்பாங்க.... அங்கேயும் தமிழ்ச்செல்வியைத் திருடிட்டதாய் சொல்வான். ஜாமீன்ல வெளில வருவான். கோர்ட்ல வழக்குத்தான் நடக்கும். நியாயம் நடக்காது."

"நீங்க வேற... சென்ட்ரல் ஸ்டேஷன்ல இருக்கிற போலீஸ் எங்களுக்கு நல்லாவே தெரிஞ்சவங்க. அங்கே இவனை விசாரிக்கிற விசாரிப்புல ஒன்று ஒன்பது வருஷம் உள்ளே போகணும். இல்லன்னா எல்லாச் சொத்தையும் சிஸ்டர்கிட்டே கொடுத்தாகணும்... எனக்கென்னமோ சமாதானத்திற்குச் சம்மதிக்கப் படாதுன்னு தோணுது."

"அவன் ஜெயிலுக்குப் போறதால தமிழ்ச்செல்விக்கு லாபமில்லே... இப்போ விட்டுக் கொடுத்தால்தான் லாபமுன்னு நினைக்கேன்...."

"நான் லாப நட்டம் கருதி அவன் கட்டை அவிழ்க்கச் சொல்லல... அவனுக்காக மட்டும் அப்படிச் சொல்லல. ஏனோ அவங்களைப் பார்த்ததும் என் மனசு கேட்கல... மனசுல தோணுனதைச் சொல்லிட்டேன். தப்பாவும் இருக்கலாம்... சரியாவும் இருக்கலாம். சில சமயம் நம் விருப்பத்துக்கு விரோதமாகவே எண்ணங்கள் வாரதுண்டு. அந்த மாதிரி எனக்கு இப்போ வந்துட்டு... எனக்கு, எதிரி மாட்டிக்கிட்டான்னு சந்தோஷந்தான் வரணும்... ஆனால், அழுகைதான் வருது... அவலந்தான் நிக்குது... எப்படின்னு சொல்லமுடியும்... ஏன்னு சொல்லத் தெரியல..."

டில்லிப் பெண்களில் கல்யாணமானவள், "இதுதான் பாரதப் பெண்ணோட பண்பாடாக்கும்" என்றாள். உடனே, கல்யாணம் ஆகாத காஞ்சனா, அவள் காதில் தமிழ்ச்செல்வியை மலேசியக்காரி என்று கிசுகிசுத்திருக்கிறாள். இதனால் அவள் மீண்டும், "இதுதான் தமிழ்ப் பெண்களோட பண்பாடாகும்." என்று திருத்தம் கொடுத்தாள்.

மெக்கானின் நாராயணன், சர்தார்ஜியிடம் ஒரு விளக்கம் கேட்டான்.

"ஆமா ஸார்... இந்த தாமரைப்பாண்டிப் பயல், ஊர்ல வீராதி வீரன் மாதிரி அலட்டியிருக்கான். ரேணிகுண்டாவுல சூராதி சூரன் மாதிரி தமிழ்ச்செல்வியைக் கடத்தப் போனான். கடைசியில் அவள் காலுலயே விழுறான். இதனோட தாத்பரியம் என்ன சர்தார்ஜீ..."

"நல்லா கேட்டப்பா ஒரு கேள்வி... இந்த மாதிரி 'ஆ ஊ'ன்னு அலட்டிக்கிறவங்க அடிப்படையில கோழையாய் இருப்பாங்க... இப்படி மிரட்டுனவங்களை மிரட்டிப் பார்த்தால், நம் தலையைப் பிடிக்கப் போகிறவன், காலைப் பிடிப்பான்... இதுதான் மனோதத்துவம். உதாரணமாய், ஒருத்தன் கத்தியைப் பார்க்கும் போதெல்லாம் பயப்பட்டால் அவனைப் பயந்தாங்கொள்ளின்னு உலகம் சொல்லும்... ஆனால், மனோதத்துவப்படிப் பார்த்தால் அந்த ஆசாமி மனசுக்குள்ளே யாரையோ கொலை செய்ய துடிச்சுட்டு இருக்கான்னு அர்த்தம். இப்படி கோழைகளை வீரர்கள் மாதிரியும், வீரர்களை கோழைகள் மாதிரியும், உலகுக்கு சித்தரித்துக் காட்டுறது மனோ விசித்திரம். மேடையில ரத்த ஆறு ஓடும். அப்படி இப்படின்னு முழங்கிப் பேசுற தலைவன் ஒரு கோழை.... அந்தக் கோழையை வீரனாய் நினைத்து அப்பாவி மக்கள் நாட்டை அவன்கிட்டே ஒப்படைக்கிறாங்க... இந்தக் கூத்து நம்ம நாட்லயும் நல்லாவே நடக்குது... இட்லர், முஸோலினி, இவங்கெல்லாம் வீரர்களாய் காட்டப்பட்ட கோழைகள். இதனால்தான் அவங்க தலைமையேத்த ஜெர்மனியும் இத்தாலியும் அவமானப்பட்டது."

சர்தார்ஜி, இன்னும் பேசிக்கொண்டே போயிருப்பார். அதற்குள் ரயில்வே இன்ஸ்பெக்டரும், தாமரைப்பாண்டியும் உள்ளே வந்தார்கள். "நீ கொடுப்பா..." என்று இன்ஸ்பெக்டர் சொல்ல தாமரைப்பாண்டி தன் கையில் இருந்த காகிதத்தை, "இந்தா செல்வி..." என்று சொன்னபடியே, அவளிடம் நீட்டினான். அவள் அதைப் பார்க்காமலே வாங்கி கையில் வைத்துக் கொண்டாள். பிறகு, தான் ஏற்கெனவே எழுதி வைத்ததை, கரம் நீட்டிய தாமரைப் பாண்டியனிடம் கொடுக்காமல், இன்ஸ்பெக்டரிடம் கொடுத்தாள்.

காஞ்சனா, களுக்கென்று சிரித்தாள். உடனே எல்லோரும் அவளையே பார்த்தார்கள். சிரிப்புக்குக் காரணம் சொல்ல வேண்டிய கட்டாயத்தில், அவள் விவரம் கொடுத்தாள்.

"இவங்க ரெண்டு பேருக்கும் இடையில நடந்த ஊடலை, நினைச்சுச் சிரித்தேன். ரத்தம் தண்ணீரைவிட அழுத்தமாச்சே... தாய் மாமா மகன் என்கிற பாசமோ... அத்தை மகள் என்கிற ஆசையோ போயிடுமா என்ன...? உட்காருங்க... மிஸ்டர் தாமரைப்பாண்டி."

தாமரைப்பாண்டி, தனது சொந்த இருக்கை மாதிரி உட்கார்ந்தான். அப்போதுதான் நவாப்ஜான் குழுவிற்கு, அந்த எண்ணம் ஏற்பட்டது. ஏன் அவங்களைச் சேர்த்து வைக்கப்படாது? அவனைப் பார்த்தால், திருந்துனவன் போலத் தோணுது.... தமிழ்ச்செல்வியின் பெருந்தன்மையை இப்போ புரிஞ்சிருப்பான். நவாப்ஜான் காஞ்சனாவைப் பார்த்து, மேலும் ஏதாவது பேசும்படி சைகை செய்தான். அவளும், காதல் புரோக்கர்போல் பேசினாள்.

"தமிழ்ச்செல்வி மேடம்... பழையதைக் கெட்ட கனவாய் நெனைச்சு ஒங்க மாமா மகனைப் புதுசாய்ப் பாருங்க... ஒங்க பார்வைக்காக... தவம் கிடக்கவர்போல் இருக்கார் பாருங்க..."

தமிழ்ச்செல்வி, தாமரைப்பாண்டியனை ஏறிட்டுப் பாாத்தாள். பிறகு ஏதோ ஒன்றை எல்லோருக்கும் அறிவிக்கப் போகிறவள்போல், அனைவரையும் பொதுப்படையாகப் பார்த்துவிட்டு, பேசப் போனாள்.



அந்த ரயில், பம்பாய், டில்லி, கல்கத்தா ஆகிய மும்பெரும் ரயில் மார்க்கங்களுக்கும் நுழைவாயிலான பேஸின் பிரிட்ஜ் ரயில் நிலையத்திற்கு வந்து நின்றது.

அரக்கோணத்தில் தூறலாக விழுந்த மழை, இங்கே புயல் மழையாகத் தூள் பரப்பியது. சற்றுத் தொலைவில் தெரிந்த அனல் மின்சாரக் கோபுரங்களும், ரயில் நிலையத்திற்கு மேலேபோன சாலைப் பாலமும், மழையால் கழுவப்பட்டு மொக்கையாகத் தோன்றின. ரயில் ஊளைமேல் ஊளையாக ஒலி எழுப்பியது. ஆனால், சென்ட்ரல் ரயில் நிலையத்திற்குள் அது நுழைவதற்குப் பச்சை விளக்குக் காட்டப்படவில்லை.

தமிழ்ச்செல்வி, சந்தடிச் சத்தம் அடங்கட்டும் என்பதுபோல், சிறிது காத்திருந்தாள். பிறகு, அது அடங்காத சத்தம் என்பதை உணர்ந்து, சத்தம் போட்டு மனதைத் தேங்காய்மாதிரி உடைத்துக் காட்டினாள். காஞ்சனாவை கண்களால் கண்டிப்புடனும், கண்டனத்துடனும் பார்த்தபடியே கர்ஜித்தாள்.

"மேடம்... நான் மட்டமாய் இருக்கலாம்... ஆனால், நீங்க நினைக்கிற மாதிரி மட்டமில்லை..."

"நான் ஒங்களை மட்டம் தட்டிப் பேசலியே...?"

“இதைவிட எப்படித்தான் மட்டம் தட்டமுடியும்? நான் சுயமரியாதைக்காரி... கோழையல்ல... தனித்திருக்கவும் தயாராகி விட்டவள். ஒரு பெண்ணுக்கு ஆண்துணை வேணும் என்கிறதுக்காக எவனை வேண்டுமானாலும் கட்டிக்கலாம் என்கிற கட்சியல்ல என் கட்சி... நல்ல மனிதருக்கு ஒரு சொல்... நல்ல மாட்டுக்கு ஒரு அடி என்பது பழமொழி...”

“ஐ அம் ஸாரி.”

“நான் என் கதை முழுசையும் ஒப்புச்சேன். நீங்க அதை கொச்சைப்படுத்திட்டது மாதிரி தோணுது... நான் யாரையும் மாமா மகன்னு பாசத்துல மன்னிக்கலே... மனிதாபிமானத்திலே மன்னித்தேன்... அது மானங் கெட்டத்தனமாகாது...”

“சரி... இதுக்கு மேலே இந்தப் பேச்சு வேண்டாம்.”

தமிழ்ச்செல்விக்கு விளக்கம் சொல்லப்போன காஞ்சனா, சர்தார்ஜி இறுதியாகச் சொன்ன கட்டளைப் பேச்சைக்கருதி, வாயடைத்துப் போனாள். ரயில் பயல், “ஏஹே... ஹே...” என்று சொல்லிக் கைதட்டினான். தாமரைப்பாண்டியன், தலை கவிழ்ந்த படியே எழுந்தான். அங்குமிங்கும் பராக்குப் பார்ப்பவன்போல் நின்றுவிட்டு, நகரப் போனான். சர்தார்ஜி, தீர்ப்பளிப்பவர் போல் பேசினார்.

“இந்தாப்பா... ஒன்பேரு என்ன... ஆம். தாமரைப்பாண்டி.... தமிழ்ச்செல்வி பெருந்தன்மையாய் நடந்துட்டு. நீயும் பெருந்தன்மையாய் நடந்துக்கதுதான் நல்லது... அதாவது உனக்கு இந்தப் பொண்ணு... நினைத்தால் ரயில்வே தொழிலாளர் ஒத்துழைப்போடு உன்னை ஒரு வருஷத்துக்காவது கம்பி எண்ண வைக்கமுடியும். ஆனால் அந்தம்மா மனசு கேட்கலே.... அதனால நீ அவங்க கேட்காமலே கொடுக்கணும்.”

தாமரைப்பாண்டி, “கண்டிப்பாய் ஊருக்குப் போனதும் முதல்வேலை.... அதுதான்.” என்று சொன்னபடியே திரும்பினான். முதுகைக் காட்டினான். அப்புறம் முழுவதுமாக மறைந்தான் பலராமன் சூடுசூடாய் பேசினான்.

“இந்தப் பயலை விட்டது தப்பு.. எனக்கென்னமோ அந்தப் பயல் திருந்துனது மாதிரி தெரியல. நரிப்பயல்; ஓநாய்ப்பயல், நம்பப் படாது. தமிழ்ச்செல்விக்கு சொத்தக் கொடுப்பான்னு நம்பிக்கை இல்ல.”

“அப்படிப்பட்ட உபகாரம் செய்யாட்டியும் உபத்திரவம் செய்யாமலாவது இருப்பானா... எனக்கென்னமோ அவனை விட்டிருக்கப்படாதுன்னு தோணுது சர்தார்ஜி.”

"நீ வேறப்பா. சென்ட்ரல் போலீஸ்காரன், நீங்க சொல்றதை யெல்லாம் கேட்பான்னு நினைக்கே... அஞ்சு ரூபாய் பத்து ரூபாய் கிராக்கிகள் விஷயத்துல நீங்க சொல்றதை கேட்டாலும் கேட்பான். ஐயாயிரம் ரூபாய் பத்தாயிரம் ரூபாய் ஆசாமிகள் சம்பந்தப்பட்ட விஷயத்தில் ஒங்களைக்கூட உள்ள தூக்கிப்போடுவான். இதுதான் இந்த நாட்டோட தலைவிதி. போலீஸ்காரன் செய்யாத ஞாயத்தை நாம் செய்துட்டோம். அவ்வளவுதான்... சே மழை என்ன இப்படி பெய்யுது... யோவ்... நவாப் இப்படி வாய்யா... ஒன் தலையில தண்ணீர் குளம் மாதிரி நிக்கது தெரியல..."

"எனிக்கு இதுல்லாம் அத்துபடி ஸாரே... மெட்ராஸுக்கு என்ன வந்ததுன்னே தெரியல... ஒரு வருஷமாய் ஒரே புயல் மழை. செத்தும் கொடுத்தான் சீதக்காதி. இந்த மழை என்னை மாதிரி ஏழைங்களை பெய்தும் கெடுக்கும், பெய்யாமலும் கெடுக்கும். பெய்தால் கார்ப்ப ரேஷன் பள்ளிக்கூடம். பெய்யாட்டி கார்ப்பரேஷன் தெருக்குழாய்... என் சம்சாரமும் குழந்தைங்களும் இந்நேரம் எந்த கார்ப்பரேஷன் ஸ்கூலுல இருக்குதுங்களோ... டி.வி.க்காரன் வந்தால் தான் சோறு போடுவாங்கோ... அவன் மழை நின்னால்தான் வருவான்... அடச்சீ... உட்காருடா... ஒன் நாய்னாவை யாரும் தூக்கிட்டுப் போயிட மாட்டாங்க.... மவனே... இறங்குனே... முதுகு பிஞ்சுடும்...."

காஞ்சனா, தலைமுடியை முன்புறமாகக் கொண்டு வந்து பின்னலிட்டபடியே கேட்டாள்.

"இவன் எதுக்காக இங்கேயே இறங்கப் பார்க்கான்."

"நாங்கெல்லாம் இவனுக்கு சின்ன நாய்னாக்கள்தான். இவனுக்கு ஒரேஒரு நாய்னா... மெக்கானிக் சுந்தரம்... இந்த ரயில் புறப்படாததால... இறங்கி... எலெக்டிரிக் ரயிலுல போகப் பார்க்கான்... சுந்தரத்தைப் பார்க்க அவ்வளவு ஆசை... பயலுக்கு..."

ரயில் பயல், உள்ளே வந்து நவாப்பை செல்லமாக அடித்தான். பிறகு, தமிழ்ச்செல்வியைத் தொட்டுக்காட்டி, தலையை மறுத் தாட்டிக் காட்டினான். அதாவது அந்தம்மாவை இடையில் விட்டு விட்டுப்போக மாட்டானாம்.

அந்த ரயிலின் தவத்திற்கும், அதன் ஊளை மந்திரத்திற்கும் பயன்கிடைத்தது. சென்ட்ரல் ரயில் நிலைத்திற்குள் நுழைவதற்கு, பச்சை விளக்கு பளிங்குக் கண்போல் மினுக்கிக் காட்டியது. டிரைவருக்கு அவசரமோ என்னமோ... எடுத்த எடுப்பிலேயோ மேகம் போட்ட இடிக் கூச்சலும், ரயில் போட்ட தடிக்கூச்சலும், ஒருவித பயங்கரத்தை உருவாக்கின.

எல்லோரும் பரபரத்து இயங்கியபோது, ரயில் நிலையத்திற்குள் வந்துவிட்டது. அந்த இடி மழையிலும், அப்படி ஒரு கூட்டம்.

மெக்கானிக் நாராயணன் ஸ்பேனர் கருவிகள் கொண்ட பெட்டியைத் தூக்கினான். சர்தார்ஜி, தமிழ்ச்செல்வியின் இரண்டு கைகளையும் பிடித்தபடி, "நீ என்கூடப் பிறக்காத ஸிஸ்டர்மா... இந்தா என் விசிட்டிங் கார்ட்..... எந்தச் சமயத்திலயும் நீ என் உதவி கோரி வரலாம். நான் இல்லாட்டியும் ஒன் அண்ணி, ஒன்னை உபசரிப்பாள்" என்றார் தழுதழுத்த குரலில். தமிழ்ச்செல்வியால், பேச முடியவில்லை. அவர் கைகளை எடுத்து, கண்களில் ஒற்றிக் கொண்டாள். டில்லிப் பெண்கள், "எங்க வீட்டுக்கு வாங்க" என்று தமிழ்ச்செல்வியிடம் சொல்லிவிட்டு, விலாசம் கொடுக்காமலே வெளியேறினார்கள். இந்த மாதிரிச் சமயங்களில், ரயில் நிற்பதற்கு முன்னோடியாக மெள்ள நகரும்போதே, கீழே குதித்து, சுந்தரத்திடம் ஓடிப்போகும் ரயில் பயல், அவளோடு ஒட்டி இருந்தான். அவள் எழுந்தபோது கூடவே, ஒட்டியபடியே எழுந்தான்.

சர்தார்ஜி, போய்விட்டார். நவாப்ஜான், பலராமன், நாராயணன் வெளியே வந்தார்கள். தமிழ்ச் செல்விக்காகக் காத்து நிற்பதுபோல் பெட்டிக்குள் பார்த்தார்கள். அவள் கீழே இறங்கியதும், அவளை மொய்த்துக் கொண்டார்கள். மெக்கானிக் நாராயணன், தட்டுத் தடுமாறிப் பேசினான்.

"இந்த எஸ்.11 பெட்டி ஒன் தாய்வீடு மாதிரிம்மா. நாங்கெல்லாம் ஒன்கூடப் பிறக்காத சதோதரங்க... நீ எப்போ வேணுமுன்னாலும் வரலாம். போகலாம்... ஊருக்குப் போய் சொத்தைக் கேட்டுப்பாரு... ஏதாவது கஷ்டம் வந்தால்... நாங்க இருக்கோம் என்கிறதை மறந்துடாதே..."

தமிழ்ச்செல்வி, புடவைத் தலைப்பால் கண்களைத் துடைத்துக் கொண்டாள். தன்னை அறியாமலே நாராயணன் கையையும், நவாப்ஜான் கையையும் பிடித்துக் கொண்டாள். பலராமன்தான் கத்தினான்.

"சிஸ்டரைத் தங்க வைக்கிறதுக்கு ஒரு வழி செய்யாமல் ஏண்டா பிரிவுபசார விழா நடத்துறீங்க....? சே... பேஜாரு பிடிச்ச பயடா... சிஸ்டராலே எங்கேயும் போக முடியாதுடா...?"

தமிழ்ச்செல்வி, அந்த ஏழைகள்... இல்லங்கள் இடி மழையில் காணாமல்போய், குடும்பங்களும், நிர்க்கதியாய் நிற்கும் என்பதைப் புரிந்து கொண்டு திடமாகப் பேசினாள்.

"நான் இன்னைய இரவை இந்த ஸ்டேஷனுக்குள்ளேயே படுத்துக் கழிச்சிடுவேன். காலையில நான் தங்கியிருக்கிற வீட்டுக்குப் போவேன். நீங்க போங்கண்ணா... ஒங்க பாசத்தை... பாச..."

தமிழ்ச்செல்வி விம்மினாள்.. அந்த தோழர்கள் காட்டிய அன்பு வெள்ளத்தில் மூழ்கி மூழ்கி மூச்சு வாங்கினாள். இதற்குள் எங்கேயோ போய்விட்டதாக கருதப்பட்ட ரயில் பயல், ஒருவரின் கையைப் பிடித்து, அவரை இழுத்துக் கொண்டு, வருவது மாதிரி வந்தான். மெக்கானிக் சுந்தரம்... ஐம்பது வயதிருக்கும். பக்கவாட்டில் படர்ந்த மேனி. வட்டமாகக் குனியாமலும், நெட்டையாகக் கோணாமலும் உள்ள முகம். அந்தப் பயலை, வாஞ்சையோடு பார்த்தபடியே உள்ளே வந்தார். அவர், நவாப்ஜான், கோஷ்டியை நெருங்கியதும், ரயில் பயல், தமிழ்ச்செல்வியின் கையைப் பிடித்த படியே, நவாப்ஜானைப் பார்த்து, சுந்தரத்திடம் சொல்லும்படி, சைகை செய்தான். உடனே, நவாப், சுந்தரத்திடம், தமிழ்ச் செல்வியைப் பற்றிச் சுருக்கமாகச் சொல்லிவிட்டு, "சிஸ்டரு... இன்னிக்கு நைட்ல ஒங்க பொறுப்புல இருந்தால் நல்லது. இந்த மழையிலயும், இன்னும் வேறு சில காரணத்தாலயும் அது வெளில போக முடியாது" என்றான்.

சுந்தரம் சிறிது யோசிப்பவர்போல் மோவாயைக் கையால் தடவினார். உடனே ரயில் பயில், அவர் கையை எடுத்து, அவர் இடுப்பை அடித்துக் கோபத்தைக் காட்டினான். பிறகு, தமிழ்ச் செல்வியின் கையைப் பிடித்துக் கொண்டு "அம்... அம்.." என்றான். சுந்தரம் ஒரு முடிவுக்கு வந்து, அதை தமிழ்ச்செல்வியிடமே சொன்னார்.

"ஒன்னோட கதையைக் கேட்டதில் இருந்து கஷ்டமாய் இருக்குது... ஆனாலும் இந்தப் பயலோட கதையைவிட ஒன் கதையோ என் கதையோ பெரிசில்ல... உனக்கு ஆட்சேபம் இல்லன்னா இன்னிக்கு நீ என் ஓர்க் ஷாப்புல தங்கிக்கலாம்."

தமிழ்ச்செல்வி தயங்கியபோது, ரயில்பயல், நரிப்பயலாய் ஊளையிட்டு, அவள் கையைப் பிடித்து இழுத்தான். உடனே அவளும், "அப்போ வாறேன்... உங்களைக் கண்டிப்பா வந்து பார்ப்பேன்... நம்ம உறவு ரயில் சிநேகிதம் இல்ல... ரத்தத்துக்கும் அப்பாற்பட்ட உறவு" என்று ரயில்வே நண்பர்களிடம் சொன்ன படியே, சுந்தரத்தின் பின்னால் நடந்தாள். வழியில் டில்லிப் பெண்களைப் பார்த்தாள். சற்றுத் தொலைவில், அதோ அந்த சீனிவாசனும் போய்க் கொண்டிருந்தான். இப்போதாவது வெறுங்கழுத்து காஞ்சனா அவனை அங்கீகரிப்பாள் என்று அவனுக்குள் ஒரு ஆசை. அந்த ஆசைக்குள் அவன் அல்லாடிய படியே அவன் "ஓரங்கட்டி" நடந்தான்.

# 20

அந்த ரயில், பெரிய பெரிய உருளைகளும் சின்னச் சின்ன ஸ்பேனர்களும் தொழிலாளர் கூட்டமுமாய் சிதறிக்கிடந்த ரயில்வே தொழிலகத்தை தாண்டிக் கொண்டிருந்தது.

எப்படியோ மழைக்கு மாட்டிக்காமல், வழி நெடுக நேர்க்கோடாய் உள்ள கட்டிட வளாகங்கள் வழியாக உள்ளே வந்தார்கள். சுந்தரம் வழக்கமாகப் படுக்கும் அறைக்குள் ஒரு நார்க் கட்டிலைத் தூக்கிப் போட்டார். பிறகு மடித்து வைத்திருந்த மெத்தையை விரிக்கப் போனார். தமிழ்ச்செல்வி, "வேண்டாங்கையா இதுவே போதும்..." என்று சொன்னபடியே கட்டிலில் போய்ச் சாய்ந்தாள். அவள் கைமடிப்பே தலையணையாகியது. சுந்தரமும், ரயில் பயலும் வெளியே வந்தார்கள். ஒரு பக்கமாக உட்கார்ந்து கொட்டும் மழையிலும், ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டு இருந்தார்கள்.

காலை பிறந்தது. வெயிலும் வந்தது. தமிழ்ச்செல்வி, காலை எட்டு மணியாகியும் எழவில்லை. எந்த நேரத்தில் இருக்கிறோம் என்ற கால பரிமாணத்தைக் கடந்து தூங்கிப்போனாள். அப்போது_

மெக்கானிக் சுந்தரம் காக்கி டவுசரும், வலை பனியனுமாய்க் காணப்பட்டார். ரயில் பயலை இழுத்துக் கெண்டு, ஒரு குழாய்ப் பக்கம் போனார். அந்தப் பயலின் காலடியில் குத்துக்காலிட்டு, நின்றபடியே, அவன் கறைபட்ட பனியனையும், வேட்டியையும் உருவினார். சோப்பை எடுத்து, தேய்த்து தேய்த்து, அந்தத் துணிகளோடு ஒரு போராட்டமே நடத்தினார். அவற்றைக் கசக்கிக் காய வைத்துவிட்டு, பயலை தன் பக்கமாக இழுத்து குழாய் நீருக்குள் திணித்தார். தேங்காய் நாரால் அவன் உடம்பைத் தேய்த்துவிட்டார். பிறகு, ஒரு டிரம்மில் இருந்த நீரை, ஈரச் செம்பால், மொண்டு, மொண்டு ஊத்தினார். தோளில் கிடந்த துண்டை எடுத்து, அவனைத் துவட்டிவிட்டு, அவனுக்காக வாங்கி வைத்த நாலு முழ வேட்டியை அவன் இடுப்பில் சுற்றப் போனார். அவனோ, அதை எடுத்து, அவர் கழுத்தில் இரண்டு பக்கமும் மாலை மாதிரி போட்டு விட்டு, காய்ந்து கொண்டிருந்த தனது வேட்டியை எடுக்க ஓடினான். சுந்தரம் அவனை விரட்டிப் பிடித்து, வேட்டியைக் கட்டினார்.

அந்தப் பயல், அந்த வெயிலிலும் வெலவெலத்து ஆடினான். கைகால்கள் தனித்தனியாக ஆடின. கழுத்துக்கு மேலே தோன்றிய தலை, கம்பு முனையில் குத்தி வைக்கப்பட்ட பெரிய வெங்காயம்

மாதிரி தோன்றியது. கரையான் அரித்த பூவரசு பட்டை மாதிரியான உடம்பைக் காட்டினான். கழுகு பார்த்தால் அவனைத் தைரியமாகத் தூக்கிக் கொண்டு போகும். பிறகு, அவன் உடம்பெங்கும் விரவிய புண்ணையும், கட்டிகளையும் பார்த்துவிட்டு, ஒருவேளை அவனை உண்ணாமல் கீழே போடலாம்.

அந்தப் பணிமனையின் சுவருக்கும், கல்நார் கூரைக்கும் இடையே தோன்றிய புறாக்களை கண்விழித்துப் பார்த்த தமிழ்ச்செல்வி, அந்தப் பயலின் நரங்கு உடம்பை சுந்தரம் தேய்த்து விட்ட நேர்த்தியையும், புதிய வேட்டியை யார் அணிவது என்று அவர்களுக்கு இடையே நடந்த செல்ல விளையாட்டையும் ரசித்த படியே, எழுந்து உட்கார்ந்து மலேயாவில் தனது தாத்தா, தன்னை இப்படிக் குளிப்பாட்டியதை நெஞ்சுருகி நினைத்துப் பார்த்தாள்.

இதற்குள் தொழிலாளர்கள், ஒருவர் பின் ஒருவராக வந்து கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒருவர் பட்டுச்சாமி. சமீபத்தில் தான் அரக்கோணத்தில் இருந்து இங்கே மாற்றப்பட்ட கிழடு. எடுத்த எடுப்பிலேயே கேட்டார்; கண் சிமிட்டலோடு கேட்டார்.

"சுந்தரம்... ஒன் பிள்ளிங்களை அவங்க வரும் போதெல்லாம் துரத்துவே... கையில ஒரு அழுக்குப் பட்டாலே சூள் கொட்டுவே... இந்தச் சிரங்குப் பயலை என்னடான்னா இப்படிக் குளிப்பாட்டுறே... இதுக்கு என்னப்பா காரணம்...? ஏதாவது விசேஷ காரணம் இருக்கணும்.... சும்மா சொல்லுப்பா... இந்தப் பொண்ணு யாருப்பா... சொல்லுப்பா... சும்மா..."

"இந்த மனுஷன் என்னத்த சொல்லுறது? நானே சொல்லுறேன்... ஏண்டி குடியைக் கெடுப்பாள். இலைமறைவு காய்மறைவாய் இருந்துட்டு, இப்போ இங்கேயே வந்துட்டியா?"

தமிழ்ச்செல்வி உட்பட, எல்லோரும் திரும்பிப் பார்த்தார்கள். நாற்பத்தாறு வயதுப் பெண் ஒருத்தி... ஆங்கார ஓங்காரமாய் நின்றாள். பிறகு, தமிழ்ச்செல்வியைப் பயங்கரமாய்ப் பார்த்தபடியே, அவள் இருக்கும் அறையை நோக்கி நடந்தாள். கீழே கிடந்த ஒரு இரும்புக் கம்பியை எடுத்துக் கொண்டாள்.

அந்த ரயில்வே பணிமனையில் சுத்தியல் சத்தங்கள் ஒருவித பயங்கரமான பின்னணியைக் கொடுத்தன. திரைப்படங்களில் கொடூர சம்பவங்களுக்கு முன்னோடியாக வருமே, இசைக் கருவிகளின் பரபரப்பு ஓசை... அப்படி.... ஒய்யாரமான காரியங் களுக்குப் பின்னால், எவ்வளவு பெரிய உழைப்பு, எத்தனை பெரிய கரங்கள் பின்புலமாக உள்ளன என்பதற்கு எடுத்துக் காட்டான, பல தொழிலாளர்கள், ரயில் சக்கரங்களைக் குடைந்து கொண்டும்,

கம்பிகளை வளைத்துக் கொண்டும் உழைப்பு மயமாகத் தோன்றினார்கள். அதைக் கலைக்கும்படி அந்தப் பெண், இரும்புக் கம்பியைக் கையில் பிடித்தபடி, தமிழ்ச்செல்வியை நோக்கித் தாவிய படியே கூச்சலிட்டாள்.

"ஏண்டி குடி கெடுப்பாள்... நரி ஆட்டைக் கடிச்சு... மாட்டைக் குடிச்சு, அப்புறம் ஆளைக் கடிக்கது மாதிரி... என் புருஷன்கூடப் பார்க்கிலே பழகிட்டு, பீச்சிலே பேசிட்டு... இப்போ அவரோட படுக்கையறைக்கே வந்துட்டே.... வாடி என் வீட்டுக்கு ஒன்னைக் கூட்டிட்டுப் போறேன்... சக்களத்தியாய்..."

எல்லோரும் அதிர்ச்சிப்பட்ட அந்த சமயத்தில், தனது புதுவேட்டியை அழகு பார்த்துக் கொண்டிருந்த ரயில் பயல், தமிழ்ச்செல்வியை நெருங்கிக் கொண்டிருந்த அந்தப் பெண்ணைப் குறுக்காய்ப் போய்த் தடுத்தான். அவள் கையை, எக்கிக் குதித்துப் பிடித்து, இரும்புக் கம்பியைப் பிடித்தபடியே, அவள் நகரவிடாமல் கீழே உட்கார்ந்தான். அவள், அந்தக் கம்பியோடு சேர்ந்து குனிந்தாள். அதிகநேரம் குனிய முடியாமல் போனதால், கம்பியை விட்டுவிட்டு நிமிர்ந்தாள். கீழே கிடந்த பயலைக் காலால் இடறினாள். அவன் கழுத்தைப் பிடித்துக் தூக்கிக் கன்னத்தில் மாறி மாறி அறைந்தாள். "இன்னிக்குத் தாண்டா தெரியுது... அந்தப் படுபாவிக்கும் இவளுக்கும் நீ கள்ளப் பிள்ளையாய்ப் பிறந்திருக்கே" என்று அவனை மாறிமாறி அடித்தாள்.

அந்தப் பயலுக்கு, அதைக் கேட்டதும், கொஞ்சம் சந்தோஷ மாய்த்தான் இருந்தது. ஆனாலும், அவள் அடித்த அடியில், பிடித்த பிடியில், சுருண்டு கொண்டு இருந்தான். சுந்தரம், அங்கே துடிதுடித்து வந்தார். அவளிடமிருந்து பயலைப் பிடுங்கிக் கொண்டு, "பெண்டாட்டியை கைநீட்டி அடிக்கிறவன் மனுஷன் இல்லன்னு நான் நினைக்கிறவன். இருபத்தஞ்சு வருஷமாய் இதை விரதமாய் வைத்திருக்கவன். என்னை மனுஷன்ல இருந்து மாத்திடாதடி.... இனிமேல் இவன் மேல் கை பட்டுது... அப்புறம்..."

"ஏன் கள்ளப்பிள்ளையை அடிச்சதும் துடிக்குதோ..."

இதற்குள், எல்லாத் தொழிலாளர்களும், அங்கே கூடி விட்டார்கள். மெக்கானிக் சுந்தரத்தைப் பரிதாபத்துடன் பார்த்தார்கள். இவர்களுக்குத் தலைவர்போல் இருப்பவர் இந்த சுந்தரம். அதிகமாகப் பேசவும் மாட்டார். பேச்சு வாங்கவும் மாட்டார். அப்படிப்பட்டவருக்கு இப்படிப்பட்ட நிலைமை ஏற்பட்டது கண்டு, அவர்களும் திகைத்துப் போய்க் கூடி விட்டார்கள், என்பதற்கு அவர்கள் கரங்களில் இருந்த கருவிகளே சாட்சி கூறின.

தமிழ்ச்செல்வியின் நிலைமையைச் சொல்ல வேண்டியதில்லை, அங்கு நடப்பதற்கும் தனக்கும் சம்பந்தமில்லாதது போன்ற பார்வை... அதுவே... படிப்படியாக மருட்சியாகி, வாயைத் திறக்க வைத்து, கண்களை உருட்ட வைத்து, கையை முன் தலையில் படர வைத்து, உடம்பை சூன்யம்போல் ஆக்கி வைத்து, அவளை அதிர வைத்தது. தலைமுடியைப் பின்னப்போன அவள், இப்போது, தலையையே பின்னுபவள்போல் தோன்றினாள்.

"சபையைக்" கூட்டிவிட்ட திருப்தியில், இரும்புக் கம்பிக்காரி, வழக்குத் தொடுத்தாள்.

"பாருங்கய்யா... இந்த அநியாயத்தை... இந்தப் பயல் ஏழு வருஷத்துக்கு முந்தி எப்போ ஆமை மாதிரி இவர்கிட்டே வந்தானோ... அப்பவே.... இவருக்கு நானும்... எனக்கு அவருமாய் செத்துப் போயிட்டோம். இன்னைக்கு வீட்ல ஒரே மழைக்காடு... கணுக்கால் அளவுக்குத் தண்ணி பெருகி, என் பயல்களோட புத்தகங்க நனைஞ்சுட்டு... எங்கேயோ போன மூத்த பயல் இன்னும் வீட்டுக்கு வரல... எந்த மழையில சிக்குனானோ... எந்த இடியில விழுந்தானோ... இந்த மனுஷன் என்னடான்னா பெத்த பிள்ளைகளைப் பத்திக் கவலைப்படாமல், போன மகன் செத்தானா இருக்கானான்னுகூடத் தேடாமல் இந்த பன்றிப் பயலை கூட்டிட்டு வர ஸ்டேஷனுக்குப் போயிருக்கார். போதாக்குறைக்கு இவளையும் கூட்டிட்டு வந்துட்டார். இதுக்கு என்னய்யா அர்த்தம்...? சொல்லுங்கய்யா... இவளுக்கும், அவனுக்கும் பிறந்த பயல் இவன்னு தானே அர்த்தம்? இதனாலதானே இந்த மனுஷன் இந்த சிரங்கனை குளிப்பாட்டுறார். குலாவுகிறார். இவனே வேற பையனாய் இருந்தால் செய்வாரா... கிட்டத்தான் போவாரா... இப்போ.... அம்மாவையும் கூட்டிட்டு வந்தாச்சு... நடக்கட்டும்... நடக்கட்டும்..."

எல்லாத் தொழிலாளர்களும், அவள் சொல்வதை மௌனமாகக் கேட்டார்கள். தமிழ்ச்செல்வி, அந்த அறையில் இருந்து வெளியேற நினைத்தாள். ஆனால், அந்தம்மா வாசலை மறைத்து நின்றதால், நின்ற இடத்திலேயே நிலையிழந்து நின்றாள். சுந்தரம் குத்துக்காலிட்டு உட்கார்ந்து தலையில் கை வைத்தார். கடந்த ஆறேழு வருடங்களாக, அவள் அந்தப் பயலை சாடை மாடையாகத் திட்டியிருக்கிறாள். ஆனால் இப்படிப்பட்ட வார்த்தைகளை அவள் கொட்டியதில்லை.

சுந்தரத்தை நன்றாகத் தெரிந்து வைத்திருந்த தொழிலாளர்களில் ஒருவர், அவளிடம் அமைதியாகச் சொன்னார்.

"அக்கா... சுந்தரண்ணனை இப்படித் தராதரம் தெரியாமல் பேசுறது தப்பு... அவரைப் பார்த்தாலே தப்பு செய்யத் தோணாது... எங்களுக்கு அப்படிப்பட்ட பெரிய மனுஷ அவரு."

"ஆமாம்மா... இந்த இருபத்தஞ்சு வருஷத்துல..... ஒன்னால அவரைப் புரிஞ்சிக்க முடியலன்னா, நீ பெண்ணாய் இருக்கவே லாயக்கு இல்ல. அப்புறம் பெண்டாட்டியாய் எப்படி இருக்க முடியும்? இவரைப் போய் இப்படிப் பேசுறவங்க வாய் அழுகாமல் போகாது."

இந்தச் சமயத்தில் பழைய பட்டுச்சாமி, புதிய குதர்க்கத்தில் பேசினார்.

"என்னய்யா பேச்சு பேசுறிங்க.... நம்ம குழந்தைகள் மேல தானே நமக்குப் பாசம் வருது...? தான் ஆடாட்டாலும், சதையாடும் என்கிற பழமொழி வந்ததே... இதனால தாய்யா. அந்தம்மா சொல்றதுலயும் நியாயம் இருக்கலாம். இருக்கலாமுன்னுதான் சொல்றேனே தவிர இருக்குன்னு சொல்லல."

கீழே உட்கார்ந்திருந்த சுந்தரம் திடீரென்று எழுந்தார். பட்டுச்சாமியின் முன்னால் போய் நின்றுகொண்டு கத்தினார்.

"என் கேள்விக்குப் பதில் சொல்லுய்யா. பூமி ஏய்யா கீழே விழாமல் இருக்குது....? அது ஆகர்ஷண சக்தின்னு சொல்லுவீங்க.... ஆனால், அந்த சக்தி எப்படிய்யா ஏற்பட்டது? காத்து எப்படிய்யா அடிக்குது... அதைக் கண்ணால பார்க்க முடியுமாய்யா... அதுமாதிரி தான் இந்தப் பயல்கிட்டே நான் வச்சிருக்கிற பாசம்... இது காரணகாரியத்திற்கு அப்பாற்பட்டதுய்யா..."

பட்டுச்சாமி, பட்டும் படாமலும் பதிலளித்தார்.

"நீங்க சொல்றது ஒரு வகையில ஒரே ஒரு வகையில மட்டும் சரிதான். ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்த்தால் தன் பிள்ளைத் தானாய் வளருமுன்னு பழமொழி பேசுது..."

"நான் அதை மாதிரி நினைத்து இவனுக்கு எதுவும் செய்யல.. அப்படிப்பட்ட நெனப்பு வந்துட்டால்... அது வியாபாரமாகிவிடும். சினிமாவுல பார்க்கிற நடிப்பாயிடும். ஏதோ எனக்குத் தோணுது.... செய்யுறேன்.... இவனைப் பார்க்கும்போதும், பார்க்காதபோதும் என்னை அறியாமலே பாசம் வருது... அதை நான் உட்பட யாராலும் இழுத்துப் பிடிச்சு பிரேக் போட முடியாது."

"பார்த்தீங்களா... பார்த்தீங்களா... எப்படிப் பேசுரார்னு. இன்னும் கூட அந்தப் பயல் தன்னோட மகன்னோ... இந்தப் பொம்பளை அவரோட வப்பாட்டின்னு சொல்ல மாட்டாங்கார். உண்மையை மறைக்க முடியுமா.... இவரு மவராசனா... இவளோடயே வாழட்டும். என் குடும்பத்துக்கு நீங்கெல்லாம் சேர்ந்து...."

அவள் பேசி முடிக்கும் முன்பே சுந்தரம் வீராவேசமாய் பேசினார்.

"நமக்கும் ஒரு மகள் இருக்கிறாள் என்கிறதை மறந்துடாதடி... பாவம் மலேசியாவுல கொடி கட்டி வாழ்ந்துட்டு... இப்போ இந்தப் பயலை மாதிரியே அனாதையாய் நிற்கிறவள்டி இவள். எனக்கு இவளும் மகள் மாதிரிதான். அவளைத் தப்பாய்ப் பேசினே... ஒன் வாய் அழுகிடும்."

அந்தம்மா, கணவரிடம் தீவிரமாகப் போர் தொடுக்க, அந்த வாசல்படியில் இருந்து, அவரருகே நகர்ந்தாள். இதைப் பயன்படுத்தி, தமிழ்ச்செல்வி, தலையை முழுவதுமாக மூடிக் கொண்டு வெளியே வந்தாள். எல்லோரையும் வேலிக்குள் சிக்கிய ஆடு மாதிரிப் பார்த்துவிட்டு, மடமடவென்று ஓடினாள். உருவம் தெரியாதபடி ஓடினாள். ரயில் பயல் "அம்... அம்..." என்று மனசுக்குள் கூவியபடியே அவள் பின்னால் போகப் போனான். பிறகு, "அப்" சுந்தரத்தின் அருகேபோய் அவர் முகத்தைப் பார்த்துவிட்டு, அவரை அந்த நிலையில் விட்டுவிட்டுப் போக, அவனுக்கு மனம் வரவில்லை. பணி மனையில் விசாலமான வெளிவாசலில் நின்றபடியே உள்ளேயும், வெளியேயும் மாறி மாறிப் பார்த்தான். அப்போது, சுந்தரத்தின் மனைவி, கொடூரமாக வர்ணனை கொடுத்தாள்.

"வைப்பாட்டியை மகள்னு சொல்லிட்டாரேன்னு எப்படிக் கோபமாப் போறாள் பாருங்க! கட்டுன பொண்டாட்டியயும்... பெத்துகிட்ட பிள்ளிகளும் தாழ்த்தி.... அவளும்... இந்தப் பயலும் ஒசத்தி... கடவுளே... கடவுளே..."

"சொல்றதே சொல்றதே... சாத்தானே... சாத்தானேன்னு சொல்லுடி."

"ஓஹோ... அந்த அளவுக்கு நான் தாழ்த்தியாயிட்டேன்... என் பிள்ளிக மட்டமாயிட்டு."

"ஆமாண்டி.... இந்தப் பயல்.... ஒன்னைவிட.... நான் பெத்த பிள்ளைகளைவிட உசத்திதாண்டி.... நீ நினைக்கிற பாசம்... ரத்த உறவுல... வாரதுடி... எலும்பு சதையில வருகிற அன்பு அந்த எலும்பு மாதிரி முறியும். அந்த சதை மாதிரி வாடும். இந்த வகை ஊன அன்பு உடம்பு மாதிரி வாடக்கூடியது.; ஆனால், எனக்கும் இவனுக்கும் உள்ள உறவு... ரத்த சம்பந்தம் இல்லாதது. அதே சமயம்... ரத்த வோட்டமானது... உடம்புக்கும்... ஆன்மாவுக்கும் சம்பந்தமில்லன்னா... ஆன்மா அழியாதுன்னா.... இவன் கிட்டே நான் கொண்ட உறவு உடம்பை உதறிப் போட்ட ஆன்மா மாதிரி... நீ எப்படிக் குதித்தாலும் சரி. இவனையும் என்னையும், உன்னாலயும் யாராலயும் பிரிக்க முடியாது."

"நானும் ஒரு முடிவுக்கு வந்துட்டேன். இவன் மேலயும், அவள் மேலயும், இப்படிப் பாசம் வச்சிருக்கிற மனுஷனால வயசுக்கு வந்த

மகளோட கல்யாணத்தை யோசிக்க முடியாது. நேரம் கிடைக்காது. அதனால்... நீங்கதான் எனக்கு ஒரு வழி சொல்லணும்."

கூட்டத்தைப் பார்த்துக் கேட்டவளுக்கு, கூட்டத்தில் ஒருத்தர் பதிலளித்தார்.

"நாங்க சொல்ற வழி... அதோ அந்த வழிதான். திரும்பிப் பாராமல் நடம்மா. பொம்புளையாம்... பொம்புளையாம்... பேச்சுக்கும் ஒரு வரைமுறை வேண்டாம்? முந்தா நாள்கூட சுந்தரண்ணன் ஒன் மகளுக்கு ஒரு பையனைப் பார்க்க என்னைக் கூட்டிப்போனார். பேசாமல் நடம்மா... கூட்டம்.... சுந்தரண்ணனுக்குக் கட்டுப்பட்டுத்தான் ஒன்னை சும்மா விடுது... இவர் இப்பவும் ராமன்தான். நாளைக்கும் ராமன்தான்... ஆனால் நீதான்... சீதையாய் இல்லாமல் போயிட்டே.... போம்மா.... போ."

சுந்தரம் மனைவிக்கு, அவர்கள் ஒவ்வொருவரும் தமிழ்ச்செல்வியாகவும், ரயில் பயலாகவும், இரட்டை உருவங் களாகத் தெரிந்தன. தலைதெறிக்க வெளியே ஓடினாள்.

சுந்தரம், மீண்டும் குத்துக்காலிட்டு உட்கார்ந்தார். அவமானச் சுமையைத் தூக்கிக் கொண்டிருப்பவர்போல், இரண்டு கைகளையும், தலைக்குமேல் தூக்கி, கோர்த்துக் கொண்டார். தொழிலாளர்கள், அவரையே பார்த்தபடி நடந்தார்கள். அவரிடம் ஆறுதலாகப் பேசப் போனவர்கள், அவர் நிலையைப் பார்த்துவிட்டு, தத்தம் வேலையைப் பார்க்கப் போயிட்டாங்க. ரயில் பயல் அவரைச் சுற்றிச் சுற்றி வந்தான். "அப்... அப்..." என்று சொன்னபடியே அவரை வட்ட மடித்தான். திடீரென்று, அவனுக்கு தமிழ்ச்செல்வியின் நினைவு வந்தது. எங்கே போனாளோ.... எப்படிப் போனாளோ... "அம்... அம்..." என்று சுந்தரத்திடம் சொல்லிப் பார்த்தான். அவர் கேட்கும் நிலையில் இல்லை.

சிறிது யோசித்தபடியே நின்ற பயல், ஒரு முடிவுக்கு வந்தான். "அம்"வை எப்படியும் பார்த்தாக வேண்டும். அவன், அந்தப் பணி மனையைவிட்டு, வெளியே வந்தான். அப்பாவை அந்த நிலையில் விட்டுவிட்டுப் போவதா என்று சிந்தித்து, வாசலில் நின்றான். பிறகு, மான் பாய்ச்சலில் ஓடினான். கரடுமுரடான ஒரு கிலோ மீட்டர் தூரத்தைத் தாவித் தாவி ஓடி ஓடிக் கடந்து, பொது மருத்துவ மனைப் பக்கம் நெடுக உள்ள பஸ் நிலையங்களைப் பார்த்தான். அம்மாவைக் காணோம். பிறகு, அவள் வண்ணாரப் பேட்டையில் இருப்பதாய்ச் சொன்னது நினைவுக்கு வரவே, கிறிஸ்தவ இலக்கிய சங்கத்தின் பஸ் நிலையம் வந்தான். காணவில்லை. அவன் விடவில்லை. அந்தக் கட்டிடத்திற்கு அடுத்த சாலைக்குப் போனான். துருவித் துருவிப் பார்த்தான். கிடைக்கவில்லை.

பின்னர், சலிப்போடு, தன்னைத்தானே வெறுத்தபடி, ரயில் நிலையத்தின் பக்கவாட்டு வாசல் வழியாக, உள்ளே போகப் போனான். "டேய்... டேய்..." என்று ஒரு சத்தம். யானைக்கவுனி போலீஸ் சாலையோர பஸ் நிலையத்தில் பழக்கப்பட்ட சத்தம். அந்தப் பயல் திரும்பிப் பார்த்தபோது, தமிழ்ச்செல்வி அவனை நோக்கி ஓடி வந்தாள். "நீ எப்படியும் என்னைப் பார்க்க வருவேன்னு எனக்குத் தெரியும். அதனால்தான் இங்கே நின்றேன்." என்று சொன்னவளின் இடுப்பில் கைகோர்த்து, அவள் மார்பில் சாய்ந்து கொண்டான். தமிழ்ச்செல்வி அவன் தலையை நிமிர்த்தித் தோளிலே கைபோட்டுப் பேசினாள்.

"ஒன்னை நான் மறக்கவே மாட்டேண்டா... ஊருக்குப் போறேன். தாமரைப்பாண்டி... சொத்து கொடுப்பான்னு போகல.... எங்கம்மா... மடியில தலை வைத்து அழணும். அம்மா.... அவள் கேட்கிற நிலையில் இருக்காளோ இல்லியோ... நான் அழணும்... அம்மாவை பார்க்கதே ஒரு ஆனந்தண்டா... ஏண்டா... அப்படிப் பார்க்கே... அவங்க எனக்கு அம்மான்னா... நான் ஒனக்கு அம்மாடா."

அந்தப் பயல்... தமிழ்ச்செல்வியை, இறுக்கிப் பிடித்தான். அவள், அவன் தலையைக் கோதிவிட்டபடியே, "நம்மை மாதிரி ஆட்கள், நமக்குக் கொடுமைகள் வரும்போது, அது யாரோ எவருக்கோ வாரது மாதிரி நினைச்சுப் பழகணும். நான் ஒன்னைப் பார்க்கணும் என்கிற ஒரே காரணத்துக்காவது அடுத்த வாரம் இங்கே வருவேன். எஸ்.11க்கு வருவேன். வாறேண்டா."

அங்கே இருந்த பல்லவ பஸ் இருவரையும் பிரித்தது. ரயில்பயல், கண்களில் வழிந்த நீரை, வீறாப்பாய்த் துடைத்துக் கொண்டான். அப்பா சுந்தரம் இருக்கும் பணிமனையை நோக்கி நடக்கப் போனான். திடீரென்று ஒரு யோசனை... அவரோட மகளோட கல்யாணம், என்னால் தடைபடுதாமே... என்னால்தானே... அப்பாவை அந்த 'காளியாத்தா' அப்படிக் கஷ்டப்படுத்தினாள். நான் அப்பாவை... அவரோட நன்மைக்ககப் பார்க்கக்கூடாது... அவர் நல்லா இருக்கணும்... அப்படின்னா... நான் பார்க்கக்கூடாது."

அந்தப் பயல், காலை மாற்றிப் போட்டான். கால் போன போக்கில், கண்காட்டிய வழியில் நடந்தான். எவ்வளவு நேரம் நடந்தானோ... உச்சி வெயில் உறைத்தது. அது உஷ்ணப்படுத்தாது போல் நடந்து நடந்து, ஒரு ரயில்வே பாலத்திற்கு அருகே வந்தான். அங்கே மெதுமணல் உள்ள இடத்தில் ஒருத்தி, ஒரு குழந்தையை வைக்கிறாள். அவனைப் பார்த்ததும், குழந்தையை விட்டு விட்டு ஓடுகிறாள்.

ரயில் பயலுக்கு வெறி வந்தது. கைப்பந்து மாதியான ஒரு உருண்டைக் கல்லைத் தூக்கிக் கொண்டு, அவளைத் துரத்திக் கொண்டு போனான்.



அரக்கோணம் வழியாக வந்த பம்பாய் ரயிலும், எண்ணூர் வழியாக வந்த டில்லி ரயிலும், கட்டாந்தரையில் இரும்புக்கோடுகள் போட்டது போன்ற தண்டவாளங்கள், வடக்கு நோக்கியும் தெற்கு நோக்கியும் வந்து கொண்டும், போய்க்கொண்டும் இருந்தன.

இவற்றை முந்தியடித்து மின்சார ரயிலொன்று மூக்கு முட்டும் வேகத்தில் தக்காரும் மிக்காருமின்றி தடம் புரளாமல் ஓடியது. இடையிடையே அரைகுறை தண்டவாளங்களில் எஞ்சின்கள் இல்லாத ரயில் பெட்டிகள்... தொலைதூரத்தில் ராட்சஸக் கம்பளிப் பூச்சிபோல் தோன்றிய அந்த வேளையில் லி

ரயில் பயல் கல்லை வைத்துக் கொண்டே, அவள் பின்னால் ஓடினான். ஊளையிட்டபடி உள்ளூர அழுதபடி ஓடினான். அவனுக்கு ஓடஓட உடல்பலம் கூடியது. மனதுக்குள் குமைந்து கொண்டிருந்த உணர்வுகள், கோபதாபங்கள், கால்களுக்கு வேகத்தைக் கொடுத்தன. கண் மண் தெரியாத கோபம், கைக்கு வலுவைக் கொடுத்தது. அவன் நினைத்திருந்தால், அந்தக் கல்லை எடுத்து, கறுப்புத்திரை போட்டது மாதிரியான அவள் பிடறியைப் பிய்த்திருக்கலாம். ஆனால், அவனுக்கு மனது கேட்கவில்லை. எறியலாமா வேண்டாமா என்று யோசித்து அவன் வேகத்தைத் தணித்தபோது, அவன் தன்னை, அடையாளம் காணக்கூடாது என்று நினைத்தோ என்னவோ, திரும்பிப் பாராமல் ஓடினாள். ரயில் வளாகத்தின் நீண்ட நெடிய வேலிச்சுவர் ஓரமாக ஓடிக் கொண்டிருந்தாள். அந்தப் பயலோ, அவள் பின்னால் குறுக்கும் நெடுக்குமாக ஓடினான். அவள் வேலிச் சுவரில் ஏறிக் குதிக்கப் போனாள். அது முடியாமல் போகவே, மீண்டும் சுவரோரமாக ஓடினாள். அவளைத் தனித்துப் பிடிக்க முடியாது என்பதைப் புரிந்து கொண்ட பயல், உதவிக்கு ஆள் கிடைக்குமா என்பதுபோல் திரும்பிப் பார்த்தான். அப்போது_

அந்தப் 'பாலத்திற்குக் கீழே அந்தக் குழந்தை, ஒரு கையை வயிற்றில் குறுக்காக மடித்துக்கொண்டு, இன்னொரு கையை

வளைத்தபடி தோன்றியது. அதன் வாய் பிளந்திருந்தது. அழுகிறதோ, சிரிக்கிறதோ... சிரிப்பு என்ன சிரிப்பு... இப்படிப்பட்டவளுக்குப் பிறக்கும் குழந்தை பிறப்பில் இருந்தே அழ வேண்டியதுதான். தன்னைப் பார்த்து, பிறர் காட்டும் பரிகாசச் சிரிப்புத்தான், அது பார்க்கப் போகும் சிரிப்பு...

ரயில் பயல், திடுக்கிட்டான்.

இரண்டு நாய்கள், அந்தக் குழந்தைக்கு இரண்டு பக்கமும் நின்றன. அங்குமிங்கும் பார்த்துக் கொண்டன. குழந்தையைப் பார்த்த கண்ணோடு, ஒன்றை ஒன்று பார்த்துக் கொண்டன. பிறகு சொல்லி வைத்ததுபோல், இரண்டு நாய்களும் அந்தக் குழந்தையை நோக்கி, முன்காலில் ஒன்றைத் தூக்கி வைத்தபடி பார்த்தன. இரையைப் பார்க்கும் பார்வை அது. என்ன செய்யலாம் என்று ஒரு முடிவுக்கு வரப்போகும் கால்தூக்கல். பின்னர் அவை முடிவெடுத்தவைபோல் அந்தக் குழந்தையை நோக்கி, மெள்ள மெள்ளக் கால்களை நகர்த்தின.

ரயில் பயல், துடித்துப் போனான். இப்போது கோட்டைச் சுவரில் கஷ்டப்பட்டு ஏறிக் கொண்டிருந்தவளைப் பற்றிக் கவலைப் படாமல், வந்த வழியாக ஓடினான். நெருஞ்சி முள்களில் கால் பதிந்து, சரளைக் கற்களில் தடம் போட்டு, கால்களைச் சக்கரமாக்கினான். அந்த நாய்களைப் பார்த்து, கைகளை ஆட்டியபடி நரிபோல் ஊளையிட்டு, நான்கு கால் பாய்ச்சலில் பாய்கிறவன் போல் கைகளிரண்டை நீட்டியும், குவித்தும், ஓடினான். வயிற்றில் இருந்து வாய்க்கு வந்த மூச்சை வழிமறித்து, வழியடைத்து ஓடினான்.

நாய்கள், அந்தக் குழந்தையை நெருங்க நெருங்க, அவனுக்கு தன் உயிரே விலகிக் கொண்டிருப்பது போலிருந்தது. கொலைத் துரத்தலில் இருந்து தப்பிக்கத் துடிப்பவர்கள் ஓடுவது மாதிரியான ஓட்டம். குழந்தையின் உடம்பில்தான் தன் உயிர் இருப்பது போன்ற பாய்ச்சல். ரயில்கூட போட்டி போட முடியாத ஓட்டம். கூச்சல் போட்டால் ஓட முடியாது. ஓடினாலோ கூச்சல் போட முடியாது. ஆனால் இவன் இரண்டையும் செய்தான். அவன் போட்ட கூச்சலில் குழந்தையைச் சுற்றி வியூகம் போட்ட நாய்கள் காதுகளை நிமிர்த்தி அவனைக் கண்டிப்புடன் பார்த்தன.

இதற்குள் அவன் நெருங்கி விட்டான். அப்போதும் அந்த நாய்கள் அவன் உடம்பைப் பார்த்தோ என்னவோ, இவன் எம்மாத்திரம் என்பதுபோல் குரைத்தன. அவனையும் தாக்கிப் பார்க்கலாம் என்பதுபோல், ஒரு காலைத் தூக்கிக் காட்டின. இதற்குள் அந்தப் பயல், எவளைத் தாக்குவதற்காகக் கையில் கல்

வைத்திருந்தானோ, அந்தக் கல்லை எடுத்து, வீசினான். அது குறி தவறி விழுந்ததும், கீழே குனிந்து கருங்கற்களைப் பொறுக்கினான். ஒரு நாயை தன் அம்மாவாகப் பாவித்தவன்போல் வேகமாக எறிந்தான். இன்னொன்றை, அதோ சுவரேறிக் குதிக்கும் அவளாகப் பாவித்து உதைப்பதற்காகக் காலைத் தூக்கினான். அந்த நாய்கள் “அடங்கி விட்டோம், அடிக்காதே” என்று தங்கள் இனத்துக்கே உரிய பாஷையை வெளிப்படுத்தின. அதாவது வாலை, பின்னங் கால்களுக்கு இடையே சொருகியபடியே ஓடின.

அந்தப் பயல், அந்தக் குழந்தையைப் பார்த்தான். கிராமத்து மண்ணிலே தெரியுமே, சர்க்கரை வள்ளிக்கிழங்கு, வேரோடும் வேரடி மண்ணோடும்... அது மாதிரியான நிறம்... பொக்கைவாய். உருண்டு திரண்ட உடம்பு... வாட்டமான முகம்... பிறந்தமுடி எடுக்காததுபோல் பின்னால் நீண்ட முடி... எக்கிய வயிறு... கழுத்திலே முடிச்சுபோட்ட கறுப்புக் கயிற்றில் ஒரு தாயத்து... மிஞ்சி மிஞ்சி இருந்தால் ஒரு வயது இருக்கலாம். “ம்மா... ம்மா...” என்று வீறிட்டுக் கத்திக் கொண்டிருந்தது. தொலைவிலே தெரிந்த உருவத்தை, உற்றுப் பார்ப்பதுபோல் கைகளை நீட்டி, கண்களைப் பிதுக்கியது. அதன் பார்வையிலே, ரயில் பயல் அந்த தூரத்துச் சுவரைப் பார்க்கிறான். அதிலே அவள் ஏறி நிற்கிறாள்... அவனையும் அந்தக் குழந்தையையும் பார்த்துக் கையெடுத்துக் கும்பிடுகிறாள். ரயில் பயல், அவளைப் பார்த்து, ‘இங்க வா... வா...’ என்று கையாட்டிப் பார்க்கிறான். அவளோ மறுபுறம் குதிக்கிறாள்.

ரயில் பயல், அவள் திசையைப் பார்த்துக் காறித் துப்பினான். அதோ ஓடுகிற நாய்கள்கூட தங்கள் குட்டிகள் சுயாட்சி பெற்ற பிறகுதான் அவற்றை விடுகின்றன. கோழிகூட, குஞ்சு பெரிதாகி கழுகுகளாலோ, கருடன்களாலோ தூக்க முடியாத கனத்திற்கு வந்த பிறகுதான், அவற்றைக் கொத்தி விரட்டுகிறது. மாடுகள் கூடக் கன்றுகள், காளைகளான பிறகுதான் முட்டித் துரத்துகிறது. ஆடும், ஆட்டுக்குட்டியும் அப்படியே...

ஆனால் இந்த மனிதக் குட்டியை - பால்மணம் கொண்ட பச்சை மழலையை விட்டுவிட்டுப் போகிறவள் கோழியை விடக் குறுகிப்போனவள். மாட்டைவிட மடங்கிப் போனவள்... இப்படிப்பட்டவள் எப்படிப்பட்டவளாக இருப்பாள்...? என் அம்மா மாதிரிதான் இருப்பாள்... ஒருவேளை இவளே என் அம்மாவாக இருப்பாளோ? என்னையும் இவள்தான் இப்படிப் பெற்றுப்போட்டு விட்டுப் போயிருப்பாளோ... சினிமாவில் வருவது மாதிரி என் தம்பியை நானே காப்பாற்றும் விதிமுறை வந்திருக்குமோ... பின்பக்கமாகப் பார்த்தால்... அவள் அடையாளம் தெரியவில்லை. ஆனால் அந்த விரித்த தலையும், பருத்த பிடறியும் அம்மா போலவே

தெரியுது... ஒருவேளை... சீ. அவள் அம்மாவாக இருந்தாலும், அவள் நினைப்பே வரக்கூடாது.'

ரயில் பயல், அந்தக் குழந்தையே வெறித்துப் பார்த்தான். அதன் கண்களிலே குட்டைக் கன்னங்களில் கரைகாட்டும் நீர்த்துளிச் சுவடுகள்... அழுதடங்கிப் போய் அழமுடியாத நிலைக்கு வந்தது போல் ஏங்கியது. அதன் புலம்பல்கள் வாய்க்குள் இருந்து, தொண்டைக்குள்ளேயே திரும்பிப் போயின. திடீரென்று, அவன் நிற்பதை அப்போதுதான் பார்ப்பதுபோல் அதன் கழுத்து நீண்டது. கண்கள் அகலமாய், கலங்கிய பின் கண்ணீர் கன்னத்தில் இறங்கியது. அந்தக் குழந்தை அவனையே பார்த்தது. "என்னை எடுத்துக்கோ" என்பது மாதிரி கை நீட்டியது. அதிகநேரம், அப்படி அந்தக் கைகளை அதனால் வைத்துக் கொள்ள முடியவில்லை. மீண்டும் அதைக் கீழே போட்டது. போட்ட வேகத்திலே அவனை நோக்கி, பழையபடியும் கைகளை நீட்டி, "இங்கா... இங்கா..." என்றது. "இங்கா நான் பிறந்தேன்... என்கிறதோ... இங்கே வா என்கிறதோ..."

ரயில்பயல், அழுதுவிட்டான். அனாதரவான அந்தக் குழந்தை அனாதையான தன்னை அப்படி உரிமையோடு, கைநீட்டிக் கேட்டதால், ஏற்பட்ட இன்ப அழுகையும், இந்த நிலைக்கு போயும் போயும் தன்னிடமே அடைக்கலம் கேட்கும் அழுகையும் வந்ததால் ஏற்பட்ட அழுகையும் அவனை மாறி மாறி அலைக்கழித்தன. குழந்தையிடம் ஓடிப் போனான். கீழே குனிந்து உட்கார்ந்தான். அந்தக் குழந்தையை, தன் முகத்தோடு முகமாக, கழுத்தோடு கழுத்தாக கையோடு தலையாக, அணைத்துக் கொண்டான். அந்தக் குழந்தையின் கன்னத்தில் வடிந்த நீர், அவன் கன்னத்தை நனைத்தது. அதன் கழுத்தில் வடிந்த நீர், அவன் கழுத்தில் வழிந்தது. பிறகு, தனது கண்ணீர்ச் சுமையை, அவனிடம் பகிர்ந்து கொண்டது போலவும், அவனை நோக்கி, லேசாய் சிரித்தது. தொடர்ந்து சிரித்தது.

அந்தக் குழந்தை சிரிக்கச் சிரிக்க, அவன் அழுதான். தொடர்ந்து அழுதான். விம்மலாகவும் வெடிச்சத்தமாகவும் அழுதான். பிறகு தன்னையே நம்பும் அந்தக் குழந்தையின் முன்னால், பலவீனப்பட விரும்பாதவன்போல், கண்ணீரைத் துடைத்து, தன்னை வைராக்கியப்படுத்திக் கொண்டான். அந்தக் குழந்தையைச் சற்றே தள்ளி வைத்தான். அது அழப்போனபோது, உடனே அவன், கைகளை ஆட்டி, நரியாக ஊளையிட்டு, தந்தைபோல் தலை ஆட்டினான். பாலமுருகன் கைகாட்டுவதுபோல் தனது கையைக் காட்டினான். அந்தச் சமயம் பார்த்து, அந்தக் குழந்தை சிரித்தது. உடனே அவன் அதை வாரியெடுத்தான். கன்னத்திலும், கழுத்திலும் மாறிமாறி முத்தமிட்டான்.

அந்தக் குழந்தை தனது பொறுப்பிற்கு வந்திருக்கிறது என்ற எண்ணத்தில், ரயில்பயல் பெருமிதப் பட்டான். ஆகாயத்திற்கும் பூமியுமாய் உயர்ந்து விட்டவன்போல் தன்னையே பார்த்துக் கொண்டான். குழந்தையைத் தூக்கப் போனான். கற்பனை வேறு... யதார்த்தம் வேறு என்பதைக் கண்டு கொண்டான். குழந்தையை அவனது பூஞ்சைக் கரங்களால் தூக்க முடியவில்லை. அந்த முயற்சியில் குழந்தை கீழே விழுந்துவிடப் படாதே என்ற பயம் வேறு...

எப்படியோ, எண்ணமோ சக்தி என்பதை நிரூபிப்பவன் போல் அந்தக் குழந்தையைக் கீழே உட்கார்ந்து தன் இடுப்பில் வைத்தான். பிறகு குழந்தையோடு தவழ்ந்து, தவழ்ந்து, பாலத்தின் இரும்புக் கிராதி தூணருகே வந்து, அந்தத் தூணை ஆதாரமாகப் பற்றியபடி இடுப்போடும், குழந்தையோடும் எழுந்துவிட்டான். எழுந்தே விட்டான். அதற்குள் அந்தக் குழந்தை, அழுத களைப்பாலோ அல்லது அழவேண்டிய அவசியமில்லை என்று நினைப்பது மாதிரியோ, அவன் தோளில் முகத்தைப் புதைத்தது. ஒரு கையால், அவன் கழுத்தைச் சுற்றி வளைத்துக் கொண்டது. அவன், அந்தக் குழந்தையுடன் நடக்க முடியாமல் நடந்தான். ஒவ்வொரு அடிக்கும், அந்தக் குழந்தையை ஒவ்வொரு தடவை பார்த்துக் கொண்டான். தூக்க முடியாத சுமை... முதல் தடவையாகக் கர்ப்பம் தரித்த நிறைமாத கர்ப்பிணிக்கு ஏற்படுவது மாதிரியான சுமை... பிரசவச் சுமை... பிராண வலி ஏற்படுத்துகின்ற சுமை. இந்த அத்தனை சுமைகளையும் சுமக்கும் ஒரு தாய்மைச் சுமை. சுகமாக சுமை...

ரயில்பயல், சுகச் சுமையோடு நடந்தான். தந்தையின் தோரணையோடு நடந்தான். தாயுமாகி நடந்தான். திடீரென்று, அவன் மனதினுள்ளே ஒரு வெளிச்சம்... 'இவன் நிசமாவே என் தம்பியாக இருக்கலாமோ. இதனால்தான் ரத்த உரிமையில் என்னிடம் இப்படி ஒட்டிக் கொள்கிறதோ... இருக்காது... இவன் ரோசாப்பூ... நானோ காக்காப்பூ. ஏன் இருக்காது... அந்த ஓடுகாலி... என்னை ஒரு கருப்பனுக்கும், இவனை ஒரு சிவப்பனுக்கும் பெத்து இருக்கலாமே... சீச்சி... இவன் யாரோ... நான் யாரோ... இருக்கட்டும்... ஆனாலும் அனாதைகள் என்ற முறையில் நாங்கள் ஒரு வர்க்கம்... திக்கற்றவர்கள் என்ற முறையில் அண்ணன் தம்பிகள்.'

அந்தப் பயல், என்னதான் மனதுக்கு மறுதலித்துப் பேசினாலும், அவனையறியாமல் அந்தக் குழந்தை தனது சொந்தத் தம்பி என்பது மாதிரியான ஒரு எண்ணம் ஏற்பட்டது. அவள் இருவருக்கும் தாய் என்பது போன்ற பிரமை... அவன் இஷ்டத்திற்கு விநோதமாக இந்த எண்ணத்தின் நிர்ப்பந்தத்தில் இருந்து, அவனால் விடுபட முடியவில்லை. 'கடவுளே... கடவுளே... என்னையும் என் தம்பியையும்

என் அம்மாவிடம் சேத்துடு... சேத்துடு... அய்யப்ப சாமியே... ஒனக்கு மாலை போடுறேன்... இவனையும் என்னையும் எங்கம்மாகிட்டே சேத்திடு... அவள் எப்படிக் கெட்டலைஞ்சாலும் பரவாயில்லை... நான் ஒத்துக்கிறேன்... அம்மா... அம்மாதானே... பிள்ளை... பிள்ளைதானே... இதோ... இதோ... இவன் என் தம்பிதான். அப்படியே இல்லையானாலும் இவனைத் தம்பியாக்கி... அவனை அம்மா ஒரு மனித உறவைக் கொடு... மறக்காமல் கொடு...'

ரயில்பயல் மனதில் இதுவரை தோன்றாத எண்ணச் சுமைகளோடும், இடுப்புச் சுமையோடும் நடந்தான். நடக்க நடக்க, அவனுக்குக் குழப்பம் வந்தது. 'இந்தக் குழந்தையை வைதது்க் கொண்டு, என்ன செய்வது? பேசாமல் ரயிலுக்கு இவனைத் தூக்கிட்டுப் போயிடலாமா? "அப்"கள் பொறுப்பில் விடலாமா... பாவம் நாமே அவர்களுக்குச் சுமை... சுமைமேல் ஒரு சுமை என்றாலும், அதனால் பாதிக்கப்படுபவன் சுமை தூக்கித்தானே?'

'ரயிலுக்குக் கொண்டு போவது நடக்காத காரியம்... சுந்தரம் அப்பாகிட்டே கொண்டு போகலாமா... இவனையும் இரண்டாவது பிள்ளையாய் எடுத்துக்குவார்... வேற வினையே வேண்டாம். அய்யாவோட சம்சாரம் இந்தக் குழந்தையும், அவருக்கும் மலேசியா அக்காவுக்கும் பிறந்ததாய் தம்பட்டம் அடிச்சுடும்... பாவம்' அப்பா... இதோ பக்கத்துலதான் அவரோட ஒர்க்ஷாப்... போகலாமா... கூடாது... அப்பா குடும்பம், நிம்மதியா இருக்கணுமுன்னால், அப்பா இனிமேல் என்னைப் பார்க்கக்கூடாது. அக்காவுக்கு நல்ல இடத்துல கல்யாணம் நடக்கணுமுன்னால் இனிமேல் என்னைப் பார்க்கக் கூடாது. பாவம் அப்பா... எப்படித் துடிக்காரோ... நான் துடிக்கறதை விட அதிகமாய்த்தான் துடிப்பாரு... ஒருவேளை... நான் அவரை உதாசீனப்படுத்திட்டதாய் நினைப்பாரோ... ஒரு தடவை... ஒரே தடவை அப்பாவிடம் போய்... அப்பா ஏன் உங்ககிட்டே வரல என்பதாலேயே தொலைவாய் போயிட்டதாய் அர்த்தமில்லன்னு சொல்லிட்டு வரலாமா...'

'வேண்டாம்... அப்பாவே என்னைத் தப்பாவே நினைக்கட்டும்... அப்போதான்... அக்காவோட கல்யாணத்துல இன்னும் அதிகமாய் அக்கரை காட்டுவாரு... ஏண்டா பயலே... அப்படிப் பார்க்கிறே... நீ, விட்டுட்டுப்போன அம்மாவைப் பார்க்கத் துடிக்கிறே... நானோ... விடாமல் பிடிக்கிற அப்பாவைப் பார்க்கத் துடிக்கேன்... எந்த வகையில் இல்லாமல் போனாலும் இந்த வகையிலாவது நாம் அண்ணன் தம்பிதான். ரயில் பயலுக்கு இடுப்பு வலித்தது. வலது பக்க இடுப்பில் இருந்து, இடது பக்கத்துக் இடுப்பிற்கு குழந்தையை மாற்றப் போனான். அவனால் முடியவில்லை. அவன் குச்சிக் கைகளால் இயலவில்லை. உடனே, ஒரு தந்திக் கம்பத்திற்கு அருகே

போய், கீழே உட்கார்ந்தான். குழந்தையை மடிக்குக் கொண்டு வந்து, படிப்படியாக அடுத்த இடுப்பிற்கு இடமாற்றம் செய்துவிட்டு, அந்தத் தந்திக் கம்பத்தைப் பிடித்தபடியே எழுந்தான். நடந்தான்.

அந்தக் குழந்தையை எங்கே வைக்கலாம், எப்படி வைக்கலாம் என்று நினைத்தபடி நடந்தவனுக்கு அந்த எண்ணத்தின் தொடர்ச்சியாக பிளாட்பாரம் இன்ஸ்பெக்டர் மணியின் நினைவு வந்தது. 'பாலங்களிலும், ரயில் பெட்டிகளிலும், அனாதைகளாகப் போடப்பட்ட குழந்தைகளைக் கண்டெடுத்து, பாலூட்டி, சீராட்டி, பல பெரிய வீடுகளுக்கு தத்துக் குழந்தைகளாகக் கொடுத்தவர். நிர்க்கதியாக விடப்பட்ட பெண்களை, ரயில்வே சிற்றுண்டி விடுதிகளிலும், அவரவர் பெற்றோர்களிடமும் சகோதரத் துவத்தோடு சேர்த்தவர். இப்போது பெரியவர்களாகிப் போன அப்போதைய குழந்தைகளும், நல்வாழ்வு கண்ட பெண்களும், அவரை, அடிக்கடி தரிசித்துவிட்டுப் போனார்கள். 'அவரிடமே குழந்தையைக் கொண்டு போகலாம். ஆனால் கொடுக்கப்படாது. நானே வச்சுக்குவேன்.'

ரயில் நிலையத்திற்குள் குழந்தையோடு நுழைந்த இவனை, ரயில் போலீஸார் வழிமறித்து ஏதோ கேட்கப் போனார்கள். பிறகு அவனை அடையாளம் கண்டு கொண்டு, அந்தக் குழந்தையைக் கொண்டு வருவதற்காக காரணத்தையும் யூகித்துக் கொண்டு, "மணி இருக்கார்... சீக்கிரமாய் போ" என்றார்கள்.

சென்ட்ரல் ரயில் நிலையத்தில், நான்காவது பிளாட்பாரம் முடியும் முகப்பில் இருந்த கட்டிடத்தில், முதலறையில் பிளாட் பாரம் இன்ஸ்பெக்டர் மணியை போலீஸ் சுற்றி வளைத்திருந்தது. போலீஸ் வட்டத்தில் மையமாக இருந்த மணிக்கு முன்னால், வயிறு சரிந்த ஒரு நடுத்தர வயதுப் பெண்ணும், டவாலி போட்ட ஒரு மனிதரும், நின்றார்கள். அந்தப் பெண், "எவ்வளவு நாளாய்யா... இந்த வியாபாரம் செய்யுறே..." என்று அதட்டினாள். அந்த அறையின் மூலையில் ஒரு தம்பதியர். இந்தச் சமயத்தில் அங்கே போன ரயில் பயலை சிவப்புத் தொப்பிக்காரர் ஒருவர் பிடித்துக் கொண்டார். பிடித்த பிடியை விடாமலே எல்லோருக்கும் கேட்கும்படியாய்க் கத்தினான். "இந்தப் பயல்தான் அந்த ஆசாமிக்கு ஏஜண்டு போலுக்கு... குழந்தையைத் திருடி இவன்கிட்டே கொடுக்க வந்திருக்கான் பார்... ராஸ்கல்... இவங்க ரெண்டு பேருக்கும் ஏழு வருஷம் வாங்கிக் கொடுக்கேன் பார்..."

தமிழகத்தின் தலைநகரில் இருந்து, மக்களை "வடக்கிருக்க" அனுப்பும் அந்த சென்ட்ரல் ரயில் வளாகம் முழுவதும் ஒப்பாரி போடுவது போலிருந்தது.

வெள்ளைக்காரன் கட்டிய கம்பீரமான அந்த ரயில் கட்டிடத்தின் உச்சியில் உள்ள கோபுரக் கடிகாரம் வேலை நிறுத்தம் செய்து கொண்டு இருந்தது. ஒரு மணியில், ஒரே மணியாக நின்றது அதன் முட்கள். அங்கேயும் இங்கேயும் அசையாமல், முக்தி பெற்று முழுமை பெற்றது. ரயில் நிலையத்திற்கு வெளியே வாடகைக் கார் டிரைவர்களின் கோபச் சத்தம். ஆட்டோக்களின் அலறல் சத்தம், காவல் துறையினரின் விசில் சத்தம்; பயணிகளுக்கும், போர்ட்டர் களுக்கும் இடையே சண்டைச் சத்தம்... உள்ளேயே இதற்குப் போட்டியாக, தொலைக்காட்சிப் பெண்ணின் தொல்லைச் சத்தங்கள்... எவருக்குமே புரியாத அறிவிப்புச் சத்தங்கள்... சின்னச் சின்ன வண்டிகளின் சக்கர சத்தங்கள்... ஆக எங்கும், எதிலும் சத்தம். சத்தமான சத்தம். அந்த ரயில் நிலையமே கோபுர வாய் வழியாகக் கூக்குரலிடுவது மாதிரியான சத்தம்.

இந்த சப்தா சப்தங்களையும் மீறி, அந்த நடுத்தர வயதுப்பெண், பிளாட்பாரம் இன்ஸ்பெக்டர் மணியை நோக்கி, ஆட்காட்டி விரல் ஆட்டிக் கொண்டிருந்தாள். பிறகு, தான் பேசுவது தனக்கே கேட்கவில்லை என்பதுபோல் அந்த அறையின் கதவைச் சாத்தப் போனாள். அவமானப்பட்டதுபோல், குனிந்திருந்த பிளாட்பாரம் இன்ஸ்பெக்டர் மணி சுதாரித்தார். "இது என்னோட அறை... எல்லோரும் வரக்கூடிய பப்ளிக் அறை... அதை மூடப்படாது" என்று கண்டிப்புடன் சொல்லி எழுந்தார். சாத்தப்போன கதவை, இழுத்துப் பிடித்தார். உடனே, அந்தப் பெண் அந்த அறையின் ஒரு மூலையில், கைக் குழந்தையுடன் இருந்த பெண்ணையும், அவளுடன் ஜோடி சேர்ந்து நின்ற ஆணையும் தன் பக்கம் கூப்பிட, இதற்குள், காவல்துறை அதிகாரி, ரயில் பயலை குழந்தையோடு சேர்த்து உள்ளே தள்ளினார். அந்தக் குழந்தை விழுந்தாலும் பரவாயில்லை என்பதுபோல, அதன் உயிரைவிட உடம்புதான் முக்கியம் என்பது போல; மணி கீழே விழப்போன ரயில் பயலைத் தாங்கிப் பிடித்த படியே, எல்லோரையும் கோபமாக முறைத்தபோது, ஆள்காட்டி விரல்காரி அட்டகாசமாய்க் கேட்டாள்.

"எவ்வளவு நாளாய்... இப்படிக் குழந்தைகளை விற்று பொழைப்பு நடத்துறீங்க? இந்தாம்மா... உங்களைத்தான்... எவ்வளவு

பணம் கொடுத்தீங்க.. என்கிட்டே மறைக்க முடியாது. இந்த விஷயத்துல எனக்கு இருபது வருஷம் சர்டவீஸாக்கும்."

சோர்வோடு தென்பட்ட மணியும் இப்போது துள்ளிக் குதித்தார். நல்ல கிறிஸ்தவ பாதிரியார்போல், பழுத்த மௌல்வி போல், ஆன்றடங்கிய அடிகள்போல், எந்த சலனத்தையும் காட்டாத அவர் முகம், இப்போது அக்கினிச் சட்டியானது. பதிலளிப்பது போல், பதிலடி கொடுத்தார்.

"விவரம் தெரியும் முன்னாலயே குற்றத்தைச் சுமத்துவதும், சும்மா கத்துவதும் பெண்மையாகாதும்மா.. நான் குற்றவாளி என்கிற தோரணையில் கேள்வி கேட்கிறதாய் இருந்தால் உங்களுக்கு நான் பதில் சொல்லப் போறதில்லை. இப்படிக் கேள்வி கேட்க உங்களுக்கு உரிமையில்லை."

"எனக்கு இருக்கு மிஸ்டர் இருக்கு... உரிமை இருக்கு... நான் தமிழக அரசின் சமூக நலத்துறையின் உயர் அதிகாரி நீங்க குழந்தைகளைக் கடத்தி விற்கிறதாய் டெலிபோன்ல செய்தி வந்தது. அதனாலதான் ஓடி வந்தேன். ரயில்வே போலீசும், ரயில் நிலைய போலீசும் உங்களுக்கு உடந்தையாய் இருக்குமுன்னு சந்தேகப் பட்டுத்தான் ஐ.ஜி.கிட்டே டெலிபோன் செய்து தனிக்காவல் படையை கொண்டு வந்திருக்கேன்... நீங்களாய் சொல்லாவிட்டால் இவங்களாய் கேட்பாங்க... காவல்துறை கேட்கிற விதம் தெரியுமில்ல..."

கூட்டத்தைப் பார்த்துவிட்டு, அந்தப் பக்கமாக வந்த நான்கைந்து ரயில்வே போலீஸ்காரர்களுக்கு, அந்தம்மா மிரட்டுவது அதிகப்படியாகத் தெரிந்தது. ரயில்வே காவல் துறையை கிள்ளுக் கீரையாய் பேசுறாளே... விடப்படாது... ஒருவர் நட்சத்திர முத்திரை போட்ட ரயில்வே காக்கிச் சட்டைக்காரர் கத்தினார்.

"இந்தா பாருங்கம்மா... இது எங்களோட ஏரியா... எங்கள் அனுமதியில்லாமல், நீங்க இவர்கிட்டே பேசுறது தப்புன்னா... அவரை விரட்டுறது பெரிய தப்பு... நீங்க யாராக இருந்தாலும் சரி... ஒங்களைக் கைது செய்ய அதிக நேரமாகாது..."

அந்த அதிகாரிப் பெண்ணோடு வந்த, தமிழக அரசின் காவல்துறை அதிகாரி சவாலிட்டார்.

"யோவ்... ரயில்வே இன்ஸ்பெக்டர்! ஒன்னால... அந்தம்மாவை கைது செய்ய முடியுமா...? யார்கிட்டே.... பேசுறோமுன்னு யோசித்துப் பேசு..."

"அதைத்தான் நானும் சொல்றேன்... டி.எஸ்.பி. ஸார். இது எங்களோட அதிகார வரம்புக்கு உட்பட்ட பகுதி. எங்களால ஒங்களைக்கூட கைது செய்ய முடியும்."

"கைது செய்து பார்க்கிறியா...?"

"நீங்க மணியைக் கைது செய்து பாருங்க... பார்க்கலாம். யோவ்... நம்ம ஆட்களை துப்பாக்கிகளோட கூட்டி வாய்யா..."

அங்கிருந்த தமிழக அரசின் காவல்துறை அணியினர், துப்பாக்கிகளைத் தூக்கிப் பிடித்தார்கள். லத்திக் கம்புகளை நீட்டிப் பார்த்தார்கள். தங்களது அதிகாரிக்கு சவாலிட்ட ரயில்வே இன்ஸ்பெக்டரை நோக்கி நகரப் போனார்கள். அவரை, ஒருவேளை அடித்திருப்பார்கள். அதற்குள், வளைந்த தொப்பிகள் போட்ட ரயில்வே போலீஸ்காரர்கள் அங்கு திமுதிமுவெனக்கூடி, சிவப்புத் தொப்பிக்காரன்களை முறைத்தார்கள். ரயில் நிலையத்தில் குழந்தைகள் திருடப்பட்டு, விற்பனை செய்யப்படுகிறதா என்ற விவகாரம், இப்போது மத்திய அரசின் ரயில்வே போலீஸ் பெரிதா...? அல்லது மாநில அரசின் காவல்படை பெரிதா...? என்று கௌரவப் பிரச்சினையாகி, பலப்பரிட்சையாகிவிடுமோ என்று பலரை பயமெடுக்கச் செய்தது.

ஆனால், ரயில்பயல் மட்டும் சிரித்தான். வழக்கமாகச் சிரிப்பானே ஊளைச் சிரிப்பு அந்த மாதிரியான சிரிப்பு... அந்த அதிகாரிப் பெண்ணும் சற்று பயந்து விட்டாள். "விற்பனைக்குரிய குழந்தைகளை" மீட்டு, பதவி உயர்வு பெறலாம் என்று நினைத்தாள். இருக்கிற பதவியே இறங்கிவிடுவதுபோல் ஆகிவிட்டதை உணர்ந்து, மாநிலக் காவல் வீரர்களைக் கையெடுத்துக் கும்பிட்டு, சமாதானப்படுத்தினாள். மணியும், தன் பங்குக்கு ரயில் போலீஸை அமைதிப்படுத்திவிட்டு, அந்தப் பெண்ணிடம் அமைதியாகச் சொன்னார்.

"உங்களுக்கு இருபது வருஷம் பதவியனுபவம் இருக்கிறதாய் சொல்றீங்க... நாலு வருடத்திற்கு முன்னால நானே உங்களுக்கு லட்டர் எழுதியிருக்கேன். இந்த ரயில் நிலையத்திற்குள் பல அனாதைக் குழந்தைங்க விழுது. வந்து எடுத்துட்டுப் போங்கன்னு நானே எழுதினேன். பதிலில்ல... ஒருவேளை... கேவலம் ஒரு பிளாட்பாரம் இன்ஸ்பெக்டருக்குப் பதில் போடப்படாதுன்னு, நீங்க நினைக்கலாமுன்னு எங்க நிலையத் தலைவர் கனகசபாபதி அய்யாவை வைத்து லட்டர் எழுதுனோம். அதுக்கும் பதிலில்ல... அப்புறம் நானே நேரில் உங்களைப் பார்க்க வந்தேன். அரைமணி நேரம் காக்க வச்சுட்டு, என்னைக் கூப்பிட்டிங்க... நான் பேசும்போது,

டெலிபோனைச் சுழற்றியபடியே கேட்டிங்க... அப்புறம் நான் அனாதைக் குழந்தைகளைப் பற்றி எடுத்துரைத்தேன். நீங்க என்னடான்னா அப்போவும் என்னை அனாதை மாதிரியே பார்த்திங்க. "பார்க்கிறேன்" என்று ஒரு வார்த்தையில் என்னைப் பார்க்காமல் சுவரைப் பார்த்தபடியே பதிலளித்திங்க... இப்போ என்னடான்னா..."

"இந்தா பாருங்க மிஸ்டர்... ஓங்களைப் பார்த்த ஞாபகம் இல்ல. நீங்க குழந்தைகளை விற்கலன்னு பொய் சொல்றது மாதிரி, என்னைப் பார்த்ததாயும் பொய் சொல்றீங்க."

"நீங்கததான் ரெட்டைப் புளுகாய்ப் புளுகிறீங்க... எங்க லட்டரை பெற்றதிற்கான உங்க அத்தாட்சி கையெழுத்தைக் காட்டட்டுமா..."

"காட்டுங்க பார்க்கலாம்."

"இதோ."

"இது என் கையெழுத்தில்ல..."

"யார் கையெழுத்தோ... உங்க இலாகாவோட முத்திரைக்கு மேலே உள்ள கையெழுத்து..."

"இதுக்குல்லாம் நான் பொறுப்பில்ல..."

"இப்போதான் புரியுது. ஒரு இலாகாவுக்கு அனுப்புற பதிவுத் தபால் ரசீதுல ஏன் கிளார்க்குகள் கையெழுத்து போடுறாங்கன்னு... உங்க இலாகா... அலுவலர் உங்க சார்பில கொடுத்த கையெழுத்துக்கு பொறுப்பு வகிக்கிற யோக்கியதை இல்லாத உங்களுக்கு அனாதைக் குழந்தைகளைப் பற்றிக் கேட்கிறதுக்கு என்ன யோக்கியதை இருக்குது?"

"மிஸ்டர்...."

"அட சரிதான் மேடம்... எந்த நிசமான சமூகத் தொண்டனும், பழி பாவத்துக்குப் பயப்படுவான். ஆனால், அந்தப் பழிபாவம் சுமத்தப்பட்டால் அந்தச் சுமையைத் தூக்கப் பயப்படமாட்டான். புரிஞ்சுக்கங்க..."

"சரி... நீங்க குற்றவாளி இல்லன்னு நிரூபிச்சுக் காட்டுங்க...?"

"குற்றம் சாட்டப்பட்டவர், குற்றம் நிரூபிக்கப்படும்வரை நிரபராதியாகக் கருதப்படவேண்டும் என்பது சட்டம்."

"நானும் சட்டம் படித்தவள்தான். அதோ அந்த அம்மாகிட்டே இருக்கிற குழந்தையும் ஓங்க குற்றங்களுக்கு ஒரு சாட்சி. தமிழக அரசின் சார்பில் நான் சொல்றேன். நீங்க குழந்தைகளை திருடி விற்பவர்... என்ன சொல்றீங்க...?"

மணியின் உடம்புக்குள்ளே, அக்கினி மூண்டது. ஒரு காலத்தில் பார்வதி, தன்னை எரித்துக் கொள்ள தன் உடம்புக்குள்ளேயே, யோக சக்தியால் நெருப்பு மூட்டினாளாமே... அப்படிப்பட்ட நெருப்பு... அது யோக சக்தி நெருப்பென்றால்... இது சேவா சக்தி நெருப்பு... மணி, ஒரு பீரோவைத் திறந்தார். அதிலிருந்த, நான்கைந்து கோப்புகளை எடுத்தார். ஒவ்வொன்றாக விரித்துக் காட்டியபடி, ஆக்ரோசமாகப் பேசினார்.

"ஒங்களுக்கு கண்ணிருந்தால் நல்லா பாருங்கம்மா... இதோ இது, மைசூரில் உள்ள துர்க்கா எழுதுன கடிதம். எப்படி அப்பான்னு எழுதியிருக்காள் என்று பாருங்க! இந்தப் பெண், கூட்ட நெரிசலில் சிக்கி, இந்த ரயில் நிலையத்தில் அனாதையாய் நின்ற போது, அந்தக் குழந்தையை பத்து வருஷத்துக்கு முன்னாடி... வீட்ல ரெண்டு நாள் தங்க வச்சு... அதோட அப்பாவை வரவழைச்சு ஒப்படைத்தேன். இதோ போட்டோவில தெரியுறானே... இந்த ரெண்டு வயது அனாதைப் பயலை நானே எடுத்து வளர்த்தேன். இப்போ எங்க கேன்டீன்ல பதினாறு வயது பையனாய் வேலை பார்க்கான். இது மாரியம்மா என்கிற பெண்ணோட தந்தை எழுதின கடிதம். சினிமாவுல நடிக்க ஆசைப்பட்டு ஒருத்தனை நம்பி, சென்னைக்கு வந்த பெண்ணை, காப்பாற்றி அவளை பத்திரமாய் வீட்டுக்கு அனுப்புனதற்காக தொடர்ந்து வருகிற லட்டர். இந்தப் பைல்... எனக்கு, என் மேலதிகாரிகள் கொடுத்த பாராட்டுக் கடிதங்கள்... எனக்கு வருகிற நன்றிக் கடிதங்களுக்கு பதில் எழுதுதணுமுன்னு நினைத்தால் என் மாதச் சம்பளமே பத்தாது. பால் கொடுக்கிற மாட்டைப் பல்லைப் பிடித்து பார்க்கப் படாதும்மா..."

"இருக்கலாம்... ஆனால் எதுக்கும் புராப்பர் புரசீஸர், அதுதான் முறைன்னு இருக்குதே. முதல்ல... எங்களுக்கு தபால் அனுப்பணும்..."

"என்னம்மா... முறை... ஒங்களுக்கு தகவல் அனுப்பி நீங்க வாரதுக்குள்ளே குழந்தைகளுக்கு "முறை" வச்சுட வேண்டியதுதான்... அதாவது கிராமத்துல செத்துப் போனவருக்காக எல்லோரும் கூட்டாய் அழுகிறதுக்குப் பெயர்தான் முறை... இந்த இழவு முறைதான் உங்கமுறை..."

"நீங்க வரம்பு மீறி பேசுறீங்க மிஸ்டர்."

"பின்ன என்னம்மா... சட்டத்தின் எழுத்தைவிட... அதன் உணர்வுதான் முக்கியம்... என்னோட செயலுக்கு, அதன் நோக்கத்தை பார்க்கணும். அப்படியும், ஒவ்வொரு குழந்தை கிடைத்ததும், அந்த விபரத்தை, ரயில் நிலைய போலீஸ்ல எழுத்து மூலம் தகவல் கொடுத்திருக்கோம். குழந்தையை தத்து எடுத்தவங்ககிட்டே, உறுதிமொழி வாங்கியிருக்கோம். இதுவரைக்கும் முப்பது

குழந்தைகளை மீட்டு, அதுங்களை நல்ல இடத்துல சேர்த்து இருக்கேன்."

"ஓ மை காட்... முப்பது குற்றங்கள்."

"சரி... குற்றந்தான்... குற்றவாளிதான்... என்ன செய்யப் போறீங்க...? என்ன செய்யணுமோ செய்துக்கங்கம்மா..."

மணி திறந்து வைத்த கோப்புகள், மின் விசிறியால் மிரண்டு, சத்தம் எழுப்பின. எவேரா ஒரு உதவியாள், அவற்றை மூடினார். மணி வீறாப்பாக சுவரில் சாய்ந்தார். ஏசுநாதர் சிலுவையில் சாய்ந்தாரே... அப்படிப்பட்ட சாய்வு... இதற்குள்... அங்கே ரயில்வே ஊழியர்கள், டிக்கெட் பரிசோதகர்கள் கூடிவிட்டார்கள். ஆளுக்கு ஆள்... அந்தம்மாவைப் பிடித்துக் கொண்டார்கள்.

"ஒன் மனசிலே என்னம்மா நெனச்சே...? உபகாரம் செய்ய முடியாட்டாலும் உபத்திரம் செய்யாம இருக்கலாம்... அரசாம்... அரசாங்கமாம்... சமூகநலத்துறையாம், சமூகநலத்துறை... எத்தனையோ குழந்தைகளை எங்க மணி அய்யா வருஷக் கணக்கிலே எடுத்து வளர்த்திருக்கார். அப்பெல்லாம் எங்கே போனே... பதவி சாக்கிலே நீயே குழந்தைகளை விற்கமாட்டேன்னு என்ன நிச்சயம்...?"

விவகாரம் சட்டம் ஒழுங்குப் பிரச்சினையாகிப் போனது மாநில அரசின் சிவப்புத் தொப்பிகளும், மத்திய அரசின் வளைந்த தொப்பிகளும், ஒன்றை ஒன்று முறைத்துக் கொண்டன. இந்தச் சமயத்தில், ரயில் நிலைய தலைமையதிகாரி, கனகசபாபதி, அங்கே ஓடி வந்தார். அவரை பார்த்ததுமே, ஊழியர்கள் மௌனமாகி, அவர் மீது கொண்ட மரியாதையையும், அவரது உறுதியான நேர்மை யையும் புலப்படுத்தினார்கள். அவரைப் பார்த்தவுடன் மணியால், தாளமுடியவில்லை. கிட்டத்தட்ட அழப்போனார். கனகசபாபதி தனக்கு விஷயம் தெரியும் என்பதுபோல், மணின் முதுகைத் தட்டிக் கொடுத்தார். பின்னர், அந்தம்மாவை கூர்மையாக உற்று நோக்கினார். இன்னும் கௌரவத்தையே பார்த்துக் கொண்டிருந்த அந்த அதிகாரப்பெண் அவரிடம் நேருக்கு நேராய் பேசினார்.

"போனது போகட்டும். இந்தக் குழந்தையையாவது என்கிட்டே... மன்னிக்கணும்... எங்க இலாகாவிடம் ஒப்படைக்கச் சொல்லுங்க... ஏப்பா... எப்படிக் கூச்சல் போடுறாங்க..."

"நீங்கதான் அவங்களைக் கூச்சல் போட வச்சுட்டீங்கனுன்னு நினைக்கேன். சட்டப்படி நீங்க என்னை வந்து பார்த்திருக்கணும். என் மூலம், அவரை அணுகியிருக்கணும்... சரி போனது போகட்டும், இந்தக் குழந்தையை இந்த பெரியவங்களிடம் என் சம்மதத்துடனும்,

போலீஸ் சாட்சியத்தோடுதான் மணி கொடுத்தார். இவங்க தமிழ் நாட்டுக்காரங்க. டில்லியில் பேராசிரியர், பேராசிரியையாய் வேலை பார்க்காங்க... குழந்தை இல்லை. சொந்தத்துல குழந்தையை எடுத்து உறவைக் கெடுக்காமல், சொந்தமில்லாத குழந்தையை தத்துப் பிள்ளையாய் எடுத்து உறவு கொண்டாடத் துடிக்காங்க... இதனால உங்களுக்கு என்ன கஷ்டம்..."

"காதும் காதுமாய் இருந்தால் கவலை இல்லை ஸார். இப்போ விவகாரம் பெரிசாயிட்டு ஸார்."

"நானும் உங்களை மாதிரியே சட்டப்பபடி பேசணும்... என்கிறீங்களா....? பிளாட்பாரம் டிக்கெட் இல்லாமல் அத்துமீறி நுழைந்ததுக்கு, நடவடிக்கை எடுக்கணும் என்கிறீங்களா...?"

"இல்ல ஸார்... நானாய் இங்கே வர்ல ஸார்... எங்க தலைமை அதிகாரி அனுப்பி வச்சாங்க ஸார்... வந்தால் குழந்தையோட வா... இல்லாட்டி வராதேன்னு சொன்னாங்க ஸார்... எப்படி அவங்களுக்கு பதில் சொல்லணுமுன்னு நீங்களே சொல்லுங்க..."

"ஒங்களோட அனாதை குழந்தைகள் வளர்ப்பு புள்ளி விவரத்தை கூட்டுறதுக்கு இந்தக் குழந்தை பலியாகணுமா...?"

"அப்படியில்ல ஸார்... வேணுமுன்னால்... இவங்களையும் என்னோட அனுப்பி வைங்க ஸார்... ஒரு ரிஜிஸ்டர்ல சின்ன "என்ரி" போட்டுட்டு குழந்தையை இவங்க கிட்டேயே கொடுத்துடுறேன் ஸார்... இவங்க எங்களுக்கு ஒரு உறுதிமொழி எழுதிக் கொடுக்கணும்... அவ்வளவுதான்... எல்லாம் அரை மணி நேரத்துல முடிஞ்சுடும் ஸார்... இதுதான் ஸார் சட்டம். அதைக் காக்க வேண்டியது என்னோட கடமை ஸார்..."

கனகசபாபதி சிறிது யோசித்தார். அவரது தர்ம சங்கடத்தைப் புரிந்து கொண்டவர்போல், டில்லிப் பேராசிரியர், அவரிடம் வந்தார். ஐம்பத்தைந்து வயதிருக்கும் முதிர்ச்சியான முகம். பேரமைதியான பேராசிரியத்தனம்.

"பரவாயில்லை தம்பி... எது நடந்தாலும் அது நல்லதுக்கே... இந்தம்மாவோடு நாங்கள் செல்கிறோம். அவர்கள் சொன்னது மாதிரி, எவையெல்லாம் எழுதப்படணுமோ, அவையெல்லாம் எழுதப்பட இணங்குகிறோம்... மங்கை இங்கே வாம்மா..."

பேராசிரியர் அருகே பேராசிரியை மங்கை வந்து நின்றார். அந்தம்மா தோளிலே ஒரு இரண்டு வயதுக் குழந்தை துகிலாகிக் கிடந்தது. அவளை விடமாட்டேன் என்பதுபோல், இரண்டு கரங்களாலும், அவள் கழுத்தில் சங்கிலிவடம் போட்டது. இருவரும்

புறப்படலாம் என்பதுபோல், அதிகாரியம்மாவைப் பார்த்தபோது, அந்தம்மா, வினயமாகக் கேட்டாள்.

“ஒரு சின்னப் பையன், இன்னொரு குழந்தையை வைத்து இருந்தானே, அவனை எங்கே ஸார்...?”

எல்லோரும், அந்த அறையை நோட்டம் போட்டார்கள். ரயில் பயலைக் காணவில்லை. குழந்தையோடு காணவில்லை. அந்தக் கூட்டத்தில் நின்ற அந்தோணி, பல் தெறிக்கக் கத்தினான்.

“அய்யோ... ஒரு குழந்தைக்காக எங்க குழந்தையும் போயிட்டுதே... எங்கே போனானோ...?”



எந்த ரயிலும் ஓடாமல், எல்லாமே ஆடி அடங்கிப் போனது போல் தோன்றியது.

சென்ட்ரல் ரயில் நிலையத்தில், உச்சி வெயில் கிறக்கத்தில், பல பயணிகள் படுத்துக் கிடந்தார்கள். சிலர், சுவர்களில் சாய்ந்து கிடந்தார்கள். சில பிளாட் பாரங்கள் வெறிச்சோடிக் கிடந்தன. பல தண்டவாள ஜோடிகள் ரயில் பாரம் இல்லாமல் இடையிடையே உள்ள இணைப்பு வாய்களால் சிரித்துக் கொண்டிருந்தன. ரயில் நிலையத்தின் வெளியோரத்தில் பிச்சைக்காரர்களும், நாடோடி களும், அடுத்த உணவுக்கு வழி தேடுபவர்கள்போல், கண்களை உருளவிட்டு, கால்களை மடித்து வைத்து, முடங்கிப் போய்க் கிடந்தார்கள்.

பிளாட்பாரம் இன்ஸ்பெக்டர் மணியின் அறையில், இப்போது அவரும் தலைமை அதிகாரி கனகசபாபதியும் தனித்திருந்தார்கள். அங்கே திரண்டிருந்த தொழிலாளர்களுக்கு அந்தக் குழந்தையை அதிகாரிப் பெண்ணிடம் கொடுக்க மனமில்லை. அதேசமயம், கனகசபாபதி அய்யா சொன்னால், அது சரியானதாகத்தான் இருக்கும் என்ற எண்ணத்துடன் கலைந்து போனார்கள். அந்தோணி, ரயில் பயலைத் தேடி, எங்கேயோ போய்விட்டான். கழுத்து நாடாவைச் சரிப்படுத்திக் கொண்டிருந்த கனக சபாபதியிடம் மணி முறையிட்டார்.

“வர வர நம்ம ரயில் நிலையத்துக்குள்ளேயும், ரயில் பெட்டிகளுக்குள்ளேயும், குழந்தைகளை விட்டுட்டுப் போகிறது

அதிகமாயிட்டு ஸார். என்னாலேயும் ஒரு அளவுக்கு மேலே செய்ய முடியல ஸார்... இந்த சமூக நலத்துறையாவது, ரயில் நிலையம், பேருந்து நிலையம், மார்க்கெட்டுகள் மாதிரியான கேந்திரப் பகுதிகளில் நடமாடும் அனாதை இல்லத்து வாகனங்களை விடலாம் ஸார்..."

"யாருமே இதை கேட்கமாட்டாங்க... ஏன்னா இது நல்ல யோசனை..."

"ஏன் ஸார் ஒரு மாதிரி இருக்கீங்க...? நான் ஏதும் தப்பு செய்திட்டேனா?"

"நீ மட்டும்தான் சரியாய் செய்யுற... காய்த்த மரத்துலதான் கல்லெறி விழும். கள்ளி மரத்துல எதுவும் விழாது. உன் சமூகக் கடமையை உனக்குத் தோன்றும்படி செய்... எதுக்கும் நானிருக்கேன்..."

"அந்த தைரியத்துலதான் இப்படிப்பட்ட ஆபத்தான, பணியிலயும் ஈடுபடுறேன் ஸார்... காபி ஏதாவது குடிக்கிறீங்களா ஸார்...?"

"வேண்டாம்பா... ஏனோ எனக்கு எது மேலயும் விருப்பமில்லே..."

"உங்க முகத்தைப் பார்த்தாலே தெரியுது சார்."

"இந்தத் தாய்களுக்கு சுமந்து பெற்ற குழந்தைகளை இப்படி அனாதையாய் விட்டுட்டுப் போக எப்படித்தான் மனம் வருமோ...?"

"பாவம் அவங்க கஷ்டம் அவங்களுக்கு..."

"இப்படிப் பார்த்தால் கொலைகளைக்கூட நியாயப்படுத்தலாம். எந்தப் பிரச்சினைக்கும் அதுக்குள்ளேயே தீர்வு இருக்கு... இவள்கள் நினைத்தால் நிச்சயம் தங்கள் குழந்தைகளை எப்படியாவது காப்பாற்றமுடியும். ஆனாலும் இவள்களுக்கு குழந்தை ஒரு பை புராடக்ட். அதாவது ஒரு உப பொருள்... ஏதோ ஒரு இனச் சேர்க்கையில் ஏற்பட்ட ஒரு ரசாயன விளைவு... அந்த விளைவை.. இவள்கள் குழந்தையாகப் பார்ப்பதில்லை... கொடுமையின் சின்னமாகவே நினைக்கிறார்கள்... குஞ்சுகளோடு நிற்கிற கோழிகூட... தன்னையே கௌவிப் பிடிக்கக்கூடிய பூனையை நோக்கி கொத்துறதுக்கு பாயும். குட்டியோட நிற்கிற ஆடுகூட தன்னைவிட வலுவான நாயை நோக்கி கொம்பை உயர்த்தும். ஆனால் இவர்களோ... தங்களோட சுயலாபத்துக்காக பெத்த குழந்தையைக் கூட குப்பைத் தொட்டியில் போடுகிறார்கள். நல்லவேளை... அந்தக் குழந்தைகளைக் கொல்லாமல் போடுகிறாள்களே... அதுக்காக பாராட்டணும்..."

கனகசபாபதி வெறுப்போடு சிரித்தார். மீண்டும் சோகமாகத் தொடர்ந்தார்.

"ஒரு ஆணுக்கோ, பெண்ணுக்கோ முக்கியமான தேவை தன்னைத்தானே இனப்படுத்திக் கொள்வதுதான்... என் தந்தை... என் அம்மா... என் மகன்... என் தம்பி... என் தங்கை என்ற உறவோடு தன்னைப் பிணைத்துக் கொண்டு... அடையாளப் படுத்திக் கொள்வதுதான் மனித இனத்தின் அடிப்படை ஆதாரம். இந்த ஆதாரமற்ற அனாதைகளை நினைக்கும் போதெல்லாம் அவகளுக்கு அவர்களை அடையாளப் படுத்திக்கொள்ள முடியவில்லையே என்ற எண்ணம் வரும் போதெல்லாம், நான் சிறுமைப்படுறேன். அனாதை போல துடிக்கிறேன்... மானுடமே அனாதையானதுபோல் அழவேண்டும் போல் தோணுது... ஆகையினாலே... நீ செய்கிற தொண்டு மனிதநேயத் தொண்டு... தொடர்ந்து நடத்து... நான் வாறேம்பா... நம்ம ரயில் பயல் கிடைக்காவிட்டால், எங்கிட்டே சொல்லு... நானும் லைன்ல சொல்றேன்... அவன்கிட்டே இருந்த குழந்தை யாருடையது?"

"எனக்கே தெரியாது ஸார்... நீங்க சொன்னது மாதிரி மானுடத்தின் கழிசடை ஒருத்தி எங்கேயாவது அந்தக் குழந்தையை விட்டெறிந்திருப்பாள்."

"சரி... இப்போ அனுப்பி வைத்திருக்கிற குழந்தையோட முடிவு தெரியுமுன்னால் ரயில் பயல் குழந்தையை சமூக நலத்துறையில் கொடுத்துடாதே... என்ன ஆனாலும் சரி..."

"சரிங்க அய்யா..."

"இறைவன் மகன் ஏசு, சிலுவை சுமக்கப் பிறந்தார். ஆனால், நீ குழந்தை சுமக்கப் பிறந்தாய்... மறந்துடாதே மணி..."

கனகசபாபதி, போய்விட்டார். சிடுசிடுப்பு இல்லாமலே நியாயமாக இருக்க முடியும். கோபப்படாமலே கண்டிப்புடன் இருக்க முடியும்... எல்லாவற்றுக்கும் மேலாக விளம்பரம் தேடாமலே மனிதாபிமானியா இருக்க முடியும் என்பதை நிரூபித்துக் கொண்டிருக்கும் தனது தலைமை அதிகாரியை, மணி, கண்கொட்டாமல் பார்த்தார். அவர் பேசிய பேச்சை நினைவுபடுத்தி, தனக்குள்ளேயே பேசிப் பார்த்தார். மனிதநேய வேர்களை மனதுக் குள்ளேயே புதுப்பித்துக் கொண்டார். கடந்த ஒரு மணி நேரமாக ஏற்பட்ட வாதச் சுமை.... தூக்கச் சுமையாகி, அவரை முன்னால் இருந்த மேஜையில் குப்புறப் போட்டது.

மணி, மணிக்கணக்கில் தூங்கிக் கொண்டிருந்தார். வெண்புறா ஒன்று மனித வடிவுடன் கைகளென்ற இறக்கைகளோடு துயில்

கொள்வதுபோல், அவர் வெள்ளைச் சீருடையில் அந்த மேஜை முழுவதும் வியாபித்துக் கிடந்தார். உதவியாளர்களுக்கும் அவரை உபத்திரவப்படுத்த மனம் வரவில்லை. என்றாலும் "அய்யா... அய்யா..." என்ற குரலையும், ஊளைச் சத்தத்தையும் கேட்டு அவர் கண் விழித்தார். தலையை மேஜையில் இருந்து எடுக்காமலே சத்தம் கொடுத்தவர்களைப் பார்த்தார். அந்தோணி... அவரருகே ரயில் பயல்... அவன் இடுப்பில் அந்தக் குழந்தை... அதன் வாயில் ஒரு பிஸ்கட்... அதன் சிதறல்கள் அப்பிய கன்னம்... அது 'இங்கா இங்கா' என்று அழுதபடியே அந்த பிஸ்கட்டை பசிப்பிணிக்கு மருந்துபோல சாப்பிட்டது. சுவைத்துச் சாப்பிடவில்லை. அம்மா அகப்படுவாளா என்று அக்கம் பக்கம் பார்த்தபடியே அழுதபடியே தின்றது.

மணி, முகத்தைத் துடைத்துக் கொண்டார். சிறிது நேரத்தில் ரயில் பயலைப் பார்த்துக் கண்ணைச் சிமிட்டியபடியே கேட்டார்.

"இதுக்குப் பேர்தாண்டா விதி என்கிறது. ஆறு வயதிலேயே, நீயே என்கிட்டே அனாதையாக வந்தே. நான்தான் உன்னை சுந்தரண்ணன்கிட்டே ஒப்படைத்தேன். இப்போ என்னடான்னால் நீயே ஒரு அனாதைக் குழந்தையை எடுத்துட்டு வந்திருக்கே... இதுக்காக அழுகிறதா, சிரிக்கிறதா... ஆமாடா... எங்கே போனே... எப்படி வந்தே.... இந்தக் குழந்தை எப்படிச் கிடச்சுது?"

ரயில் பயல், கைகால்களை ஆட்டி, அரைகுறையாகப் பேசப் போனபோது, அந்தோணி ஒரு பக்கமாய் அந்தப் பயலின் உதடுகளைச் சேர்த்து பிடித்துக்கொண்டே பேசினான்.

"ஒங்களுக்கும் அந்த அம்மாவுக்கும் வாதம் சூடு பிடிச்சு... நம்ம போலீஸும் அவங்க போலீஸும் மோதப்போனபோது... பய்ல் நழுவியிருக்கான். இங்கே இருந்தால் அகப்பட்டு மாட்டிப் போமோன்னு பயந்து, பயல் எழும்பூர் ரயில் நிலையத்துல ஒரு ரயிலுக்குள்ளே ஒழிஞ்சு இருந்திருக்கான். நம்ம கனகசபாபதி அய்யாதான் அங்கேயும் இங்கேயும் இவனைத்தேடி அலைந்த என்கிட்டே சொன்னாரு... எழும்பூர் நிலையத்துக்கு டெலிபோன்ல கேட்டாராம்... அவங்க தேடுனதுல இந்தப் பயல் அகப்பட்டான்... அய்யா என்கிட்டே சொன்னாரு... நான் ஓடிப்போய்... இந்தப் பயலை... இழுத்துட்டு வந்தேன்... தன்னையே காப்பாத்திக்க முடியாத பயல்... குழந்தையை காப்பாத்துவானாம்... படுவாப் பயல்... இப்போ மட்டும் நான் பிடிக்கலேன்னா மதுரைக்கோ, மானாமதுரைக்கோ போகிற ரயிலுல ஏறி போயிட்டிருப்பான்... அப்புறம் இவனை கண்டு பிடித்திருக்கவே முடியாது... ஏண்டா மாங்கா மடையா... பெரிய மனுஷனாய் ஆயிட்டே என்னே... ஒரு குழந்தையை காப்பாத்துறதாய் நினைச்சு அப்பாக்களை மறந்துட்டே என்னே... பாருங்கய்யா...

அந்தப் பய மகனும், இந்தப் பயல்கிட்டே எப்படி ஒட்டுறான் பாரேன்... ஒரு தாய் பிள்ளை மாதிரி..."

ரயில்பயல், மெய் சிலிர்த்து நின்றான். 'இந்தக் குழந்தை நிசமாவே என் தம்பிதானோ... இவனைப் பெற்றவள்தான் என்னையும் பெற்றிருப்பாளோ... அப்படின்னா... நான் அனாதையில்லே... நானும் இந்தத் தம்பியும் அம்மாவோட சேர்ந்து வாழ்கிற காலம் வருமோ... சீ. எவள் அம்மா... இவளுக்கு மகனாய் இருக்கிறதைவிட ஒரு பன்றிக்குக் குட்டியாய் இருக்கலாம். அம்மா வயத்தில், பிறக்காமலே பிறந்த பிள்ளை... அப்படின்னா... ஆறு வயதுல அம்மாவோட மாநிற முகத்தைப் பார்த்தது பொய்யா... அவளோட கையைப் பிடித்தபடி நடந்தது பொய்யா... வேணு முன்னே விட்டாளோ... வழி தெரியாமல் போயிட்டேனோ...'

அந்தப் பயலிடம் குழந்தை எங்கே கிடைத்தது... என்று கேட்கப்போன பிளாட்பார இன்ஸ்பெக்டர் மணி... "அடடே வாங்கய்யா... வாங்கம்மா... என்ன வெறுங்கையோட வாரிங்க" என்று பரபரப்பாய் பேசியபடியே எழுந்தார். டில்லிப் பேராசிரியரும், பேராசிரியையும் சோர்வாக, எதிர் நாற்காலியில் உட்கார்ந்தார்கள். அந்தம்மா சோகத்தை சாய்ப்பவள்போல் நாற்காலியின் பின் சட்டத்தில் சாய்ந்தாள். பேராசிரியர் அலுப்புத்தட்ட அந்தப் பெண் அதிகாரியிடம் ஏற்பட்ட அனுபவத்தை எடுத்துரைத்தார்.

"அதை ஏன் கேட்கிறீர்கள் தம்பி... அந்தம்மா குழந்தைகள் சட்டத்திற்கு காப்பதிகாரி என்று நினைத்தேன். கடைசியில் அவள் சிறுபிள்ளைத்தனமானவள் என்பதும், அந்தச் சட்டம் குழந்தைகள் சட்டமில்லை... குழந்தைத்தனமான சட்டம் என்பதும் புரிந்தது... எப்படிப்பட்ட கேள்விகள் கேட்கிறாள்... 'நீங்கள் இந்தக் குழந்தையை விற்க மாட்டீர்கள் என்பது என்ன நிச்சயம்? உங்களுக்கு குழந்தை பிறந்து இந்தக் குழந்தையை வேலைக்காரக் குழந்தையாக வைக்க மாட்டீர்கள் என்பது என்ன நிச்சயம்? மேடைப் பரிசோதகர் மணிக்கும் உங்களுக்கும் என்ன தொடர்பு? எவ்வளவு காலமாய் தொடர்பு? இதற்கு முன்பு குழந்தைகளை வாங்கினிங்களா... எப்படி வாங்கினீர்கள்... எவ்வளவு ரூபாய்க்கு வாங்கினீர்கள்... அசல் அடங்காப் பிடாரி, அசல் அடங்காப் பிடாரி."

"அப்புறம்."

"அப்புறம் என்ன... அப்புறம்... நான் டில்லிக்குப் போய் விண்ணப்பிக்க வேண்டுமாம். எங்கள் துணைவேந்தர் அந்தக் கடிதத்திற்கு பரிந்துரை செய்ய வேண்டுமாம்... கடிதத்துடன் சொத்துப் பத்திர நகல்கள், வங்கி இருப்பு... ஆகியவற்றின் நகல்களை

இணைத்து அனுப்ப வேண்டுமாம்... அடேயப்பா... நான் முனைவர் பட்டத்துக்கு எழுதும்போதுகூட, இப்படிப்பட்ட கேள்விகளைச் சந்திக்கவில்லை."

பேராசிரியர் பேசி முடித்ததும், பேராசிரியை, நாற்காலியின் முனைக்கு தன்னை நகர்த்தியபடியே பேசினாள்... ஐம்பது வயதிருக்கும், களை சொட்டும் முகம். எல்லாம் தெரிந்தும் ஒன்றும் தெரியாதது போன்ற குரல்... 'பாவங்களைக்' காட்டாமல், பகிரங்கமாகக் பேசும் சுபாவம்... பிறர் பேசும்போது... லேசாய் தலையை ஆட்டும் தோரணை...

"அந்தம்மா கேட்டது, கேள்விகள் அல்ல தம்பி. கேலிகள். இவ்வளவுக்கும் அந்த கருணை இல்லம் அந்தப் பெயருக்கு எதிர் மாறாய் இருக்கிறது. அங்குள்ள ஒவ்வொரு குழந்தையையும் இந்தம்மா பார்த்த பார்வை, பேசிய பேச்சு... ஆண்டவா... இந்தக் கொலை இல்லங்களில் இருந்து பிள்ளைகளைக் காப்பாற்றுப்பா..."

"எப்படியோ தம்பி... என் மனைவியின் ஆசையால்தான் இப்படி தத்துப் பிள்ளைக்காக தமிழகம் வந்தேன்... ஆரம்பமே சரியில்லை... எனக்கு அந்தம்மா... அந்தக் குழந்தையைத் தருவாள் என்கிற நம்பிக்கை இல்லை... இனிமேலும் வழக்கம்போல் இந்தம்மாவுக்கு நான் குழந்தை... எனக்கு இந்தம்மா குழந்தை... விடை கொடுக்கிறீர்களா தம்பி... முப்பதாண்டு காலமாக டில்லியில் வாழும் எங்களுக்கு இங்கே எல்லாமே புதிராக தோன்றுகிறது தோழரே... விடை கொடுக்கிறீர்களா?"

மணி, அந்த பேராசிரியத் தம்பதிக்கு விடை கொடுக்காமல், அவர்களது பிரச்சினைக்கு விடை இருப்பதுபோல் பூடகமாகப் பேசினார். அவரும் இப்போது செந்தமிழில் பேசினார்.

"உங்களுக்கு அந்தக் குழந்தைதான் வேண்டுமா...? இல்லை... எந்தக் குழந்தை என்றாலும் போதுமா?"

"மனிதர்களிடையே இன, மத வேறுபாடுகள் இருக்கலாகாது என்று மேடைகளில் பேசும் நாங்களா குழந்தைகளிடம் வேறுபாடு காண்போம்? எந்தக் குழந்தையும் சம்மதமே... சரி. இனிமேல் அதைப் பற்றிப் பேசி என்ன பயன்..."

மணி, ரயில் பயல் இடுப்பில் இருக்கிற குழந்தையை உற்றுப் பார்த்தார். அந்த பயல், அந்த சின்ன ஜீவனுக்கு பெரிய பெரிய முத்தங்களாகப் பதித்துக் கொண்டிருந்தான். மணி, அந்தப் பயலை உரிமையான அதட்டலோடு கேட்டார்.

"டேய்... குழந்தையை அவங்ககிட்டே கொடுடா..."

ரயில் பயல், அந்த வார்த்தையை எதிர்பாராதுபோல், மோவாயை உயர்த்தி, தான் திடுக்கிட்டதைக் காட்டினான். பிறகு, அதை மீண்டும் கேட்க விரும்பாதவன்போல், முகத்தைத் திருப்பினான். குழந்தையை இடுக்கி அணைத்தான். அது அழும்படி, அமுக்கிப் பிடித்தான். மணி, "ஒன்னைத்தாண்டா... குழந்தையைக் கொடுடா..." என்றார் மீண்டும்.

ரயில் பயல், குழந்தையோடு வெளியே ஓடப்போனான். அந்தோணி... அவனைப் பிடித்துக் கொண்டான். திமிறியடித்த பயலை, கக்கத்திற்குள் வைத்துக் கொண்டான். அந்தப் பயலோ குழந்தையைக் கொடுக்கப் போவதில்லை என்பதுபோல், தலையை ஆட்டினான். அந்தோணியின் பிடியில் இருந்து, விடுபட்டு, மணியை நேருக்கு நேராய் பார்த்து, தலையை பக்கவாட்டில் ஆட்டினான். அந்தோணி அவனைச் சாடினான்.

"மூளை கெட்ட முண்டம்... குழந்தையை ஏண்டா... கொடுக்க மாட்டேங்கிறே... இதை வைத்து ஒன்னால காப்பாத்த முடியுமா...?"

முடியும் என்பதுபோல், அந்தப் பயல் மணியின் முன்னால் நெருங்கி நின்றான். வலது கையை, வெளியே சுட்டிக்காட்டி, பிறகு வாயருகே கொண்டு போனான். உரல் ஆட்டுவதுபோல் வலது கையைச் சுற்றினான். பிறகு மணியைக் கையெடுத்துக் கும்பிட்டான். குழந்தையை கெட்டியாக பிடித்துக் கொண்டான். மணிக்கு, அவன் என்ன சொல்கிறான் என்பது புரிந்தது. அது புரியாத அந்தோணிக்கு விளக்கினார்.

"போன மாதம் இவனுக்கு நம் சிற்றுண்டி விடுதியில் வேலை போட்டுக் கொடுக்கிறதாய் சொன்னேன். அப்போ பயல் வேண்டான்னுட்டான். காலமெல்லாம் ரயிலுலயே "அப்"களோட பிரயாணம் செய்யப் போவதாய் சைகை செய்தான். இப்போ என்னடான்னா... வேலையில் சேரத் தயாராம். அதுல கிடைக்கிற வருமானத்துல இந்தக் குழந்தையைக் காப்பாற்றுவானாம்."

அந்தோணி, அந்தச் சின்னஞ் சிறு பயலை, ஆச்சரியமாகப் பார்த்தான். அன்போடு பார்த்தான். ஆனாலும், கத்தினான்.

"ஒனக்கு மூளை இருக்காடா... முண்டம்! இந்தப் பெரியவங்க கிட்டே இந்தக் குழந்தை போனால்... ஒரு காலத்துல அவங்களை மாதிரியே படிச்சு பட்டம் வாங்கி வாத்தியாராகும். அவ்வளவு ஏன்... நம் ரயில்வே இலாகாவுலேயே அதிகாரியாய் வரலாம். தினம் ஒரு உடுப்பு, நாளொரு சாப்பாடுன்னு நாகரிகமாய் வளரும். ஒன்கிட்டே இருந்தால்... எப்படி வளரும்... நல்லா நெனைத்துப் பாருடா... ஒன்னை மாதிரியே இதுவும் அனாதையாய் ரயில் ரயிலாய், ஆள் ஆளாய்

அலையணும் என்கிறியா... பெரிய விஞ்ஞானியாய் ஆகணுமா... இல்ல ரயிலுல பொறிகடலை விக்கணுமா... சோமாறி, சோமாறி... நீ விளையாடுறதுக்கு இந்தக் குழந்தை என்ன பொம்மையா... ரத்தமும் சதையுமான எதிர்கால மனிதண்டா..."

அந்தப் பயல், சிறிதும் அசைவற்று நின்றான். எதையோ யோசிப்பதுபோல் உதடுகளைக் கடித்தான். பிறகு வெறிப்பிடித்தவன் போல் அந்தக் குழந்தைக்கு மாறி மாறி முத்தம் கொடுத்தான்.

தலையில், முகத்தில், தோளில், கழுத்தில், வயிற்றில், காலில், பிறகு, அந்தோணியை நோக்கி குழந்தை இருந்த தன் இடுப்பைக் காட்டினான்.

அந்தோணி அந்தக் குழந்தையைத் தூக்கி மணியிடம் கொடுத்தான். அவரோ, அந்த பேராசிரியரிடம் கொடுத்தார். அந்தக் குழந்தையோ, லேசாய் சிணுங்கியபடியே, ரயில் பயலை நோக்க கைபோட்டது. 'எடு... எடு...' என்பதுபோல் தன் பிஞ்சுக் கரங்களை நீட்டி நீட்டி மடக்கியது.

அந்தப் பயல், 'குய்யோ முறையோ' என்று கூப்பாடு போட்டான். அதே சமயம், அந்தக் குழந்தையிடம் நெருங்கப் போன கால்களை நிறுத்திக் கொண்டான். கைபோடும் குழந்தையை கண் கலங்கிப் பார்த்தான். வாய்முட்ட அழுதான். அந்தோணி, பயலை தன்னோடு சேர்த்து அணைத்துக் கொண்டான். "அழாதடா... அழாதடா..." என்று அழுதழுது சொன்னான். அந்தப் பயலும் "அப் அப்" என்று அந்தோணி உடம்பை தன் விறகுக் கைகளால் சுற்றி வளைத்தான்.

எல்லாமே பத்து நிமிட நேரம்.

ரயில் பயல், அந்தோணியின் அன்புப் பிடியில் இருந்து விடுபட்டு, அந்த அறைக்கு வெளியே வந்தான்; படுத்துக் கிடந்த மக்கள் மத்தியில் குப்புறப் படுத்துப் பார்த்தான்; மல்லாந்து படுத்தான்; ஒருச்சாய்த்துப் படுத்தான்; எழுந்து பார்த்தான்; இருந்து பார்த்தான்; நடந்து பார்த்தான்; நின்று பார்த்தான்.

அவன் மனம், அலை மோதியது. உடல் அல்லோலப்பட்டது. இறுதியில், இருக்க முடியாமல் எழுந்து அவன் வெளியே பார்த்தபோது, ஒருத்தி தென்பட்டாள். அந்த ரயில் பாலத்தில் குழந்தையைப் போட்டாளே... அவளே... அவள்தான். பயல், "அம்... அம்..." என்று கூவியபடியே அவளை நோக்கி ஓடினான்.

வெறிச்சோடிக் கிடந்த சென்ட்ரல் ரயில் நிலையம் வீரியப் பட்டதுபோல், பல்வேறு ரயில்கள், புள்ளி விவரக்கோடுகள் மாதிரி ஒன்றுக்கு ஒன்று நீண்டும் குட்டையாகவும் நின்று கொண்டிருந்தன.

வட கோடியில் உள்ள அவற்றின் எஞ்சின் முகங்கள் சரியாகத் தெரிய வில்லை. ஐதராபாத் துரித ரயில், காசி ரயில், பாட்னா ரயில், தாதர் ரயில், ஜி.டி. ரயில்... இப்படிப் பலப் பல ரயில்கள்... கால்மணி நேர வித்தியாசங்களில் புறப்படக்கூடியவை. ஒரே பேரிரைச்சல். ஒதுக்கீட்டு அட்டவணைகளை, ஊழியர்கள் பெட்டி பெட்டியாக ஒட்டிக் கொண்டிருக்க, அவர்கள் அப்படி ஒட்டும் முன்பே, பலர், ஒட்டுகிறவர்களையே ஒட்டிக் கொண்டிருந்தார்கள்.

எல்லா ரயில்களையும் விட, நீண்டிருந்த ஜி.டி.யில் எஸ்.11 பெட்டியில் அந்த ரயில் பயல், ஜன்னலோர இருக்கையில் சாய்ந்து கிடந்தான். பொதுவாக ரயில் நகரப் போகிற சமயத்தில் மட்டுமே, எந்தப் பெட்டியிலாவது ஒரு பெட்டியில் ஏறி, அந்த சேவகப் பெட்டிக்கு வரும் அவன், ரயில் புறப்படுவதற்கு அரை மணி நேரத்திற்கு முன்பாகவே, வந்துவிட்டான். பேராசிரியரும், பேராசிரியையும் தோட்டித் தொழிலாளி அந்தோணி காட்டிய இடங்களில் உட்கார்ந்தார்கள். பேராசிரியை மடியில் இருந்த அந்தக் குழந்தை, இப்போது அதன் அம்மாவால்கூட அடையாளம் காண முடியாதபடி மாறியிருந்தது. அதன் கழுத்தில் தாயத்திற்குப் பதிலாக தங்கத்திலான டாலர் சங்கிலி மின்னியது. ஊதா நிற நீளக்கால் சட்டை. கம்பளிப் பின்னல்சட்டை. தலையில் வட்டமான தொப்பித் துணி... இப்போதும் அந்தக் குழந்தை, அம்மா வருவாளா என்பது மாதிரி அங்குமிங்கும் பார்த்தது. அதன் கன்னங்கள் வீங்கியிருந்தன. அந்த ரயில் பயலை, தற்செயலாகப் பார்த்த அந்தக் குழந்தை லேசாய் சிரித்து அவனை நோக்கி கைபோட்டது.

ஆனால், அவனோ, முகத்தைத் திருப்பி, அதுக்கு முதுகைக் காட்டினான். கிட்டாதாயின் வெட்டென மற என்ற பழமொழியை தெரிந்து வைத்திருந்தவன் போல்... அதுமட்டுமல்ல காரணம்... இப்போது அவனே குழந்தையாகிப் போயிருந்தான். அந்தக் குழந்தையைப் பெற்றவளை ரயில் நிலையத்தில் பார்த்த நினைவுகளில் இருந்து, அவன் இன்னும் விடுதலையாகவில்லை.

அவளை நோக்கி, ஓடிப் போனவனை, அவள் மருட்சியுடன் பார்த்தாள். "ஏய்" என்று கூப்பிடப் போனவன், குழந்தையைப் பற்றி

அவளே கேட்கட்டும் என்பது மாதிரியும், என்னைப் பெற்றவளாக இருந்தால் அவளே அடையாளம் கண்டு கொள்ளட்டும் என்பது மாதிரியும், அவளுக்கு முழுமையான முகத்தைக் காட்டியதும், நினைவுக்கு வந்தன. ஆனால், அவளோ, அவனை பயத்தோடு பார்த்ததும், அவனிடம் குழந்தை தத்தாகி இருப்பதைச் சொல்லப் போனவன், அதைக் கேட்கக்கூட அவளுக்கு தகுதியில்லை என்று நினைத்து சும்மா இருந்ததும், அந்தச் சந்தப்பத்தில், அவனுக்கு தெரிந்த ஒரு போலீஸ்காரன், "குழந்தையை எங்கேடா" என்று கேட்டபடியே ஒரு பத்திரிகையை புரட்டியபோது, அவனும் அவளும் பயந்துபோய் எதிரெதிர் திசைகளில் ஓடியதும் நினைவு களாயின. அதோடு அவனுக்குள்ளே ஒரு பட்டிமன்ற விவாதம். ஆறு வயதில் பார்த்த அம்மா முகம் மாதிரி அவள் தெரியவில்லை. இவளுக்கு முகத்தில் அம்மைத் தழும்புகள்.... அம்மாவுக்குக் கிடையாது. ஒருவேளை... அவனை கூட்ட நெரிசல் சாக்கில், விட்டுவிட்டுப் போன பிறகு அம்மை வந்திருக்குமோ...? இவள்தான் ஒருவேளை என் அம்மாவோ...? இந்த ரயில் நிலையத்துலதானே மணியப்பா என்னைக் கண்டெடுத்தார்.

மருகிக் கொண்டிருந்த அந்தப் பயல், ஒரு முடிவுக்கு வந்தவன் போல், முதுகு இருந்த இடத்திற்கு முகத்தைக் கொண்டு வந்தான். கம்பீரப்பட்டவன்போல் கழுத்தை உயர்த்தி வெளியே எட்டி பார்த்தபயல், அந்தப் பெட்டிக்கு வெளியே, சுந்தரம் அப்பா, கையில் ஒரு பேப்பர் பார்சலுடன் நிற்பதைப் பார்த்துவிட்டு, உள்ளே போய், பெட்டிக்கு உள்ளே பதுங்கிக்கொண்டான். அப்பாவின் வாழ்க்கையில் குறுக்கிட்டு, அவர் மனைவியை புயலாக்கி அப்பாவைப் புரளியாக்கி விடக்கூடாது. ஆனாலும், அப்பாவை நான் பார்க்கணும், அவர்தான் என்னைப் பார்க்கக்கூடாது. அவர், என்னைப் பார்க்காத சமயமாக, நான் அவரைப் பார்க்கணும். இப்போ மட்டுமில்ல... எப்போவும்...

வெளியே நின்ற சுந்தரம், உள்ளே நின்ற அந்தோணியிடம் கேட்டார்.

"அந்தோணி... நம்ம பயலைப் பார்த்தியா?"

"பார்க்கலண்ணே... இனிமேல்தானே வருவான்... உள்ளே வாங்கண்ணே..."

"பரவாயில்லே... இங்கே நின்னால்தான் அவன் எந்தப் பக்கமாய் வாரான்னு தெரியும்."

"என்னண்ணே புதுக்கைதையாய் இருக்குது.... ஒங்ககிட்ட இருந்துதானே வருவான்."

"நிசந்தான். ஆனால் இன்னிக்கு அப்படி இல்ல..."

"என்னாச்சு..."

"அந்தச் சின்னப்பயல் பெரியவனாயிட்டான். இந்தப் பெரியவன் சின்னவனாயிட்டேன். காலையில் இருந்து, இந்த சாயங்காலம் வரைக்கும் என் கண்ணுலயே பட்டல... எனக்குத்தான் மனசு கேக்கல..."

மேற்கொண்டு ஏதோ பேசப்போன சுந்தரம் லேசாய் இருமினார். ஏதோ பேசினார். அப்புறம் பலமாக இருமினார். அந்தோணி, பதறியபடியே கேட்டான்.

"உடம்பை ஜாக்கிரதையா பார்த்துக்கங்கண்ணே... இரண்டு வாரத்திற்கு முன்னால ஒங்களுக்கு இருதய அட்டாக் வந்துதாமே... அப்படியாண்ணே...?"

"பலமா நெஞ்சு வலிச்சுது... ரயில்வே டாக்டர்கிட்டே போனேன். இருதய தாக்குதலுக்கு சான்ஸ் இருக்கு... எச்சரிக்கையா இருங்கன்னு சொன்னாரு... நிசமாவே எனக்கு வந்தது, நானே உணராத நெஞ்சுத் தாக்குதலான்னு கேட்டேன்... பயப்படாதீங் கோன்னு மட்டும் பதில் சொன்னார். எனக்கு சிகரெட் கிடையாது. புகையிலை கிடையாது சல்பேட்டா சகவாசமில்லை. அப்படி இருக்கையில் எனக்கு எப்படி வரும்... மாத்திரை தந்தார்... நான்தான் சாப்பிடல..."

"எந்த கெட்ட பழக்கமும் இல்லாதவங்களுக்கும், இந்த மாதிரி ஹட்டாக் வருமாம். இதுலதான் இயற்கையோட சூட்சுமம் இருக்குண்ணே... டாக்டரை அடிக்கடி பாருங்கண்ணே... "இது" எப்போ வேணுமுன்னாலும் வருண்ணே... டாக்டரை அடிக்கடி பாருங்க."

"பார்க்கலாம்... பார்க்கலாம்... இந்தப் பயலைப் பார்க்க முடியலியே..."

பெஞ்சுக்குக் கீழே கிடந்த பயல், துடித்துப்போனான் அப்பாவுக்கு அந்த நோயா...? எங்கப்பாவுக்கு எப்போ வேணுமுன்னாலும் "இது" வருமா...'

அந்தப் பயல், பெஞ்சை உடைப்பதுபோல் வீறிட்டு எழுந்தான். "அப்... அப்..." என்று ஓடியபடியே எதிர்ப்பக்க ஜன்னலருகே முகம் புதைத்தான். பிறகு, எந்த வழியாகப் போனால், சீக்கிரம் போகலாம் என்பதுபோல், அங்குமிங்குமாய் ஓடி, எதிரே சுமையோடு வந்த, போர்டர்மேல் மோதி, வெளியே வந்தான். சுந்தரத்தை வயிற்றோடு சேர்த்து இடுப்பைக் கட்டிக்கொண்டு "அப்... அப்..." என்று கத்தினான். பிறகு அவர் வயிற்றில் மோவாயை ஊன்றியபடியே,

அவர் முகத்தைப் பார்த்து, "அப். பா..." என்று தலையை ஆட்டியதில் அவன் கண்ணீர் சொட்டு நீர்ப்பாசனம்போல் அவர் வயிற்றில் சிதறின. சுந்தரம் அவன் தலையைக் கோதிவிட்டார். கழுத்தைத் தடவி விட்டார். திடீரென்று அந்தப் பயல், அவர் நெஞ்சில், ஆள்காட்டி விரலை அமுக்கி, பிறகு, கையைத் தூக்கி, ஆட்டி ஆட்டி, உடம்புக்கு எப்படி இருக்கிறது என்று கேட்டான். பிறகு அவர்மேல் கோபப்பட்டவன்போல், அவர் வயிற்றில் அடித்தான். பிறகு, 'மருந்து சாப்பிட்டால் என்ன...?' என்று கையை வாயருகே கொண்டு போய்விட்டு, அந்த கையை கேள்விக்குறியாக்கி காட்டினான். இப்போதே டாக்டரிடம் போகவேண்டும் என்பது போல், அவரைப் பிடித்துத் தள்ளினான். அது முடியாமல் போகவே, அவர் கையைப் பிடித்து இழுத்தான்.

உள்ளே, இதனை, உணர்வு மயமாய் பாதித்துக் கொண்டிருந்த அந்தோணியைப் பார்த்து, தான் அன்றைக்கு, ரயியில் போகப் போவதில்லை என்பதுபோல் சைகை செய்தான். சுந்தரம், அவனை அணைத்துக் கொண்டார். அவன் கன்னங்களை பிதுக்கியபடியே, "எனக்கு எதுவும் வராதுடா... அப்படி ஏதாவது வாரதாய் இருந்தால், நீ என்கிட்டே வழக்கமாய் வாரது மாதிரி வராமல் போனால்தான் வரும்" என்றார். உடனே அந்தப் பயல், இனிமேல் அப்படி நடக்க மாட்டேன் என்பதுபோல் தலையை ஆட்டினான். தான் செய்தது தப்பு என்று வாயில் அடித்துக் கொண்டான். கரங்களைக் காதுகளில் போட்டு தோப்புக்கரணம் போட்டான்.

சுந்தரம், கையில் இருந்த பொட்டலத்தைப் பிரித்தார். நாலு முழம் புது வேட்டியை எடுத்து, அவன் இடுப்பைச் சுற்றிக் கட்டியபடியே, அவன் பழைய வேட்டியை அவிழ்த்தார். அவன் கிழிந்த பனியனைத் தாறுமாறாக கிழித்தபடியே, அந்த கிழிசல்களை எடுத்து, ரயில் தண்டவாள இடைவெளிக்குள் போட்டபடியே, ஒரு "டி" சட்டையை அவன் கழுத்துக்குள் திணித்து வயிறு வரைக்கும் இழுத்துவிட்டார். பைக்குள் ஐந்து ரூபாய் நோட்டைத் திணித்து விட்டார். அந்தோணி சந்தேகமாகக் கேட்டான்.

"ஒங்களுக்குள்ளே எதுவோ நடந்திருக்கு..."

"ஏதோ ஒன்று நடந்துட்டுதான்... ஆனால் அது எங்க உறவை நகர்த்திடல... ஒனக்குத் தெரியாதா அந்தோணி...? ஏசுநாதர் சிலுவையில் அறையப்பட்டு, அதிலிருந்து அவர் மீண்டதாலே தானே பெருமை... எங்களோட உறவும் ஒரு சந்தேகச் சிலுவையில் அறையப்பட்டு, இப்போ தானாவே உயிர்த்தெழுந்துட்டு..."

"நல்லா பேசுறிங்க சுந்தரண்ணே..."

"நான் பேசலப்பா... ஏதோ ஒண்ணு பேச வைக்குது... பாசமா பந்தமா சிநேகிதமா... முன்ஜென்மத் தொடர்பா... மனுஷத்தன்மையா... இல்ல இதுங்க எல்லாம் சேர்ந்த கடவுளா... எனக்கே தெரியலே... ஏதோ ஒன்று என்னை, நீ பாராட்டும்படியா பேச வைக்குது..."

"எதுவுமில்லே... இந்த பயல்தான் அப்படி பேச வைக்கான்."

சுந்தரமும், அந்தப் பயலும், ஒருவரை ஒருவர் நேருக்கு நேராய் பார்த்தபடியே நின்றார்கள். கண்ணுக்குத் தெரியாத... அதேசமயம்... கட்புலனுக்கு புலனாகும் பாச ஈர்ப்பு சக்தியாக இணைக்கப்பட்டு, ஒருவர் அருகாமையில் இன்னொருத்தர் சுகம் கண்டார்கள்.



அந்த ஜி.டி. எக்ஸ்பிரஸ் ரயிலின் எஞ்சின் மூக்கில், பச்சை மூக்குத்தி குத்தப்பட்டதுபோல் சிக்னல் விழ, அந்தக் குத்தலின் கஷ்ட சுகத்தில் சிணுங்குவதுபோல், ரயில் சத்தம் போட்டது.

பயணிகள் ஏறிக் கொண்டார்கள். அவர்களை சந்தோஷமாகவோ அல்லது சமர்த்தாகவோ வழியனுப்ப வந்தவர்கள்... இறங்கினார்கள். சுந்தரத்தை விட்டுப் போகத் தயங்கிய பயலின் முதுகை, அவர் தட்டிக் கொடுத்தார். அவனை, ரயில் வாசலுக்கு இழுத்துப் போனார். அந்தப் பயலும், அவரை மாத்திரை சாப்பிடும் படி சொன்னபடியே தயங்கித் தயங்கி உள்ளே போனான். அவன் சுந்தரத்தைவிட்டு, அப்புறம் ஒரே ஓட்டமாய் ஓடி ஏறிக் கொண்டான்.

அந்தப் பெட்டியின் வடக்கு வரிசையில் பேராசிரியர், பேராசிரியை, இருவரும் மடிகளில் குழந்தையை படுக்க போட்டபடி உட்கார்ந்திருந்தார்கள். இவர்களை அடுத்து நாற்பது வயது நரைவிழுந்த மனிதர்... அவரை அடுத்து ஒரு வாலிபன்... கன்னங் கருப்பன்... உருண்டு திரண்ட உடம்பன்... தெற்கு வரிசையில் ஜன்னலோரம் ரயில் பயல்... அப்புறம்... அந்தோணி... இன்னொரு துப்புறவத் தொழிலாளி கணேசன். அப்புறம் ஒரு காலியான இடம்... அந்தோணி, கணேசனிடம் கேட்டான்.

"படபடத்தானை எங்கே...?"

"யாரு மெக்கானிக் சோமையாவா...?"

அப்போது பார்த்து சோமையா வந்தான். தன்னைப் பின் தொடர்ந்து வந்த உதவியாளர் கிருஷ்ணனிடம் கத்தினான்.

"என்னய்யா எல்லா ஃபேன்களும் ஆடுது...?"

"சுற்றும்போது ஆடத்தான் செய்யும்."

"இந்தத் திமுறுதானே வாணாங்குறது... அடுத்த ஸ்டேஷன் வந்ததும் எல்லா மின்சார விசிறிகளையும் டைட் பண்ணனும்... என்னய்யா இது, ஒரே ஈரம்... ஏம்மா ஒங்க குழந்தை ஒண்ணுக்கு இருந்துதா...? வெளில போய் விடப்படாது...?"

"அதுக்கு எப்போ வரும் எப்போ வராதுன்னு எப்படி ஸார் தெரியும்...?"

"தெரியுமோ... தெரியாதோ... தெரியணும்... அதோ பாருடா... கிருஷ்ணா... அங்கே இப்பவே அவனும் அவளும் எப்படி ஒருத்தர் மேல் ஒருத்தர் சாயுறாங்க பார்... அநேகமா அவள், அவன் சம்சாரமாய் இருக்க மாட்டாள்... இருந்தாலும், இப்படியா குலாவுறது... அதோ அந்த ஆசாமிக்கு எத்தனை பெட்டிங்க பாரு- பெட்டி வியாபாரம் பாக்கானா...? அந்தப் பயல் தள்ளு வண்டியை எப்படி வளைச்சு வளைச்சு தள்ளுறான் பாரு... இதனாலதான் பிளாட்பாரம் தேஞ்சுடுது... இவங்களை எல்லாம் நிக்க வச்சு சுடணுமுய்யா..."

"இப்போ சுடணுமுன்னால் ஒன்னைத்தான் சுடணும். ஏன்னா, நீ மட்டும்தான் நிற்கிறே... பேசாமல் உட்காரு... ஸாரே."

சோமையா, அந்தோணியை முறைத்தபடியே உட்கார்ந்தான். ரயில், கொருக்குப்பேட்டை, தண்டையார்பேட்டை, திருவொற்றியூர், விம்கோ நகர், கத்திவாக்கம், எண்ணூர், பொன்னேரி, கும்மிடிப்பூண்டி... ஆகிய ரயில் நிலையங்களைக் கடப்பது வரைக்கும், தத்தம் சாமான்களை அடுக்கியபடியும், பணம், டிக்கெட், போன்றவற்றை சரிபார்த்துக் கொண்டும் இருந்த பயணிகள், ரயில், சூலூர்பேட்டையைத் தாண்டியபோது, நிதானத்திற்கு வந்தார்கள். மற்றவர்களும், அந்த ரயிலில் பயணம் செய்கிறார்கள் என்பதை அப்போதுதான் கண்டவர்கள்போல், ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். பேராசிரியர், பேராசிரியை அமர்ந்துள்ள இடத்தையே மெக்கானிக் சோமையா குறிபார்த்தான். இடுப்புக்கு மேல் அந்தம்மா மடியிலும், இடுப்புக்குக் கீழே பேராசிரியர் மடியிலுமாக இப்போது தூங்கிக் கொண்டிருந்த குழந்தையையும், அந்த தம்பதியரையும் மாறி மாறிப் பார்த்தான். பேராசிரியர் அதைப் புரிந்து கொண்டு, சிரித்தபடியே சொன்னார்.

"இந்த வயதில்... இவர்கள் எப்படி குழந்தையை பெற்றார்கள் என்று யோசிக்கிறீர்களா தம்பி...? இந்த வயதிலும் பலர் பெற்றுக் கொள்கிறார்கள் என்றாலும், அந்தப் பேறு கிடைக்காதவர்கள் நாங்கள்... இந்த ரயில் தந்த பரிசு இது... ஒரு அதிகாரி அம்மா ஆடுன ஆட்டத்தைப் பார்த்ததும், இப்போகூட பயமாய் இருக்கிறது. எங்கே அந்த அரசம்மா இங்கேயும் வந்து இந்தக் குழந்தையையும் பறித்து விடுவார்களோ என்று அச்சமாக இருக்கிறது. ஆமாம் தம்பி... இந்த நாட்டிலே... திக்கற்று தெருவிலே கிடக்கிற குழந்தையை எடுத்த வளர்க்க வேண்டுமானாலும் சமூக நலத்துறையின் முன் அனுமதி வேண்டுமாம்... இல்லையானால் சட்டப்படி குற்றமாம்... ஏற்கனவே மணித்தம்பி தந்த குழந்தையை, அந்தம்மா பறித்துப் போய் விட்டாள்..."

சோமையா, படபடத்தான்.

"அய்யய்யோ... இது சிக்கலான குழந்தையாய் இருக்கும்போல... எதுக்கும் ரயில்வே கார்டுகிட்டே ஒரு வார்த்தை சொல்லிடுங்க... ஒங்களைத்தான் பெரியவரே... இன்னுமா குந்துறீங்க...? சீக்கிரமாய் எழுந்துபோய் விவகாரத்தை சொல்லிட்டு வந்திடுங்க... என்ன எழுந்திருக்காமல் இருக்கிங்க... சரி நானே போய் சொல்லிட்டு அவரையே கூட்டிட்டு வாறேன்."

எழுந்திருக்கப்போன சோமையாவின் தோள்களை அந்தோணி அமுக்கிப் பிடித்தபடியே "ஒனக்கு மூளை இருக்குதா ஸாரே... ரயில்கார்டுக்கும், இந்த விஷயத்துக்கும் என்ன சம்பந்தம்... பேசாமல் உட்கார்..." என்று சொன்னபடியே அவனை எழுந்திருக்கவிடாமல் செய்தான். சோமையாவால் எழ முடியவில்லையே தவிர, பேசாமல் இருக்க முடியவில்லை.

"சரியான மணி... இவருக்கு எதுக்கு இதுல்லாம்? தோ பார்டா கிருஷ்ணா! எந்த மடப்பயலோ முன்னால் இருக்கிற பெட்டியில இருந்து துப்புறான்... பாரு... நம்ம மேல பட்டா என்னாகிறது...? யோவ் வேர்க்கடலை... சாப்பாட்டுச் சமயத்துல வவுத்தைக் கெடுக்கிறதுக்கு வந்துட்டியா...? கிருஷ்ணா... ரயில் கூடூர்ல நிற்கப்போ, நீ ஃபேன்களை டைட் செய்யணும்... சக்கடா வண்டிபோல ஒரே ஆட்டம்."

பேராசிரியர், சோமையாவை விட்டுவிட்டு அருகே இருந்த வாலிபனைப் பார்த்தார். அவன் தன்னை அறிமுகம் செய்து கொண்டான்.

"என் பெயர் இளங்கோ... டில்லியில் சர்வீஸ் கமிஷனில் நேரடித் தேர்வுக்குப் போறேன்... ஐ.ஏ.எஸ். பரிட்சை தேறிட்டேன்.... இப்போ நேர்முகத் தேர்வுக்குப் போறேன்."

பேராசிரியர், அவனை பெற்ற மகனை பெருமிதமாய் பார்ப்பதுபோல் பார்த்துப் பேசினார்.

"ஒங்கள மாதிரி கருத்த பையன்கள் இந்த மாதிரி தேர்வுகளில் வெற்றி பெறுவதைப் பார்க்க எனக்கு எவ்வளவு மகிழ்ச்சியாய் இருக்குது தெரியுமா...? இந்திய நிர்வாக சேவை அணியில் தேறுபவர்களில் பெரும்பாலோர் ஆங்கிலப் பள்ளிகளில் படித்தவர்கள்... இவர்களுக்கு உயரமான சிகரம், ஆழமான நதி, ஏழு அதிசயங்கள் எல்லாம் தெரியும். ஆனால், தாய்மொழியோ... அல்லது குட்டாம்பட்டி... சட்டாம்பட்டி மாதிரியான கிராமங்களோ தெரியாது... வெள்ளையன் போனாலும் இப்படிப்பட்ட வெள்ளையர்கள்தான் நம்மை ஆள்கிறார்கள். இந்த அணியில் கிராமத்துப் பையனாக தோற்றம் காட்டும் நீங்கள் இணைவது 'காணாத மாடு கம்பம் புல்லில் மேய்ந்த கதை'யாகக்கூடாது... ஏழை எளிய மக்களுக்கு சரியான மேய்ப்பனாய் இருக்க வேண்டும்... ஏய்ப்பனாய் அல்ல..."

"தேங்... மன்னிக்கணும். நன்றி... தமிழ் இலக்கியத்தில் தனிச்சிறப்பு எதுன்னு கேள்வி கேட்கலாம். அய்யா சற்று விளக்கமாய்..."

"யோவ் கிருஷ்ணா, இவங்க பேச்சில மெய் மறந்துடாதே... கூடூர்ல ஃபேன்களை டைட் செய்யணும்... பெரிய ஸ்பேனரை எடுத்து வந்தியா..?."

"தம்பி... சற்றே சும்மா இருக்கிறீர்களா... அவர்க்ள் கேட்கிறார் களோ இல்லையோ... நீங்கள் கேட்ட கேள்வி செம்மையானது..."

பேராசிரியர், பேச்சு தடைப்பட்டது. அந்த பெட்டிக்குள் ஒரு அம்மைத் தழும்பு பெண் வந்தாள். கண்ணீரும் கம்பலையுமாகக் கதறினாாள்.

"இது என் பிள்ளய்யா... என்கிட்டே கொடுங்கய்யா... வேணுமுன்னால் இந்தப் பையன் கிட்டே கேட்டுப் பாருங்கய்யா... இந்தாப்பா நீயும் எனக்குப் பிள்ளைதான்... சொல்லுப்பா..."

அப்போது, அந்த ரயில், கூடூர் ரயில் நிலையத்தை நெருங்கிக் கொண்டிருந்தது. இருபக்கமும் காடுகள் குறைந்து கட்டிடங்கள் தோன்றத் துவங்கின. அந்தப் பெட்டிக்குள், அதற்கேற்ற கண்போல், அதன் உச்சியில் வட்டமாக இருந்த கண்ணாடி விழிகள் மூலம் வெளிச்சம் வெளிப்பட்டு, அந்தப் பெண்ணை சிறிதாகவும், அவள் நிழலைப் பெரிதாகவும் காட்டியது. ரயில் பயலின் மனம், அந்த ரயில் போலவே குதிபோட்டது. இவள் என் அம்மாதானா...? இதனால் தான் விதி எங்களை அப்படி சேர்த்து வைக்கிறதா... அவன் ஏதோ பேசப்போனான். ஏனோ பயலால் பேச முடியவில்லை.

எல்லோருமே, அவளைப் பார்த்தார்கள். பெரிய பெரிய எலும்புகளும், அவற்றில் சின்னச் சின்ன சதைப் பிடிப்புகளுமாகக் காணப்பட்டாள். நன்றாக சாப்பிட்டு, மனக்கலக்கம் இல்லாமல் இருந்தபோது, அவள் வாளிப்பான பெண்ணாக இருந்திருப்பாள் என்பதை யூகிக்க முடிந்தது. நல்ல உயரம். நாட்டுக்கட்டை என்பார்களே அப்படி.... அம்மைத் தழும்புகள் அவள் முக லட்சணத்தை அதிகமாய் பாதிக்கவில்லை. அவள் மீண்டும் "என் பிள்ளையை கொடுங்கய்யா... கொடுங்கய்யா...." என்று சொன்ன படியே அந்த குழந்தையை நோக்கி நகரப்போனபோதே, சோமையா எழுந்து கையை நீட்டி வழிமறித்தபடி கத்தினான்.

"மொதல்ல மாராப்புச் சேலையை ஒழுங்காய் போடும்மா... பொண்ணாம் பொண்ணு... எந்த இடத்துக்கு எப்படி வரணுமுன்னு தெரியவேண்டாம். டேய் கிருஷ்ணா... கூடூர் வரப்போவுதுடா... வெளில பாரு... ரயிலு போறதும் தெரியாமல் அந்தப் பயல் எப்படி "ஒதுங்கி" இருக்கான் பாரு... நிற்க வச்சுச் சுடணும்..."

''என் குழந்தையை கொடுத்திருங்கய்யா... கோடிப் புண்ணியமய்யா..."

அந்தோணி இருந்த இடத்தில் இருந்தபடியே, எதிர் பெஞ்சில் காலை வைத்து, அவளுக்கு எல்லைக்கோட்டை போட்டபடி கேட்டான்.

"நீதான் இந்தக் குழந்தையோட அம்மா என்கிறது என்ன நிச்சயம்...? நாட்ல கேடிங்க செய்யுறது மாதிரி, நீயும் இந்தக் குழந்தை யோட கண்களை குருடாக்கியோ, காலை நொண்டியாக்கியோ, இதைக்காட்டி பிச்சை எடுக்கமாட்டே என்கிறது என்ன நிச்சயம். ஒன்னைமாதிரி எத்தன பொம்மனாட்டிங்களை நான் பார்த்திருக்கேன்...."

"நீங்க நினைக்கிறவள் மாதிரியானவள் இல்லய்யா நான். வேணுமுன்னால் இந்தப் பையன்கிட்டே கேளுங்கய்யா... நான் ரயில் பாலத்துல போட்ட குழந்தைய்யா..."

எல்லோரும் அவளை விட்டுவிட்டு, அந்தப் பயலைப் பார்த்தார்கள். அவனோ ஜன்னலுக்கு வெளியே போட்ட பார்வையை விலக்கவில்லை. அந்தோணி, அவன் தலையைத் தன்பக்கமாக்த் திருப்பினான். ஆனால், அவனோ "ஊய்" என்று ஊளையிட்டபடியே, அந்தோணியிடமிருந்து முகத்தைப் பலவந்தமாக விடுவித்து, மீண்டும் வெளியே பார்த்தான். இதற்குள் பேராசிரியர், அமைதியாகச் சொன்னார்.

"முதலில் உட்காரும்மா... எந்த மாதிரி சந்தப்பத்தில் குழந்தையை விட்டே.... என்பதை விளக்கமாகச் சொல்லும்மா... முதலில் உட்காரும்மா... அப்போதுதான் உன்னிடம் பேசுவோம்... இந்தக் குழந்தையைப் பற்றி ஒரு முடிவெடுப்போம்."

அவள், ரயில் பயல் பக்கத்தில் போய் உட்கார்ந்தாள். உடனே, அவன் பொங்கிய கண்களை கைகளால் மறைத்தபடியே எழுந்தான். எதிர் வரிசையில் இளங்கோவின் அருகே உட்கார்ந்து முகத்தை மீண்டும் வெளிநோக்கி வைத்துக் கொண்டான். அந்தப் பெண் அந்தக் குழந்தையையே சிறிது நேரம் பார்த்தாள். பிறகு தன் கதையைச் சொல்லத் துவங்கினாள்.

"நானும் வாழ்ந்து கெட்ட பொண்ணுதாய்யா... மதுரைக்குப் பக்கம் எங்க கிராமத்துல கொஞ்ச நஞ்சம் நிலத்துல வசதியோட வாழ்ந்தவள்தான்... பால்மாடு இருக்குது... சைக்கிள் இருக்கு... ரேடியோ உண்டு... நகை நட்டும் இருக்கு... என்ன இருந்து என்ன பிரயோசனமய்யா... ஒருநாள் காலங்காத்தால என் இதய தெய்வம் இறந்துட்டதா செய்தி வந்தது..."

"யாரும்மா அது..."

"என்னய்யா அப்படி ஒரு கேள்வியைக் கேட்கிறீங்க...? இதயதெய்வமுன்னா யாருன்னு ஒங்களுக்குத் தெரியாதா...? எங்க தலைவரு... அவ்வளவு கிள்ளுக்கீரையா ஒங்களுக்கு...?"

"இல்லம்மா... இல். புரிஞ்சுக்கிட்டோம் சொல்லு..."

"என்னோட மவராசா, என் இதய தெய்வம்... நான் பதினாறு வயசுல இருந்தே மனசுல பரிபாலனம் செய்த என் உயிரு... அடங்கிப் போயிட்டதா ரேடியோவில செய்தி சொன்னாங்கய்யா... உடனே நான் அழுது புரண்டேன்... ஒப்பாரி வச்சேன்... ஒன்னு கத்தினேன். என் வீட்டுக்காரரும் அழுதாரு... அப்புறம் நாங்க ரெண்டு பேரும்... எங்க உள்ளூர் தலைவர் ஏற்பாடு செய்த லாரில... மெட்ராஸ் வந்தோம். ராசாசி மண்டபத்துல ராசா தூங்குறது மாதிரி கிடந்தாருய்யா... எத்தனையோ வில்லன்களை கத்தியாலயும், சிலம்பாலயும், துப்பாக்கியாலயும் துரத்தியடிச்ச என்னோட சிங்கராசா, சாவுக்கு தோத்துட்டாருய்யா... சாவுக்கு தோத்துட்டாரு. அலைமோதுன கூட்டத்துல நானும் அலறியடிச்சுப் போனேன். அவரை ஏறிட்டுப் பார்த்தேன். என் ராசா என்னையே பார்க்கது மாதிரி இருந்துதய்யா... என் மவராசா மதுரைக்கு வந்தப்போ பொதுமேடையில ஏறுறதுக்கு முன்னால சோடா குடிச்சாரு... பாதிச்சோடாவை ஒரு கிழவி கிட்ட கொடுத்தாரு. அவள் ஒரு

அண்டா நிறைய தண்ணீரை நிரப்பி, அதுல அந்த சோடாவை ஊத்தி, டம்ளருக்கு இருபது பைசாவா வித்தாள்."

"என்கிட்டே காசு குறய்யா இருந்தது. அதனால், நாலு டம்ளர்தான் வாங்கிக் குடிச்சேன். என் ராசா செத்துக்கிடந்த அந்த நேரத்தில்யும் அந்த நாலு டம்ளர் தண்ணீரும் இனிப்பா தோணிச்சு... எனக்கு என்ன செய்யணுமுன்னு புரிஞ்சுது... நல்லாவே புரிஞ்சுது... எவரை மனசால நெனச்சி வாழ்கிறேனோ... அவரே போனபிறகு எனக்கு எதுக்குய்யா, தாலி.... மலைபோல இருந்த என் மன்மதரே போன பிறகு எனக்கு தாலி ஒரு கேடாய்யா... தூக்கி தூர எறிஞ்சேன்... சொம்மா சொல்லப்படாது... என் வீட்டுக்காரர் அதை எடுத்து பழையபடி என் கழுத்துல கட்டவந்தார். நான்தான் முடியாதுன்னு முடிவாய்ச் சொல்லிட்டேன். அவரும் என்னை விட்டுட்டுப் போயிட்டார்."

"நான் என் மவராசா இழவுல கலந்துக்கிட்டேன். அவரு சமாதியில் கதறுனேன். போலீஸ்காரன் துரத்தியடிச்சான் மெட்ராஸ்ல கண்டகண்ட இடமா கால்போன போக்குல திரிஞ்சேன். அப்புறம் ஊருக்குப் போனேன். வீட்டுக்காரன் சேர்த்துக்க மாட்டேன்னுட்டான். அது மட்டுமா செய்தான்.... மாமனார்கிட்டே இருந்த இந்தக் குழந்தையை எடுத்து என் தோள்ல வீசி எறியுறது மாதிரி போட்டான். யாரையோ நெனச்சுட்டு... பெத்த குழந்தைக்கு நான் பொறுப்பில்லன்னு சொல்லிட்டு கதவை மூடிட்டான்."

"கைக்குழந்தையோடு அண்ணன்மார்கிட்டே போனேன். அடிச்சு துரத்துனாங்க... தங்கச்சிகிட்ட போனேன். "பாவி... உன்னால, என்னையும் ஊரு ஒரு மாதிரி பாக்குன்னு திட்டிட்டு ஒரு வேளை சோற்றை போட்டுட்டு, கையில் நூறு ரூபாயை கொடுத்து, எங்கேயாவது கண்காணாத இடத்துக்கு போன்னு சொல்லிட்டாள். நானும் என் மவராசா சமாதில வந்து கற்பூரம் கொளுத்தி என்னைக் காப்பாற்றும்படி கும்பிட்டேன்... கும்பிட்டேன்... அப்படி கும்பிட்டேன். அவரு அனுகிரகம் தருமுன்னாலயே போலீஸ்காரன் துரத்திட்டான். வயிற்றுப்பசி தாங்க முடியல... சாவுறதுன்னு தீர்மானிச்சுட்டேன்."

"இந்தப் பையன் வாரது தெரிஞ்சுதான் ரயில் பாலத்துக்குக் கீழே பிள்ளையைப் போட்டேன். ஒரு மணி நேரத்துல என் பிள்ளையைப் பார்க்காம இருக்க முடியல... ரயிலு ஸ்டேஷனுக்கு வந்து... அங்கும் இங்குமாய் அலைஞ்சேன்... அப்புறம், அப்புறம் என் மவராசாவ மனசுக்குள்ளேயே நெனச்சு கும்பிட்டேன்... அவருதான் தர்மப் பிரபுவாச்சே... நம்புனவங்களை கை விடாதவராச்சே... இந்தப்

பையனை என்கிட்டே கொண்டு வந்து காட்டுனாரு.. நானும் இவனை பாக்காதது மாதிரி போக்குக் காட்டிட்டு, இவன் பின்னாலயே வந்தேன்... இந்தய்யாவும் இந்தம்மாவும் பிள்ளையை வச்சிருக்கதப் பார்த்தேன்... இவங்க பின்னாலயே ரயிலுல ஏறி வாசலோரம் ஒளிஞ்சு நின்னுட்டு... வாரேன்... என் பிள்ளையை கொடுங்கய்யா... பத்து வருஷமா முழுகாமல் தவமிருந்து பெத்த பிள்ளைய்யா..."

சோமையா, கோபமாய் கேட்டான்.

"அந்த சோடா போட்ட தண்ணியைக் குடிச்ச பிறகு, பெத்தியா...? சீ. ஒன்னெல்லாம்... இறங்குடி கீழே. டிக்கெட் இருக்குதா? டிக்கெட் இல்லாம ரயிலுல வாரது குற்றம் தெரியுமா... சே... நாட்ல, டிக்கெட் இல்லாம பிரயாணம் செய்யுறது அதிகமாய் போயிட்டு... நிற்க வச்சு சுட்டுத் தள்ளணும்."

சோமையா சொன்னதை, யாரும் பொருட்படுத்தவில்லை. எல்லோரும் அவளையே பார்த்தார்கள். பார்க்கப் பார்க்க அவள் மீது கோபம் வருவதற்குப் பதிலாக பரிதாபம் வந்தது. அந்த ரயில் பயல் மட்டும் அவளருகே போய் கைகால்களை ஆட்டி ஊளை யிட்டான். "பயல், ஆயிரந்தான் இருந்தாலும் எப்படி குழந்தையை விடலாமுன்னு" கேட்பதாக அந்தோணி அவன் கையாட்டியதை மொழிபெயர்த்துச் சொன்னான். எவருக்கும் என்ன பேசவேண்டும் என்று தெரியவில்லை. அந்தப் பேராசிரியைத்தான் குழந்தையை உற்றுப்பார்த்து கண்ணீர் சிந்தினாள். முடிவா, அந்தப் பெண்ணிடம் அந்தோணி கேட்டான்.

"குழந்தையை வாங்கிட்டு என்னம்மா செய்யப்போறே...?"

"அதுதாய்யா எனக்குப் புரியல... குழந்தை இல்லாமல் என்னால, உயிரோட இருக்க முடியாதுன்னு மட்டும் தெரியும்."

"நீயுல்லாம் எதுக்கும்மா உயிரோடு இருக்கணும்...? குழந்தையை தரமுடியாது. இதனால நீயும் சாகலாம். குழந்தையும் நல்ல இடத்துல வாழலாம்... ரெண்டு பேருக்கும் நல்லது..."

"அப்படிச் சொல்லாதிங்கய்யா... என் பிள்ளையை என்கிட்டே கொடுத்திடுங்கய்யா."

ரயில் பயல், அவளைப் பார்த்துக் கத்தப் போனான். அந்தோணி திட்டப்போனான். சோமையா அடிப்பதற்கே கையைத் தூக்கிக் காட்டினான். பேராசிரியர், அவர்களைக் கையமர்த்திவிட்டு, அவளிடம் தீர்மானமாகச் சொன்னார்.

"இதோ பாரும்மா... இது உன் குழந்தை... எங்களுக்கு உரிமை கிடையாது... அதேசமயத்தில், இதை விடவும் மனசு கேட்கவில்லை... ஆகையால், ஒரு யோசனை சொல்கிறேன். நீ இந்தக் குழந்தையுடன் என் வீட்டில் தங்கலாம்.... இந்தக் குழந்தை நம் மூவருக்கும் குழந்தையாக, வளரலாம். ஏன் சிந்திக்கிறாய்...? திரைப் படங்களில் வருவதுபோல், நீ இந்தக் குழந்தையிடம் உரிமை கொண்டாடக் கூடாது என்று சொல்வோம் என்றா? அல்லது குழந்தைக்கு இந்த மங்கைதான் தாய் என்று திரைப்படத்தாயாய் நடிப்போம் என்றா? அல்ல. நீதான் தாய். இவள் பெரிய தாய். நான் வளர்ப்புத் தந்தை... வேண்டுமானால் தாத்தாவாகவே இருக்கிறேன். எங்களுக்கு வயதாகி விட்டது. நீயும் எங்களை மகள் மாதிரி கவனித்துக் கொள்ளலாம். என்ன யோசிக்கிறாய்... குழந்தையின் எதிர்காலத்தைப் பார்த்து எடுக்கவும் முடியல... தாயாய் விடவும் முடியவில்லை என்று வசனம் பேசாதே... இரண்டில் ஒன்றைச் சொல்லு... உடனடியாக வேண்டாம்... ஒரு மணி நேரத்திற்குள்... சாப்பிட்டாயா... இல்லையா...? சரி. இதோ உன் குழந்தை. இந்தா பத்து ரூபாய்... ரயில் நிலையம் வந்துவிட்டது. கீழே இறங்கி முதலில் சாப்பிடு. அப்புறம் வருவதும் வராததும் உன் விருப்பம்."

அந்தப் பெண் அசைவற்று இருந்தபோது, பேராசிரியரின் சிந்தனைக்கு செயல்வடிவம் கொடுப்பது தமக்கு பழக்கப்பட்டுப் போன வழக்கம் என்பதுபோல், பேராசிரியை மங்கை, குழந்தையை அவளிடம் நீட்டினாள். அவளும், அதை வாங்கி, முகத்திற்கு முன்னால் தூக்கி வைத்துக்கொண்டே குழந்தையின் கன்னங்களில் மாறிமாறி முத்தமிட்டாள். இதைப் பார்த்த சோமையாவால் சும்மா இருக்க முடியவில்லை. அவளை அதட்டினான்.

"இந்தாம்மா... பொது இடத்துல எப்படி நடக்கணுமுன்னு தெரிஞ்சுக்கம்மா... இப்படியா சத்தம் போட்டு முத்தம் போடுறது. சீச்சி... சே... டேய் கிருஷ்ணா... இன்னுமாடா ஸ்பேனரை எடுக்கலே...? கூடூர்டா..."

அவள், லேசாய் சிரித்தபடியே எழுந்தாள். குழந்தையின் கைக்குள் பேராசிரியர் வைத்த பத்து ரூபாய் நோட்டை அவள் எடுக்கவும் இல்லை. தடுக்கவும் இல்லை. சோகச் சிரிப்போடு அவள் ரயிலுக்கு வெளியே வந்தபோது -

அந்தப் பெட்டியில் இருந்த எல்லோருமே, பேராசிரியத் தம்பதியை அதிசயத்துடன் பார்த்தார்கள். அந்தோணி, "மூணு பவுன் தங்கச் சங்கிலியோடு அனுப்பிட்டீங்களே...?" என்றபோது பேராசிரியை, "அதுக்கென்ன...? எங்களது அன்பளிப்பாய் இருக்கட்டுமே" என்றாள். பேராசிரியரை அடுத்திருந்த நடுத்தர

வயதுக்காரர் - இதுவரை பேசாமல் இருந்தவர் இப்போது பேசினார்.

"தமிழ்நாடு எவ்வளவு குட்டிச்சுவராய் போயிட்டு பாருங்கோ... நான் பஞ்சாப்புல வேலை பார்க்கேன். ஒவ்வொரு வருடமும் தமிழ்நாட்டுக்கு வரும்போது... சொந்த பூமிக்கு வாரது மாதிரி இல்ல... மொழி தெரியாத வெளிநாட்டுக்கு போவதுபோல் இருக்குது... நம் தமிழ்நாடு எவ்வளவு கேவலமாப் போயிட்டு பாருங்க... தமிழன்னு பிற மொழிக்காரன்கிட்டே சொல்லிக்கவே தலைகுனிவாய் ஆயிட்டு... இந்தப் பெண் பேசுற பேச்சைப் பார்த்தீங்களா...?"

"நான் பேராசிரியர் என்பதால் கிணற்றுத்தவளையாய் பேசுவதாய் நினைக்க வேண்டாம். இந்தப் பெண்ணின் பிரச்சினை. பாலுணர்வு அல்ல... வாழ்க்கையை சினிமாவாகவும், சினிமாவை வாழ்க்கையாகவும் ஏற்றுக்கொள்ளும் ஒரு களப்பிறக் கலாச்சாரம் உருவாக்கப்பட்டதால் ஏற்பட்ட சிக்கல். அதேசமயம்... இந்தப் பெண்ணை தமையன்மார் துரத்தியிருக்கிறார்கள். சகோதரி ஏற்றுக் கொள்ள மறுத்துவிட்டாள். இவளை ஏற்று திருத்தி இருப்பார் களோயானால் அது சான்றாண்மை. இவளது அனுபவம் கொடூரம் என்றாலும், தமிழர்கள் இன்னும் சுயமரியாதைக்காரர்களாய் இருக்கிறார்கள் என்பதையும் இவள் விரட்டப்பட்டது, புலப் படுத்துகிறது. ஓங்களுக்கு ஏற்பட்ட அனுபவம் எனக்கும் உண்டு. நானும் என் துணைவியாரும், பல்கலைக்கழக ஆண்டு விடுமுறையில் தமிழகம் வந்து இலக்கியச் சொற்பொழிவுகள் நடத்துவோம். இப்போதைய தமிழக நிலையைப் பார்த்தால், எங்களுக்கே சலிப்புத் தட்டுகிறது... எங்கள் கூட்டம் ஒன்றுக்கு திரைப்பட நடிகர் ஒருவர் தலைமை தாங்க வந்தார். அவரைப் பார்க்க துடியாய்த் துடிக்கும் கூட்டத்தைப் பார்த்து விட்டு, நொந்து போய்விட்டோம். தமிழன், நடிகனின் ஆங்கிலத் தமிழிற்கு கை தட்டுகிறான். ஆன்மீகத் தமிழிற்கு நையாண்டி தருகிறான்."

"இதுக்கெல்லாம், உங்களை மாதிரி தமிழறிஞர்கள்தான் காரணம்... 'சுத்தன்... துஷ்டனோட பலன் தரும்' என்று மலையாளத்தில் ஒரு பழமொழி உண்டு. சான்றோர்களான உங்களை மாதிரி ஆட்களும், தமிழன் குட்டிச் சுவராகவும், அந்தச் சுவற்றில் அரசியல்வாதிகள் மொய்க்கவும் காரணமாயிட்டிங்க."

எதுவுமே தெரியாத அப்பாவிபோல் இருந்த "ஐ.ஏ.எஸ். பரீட்சை" இளங்கோ போட்ட போட்டில், பேராசிரியர் அசந்து விட்டார். அந்தோணிகூட அவனைத் தட்டிக் கேட்கப் போனான். இளங்கோ இனிமையான குரலில் கடுமையான கருத்துக்களைக் கொட்டினான்.

நி. 12.

''இலக்கிய பேச்சாளர்களாகிய நீங்களும், மேடைப் பேச்சாளர்களாகிய தலைவர்களும் "கல்தோன்றி மண் தோன்றாக் காலத்திலே முன் தோன்றிய மூத்தகுடி" என்று விஞ்ஞான பூர்வமற்ற கருத்தைச் சொல்லிச் சொல்லி, தமிழனைக் கற்காலத்திலேயே வைத்தீங்க..."

பேராசிரியரும், பேராசிரியையும், இளங்கோவைப் பெருமிதத்துடன் பார்த்தார்கள். பேராசிரியர் அவன் கைகளைப் பற்றிக் கொண்டு, "நாங்கள் வித்தியாசமான தமிழறிஞர்கள் தம்பி, பெரியார் வழித் தமிழர்கள் தம்பி... நீ சொல்கிற கருத்தைத்தான் சற்றே பழமை வாதத்துடன் சொல்லி வருகிறோம்... ஆனால் முற்போக்குத் தமிழனுக்கும், கெட்டதுகளில் நல்லது இருப்பதை கண்டுபிடிக்க இப்போதைக்கு முடியவில்லை என்பதற்கு நீயும் ஒரு உதாரணம். இப்போதைய தமிழறிஞர்களிலே உன்னைவிட வேகமாக சிந்திப்பவர்கள் இருந்தார்கள்... இருக்கிறார்கள்... உதாரணத்துக்கு காலஞ்சென்ற இலங்கைத் தமிழறிஞர் கைலாசபதி, நெல்லைத் தமிழறிஞர் வானமாமலை... இன்னும் நம்மிடையே வாழும் பேராசிரியர்கள் சிவத்தம்பி, சாலய் இளந்திரையன்... சாலினி இளந்திரையன்... பெருஞ்சித்திரனார்... சிலம்பொலி செல்லப்பன்... இப்படி அடுக்கிக்கொண்டே போகலாம்."

"மனதை புண்படுத்தி இருந்தால் மன்னித்து விடுங்கய்யா.... இவர்களை எனக்கும் தெரியும்."

"நீ டில்லியில் இருக்கும்வரை எனது வீட்டில் தங்கிய பிறகுதான் மன்னிப்பு..."

அப்போது, சோமையா உள்ளே வந்தான். கத்தியபடியே வந்தான்.

''யோவ்... காலை மிதிச்சுட்டுப் போறியே...? ஒனக்கு கொஞ்சமாவது மூளை இருக்குதா...? டேய் கிருஷ்ணா... கூடூர்ல தப்பிச்சிட்டோமுன்னு மட்டும் நினைக்காதேடா... விஜய்வாடாலயும் ரயில் நிற்கத்தான் போகுது... நீ மின்சார விசிறிகளை டைட் பண்ணத்தான் போறே... ஏன் தமிழய்யா வெளிலயே பார்க்கீங்க... அவள் வரமாட்டாள்... அவளைப் பார்த்தால்... அந்தக் குழந்தையைப் பெற்றவள் மாதிரி தெரியல... பிள்ளையை எவள்கிட்டயோ திருடிக்கிட்டு போகும்போது. இந்தப் பயலைப் பார்த்துட்டு... ரயில் பாலத்துல பயந்துபோய் போட்டிருப்பாள்... அப்புறம் இங்கே வந்து நாடகமாடி... குழந்தையை தங்க நகையோட கொண்டு போயிட்டாள். நிசமான தாயாய் இருந்தால்... சென்ட்ரலுயே குழந்தையைக் கேட்டிருக்கலாமே...? இவள் சரியான கேடி... குழந்தைக் கைய முறிப்பாளோ... காலை முறிப்பாளோ.. யோவ்

கிருஷ்ணா... இந்த ஸ்பேனர்களை துடச்சாவது வைக்கப் படாதய்யா...?"

சோமையா சொன்னதுபோல்... அவள் கேடியாக இருக்கலாமோ என்று எல்லோரும் திகிலடைந்தார்கள். ரயில் பயல் தவித்துப் போனான். அந்தோணியின் கையைப் பிடித்து இழுத்தான்.



அதே அந்த ஜி.டி. ரயில், ஒன்பது மணிநேர இடைவெளியில் குளிப்பாட்டப்பட்டு, புதுடில்லி ரயில் நிலையத்தில், ஈரம்பட்ட கோலத்தில் சென்னையை நோக்கி எஞ்சின் முகத்தை திருப்பி வைத்து நின்றது.

'போன மச்சான் திரும்பி வந்தான்' என்பதை, வறப்போகிறான் என்று சொல்லலாம் என்பதுபோல், பழைய சென்னையில் இருந்து, ரயில் பயலுடனும், 'மற்றும் பலருடனும்' போய்ச் சேர்ந்த அதே ரயில், ரயில்பயல் உள்ளிட்ட ஒருசிலரைத் தவிர, அப்போதைக்கு புதுமுகங்களை சுமந்துகொண்டு புறப்படத் தயாரானது.

இரவு, மெலிதாய் படர்ந்த ஏழு மணி. தாடிக்கார சர்தார்ஜி களும், மொட்டைக் குல்லாய் முஸ்லீம்களும், பைஜாமா பெண்களும், ரயிலுக்குள்ளும், வெளியேயும் வியாபித்திருந்தார்கள். வேட்டி கட்டியவர்கள் கிராமப்புறங்களில் பேண்ட் போட்டவர்கள் போல், அதிசயமாய்க் காணப்பட்டார்கள். அதேசமயம், இட ஒதுக்கீடு இல்லாத மூன்று ரயில் பெட்டிகளில் ஒரே வேட்டி மயம். சேலை மயம். தமிழகத்தில் சேலத்தில் இருந்தும், சின்னாளப் பட்டியில் இருந்தும் வீட்டு வேலைகளையும், எடுபிடி வேலை களையும் செய்யும் ஆண்களும், பெண்களும் நெருக்கியடித்து நெப்பிய அந்தப் பெட்டிகளுக்குள், ஒரு காலத்தில் தமிழில் கையாளப்பட்ட மணிப்பிரவாள நடைபோல், இந்தி-தமிழ் பிரவாளம் எட்டி எட்டிப் பாய்ந்தது. கம்பீரமான புதுடில்லிக்கு களங்கம்போல், தோன்றிய அந்த கம்பீரமற்ற ரயில் நிலையத்தில் பத்து ரயில்கள் ஓட்டப்பந்தயத்தில் ஓடப்போவது போல் நின்றன.

எஸ்.11 பெட்டிக்குள் ரயில் பயல், மஞ்சள் ஸ்வட்டர் துணியோடு, குளிர் பொறுக்க முடியாமல் ஆடிக் கொண்டிருந்தான் அவனை டில்லிவரை வலுக்கட்டாயமாக கொண்டுவந்த அந்தோணி, ஒரு திபேத்காரரிடம் இருந்து முப்பது ரூபாய்க்கு

வாங்கிக் கொடுத்த முள்முள்ளாய் குத்தும் ஸ்வெட்டர் துணி... அவன் குளிரைக் கட்டுப்படுத்தும் வகையில், அந்தோணி அவனை தன்னோடு சேர்த்து அணைத்துக் கொண்டான் - கோழி தன் இறக்கைக்குள் குஞ்சை அடைத்துக் கொள்வது மாதிரி. நான்கைந்து வடநாட்டுக்காரர்களும், கறுப்புத் தமிழர்களிடம் பேசவிரும்பாத, சிவப்புத் தமிழர்களும், அந்த பெட்டியை அடைத்திருந்தார்கள்.

அந்த ரயில் ஓடியபோது, உள்ளே வந்த அதே அந்த படபடத்தான் சோமையாவும், படபடக்காத தொழிலாளி கிருஷ்ணனும் உள்ளே ஓடிவந்தார்கள். "டேய் கிருஷ்ணா, ரயில் மெள்ளத்தான் நகர்துடா... கீழே இறங்கி பெரிய ஸ்பேனர் கேபின் பெஞ்சில இருக்குதான்னு பார்த்துட்டு, எடுத்துட்டு வாடா..." என்றான்.

கிருஷ்ணனோ, சாவகாசமாக உட்கார்ந்தபடியே, "எப்படி ஸார் முடியும்... பேசிட்டு யோசிக்காதே... யோசிச்சிட்டு பேசு" என்றான். உடனே படபடத்தான்... பரபரத்தான்.

"ஏண்டா முடியாது...? ஒரே ஜம்புல, கீழே போறே... கேபின்ல இருக்குதான்னு பார்க்குறே... அப்புறம் ரயிலுல கடைசிப் பெட்டியில ஏறி இங்கே வந்து சேருறே.... மனசிருந்தா மார்க்கம் உண்டு."

"நீ சொல்ற மார்க்கம் சொர்க்கத்துக்கு... ரயிலுக்கு இல்லே..."

"நீ செய்யுற வேலை லட்சணத்துக்கு... ஒனக்கு சொர்க்கம் கிடைக்காதுடா... நரகந்தான். அதுவும் ஏழு நரகத்திலேயும் கீழான நரகம் கிடைக்குண்டா..."

"அப்போகூட சந்தோஷமாாய் இருப்பேன் ஸார். ஏன்னா... ஒன்கிட்டே வேலை பார்த்து பழகிட்டேன் பாரு."

எல்லோரும் சிரித்து விட்டார்கள். பெரும்பாலோர் விழுந்து விழுந்து சிரித்தார்கள். சிலர் விழாமலே சிரித்தார்கள். ஆனால், ரயில் பயலோ - படபடத்தானை பார்த்தவுடனேயே சிரிக்கும் அந்தப் பயல், வெறித்த பார்வையோடு வேதனையோடு காணப்பட்டான். முட்டிக்கால்களை, பெஞ்சில் தூக்கி வைத்து, கைகளை அவற்றில் பின்னி அந்தோணியின் தோளிலே சாய்த்திருந்தான். ரயில் ஆடி ஆடி, இவனை அங்குமிங்குமாக ஆட்டியது. அவன் நிலையைப் புரிந்து கொண்ட அந்தோணி, அவன் கால்களை மடக்கி, தன் கரங்களால் அணை போட்டபடி ஆறுதல் சொன்னான்.

"ஏண்டா கலங்குறே? அந்தக் குழந்தைதான் சொந்தத் தாயோடு, பேராசிரியர் வீட்ல இருக்குதே... ஒன்னைவிட நல்லாத்தான் வளரப்போகுது. இப்போ வந்தது மாதிரி எப்பவும் என்னோட

டில்லிக்கு வா. அப்பப்போ அந்த "குயந்தய" பார்த்துக்கலாம். அட சரிதாண்டா... கால்கள கீழே போடுடா..."

ரயில் பயல், அந்தோணியை பரிதாபமாய் பார்த்தபடியே, கால்களை கீழே தொங்கப் போட்டான். அந்தக் கால்கள் மாதிரி, அவனும் அந்தரத்தில் தொங்குவது மாதிரி இருந்தது. ரயில் பாலத்தில் இருந்து, தோளில் சுமந்த குழந்தையை அவன் இப்போது கண்ணில் சுமந்தான். அதன் வட்டமுகமும், அவனுடன் தோளிலே முகம் போட்டு ஒட்டிக் கொண்ட லாவகமும் அவன் உடம்பு முழுவதையும் உலுக்கின. எல்லாவற்றிற்கும் மேலாக, அது தன் தம்பியல்ல என்பதும், அவள் தாயல்ல என்பதும், அவனை எப்போதும் கண்டிராத அழுகை உணர்வில் ஆழ்த்தியது. அவனை உற்றுப் பார்த்த சோமையா, வலது கரத்து உள்ளங்கையை பார்த்த படியே நொந்து போனதுபோல் பேசினான்.

"பாரு அந்தோணி... எப்பவுமே, ஆட்களை நான் எடை போடுறதுல... ஒரு கிராம்கூட குறையாது. அந்தப் பொண்ணு கூடுர்லயே இறங்கி குழந்தையோடு போயிடுவாள்னு நினைச்சேன். கடைசில என்னடான்னா ரயிலுக்குள்ளே வந்துட்டாள். புரபஸர் வீட்ல தங்கி இருக்கவும் சம்மதிச்சுட்டாள். என்னோட அபிப்பிராயம் தோத்துட்டு பாரு... டேய் கிருஷ்ணா, பெரிய ஸ்பேனரை விட்டுட்டியேடா...!"

"ஏன் ஸாரே, அந்தப் பொண்ணும் குழந்தையும் சேரவேண்டிய இடத்துல சேர்ந்து நல்லா இருக்கதுக்கு சந்தோஷப்படு... ஒன் உருப்படாத அபிப்பிராயம் தோற்றுப் போனதுக்கு வருத்தப் படாதே..."

"டேய் கிருஷ்ணா... வாயா பேசுறே, வாயி... எல்லா நட்டையும் "டைட்" செய்துட்டியா...?"

"இன்னும் ஒரே ஒரு நட்டத்தான் டைட் செய்யணுமாம்... அது ஒன்னோட தலையில இருக்கிற நட்டைத்தானாம். சரியான தொண தொணப்பு... ஸார் நீ..."

அந்தோணியின் நையாண்டியைக் கேட்டு, சோமையா தவிர, எல்லோரும் சிரித்து விட்டார்கள். ரயில் பயல்கூட தன்னையறி யாமலே சிரித்துவிட்டு, பிறகு சட்டென்று அந்தக் குழந்தையின் நினைவில் மனதைச் சுருட்டினான். டில்லியில், கரோல்பாக்கில் பேராசிரியரின் விசாலமான வீட்டில், ஊஞ்சல் பலகையில் உட்கார்ந்திருந்த பேராசிரியையின் மடியில் உட்கார்ந்து, இதய தெய்வத்திற்காக இதயத்தில் தாலி கட்டிய சொந்த அம்மா வாயில் திணித்த பிஸ்கட்டைச் சுவைத்தபடியே, அந்தக் குழந்தை இப்போது

அவனை நோக்கை கையை ஆட்டியது. இப்போது அந்தக் கைகளாலேயே தனது கண்களைப் பதிப்பது போலிருந்தது. அதன் தாய், அவள் என்னதான் மோசமானவளாக இருந்தாலும், அந்தக் குழந்தைக்கு உணவூட்டியபோது, இவன் அழுதுவிட்டான். தனக்கும் இப்படி ஒரு தாய் இல்லை என்றோ, அல்லது தான், அப்படி அந்தக் குழந்தைக்கு ஊட்ட முடியவில்லை என்றோ... ஏதோ ஒரு சுமை. அவன் உள்ளத்தையும் உடம்பையும் இறக்கிக் கொண்டே இருந்தது.

இத்தகைய சுமைகளைச் சுமக்கும் மனிதப் பயணிகளைச் சுமந்தபடி, அந்த யந்திர விசித்திரம், கண்ணன் பிறந்த மதுரா, பைத்தியங்களுக்கு சிகிச்சையளிக்கும் ஆக்ரா, புரட்சிராணி ஆண்ட ஜான்ஸி, ஆயிரக்கணக்கானோரை குருடர்களாக்கி குற்றுயிராய் துடிக்க வைக்கும் போபால், பெரும்பாலான ரயில்களின் சந்திப்புத் தளமான இடார்ஸி, பாரத நாட்டின் பூகோள நரம்பு மண்டலம் எனக் கருதப்படும் விஜயவாடா ஆகிய முக்கியமான நகரங்களின் ரயில் நிலையங்கள், நியாயமான அளவிற்கு நின்று, சென்னை பேசின் பிரிட்ஜ் நிலையத்தில் அநியாயமான அளவிற்கு படுத்து, இறுதியில், சென்னை நகரின் சென்ட்ரல் நிலையத்தில் காலை ஏழு மணிக்கெல்லாம் வந்துவிட்டது.

"என்னடா அவசரம்" என்று தடுக்கப்போன அந்தோணியிடம் இருந்து பலவந்தமாக விடுபட்டு, ரயில் பயல் வெளியே ஓடிவந்தான். தமிழ்ச்செல்வி, அந்த பெட்டியை உற்றுப் பார்த்துவிட்டு, அந்தோணி, சோமையா போன்ற வேற்று மனிதர்களைப் பார்த்து விட்டு, ரயில் பயல் இருக்க மாட்டான் என்ற அனுமானத்துடன் திரும்பப் போனபோது_

ரயில் பயல், துள்ளிக் குதித்துப்போய் அவள் கைகளைப் பிடித்துக் கொண்டான். அவள், அவனைப் பார்த்து ஆனந்த அதிர்ச்சியில் நின்றபோது, அவன் "அம்... அம்..." என்று மாறி மாறிச் சொன்னான். இவ்வளவு பெரிய அம்மா இருக்கையில், எவளோ ஒருத்தி தனக்கு அம்மாவகாக இருக்கலாகாதா என்று ஏங்கியதற்காக, வெட்கப்பட்டதுபோல், அவளைக் கூச்சத்தோடு பார்த்தான். அவளோ, அவனை தன் இடுப்போடு சேர்த்து அணைத்தபடியே, "ஒன்னைப் பார்க்கத்தாண்டா வந்தேன்... ஆமாண்டா... பலராம் அண்ணா, நவாப்ஜான் அண்ணாவை எங்கேடா... இன்னைக்கு மட்டும் நீ என் கண்ணுல கிடைக்கலே... அப்புறம்... இந்தப் பக்கமா வரக்கூடாதுன்னு தீர்மானிச்சுட்டேன். ரெண்டு நாளாய் ஒங்களைப் பார்க்கதுக்காக வந்து, அந்த ஏமாற்றத்தை தாங்கிக்க முடியாமல் தவித்த தவிப்பு, எங்கம்மா... இறந்தப்போ... எப்படித் தவித்தேனோ... அப்படிப்பட்ட தவிப்புடா..." என்றாள்.

ரயில் பயல், திடீரென்று சிரிப்பை நிறுத்தினான். அந்தக் குழந்தை விவகாரத்தை அவளிடம் அபிநயமாய் சொல்லப் போனவன், அதிர்ச்சியுற்றவனாய் தலையில் கை வைத்தான். பின்னர், அவளுக்கு ஆறுதல் சொல்பவன் போல், நானிருக்கேன் என்பது போல் மார்தட்டினான். என்ன நடந்தது என்பதை விளக்கமாய் சொல்லும், வலது கை விரல்களை மடக்கி பெருவிரலை மட்டும் நீட்டி, கேள்வி கேட்டான்.

தமிழ்ச்செல்வி, அவன் நீட்டிய கையைப் பிடித்தபடியே நடந்தாள். அவன், அவளை வழிமடக்கி, முகத்தை முன்னும் பின்னும் கேள்வித் தோரணையில் ஆட்டியபோது, அவள் மீண்டும் அவனை தன்பக்கமாய் இழுத்துக் கொண்டு, "பொறுடா... ஒன்கிட்டே சொல்லாமல் யார் கிட்டேடா சொல்லப் போறேன்" என்று சொன்னபடியே நடந்தாள். அவனையும் நடத்தினாள்.

இருவரும், அந்த ரயில் நிலையத்தின் சிற்றுண்டி விடுதிக்கு வந்தார்கள். காதால் கேட்க முடியாத, அதோடு வாயற்ற ஜீவன்கள் நடத்தும் விடுதி. காசை எடுக்கப்போன ரயில் பயலின் கையை செல்லமாகத் திருகியபடியே, தமிழ்ச்செல்வி டோக்கன்களை வாங்கினாள். இருவரும், இரண்டு பிளேட் இட்லி வடைகளோடு, வட்டமான மேஜையைச் சுற்றிப் போட்டிருந்த நாற்காலிகளில் உட்கார்ந்தார்கள். "சாப்பிடுடா" என்று அவள் சொன்னபோது, அவன் வயிற்றைவிட செவிக்கு முக்கியத்துவம் கொடுப்பவன்போல், கைகளை மடித்து வயிற்றில் போட்டான். தமிழ்ச்செல்வி, அவனைக் கண்கலங்க பார்த்தபடியே, தனது வாழ்க்கையில் ஏற்பட்ட இன்னொரு அத்தியாயத்தைச் சொல்லத் துவங்கினாள்.

"ஒன்கிட்டே சொன்னது மாதிரி ஊருக்குப் போனேன். தாமரைப் பாண்டி.. கொலை செய்தாலும் பரவாயில்லை என்கிற விரக்தியோடு போனேன். ஏன்னா ஓங்கப்பா சுந்தரத்தோட மனைவி... என்னை ஏற்கெனவே கொலை செய்துட்டாங்க... அதனால ஊருக்கு வெறும் உடம்போடதான் போனேன். அதோடு தாமரைப்பாண்டி என்னை அடிக்காமல் இருந்தாலே பெரிய காரியம் என்பது எனக்குத் தெரியும். ஆனாலும் முழுச் சொத்தையும் அவன் கொடுக் காட்டியும், பஞ்சபாண்டவர்கள், கௌரவர்கள்கிட்டே கேட்டது மாதிரி மூன்று காணி நிலமாவது கொடுப்பானான்னு பார்க்கலாமுன்னு ஒரு நப்பாசை. அவன் ரயிலுல போலீஸ் முன்னால் பேசுனது பொய்யுன்னு எனக்குத் தெரியும். அந்தப் பொய்யிலயும் ஒரு மெய் இருக்குமான்னு கண்டுபிடிக்க ஒரு ஆசை..."

"என் ஆசை நிராசசையாய் போயிட்டுதடா... ஊருக்குள்ளே.. நுழைஞ்சவுடனேயே, எல்லோரும் என்னை ஒரு மாதிரியாய்

பார்த்தாங்க. ஒருத்தன், 'ஊரை குட்டப்புழுதியாக்க வந்துட்டாள்'னு கூட சொன்னான். நான் எதுவுமே புரியாமல் திரும்பிப் பாராமல் நடந்தேன். "ஏம்மா, தாயி... தாயின்னு" சத்தம் கேட்டு நின்றேன். தாமரைப் பாண்டியனோடு... என்னைக் கடத்திக்கிட்டு போக வந்தாரே... பண்ணையாள்... அவர் வந்து... எனக்கு முன்னால் நின்னு அழுதாரு... கேவிக்கேவி, விம்மிவிம்மிச் சொன்னாரு."

'ஏம்மா... தமிழ்ச்செல்வி... இந்த ஊருக்குள்ளே எதுக்கும்மா வந்தே...? தாமரைப் பாண்டி... "நீ ரயிலுலயே தாசித் தொழில் செய்யுறதாய் ஊர் முழுக்க சொல்லிட்டாம்மா... ஒரு நாளைக்கு கண்டவன்கூடல்லாம் சல்லாபித்து ஐநூறு ரூபாய் சம்பாதிக் கிறேன்னு கூசாமல் சொல்லிட்டாம்மா... ரயிலுல ஒனக்காக நான் சப்போர்ட் செய்தேன்னு... என்னை வேற, அடி அடின்னு அடிச்சு... தலையை மொட்டையடிச்சு... மரத்துல கட்டி வச்சுட்டாம்மா... மூணு மணிநேரம் மரத்தோட மரமா இருந்தேம்மா... உங்க அம்மாவைப் பார்த்துட்டு... சீக்கிரமாய் போயிடும்மா. முடியுமானால் என்னையும் கூட்டிப் போம்மா... இல்லாட்டி என்னை தாமரைப் பாண்டியனும், ரத்தினவேலும், அடித்தே கொன்னுடுவாங்கம்மா. ஒன் சின்ன மாமா மகன் வைத்தியலிங்கத்தை போலீஸ் விலங்கு போட்டு கூட்டிட்டுப் போனாங்கம்மா... அப்புறம் எதையோ எழுதி வாங்கிட்டு விட்டுட்டாங்கம்மா...'

"அந்த அப்பாவி பண்ணையாளுக்கு கண்ணீரால் பதிலளித்து விட்டு, சின்ன மாமா வீட்டுக்குள் போனேன். மாமாவும் அத்தையும் "வா" என்று கேட்கவில்லை. அதேசமயம் "போ" என்றும் சொல்ல வில்லை. அவர்கள் குழம்பிப் போயிருப்பது நன்றாகவே தெரிந்தது. ஆனால் மாமா மகன் வைத்தியலிங்கம்... என் கையைப் பிடித்துக் கொண்டு ஏங்கி ஏங்கி அழுதான். அவன் முதுகிலும் மார்பிலும் லத்திக் கம்புச் சுவடுகள் தெரிந்தன. அப்போதுகூட அவன், 'கவலைப் படாதீங்க அண்ணி... லத்திக்கம்பு நாலடிதான் பாயும். ஆனால் நியாயம் ஆகாயத்திற்கும் பூமிக்குமாய் பாயும்' என்று சொன்ன போது நான் அவனைக் கட்டிப்பிடித்து அழுதேன்."

"சிறிது நேரத்திற்கு பிறகு... மாட்டுக் கொட்டடிக்குப் போனேன். அம்மா அங்கே வழக்கம்போல் உட்கார்ந்திருந்தாள். எந்தவிதச் சலனமும் அற்றுப்போய் ஏதோ இருக்கிறோம் என்பதுபோல், எண்சாண் உடம்பை முச்சாணாய் குறுக்கியபடி உட்காந்திருந்தாள். "அம்மா" என்று கூறியபடியே அவளைத் தொட்டேன். ஆனால் அவளோ திடீரென்று என் மேல் பாய்ந்தாள். என் தலையிலும் கன்னத்திலும் மாறி மாறி அடித்தாள். பிறகு, தன் தலையிலேயே அடித்துக் கொண்டாள். என்னைக் காறித் துப்பினாள். பிறகு

செய்வதற்கு ஒன்றும் இல்லை என்பதுபோல், மீண்டும் இருந்த இடத்திற்கே சென்று தன்னைக் குறுக்கிக் கொண்டான். எனக்கும் அப்போது அம்மாமீது கோபம்தான் வந்தது. என்னைப் பற்றிய அவதூறுப் பேச்சு காதில் விழுந்ததாலும், அதைத் தாக்குப் பிடிக்க முடியாமல் தாக்குகிறாள் என்பதை மறந்து விட்டேன். அவள் பெரியண்ணன் மீது நம்பிக்கை வைத்து, நாடிழந்து, வீடிழந்து போன நிலைமையை மனதில் வைத்துக்கொண்டு, 'இதுக்கெல்லாம் நீதான் காரணம்... நீயே காரணமுன்னு' கத்திட்டு வீட்டுக்குள் வந்தேன்."

"அன்றைக்குப் பகல் முழுவதும், சின்னமாமா வீட்டுக் குள்ளேயே முடங்கிக் கிடந்தேன். மனசு கேட்கல... அந்த நாள் வரைக்கும் என்மேல் செல்லமாகக்கூட அடிக்காத அம்மாவைப் பார்க்க கொட்டடிக்குப் போனேன். அம்மா விறைத்துக் கிடந்தாள். வாயெல்லாம் ஈ மொய்க்க... என் அம்மா... என்னை வயிற்றுக்கு உள்ளேயும் வெளியேயுமாக சுமந்த என் தெய்வம்... போயிட்டாள்... அவள் போனதைக் கூட தாங்கிக்கலாண்டா... ஆனால், மகள் விபச்சாரி என்கிற நெனப்புல போயிட்டாளே... அதைத்தாண்டா... என்னால தாங்கிக்க முடியல... 'அம்மா நான் உன் மகள், அப்படிப் பட்ட காரியம் செய்கிற கயத்தி இல்லன்னு' சொல்லாமல் போயிட்டேன் பாரு... அதைத்தாண்டா தாங்கிக்க முடியல... ஒருவேளை நான் அப்படிச் சொல்லியிருந்தால்... அம்மா இறந்திருக்க மாட்டாள். இல்லியாடா...? சொல்லுடா...?"

ரயில் பயல், சாப்பாட்டுத் தட்டை ஒதுக்கி விட்டு, அவளையே பார்த்தான். அம்மாவின் அம்மாவான தனது சொந்தப் பாட்டி இறந்ததுபோல் துக்கித்துப் பார்த்தான். அந்த ஆறுதலில் தமிழ்ச் செல்வி லேசாகச் சிரித்தாள். பிறகு, ஒரு செய்தியைச் சொன்னாள்.

"எனக்கு ஒரு வேலை கிடச்சிருக்குடா... அதுல சேர்ந்துட்டேண்டா. ஆனாலும் தமிழர்களைக் காட்டிக் கொடுக்கிற வேலையோன்னு பயமாய் இருக்குதுடா..."

## 27

அதே அந்த ஜி.டி. ரயில் இப்போதும் எஸ்.11 பெட்டியில் பழைய முகங்களையும், புதிய முகங்களையும் சுமந்தபடி, கூடூரை விட்டு, விஜயவாடாவை நோக்கி புலிப் பாய்ச்சலில், உறுமியபடியே ஓடியது.

பழையவர்கள் தங்களுக்குள் பேசி முடித்துவிட்டு, புதியவர்களை உற்றுப் பார்த்தநேரம்.. எவ்வளவு நேரந்தான் சும்மா இருப்பது என்பதுபோல், புதியவர்கள் புன்னகைத்த வேளை... இரவின் துவக்கப் பிரவேசம்.

எஸ்.11 பெட்டியில் தென்பகுதியில் பலராமன், நவாப்ஜான், நாராயணன் வகையறாக்கள்... இதையடுத்து ரயில் பயல். அவனுக்கு அருகே... ஜன்னலோர இருக்கையில் தமிழ்ச்செல்வி. எதிர் இருக்கையில் ஜன்னலோரம் ஜிப்பா போட்ட ஒல்லி மனிதர். வாழ்விற்கும் சாவிற்கும் இடைப்பட்ட வயதுக்காரர். இவருக்கு அருகே பன்னிரண்டு வயதுச் சிறுவன். அவனையடுத்து, ஒரு இளைஞன். இருபத்தைந்து வயதிருக்கலாம். நிர்மலமான கண்கள். காக்காபொன் மாதிரியான கறுப்பு... கடப்பா கல், பாளம் பாளமாய் இருக்குமே அப்படிப்பட்ட தோரணை... இரும்பைக் காய்ச்சி, அதற்குக் ரத்த சாயத்தை பாய்ச்சி, கறுப்புத் தோலால் போர்த்தப் பட்டது போன்ற லாவகம். மொத்தத்தில் இன்னின்ன உறுப்புக்கள் இப்படித்தான் இருக்க வேண்டும் என்பதைச் சொல்வதுபோன்ற தோற்றக்காரன். இவனையடுத்து அங்கிபோட்ட ஒரு நடுத்தரம். அவருக்கு ஒருபுறம் ஒரு நாயர்... சிவப்புச் சிவப்பான கிழட்டு நாயர்.

தமிழ்ச்செல்வி, தனது தோழன்களுடன் சிரிப்பும் சிந்தனையுமாய் பேசிக் கொண்டிருந்தாள். இப்போதெல்லாம் மாதத்தில் ஒரு தடவையோ அல்லது இரண்டு தடவையோ அவள் இவர்களோடு சேர்ந்து வருவதும், ரயில் பயலோடு நாக்பூரில் இறங்கி, தமிழக ஜி.டி.யில் ஏறுவதும் பழகிப் போய்விட்டது. அந்தோணியும் சோமையாவும்கூட இவளுக்கு அண்ணன் தம்பிகளாகி விட்டார்கள். சமையலறையில் உள்ள அனைவருமே அத்துபடி. பெரும்பாலும் ரயில் பயலோடு சமையலறைக்குள் போய் கத்திரிக்காய் கழுவிக் கொடுப்பதும், காய்கறிகளை வேக வைப்பது முதல் பாத்திரங்களை கழுவுவது வரை பழக்கமாகி விட்டது. தலைமைச் சமையல்காரன் அண்ணாமலை எவ்வளவோ தடுத்துப் பார்த்தும், "சாப்புடுற சோத்துக்கு உழைக்கணும். இல்லன்னா வயிறு ஒத்துழைக்காது" என்று சொல்லிவிட்டாள்.

பழைய காலத்தில் திருநெல்வேலி மாவட்டத்தில் நாட்டுப்புறக் கதைகளில் "ஒரே ஒரு ஊரில... ஏழு அண்ணன் தம்பிகள் அவர்களுக்கு ஒரே ஒரு செல்லத் தங்கச்சி" என்று வரும். ரயில்வே தொழிலாளர்களுக்கு, அவள் அப்படிப்பட்ட செல்லத் தங்கச்சியாக மாறிவிட்டாள். ஜிப்பாக்காரர், அவளையும், அவள் பேச்சையும் உற்றுக்கேட்டு, அவளின் பூர்வோத்திரத்தை ஓரளவு தெரிந்து கொண்டார் பலராமன், ஏதோ பேச்சு வாக்கில் அவளைச் செல்லமாகச் சாடினான்.

"இன்னாமம்மா... நீ பத்து லட்சம் ரூபாய் சொத்தையும் அப்படியே விட்டுட்டியே...? அந்தக் கம்மனாட்டிமேல கோர்ட்ல வழக்கு போட்டிருக்கணும். எத்தன வருஷமுன்னாலும் ஆகட்டுமே?"

"எண்ணன்னா... சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்றே..."

"அதுக்குப் பேர்தான் பலராமன்."

"நீ சும்மா இரு... நவாப்புக்கு கோர்ட்டு வழக்கு என்கிறது குதிரைக் கொம்பு மாதிரி. ஏழைக்கு அங்கே இடம் இல்லை... கோர்ட் தேவதையின் துவார பாலகர்களான வக்கீல்கள்கிட்டே கூட நெருங்கமுடியாது. என் பெரிய மாமா பத்து லட்சம் ரூபாய் சொத்தை மோசடி செய்தது கிரிமினல் குற்றம் இல்லியாம்... சிவில் தானாம். சொத்து வேணுமுன்னு உயர்நீதிமன்றத்தில் எவ்வளவு ரூபாய் சொத்துகேட்டு வழக்குப் போடுறோமோ அவ்வளவுக்கும் ஆயிரத்துக்கு 75 ரூபாய் வீதம் ஸ்டாம்ப் பேப்பர் வாங்கணுமாம்... அதாவது என்னோட பத்துலட்ச ரூபாய் சொத்துக்கு நான் எழுபத்தையாயிரம் ரூபாய் ஸ்டாம்ப் வாங்கணும்... வக்கீலுக்கு வேற ரூபாய் கொடுக்கணும். என்ன சட்டமோ... என்ன கோர்ட்டோ... இந்த லட்சணத்துல கோர்ட்ல பெஞ்ச் கிளார்க்குகள் குதிக்கிற அட்டகாசம் வேறு. முயற்சி செய்துதான் விட்டுட்டேன். அப்படியே சொத்து கிடைக்கிறதாய் இருந்தாலும், நான் கிழவியான பிறகுதான் கிடைக்கும். சட்டம் ஒரு இருட்டறைன்னு அண்ணா சொன்னது சரிதான்..."

ஜிப்பாக்காரரால் பேசாமல் இருக்க முடியவில்லை.

"நீங்க சொல்றது சரிதாம்மா... இந்த நாட்டுச் சட்டம் இருக்கே... அது குப்பையிலும் குப்பை படு குப்பை... உதாரணமாய் ஒன்னோட வீட்டை நான் சப்ரிஜிஸ்தரார் ஆபீஸ்ல போய் பத்திரம் பதிவு செய்து இன்னொருத்தருக்கு விற்றுடலாம். நீ இல்லாத சமயத்துல, உன் வீட்ல நான் யாருக்கு விற்றேனோ அந்த ஆசாமி போய் இருந்துக்கலாம், ஒன்னால ஒன்றும் செய்யமுடியாது... போலீஸ்காரன் காசு வாங்கிட்டு சும்மா இருந்துடுவான். நீ கீழ்

கோட்ல ஜெயிச்சால்... அவன் மேல் கோர்ட்ல ஜெயிப்பான். நீ உயர்நீதிமன்றத்துல ஜெயிப்பே... பெஞ்சில தோற்கடிக்கப்படுவே... இந்த நாட்ல நீதிபதிகள் இருக்காங்க.... ஆனா நீதிதான் கிடைக்கல..."

"நல்லவேளை... எனக்கோ... இந்தப் பயலுக்கோ வீடு இல்ல."

"நீ வேலைக்குப் போறியா...?"

"ஆமாம்."

"என்ன வேலைம்மா...?"

"ஏதோ ஒரு வேலை..."

நவாப்ஜான், ஜிப்பாக்காரரிடம் முறையிட்டான்.

"இப்படித்தான் ஸார், இந்த ஸிஸ்டர் பெருமையாய் பேச வேண்டிய வேலையைப் பற்றி மூச்சுவிட மாட்டாள். அம்மாவுக்கு சென்னை வானொலி நிலையத்தில் செய்தி வாசிக்கிற வேலை. மாதம் ஆறுநாளைக்கு வேலை... சாயங்காலம்தோறும் வெளிநாட்டுச் செய்திகளை படிக்கணும். டெய்லி நூறு ரூபாய்.... ஆறுநாளைக்கு அறுநூறு ரூபாய்."

"சும்மா இரு அண்ணா. ஏதோ குற்றம் செய்யுறதுமாதிரி இருக்குது."

"நானும் ஒரு பத்திரிகையில் செய்தியாளனாய்த்தான் வேலை பார்க்கேன். இப்போ நியூஸ் ரிப்போர்ட்டிங் சம்பந்தமாத்தான் டில்லி போறேன். ஒங்களுக்கு ஏன் அப்படி ஒரு குற்றவுணர்வு வருதுன்னு தெரிஞ்சுக்கலாமா..."

"சொல்றேன் ஸார்... வெளிநாட்டுச் செய்திகளில், எல்.டி.டி.யில் இத்தனை பேர் கொல்லப்பட்டார்கள். இந்த இயக்கம் சொந்த சோதரர்களையே கொல்கிறதுன்னு செய்தி வாசிக்கும்போது நான் ஏதோ தப்புச் செய்யுறது மாதிரி தெரியுது..."

"ஒங்களை யாரும் தமிழ்த் துரோகின்னு சொல்லிடுவாங்களோன்னு பயம்... அப்படித்தானே..."

"சரியா சொன்னீங்க ஸார். இவ்வளவுக்கும் பாவம்... அந்த வானொலி செய்தியாசிரியர் என் கஷ்டத்தை உணர்ந்து, மனிதாபிமான அடிப்படையில்தான் வேலை கொடுத்தார்..."

"நீங்க எல்.டி.டி.இ. ஆதரவாளரா...?"

"இல்ல எனக்கு பிரபாகரனும், பத்மாநாபாவும் சீறி சபாரத்தினமும், குட்டி மணியும், கண்டித் தமிழர்களை காப்பாற்றுகிற தொண்டைமானும் ஒரே மாதிரி... பிரபாகரனும்,

பத்மநாபாவும், மாத்தையாவும், வரதராஜப் பெருமாளும் நல்லா இருக்கணும்... என்பது என் ஆசை. இவர்களைவிட இலங்கைத் தமிழர்கள் நல்லா இருக்கணும்... என்கிறது என் பெரிய ஆசை; பிரார்த்தனை..."

"இலங்கைத் தமிழர் பிரச்சினையில் உங்கள் கருத்தென்ன...?"

"சிங்கள ராணுவத் தாக்குதலில் இருந்து தமிழர்களைக் காப்பாற்றிய பிராபாகரனுக்கு தலை வணங்குகிறேன். யாழ்ப்பாண பலாலி முகாமில் சயனைடை சாக்லேட் மாதிரி சாப்பிட்ட பதிமூன்று தமிழ் சோதரர்களுக்காக கண்ணீர் விடுகிறேன்... தண்ணீர்கூட அருந்தாமல் உயிர் நீத்த, வரலாறு படைத்த திலீபன் தோழனுக்காக அழுகிறேன். அதேபோல் கிழக்குப்பகுதியில் ஆயிரத்துக்கும் அதிகமான சிங்கள அப்பாவிங்க...... குறிப்பாய், குழந்தைகள், பெண்கள் படுகொலை செய்யப்பட்டதுக்கு மனதுக் குள்ளேயே ஒப்பாரி வைக்கிறேன். தமிழர்கள் எந்த இனத்திற்கும் தாழ்த்தி இல்லை என்றால் அது அவமானம். அதுவே உசத்தி என்று பேசப்பட்டால் பாஸிஸம். இனவாதமே மனிதாபிமானமற்ற காரியங்களால் எழுவது, அதே வாதத்தில் வளர்ந்தவர்கள், பிற இனத்தையும் படுகொலை செய்வது... மன்னிக்கக்கூடியதும் அல்ல... மறக்கக்கூடியதும் அல்ல..."

ஜிப்பா, தெம்போடு பேசினார்.

"நீயே... தமிழ்நாட்ல, உன் கண்ணால பார்த்திருப்பே... சிங்கள ராணுவம், தமிழர்களை தாக்கியபோது, இங்கே தமிழர்கள் எல்லோரும் ஒன்றுபட்டு நின்றார்கள். கதவடைப்பு செய்தார்கள். துயர் துடைப்பு நிதிக்கு உதவினார்கள். சிங்களத்தலைவர்களின் கொடும்பாவிகளை கொளுத்தினார்கள். இப்போ எந்தத் தமிழர்களைக் காப்பாற்றினார்களோ, அந்தப் போராளிகள் வவுனியா காட்டுக்குள்ளே வாடிக் கிடக்கும்போது... இங்குள்ள தமிழர்கள் மூச்சு விடவில்லை. காரணம் எல்.டி.டி. இயக்கத்திற்கு நிர்வாகக் கவுன்சிலில் ஏழு பேர் இருக்க வாய்ப்பளித்தபோது, அதை தட்டிவிட்டது தவறானதுன்னு தாயகத் தமிழர்கள் நினைக்காங்க... பாகிஸ்தான் உருவாவதற்கு சம்மதிக்காத மகாத்மாகாந்திகூட இறுதியில் பிரிவினைக்கு சம்மதித்தார். வீடாகட்டும், அரசியல் ஆகட்டும் ஏதாவது ஒரு கட்டத்துல கொஞ்சம் விட்டுக் கொடுத்துத் தான் ஆகணும். அதனால் நான் என்ன சொல்றேன்னா... நீங்க செய்தி படிக்கிறதுல குற்றவுணர்வு வரப்படாது... வந்தால் வேலையை விட்டுடணும். அதோட பிறத்தியார் நம்மை துரோகின்னு சொல்லிடுவாங்களோன்னு நினைத்து நம் கருத்தையோ செய்கையையோ மாற்றி, நமக்கு நாமே துரோகம் பண்ணிக்கப் படாது..."

"உங்க பேச்சைக் கேட்ட பிறகு, தெம்பாய் இருக்குது ஸார்... நீங்க இலங்கைக்குப் போயிருக்கீங்களா...?"

"பல தடவை போயிருக்கேன். யாழ்ப்பாணம், வவுனியா, மட்டக்களப்பு, திரிகோணமலை, உட்பட எல்லா இடங்களுக்கும் போயிருக்கேன். அமைதிப்படை போன புதிதில் செய்தியாளர்கள் போனோம். அப்போ தமிழ் சோதர சோதரிகள் எங்களை கையாட்டி ஆரவாரம் செய்தது இன்னும் அப்படியே கண்முன்னால் நிற்குது... அப்புறம் விடுதலைப் புலிகளுக்கும் அமைதிப்படைக்கும் நடந்த சண்டையில் யாழ்ப்பாண ஆஸ்பத்திரியில் கையிழந்து, காலிழந்து... கிடந்தவர்களைப் பார்த்துக் கண்ணீர் விட்டோம். இதுக்குப் பிறகு வரதராஜப் பெருமாள் திரிகோணமலையில் முதலமைச்சராய் பதவியேற்ற மறுநாள், யாழ்ப்பாணத்தில்... மத்திய கல்லூரி விளையாட்டு மைதானத்தில் பேசினார். அங்கங்கே வெடி வெடிச்சுது... மக்கள் அசையல... இது வீரத்தின் விளைவா...? இல்ல... விரக்தியோட விளிம்பு. எப்படியாவது தொலையட்டும்... என்பது மாதிரியான சிந்தனை... ஒரு காலத்தில் எங்களைப் பார்த்து அன்போடு கையாட்டியவர்கள் இப்போது கண்டிப்போடு பார்த்தாங்க... எவ்வளவோ கேள்வி கேட்டோம். பேயறைஞ்சது மாதிரி இருந்தாங்களே தவிர, பதில் பேசல..."

ஏதோ சோகத்தில் ஆழ்ந்ததுபோல் தமிழ்ச்செல்வியும், ஜிப்பாக்காரரும் தலைகளைத் தாழ்த்திக் கொண்டார்கள். சொந்தக் குடும்பத்தில் ஏதோ துக்கச் சம்பவம் நடந்துவிட்டது மாதிரியான துயரச் சாயலோடு நிசப்தம் நிலவியபோது_

அங்கிக்காரர் கத்தினார்.

"ஏய்யா... ஓடுற ரயிலுலயுமா தமிழ்த்துரோகம் செய்கிறே....? சரியான எட்டப்பன் நீ... இலங்கைத் தமிழன் தினமும் சாகிறான். "தம்பி..." வவுனியா காட்டில் இருந்து உரிமைப்இனைதமடை,போர் புரிகிறான். துரோகிகள் பத்மநாபாவும், வரதராஜப் பெருமாளும் தமிழனைக் காட்டிக் கொடுக்கிறாங்க... உனக்கு என்னடான்னா இது புரிய மாட்டேங்குது. எல்.டி.டி.இ. ஏதோ பெரிய தப்பு பண்ணிட்டது மாதிரி பேசுறே... இனிமேல் மட்டும் பேசினே..."

ஜிப்பாக்காரர், அவர் பேச்சை சர்வசாதாரணமாக எடுத்துக் கொண்டவர்போல், சிறிது சிரித்தார். பிறகு, சீரியஸாகவே பேசினார்.

"எல்.டி.டி. இயக்கத்தைப் பற்றி மற்றவங்க விமர்சிக்கிறதுக்கும், நாம் விமரிசிக்கிறதுக்கும் வித்தியாசம் உண்டு. என்னோட விமர்சனம் ஒரு குடும்பத்தில் உள்ள தம்பியை அவன் நல்லா

இருக்கணும் என்று அண்ணன் விமர்சிப்பது மாதிரி... தமிழ்சாதி அழிந்து போகணுமுன்னு பிரபாகரனுக்கு சில பத்திரிகைகாரங்க ஆதரிக்கது மாதிரி கொம்பு சீவி விடுறாங்களே... அப்படிப்பட்ட செய்தியாளன் அல்ல..."

"நீ செய்தியாளன் இல்ல. துரோகி... பச்சைத் தமிழ்த்துரோகி. காட்டிக் கொடுப்பவன்... கூட்டிக் கொடுப்பவன்."

பலராமனால் பொறுக்க முடியவில்லை.

"யோவ்... அங்கிக்காரரே... கூட்டிக் கொடுப்பவன்னு சடார்னு சொல்றியே...? ஒனக்கு மூளை இருக்குதா...? இதே கேள்வியை எங்களைப் பார்த்துக்கூட கேட்பே... ஒனக்கு இங்கே இடம் கொடுத்ததே தப்பு... எழுந்திருய்யா..."

ஜிப்பாக்காரர், அந்தச் சூழலை லேசாக்க நினைத்துப் பேசினார்.

"அந்த அர்த்தத்திலே அவர் சொல்லியிருக்க மாட்டார். காட்டி என்கிற வார்த்தைக்காக கூட்டி என்கிற வார்த்தையைச் சொல்லிட்டார். அவ்வளவுதான். தமிழ்நாட்டு அரசியலே, வார்த்தை ஜாலத்திலேதானே சிறைப்படுத்தப்பட்டிருக்கு. எதுவரைக்கும் சார் போறீங்க?"

அங்கிக்காரர், அங்குலம் அங்குலமாக குழைந்து பேசினார்.

"எங்க தலைவர் டில்லியில், தமிழக சட்டப்பேரவைத் தேர்தலில் கூட்டு வைப்பது சம்பந்தமாய் பிரதமர் ராஜீவ்காந்தியோடு பேச்சு நடத்த, ஏ.சி. பெட்டியில் போறார். நான் அவருக்கு ஒத்தாசையாகப் போறேன்."

"அதாவது காங்கிரஸ் கட்சியோட தேர்தல் உடன்பாடு ஏற்பட்டால், இலங்கைத் தமிழர்களை பாரதம் காப்பாற்றி விட்டதுன்னு பேசுவீங்க. கூட்டு இல்லையென்றால், இலங்கைத் தமிழர்களை, இந்தியப்படை கொன்று குவிக்குதுன்னு சொல்வீங்க."

அங்கிக்காரர், அந்த ரயில்பெட்டி, தமக்கு ஏறுக்கு மாறானவர்களால் நிறைந்திருக்கிறது என்பதைப் புரிந்து கொண்டார். அதோடு, இலங்கைத் தமிழர்களைப் பற்றி தனது தலைவர், தேர்தல் பேச்சின் முடிவுக்குப் பிறகே ஒரு முடிவெடுப்பார் என்பதை உணர்ந்தார். தலைவரிடம், தனது சிந்திக்கும் பொறுப்பை ஒப்படைத்த அந்த வெறும் தலைக்காரர் வினயமாகப் பேசினார்.

"என்ன ஸார் நீங்க... சும்மா பொழுது போகாமல் பேசிக்கிட்டு இருக்கோம். இதைப்போய் பெரிசாய் எடுத்துட்டு... என்னைச் சுற்றி ஆணி அடிக்கப் பார்க்கீங்களே..."

அங்கிக்கும், ஜிப்பாவுக்கும் இடையே இருந்த அந்த இளைஞன், அங்குமிங்குமாக தலையைத் திருப்பினான். பிறகு, அருகே இருந்த அந்த சிறுவனைத் தூக்கி நிறுத்தினான். அவன் கால் சட்டைக்குள் போட்டிருந்த கையை வெளியே தூக்கிக் காட்டினான். அதைப் பார்த்துவிட்டு எல்லோரும் அதிர்ச்சியுற்ற போது, அந்த இளைஞன் கத்தினான்.



அந்த ரயில், மேடு மேடாக ஏறி, பள்ளம் பள்ளமாக இறங்கி எல்லோரையும் புரட்டிப் போடப்போவது போன்ற தோரணையில், அந்தக் காட்டுப் பகுதிக்குள் காட்டுத்தனமாக பாய்ந்து கொண்டு இருந்தது.

சத்தம் கேட்டு, அக்கம் பக்கத்துப் பெட்டிக்காரர்கள் கூடி விட்டார்கள். ரயில் பயல், தமிழ்ச்செல்வியை பயத்தோடு பிடித்துக் கொண்டான். அந்த இளைஞன், தான் கத்தியதற்கு வருந்துபவன் போல் சிறிது தலைகுனிந்தான். பிறகு, தலைகுனியவேண்டியது தானல்ல என்பதுபோல், நிமிர்ந்து பார்த்தான். இப்போது ரயில் பயல், அந்தச் சிறுவன் கையை பிடித்துக் கொண்டான். அது வலது கை மணிக்கட்டுக்கு மேல் எதுவும் இல்லாமல் மொக்கையாக இருந்தது. உள்ளங்கையோ... புறங்கையோ இல்லாத நொண்டிக்கை... அந்த இளைஞன், எல்லோரையும் பொதுப்படையாக பார்த்த படியே, உணர்ச்சி ததும்பப் பேசினான்.

“இதோ இந்தக் கையைப் பாருங்கள்! இவன் என்ன பாவம் செய்தான் தெரியுமா...? யாழ் நகரில் ஆஸ்பத்திரியில் அடிபட்டுக் கிடந்த தந்தைக்கு சோறு கொண்டு போனான். அப்போது, போராளிகளுக்கும் இந்தியப் படைக்கும் இடையே நடந்த போரில் இவன் அரவானாக்கப்பட்டான். எங்கிருந்தோ வந்த குண்டு இவனை இப்படி ஆக்கிவிட்டது. இவனைப்போல் எத்தனையோ பேர்... எங்கள் தேசத்தில் மானுடம் மூடமாகிவிட்டதய்யா... வெந்த புண்ணில் வேல் பாய்ப்பதுபோல் கதைக்காதீர்கள்... கடற்கரையில் நிற்கும் உங்களால் கடலில் தவிக்கும் எங்கள் இடர்ப்பாடுகளை புரியமுடியாது. அமைதிப்படை சுட்டுட்டு கூடாரத்துக்குப் போகிறது. போராளிகள் அடித்துட்டு காட்டுக்குப் போகிறார்கள். இடையிலே, அகப்பட்டு, சாகாமல் சாவது இந்த மாதிரி

பொடியன்கள்... நீங்கள் எங்களுக்கு செய்ய வேண்டியது இந்தக் காலக்கட்டத்துல பேசாமல் இருக்க வேண்டியதுதான். உங்கள் பொழுதுபோக்கிற்கு உயிரோட சாகிற நாங்களா கிடைத்தோம்..."

அந்த இளைஞன், அந்தச் சிறுவனை அங்கேயே விட்டுவிட்டு வெளியே வந்தான். பொது வழியின் ஜன்னலோரத்தைக் குனிந்து பார்த்தான். பிறகு நிமிர்ந்து மீண்டும் வந்து தன் இருக்கையில் உட்கார்ந்தான். அவன் உடம்பு இரும்பைக் காய்ச்சி தண்ணீரில் முக்கியதுபோல் கொதித்தது. தமிழ்ச்செல்வி அவனைத் தத்தளிப்பாகப் பார்த்தாள். இருக்கையில் இருந்து எழுந்து, அந்தச் சிறுவனின் மொட்டைக் கையை அவன் பேண்ட் பைக்குள் திணித்துவிட்டு, அவனைத் தன்னோடு சேர்த்து அணைத்தபடி தன்னருகே உட்கார வைத்தாள். இதற்காக அந்த இளைஞன் கோபப் படலாம் என்பதுபோல், பயந்து பார்த்தாள். அவனோ, அங்கே இல்லாமல் யாழ்குடாவில் எங்கோ ஒரு இடத்தில் இருப்பவன் போல் இருந்தான்.

தமிழ்ச்செல்வி, அவனை அதிசயித்துப் பார்த்தாள். தன்னைத் தானே அடக்கிக் கொண்ட அவன் வல்லமையை தானும் வளர்த்துக் கொள்ளவேண்டும் என்பதுபோல், அவனை அண்ணாந்து பார்த்தாள். அவனைப் பார்க்கப் பார்க்க தனது சுமை குறைவது போலிருந்தது. இந்தச் சமயத்தில் சமையல் பகுதியில் இருந்து அண்ணாமலை வந்தான்.

"சாப்பிட வாம்மா... டேய், துரைக்கு வேற தனியாச் சொல்லணுமோ...? அடச்சீ... எழுந்து வா."

தமிழ்ச்செல்விக்கு சாப்பிட மனமில்லை. ஆனால், அவள் சாப்பிடவில்லையானால், ரயில் பயலும் சாப்பிட மாட்டான். போதாக்குறைக்கு அந்தப் பயல் அவள் கையைப் பிடித்து இழுத்தான். வயிற்றுப் பசியை அடக்கவேண்டும் என்பதைவிட "அம்மாவோடு ஒன்றாக உட்கார்ந்து" ஒன்றாகச் சாப்பிடுவதில் அப்படியொரு ஆனந்தம் அவனுக்கு... அந்தப் பயல், இலங்கைப் பொடியனையும் தன்னோடு வரும்படி இழுத்தான். இதைப் பார்த்துவிட்டு தமிழ்ச்செல்வியும் "சாப்பிட வாரியாப்பா?" என்றாள். அவனோ, அண்ணனைப் பார்த்தான். அவன் பார்த்த பார்வையில் தமிழ்ச்செல்வியை விட்டுவிட்டு அண்ணனருகே போய் உட்கார்ந்தான். தமிழ்ச்செல்விக்கு என்னமோ போல் இருந்தது. அங்கிருக்கப் பிடிக்காமல் எழுந்து நடந்தாள்.

அந்த முழு ரயில் பெட்டியில், முக்கால் பகுதியை சமையல் வளாகம் வியாபித்து இருந்தது. ஒரு பக்கவாட்டில் குளிர்பான பாட்டில்கள்... கண்கண்ணாய் இருந்த பெட்டிகளில் வைக்கப்

பட்டிருந்த சிகரெட், மிட்டாய், வேர்க்கடலை, வகையறாக்கள்... அடுக்கடுக்காய் வைக்கப்பட்டிருந்தன. ஒரு பக்கம் மாவரைக்கும் கல்லுருளை... இன்னொரு பக்கம் தோசை போடும் செவ்வக இரும்புத்தட்டு.

இதற்கு வெளியே இருந்த பெஞ்சில் உட்கார்ந்தபடி, தமிழ்ச்செல்வி, அண்ணாமலை, ரயில்பயல் ஆகியோர் சாப்பிட்டார்கள். தமிழ்ச்செல்வி ஒப்புக்குச் சாப்பிட்டுவிட்டு, அவர்கள் சாப்பிடுவது வரைக்கும் காத்திருந்தாள். ஏனோ, அவளால் வழக்கம்போல் சாப்பிட முடியவில்லை. அந்த இளைஞனையும், ஒத்தைக் கை பொடியனையும் நினைக்க நினைக்க, அவளுக்கு வயிறே இல்லாததுபோல் தோன்றியது.

தமிழ்ச்செல்வி எச்சித் தட்டுக்கள் கிடந்த குழாயடிப்பக்கம் போனாள். எதுக்கோ அடிக்கல் நட்டதுபோல் தோன்றிய அந்தக் குழாயைத் திறந்துவிட்டபடியே தட்டுக்களையும், பிளாஸ்டிக் தம்ளர்களையும் கழுவினாள். சமையல்காரர் குப்புசாமி, தோசைக் கார வீரண்ணன், நான்கைந்து சர்வர்கள் தமிழ்ச்செல்வியை அனுதாபத்துடன் பார்த்துக் கொண்டிருந்தனர். ஒருசிலர் அந்தப் பயலையும், அவனை விரட்டிக் கொண்டிருந்த அண்ணாமலை யையும் சிரிப்பும் கும்மாளமுமாய் பார்த்தார்கள்.

திடீரென்று, நான்குபேர் பின்பக்கமாகவும், மூன்றுபேர் முன்பக்கமாகவும் சமையல் வளாகத்திற்குள் வந்தார்கள். இவர்கள் போதாதென்று துப்பாக்கி சகிதமாக மூன்று ரயில்வே போலீஸாரும் உடன் வந்தார்கள். இந்த ரயில்வே சித்திர குப்தர்கள் இந்த மாதிரி எப்போதும் வந்ததில்லை. அதுவும் சயைமல் வளாகத்திற்குள். வந்தவர்கள் தமிழ்ச்செல்வியை மிடுக்கோடு பார்த்தார்கள். அந்தப் பார்வைக்கு மொழியாக்கம் செய்பவன்போல் காக்கி சட்டை போட்ட லஸ்கர் - அதாவது, பியூன் மாதிரியான எடுபிடியாள் - தமிழ்ச்செல்வியை பார்த்து, “ஏய்” என்றான். இதற்குள் தலைமை டிக்கெட் பரிசோதகர், அவளை நெருங்கி வந்து நின்றபடி கேட்டார்.

“ஏமண்டி... எங்கிருக்கே...?”

“மெட்ராஸ்ல...”

“டிக்கெட் இருக்குதா...?”

“இல்ல ஸார்.”

“எவ்வளவு நாளாய் இப்படி?”

“ஆறு மாதமாய் ஸார்.”

"சரி... எங்க பின்னால நட. ஆறு மாதத்துக்கும் ஆறு வருடம் ஜெயில் வாங்கிக் கொடுக்கோம்."

தமிழ்ச்செல்வியை, வந்தவர்கள் எல்லோரும் சூழ்ந்து கொண்டார்கள். கையில் விலங்கு மாட்டாததுதான் மிச்சம். எல்லா தொழிலாளர்களும் கைகளைப் பிசைந்தபோது, அண்ணாமலை அந்த அதிகாரியிடம் மன்றாடினான்.

"எங்க சிஸ்டர் சார்... இது... தயவு செய்து விட்டுடுங்க ஸார்... வேற எந்த கம்பார்ட்மெண்ட்லயும் ஏறமாட்டாங்க ஸார்... மாதம் ஒரு தடவை, இல்லன்னா ரெண்டு தடவை மட்டும்தான் வருவாங்க ஸார்... எங்களில் ஒருத்தி சார்... ஒங்களுக்கு காபி, தோசை, சீக்கிரமாய் கிடைக்குதுன்னா இதுதான் ஸார் காரணம்."

தலைமைப் பரிசோதகர் அதட்டினார்.

"இப்போதான் புரியுது... இந்தப் பொம்பிளேகிட்டே எவ்வளவுடா கமிஷன் வாங்கினீங்க...? இப்போதான் தெரியுது. அடுத்த தடவை இப்படிப் பார்த்தேன்... உங்களையும் புக் பண்ணிடுவேன்... ஆனால் இன்றைக்கு இந்த பொண்ணை விடுகிறதாய் இல்ல... நடம்மா..."

தமிழ்ச்செல்வி, அவர்களுக்கு நடுவே நடந்தாள். பெட்டியோடு பெட்டியாக ஒட்டிக் கிடந்த ரயில் பயல், அவர்கள் பின்னால் நழுவி நழுவி நடந்தான். அம்மாவை ஜெயிலுல போட்டுடுவாங்களோ என்று பதறியபடியே ஓடினான்.

தமிழ்ச்செல்வி, ஏதோ ஒரு பெட்டிக்குக் கொண்டு போகப்பட்டாள். அங்கே ஏற்கெனவே சில பெண்களும், சிறுவர் சிறுமிகளும் நிறுத்தப் பட்டிருந்தார்கள். டிக்கெட் பரிசோதகர்கள் அவர்கள் நிறுத்தப்பட்ட இடத்திற்கு, அருகே இருந்த பெண்கள் பகுதி பிரிவுக்குள் போனார்கள். பெண் பயணிகள் யாரும் இல்லை போலீஸ்காரர்களை காவலுக்கு நிறுத்திவிட்டு உள்ளே போய் தாழ்ப்பாள் போட்டுக் கொண்டார்கள். பலராமனும், நவாப்ஜானும், நாராயணனும், ரயில் பயலோடு அங்கே வந்தார்கள். இதற்குள் சமையல் வளாகத்தில் இருந்து அண்ணாமலை உட்பட ஏழெட்டு பேர் கூடிவிட்டார்கள்.

உள்ளே சாப்பாட்டுச் சத்தம் கேட்டது. கண்ணாடிச் சத்தம் கேட்டது. சிரிப்புச் சத்தம் கேட்டது. பலராமன் வகையறாக்கள் பொறுமையோடு காத்திருந்தார்கள். கால்மணி ஆயிற்று... அரைமணி ஆயிற்று... கதவு திறக்கப்படவில்லை.. நவாப்ஜான் பொறுமையிழந்து கதவைத் தட்டினான். லேசாய் தட்டினான். பலமாய் தட்டினான்.

கதவு திறந்தது. பாதி திறந்தது. பலராமன் குழுவிற்கு பரிச்சயமான, அவர்களுடன் பாதி சிகரெட்டுக்களைப் பகிர்ந்து கொண்ட லஸ்கர் ராசமாணிக்கம் எஜமானத்தனமாக எகிறினான்.

''அவங்க ரெஸ்ட் எடுக்காங்க... ஏண்டா தொல்லை கொடுக்கறே...?"

"இந்த சிஸ்டரைப் பற்றி உனக்கு நல்லாத் தெரியும். நீயே இவங்க கையால ஓசித் தோசை தின்னிருக்கே... அவங்ககிட்டே சொல்லி சிஸ்டரை விடச் சொல்லுடா..."

"இப்போ அவங்க ரொம்ப பிஸி. அதோட இந்த விவகாரத்துல நான் தலையிடப்படாது."

''சரி... என்னை உள்ளேவிடு.... நானே அவங்கிட்டே பேசிக்கிறேன்."

"டேய்! உள்ளே வந்தே மரியாதை போயிடும்."

லஸ்கர், கதவை மூடப் போனான். நவாப்ஜான், திறக்கப் போனான். அந்தக் கதவு இருவரின் சக்திக்கு ஏற்ப அங்குமிங்கும் ஆடியது. இறுதியில் பலராமன், லஸ்கர் கையைப் பிடித்திழுத்து, அவனை வெளியே போட்டான். கோபமும், குமுறலுமாய் உள்ளே போனான். லஸ்கர் குரல் கொடுத்தான். பலராமன் பதில் கொடுத்தான்.

"டாய் நான் யார் தெரியுமாடா...?"

"தெரியுண்டா கயிதே... பொதுமக்களோட சௌகரியங்களைப் பார்க்க வேண்டிய வேலையாள். அதிகாரிங்க குடிச்சுட்டு வைக்கிற எச்சி விஸ்கியை குடிக்கிற ஆள்காட்டிப் பயல்."

பெண்கள் பிரிவில் இருந்த டிக்கெட் பரிசோதகர்கள், வெளியே வந்தார்கள். பலராமன் அவர்களைப் பார்த்து, சலூட் அடித்தான். அந்தப் பெருமையில் தலைமையதிகாரி அதட்டினார்.

"என்னய்யா... கலாட்டா... நீங்களும் உள்ளே போகணுமா...?"

நவாப்ஜான், நையாண்டித்தனமாகப் பேசினான்.

"ஸார்... சட்டப்படி தப்பாய் இருக்கிற சில சமாச்சாரங்கள், தர்மப்படி சரியாய் இருக்கும். இந்த சிஸ்டர் டிக்கெட் வாங்காதது சட்டப்படி குற்றந்தான். அதே சமயம், இவங்க சமையலறைக்குள்ளே செய்கிற வேலையைப் பார்த்தால் நாமே காசு கொடுக்க வேண்டியது இருக்கும்."

"என்னய்யா உளறுறே...? சட்டம்... சட்டம்தான்."

“அப்படின்னா... நீங்க உள்ளே இருந்து விஸ்கி குடித்ததோ... இந்த லஸ்கர் பயல் குடித்ததோ, நாங்க குடிக்கப் போறதோ... குற்றம்தான்.... இந்த சிஸ்டர் டிக்கெட் எடுக்காமல் வந்தது எவ்வளவு தப்போ, அவ்வளவு தப்பு... நாங்க விடப் போறதில்லை...”

“என்னய்யா செய்வே...?”

“சங்கிலியைப் பிடித்திழுத்து ஓடுற ரயிலை நிறுத்துவோம். ரயில்வே கார்டையும் பயணிகளையும் கூட்டி, நியாயம் கேட்போம். எல்லா விஷயத்தையும் சொல்லுவோம்... நீங்க ரசீது கொடுக்காமலே காசு வாங்குறது... நாங்களும் எங்களோட இடங்களை பிறத்தியாருக்கு விற்கது, நீங்க காசு வாங்கிட்டு அனுப்புற ஆளுக்கு இடம் கொடுக்கிறது, எல்லாம் சொல்லுவோம்... எல்லாத்துக்கும் மேல் விஸ்கி...”

“யோவ்... அளவுக்கு மீறிப் பேசுறே...?”

“பின்ன என்ன ஸார்... இந்த சிஸ்டரைப் பற்றி கேட்டுப் பாருங்க... நாங்க யாருக்காவது இப்படி வக்காலத்தா வந்திருக்கோமா...? இந்தப் பொண்ணை போலீஸ் மத்தியில் வைக்கிறது எங்களை வைக்கிறது மாதிரி...”

“இப்போ என்னய்யா செய்யணும் என்கிறே...?”

“எங்க சிஸ்டரை விடச் சொல்றேன்...”

“சரி விட்டாச்சு... கூட்டிப்போ... இதுக்கு ஏம்பா பெரிய பெரிய வார்த்தைகளை விடுறே... நீ யாரு...? நான் யாரு...?”

“ரொம்ப நன்றி ஸார். டேய் பசங்களா... இனிமேல் இந்த லஸ்கர் பயலுக்கு யாரும் ஓசிக் காபியோ... ஓசிப் போண்டாவோ கொடுக்கப் படாது... அப்படிக் கொடுத்தால் செருப்படி கிடைக்கும்.”

தமிழ்ச்செல்வி, ரயில்வே தொழிலாளர்கள் புடைசூழ நடந்தாள். அவர்கள் காட்டிய அன்பில், அவளுக்கு தலைவியைப் போன்ற கம்பீரமும், நன்றிக் கடன்பட்ட தோழியைப் போன்ற பணிவும் தோன்றின. நவாப்ஜான், “டேய் பலராமா... இன்னிக்கு... குடிச்சுட்டு... தப்பு செய்ததால் சிஸ்டரை விட்டுட்டாங்க... அடுத்த தடவை குடிக்காமல் வந்து பிடிப்பாங்க, பாரு...” என்று முணுமுணுத்தான்.

தமிழ்ச்செல்வி இருக்கையில் அமர்ந்ததும், சமையல் தொழிலாளர்கள் போய்விட்டார்கள். நவாப்ஜான், நூறு ரூபாய் நோட்டை எடுத்து, இலங்கை இளைஞனிடம் நீட்டினான். “ஓங்க ரூபாய்க்கு வேலையில்லை... அபராதம் கட்டாமலே தங்கச்சியை மீட்டிட்டோம்...” என்றான். இலங்கை இளைஞன், படபடப்பாய் பேசினான்.

"என்னங்க நீங்க? அவங்க சுயமரியாதைக்குப் பங்கம் வரும்படி நான் கொடுத்ததாய் சொல்லாதீங்கன்னு சொன்னேன். நீங்க இப்படிச் செய்திட்டீங்களே. உதவுறது தெரியாமல் உதவுறதுதான் மனிதாபிமானம். தொலைக்காட்சி சாட்சியாய் உதவுறது உதவப் பட்டவரை சிறுமைப்படுத்துவது மாதிரி..."

தமிழ்ச்செல்வி, அவனை ஆச்சரியமாகப் பார்த்தாள். இவனின் 'இரும்பு உடம்பிற்குள் எவ்வளவு பெரிய மனிதாபிமானம்.'

எல்லோருக்கும் தூக்கம் வந்தது. விளக்குகள் அணைக்கப் பட்டன. பேச்சுக்கள் கொட்டாவிகளாயின. குறட்டைகளாயின. நள்ளிரவு, திடீரென்று அந்த இளைஞன் எழுந்தான். பக்கவாட்டிற்கு வந்து, அப்புறம் மறைந்து போனான். கண்களை உருட்டியபடியே படுத்துக் கொண்டிருந்த தமிழ்ச்செல்வி, சிறிது புரளப் போனாள். கண்களை மூடப் போனாள். அங்குமிங்குமாய் புரண்டாள் அரைமணி நேரமாகியும் அவனைக் காணவில்லை.

தமிழ்ச்செல்வி, எழுந்தாள். அவன் நடந்த நடையிலேயே நடந்தாள்.



அந்த ரயில், மரங்களையும் மலைகளையும் விழுங்கியது போல், இருளாகிப்போன பகுதியில், தட்டுத் தடுமாறி முன்னெச்சரிக் கையோடு ஓடியது.

ஆகாயம் என்று ஒன்று இருப்பதாகவோ, அவற்றில் நட்சத்திரப் பிரகாசங்கள் ஜோதித் துண்டுகளாய் உள்ளன என்றோ நம்ப முடியாத இருள்மயம். ஆனாலும், அந்தப் பெட்டியின் பின் பகுதியில், கூண்டிலிட்டதுபோல் மேல்பரப்பில் மின்னிய மெல்லிய வெளிச்சம், மஞ்சள் கோடுகளாகச் சிதறி விழுந்தன.

தமிழ்ச்செல்வி, அந்த வெளிச்சத்திலும் இருளாகிப் போனது போல் நின்றாள்.

அந்த இளைஞன் ரயில் கதவருகே உள்ள மூலையில், சாய்ந்தபடி, இரண்டு கைகளையும் சேர்த்து, மார்பில் ஊன்றி, செங்குத்தாகச் சாய்த்து, தாமரைப் பூவின் ஒரு பகுதிபோல் விரிந்த உள்ளங்கையில் முகம் போட்டு நின்றான். ரயிலின் இழுப்புச் சத்தம்

மாதிரியான சத்தம். தொண்டைக்கும் வாய்க்கும் இடையே உயிர் துடிப்பது போன்ற அவலச் சத்தம். ஏங்கி ஏங்கி அழும் இயலாமைச் சத்தம்.

தமிழ்ச்செல்விக்கே, அழுகை வந்தது. எல்லாக் குழந்தைகளும், பூமியில் விழுந்தவுடன் அழுவதுபோல், இவன் அழுதிருக்க மாட்டான் என்று தனது மனதுக்குள் அனுமானித்த அவன், இப்போது அப்படி அழுவதைப் பார்த்து அவலப்பட்டாள். இரும்புக் கவசமான அந்த உடம்பிற்குள் பூப்போலான இதயத்தை, ஏதோ ஒரு சமூகப்புயல் பிய்த்துவிட்டதை உணர்ந்தாள். தன்னை யறியாமலே அழப் போனாள். பிறகு, தன்னையடக்கி மெள்ள நடந்து, அவன் முன்னால் போய்நின்றாள். அவன் கைகளை அகற்றி, முகத்தை நிமிர்த்தப் போனவள், சிறிது யோசித்து, கரங்களை இழுத்துக்கொண்டாள். அவனோ, இப்போது உடல் குலுங்க விம்மினான். உயிர் குலுங்க ஏங்கினான். அவனை எப்படிக் கூப்பிடுவது என்று தமிழ்செல்விக்குப் புரியவில்லை. பிறகு, அவன் தலைக்கு மேல், வலது கரத்தைக் கொண்டு போய், அந்த ரயில் பெட்டியில் தட்டினாள்.

அவன் திடுக்கிட்டு நிமிர்ந்தான். அந்த வேகத்தில், அவள் கை, அவன் தோள் மேல் விழுந்தது. அவன் தன்னையறியாமலே, அந்தக் கையை பிடிக்கப் போனபோது, அந்தக் கரம், அதற்கு உரியவளிடம் மடங்கிப்போனது. அவன், தமிழ்செல்வியைக் கூச்சத்தோடு பார்த்தான். பிறகு, அவசர அவசரமாக முகத்தைக் குனிந்து, தோள் சட்டையில் அங்குமிங்குமாய் துடைத்துக் கொண்டான். பிறகு, எதுவும் நடக்காததுபோல் அவளிடம் இயல்பாகக் கேட்டான்.

“எவராவது பார்த்தால் தப்பா நினைக்கலாம், போங்கள்.”

“எனக்கு அப்படிப்பட்ட தப்பான எண்ணம் வரல. அதனால தப்பாயும் நினைப்பாங்கன்னு தோணல...”

“அய்யய்யோ. நான் அந்த அர்த்தத்தில் சொல்லல.”

“நீங்க எந்த அர்த்தத்தில் சொன்னாலும் நான் போகப் போவதாய் இல்லை. இதோ பாருங்க ஸார்.”

“கமலாகரன்னு கதைக்கலாம்.”

“நான் சொல்றதை தயவு செய்து கேளுங்க கமலாகரன்! மகிழ்ச்சியைப் பகிரப் பகிர அது கூடும். துக்கத்தை பிறருடன் பகிரப் பகிர அது குறையும். உங்களைப் பற்றி எனக்கு எதுவும் தெரியாது.... ஆனால், யூகிக்க முடிகிறது. உங்கள் துயரத்தை என்கிட்டேதான் சொல்லணுமுன்னு தேவையில்ல... யாராவது ஒருத்தர்கிட்டே

சொல்லுங்க... அவங்க சொல்கிற யோசனைகளை செயல்படுத்த முடியாட்டாலும், யோசித்துப் பாருங்க... எந்தப் பிரச்சினைக்கும் ஒரு தீர்வு உண்டு. எந்த நிலையிலும் ஒரு வாழ்க்கை உண்டு. உங்களுக்காவது கூடப் பிறந்த தம்பி இருக்கான். எனக்கு யாருமே இல்லை. உங்களை மாதிரி அனாதைதான். ஆனாலும், இப்படி அனாதையானதுக்காக சில சமயம் சந்தோஷங்கூட வருது. காரணம், மானுடத்தை உறவுகளுக்குள் தேடி ஓய்ந்துபோன நான், இப்போ இந்த ரயில்வே சோதரர்களிடம் காணுறேன். தோழமையில், என் வாழ்க்கைக்கும் ஒரு பதில் கிடைத்தது. உங்களுக்கும் இதைத்தான் சொல்றேன். கெளரவத்துக்கு இதயத்தை அடிமையாக்கப்படாது. உள்ளுக்குள்ளேயே புழுங்குகிற இதயத்துக்கு, வெளியில் இருந்து தோழமை என்கிற காற்று வீசாவிட்டால், அது அழுகிடும். என்ன சொல்றீங்க கமலாகாரன்...? சரி இப்போது, துக்கத்தை தூக்கதில் கலையுங்க... காலையில் பேசிக் கொள்ளலாம்."

கமலாகரன், அவளை நிமிர்ந்து பார்த்தான். அந்த முகம் காட்டிய தாய்மைக் கனிவில், அவன் குழந்தையாகி, அழக்கூடப் போனான். பிறகு, அவளும் ஒரு அனாதை என்ற உணர்வில், அவளை அனுதாபத்துடன் பார்த்தான். ஐந்தாண்டு காலமாக, நாயினும் கீழாய்ப்போன வாழ்க்கையை அப்போதே உதறிப் போட்டதுபோல் சிரித்தான். ஆண்டுக்கணக்கில் மாண்டு கிடந்த சிரிப்பு உயிர்த்தெழுந்தது. செதுக்கி வைத்த அரிசிபோல, பற்கள் பிரகாசித்தன. அந்தச் சிரிப்பு, தமிழ்ச்செல்வியையும் தொற்றிக் கொண்டது. அவனைவிட்டுத் திரும்பியபடியே, "நான் வாறேன். காலையில் பேசிக்கலாம்" என்று கூறியபடியே நடக்கப் போனாள். அவன் குரல், அவளைத் தடுத்தது.

"எத்தனையோ பேர் கேட்டபோதும், மெளனமாகிப் போன எனக்கு, இப்போது உங்ககிட்ட சொல்லாவிட்டால் தலை வெடித்துடும்."

"சொல்லுங்க தோழரே."

கமலாகரன், அவளை பார்த்து பிரமித்தான். அவளின் மெல்லிய சிரிப்பில் உருகிப்போனான். 'தோழரே.' எவ்வளவு பெரிய சொல். உறவுக்குள் அடைபடாத சொல். அதேசமயம் உறவாடலின் உச்சச்சொல். சாதிகளைத் தாண்டிய சொல். கம்பனும், கார்ல் மார்க்ஸும் கண்டெடுத்த சொல். இந்தச் சொல்லுக்கு மட்டும் அனைத்து மனிதர்களும் உயிரளித்தால் உலகில் சண்டையில்லை. இனபேதம் இல்லை. "நான்... நீ..." என்ற சொல்லும் இல்லை. அவன், அவளைத் தோழியாகப் பார்த்தான். ஒப்புக்குக் கேட்காமல், உறுதுணையாய் கேட்கும் அவள் முகபாவம் அவனை நெஞ்சுருக

வைத்தது. ரயில் பெட்டியில் சாயாமல், நிமிர்ந்து நின்று, ஆதாரத்திற்காக ரயில் கதவைப் பிடித்தபடி தன்னுடைய கதையைச் சொல்லத் துவங்கினான்.

"நான், யாழ் பல்கலைக் கழகத்துல அரசியலில் பட்டப்படிப்பு படித்தவன். அதே நகருக்கு பத்து மைல் வடக்கேயுள்ள சாவகச்சேரியில், தந்தையுடனும், தாயோடும், தங்கையோடும், தம்பியோடும் வாழ்ந்தவன். சிங்களக்காடையர்கள், யாழ் நகரிலும், இதர இடங்களிலும் சும்மா நின்ற தமிழர்களை இம்சித்தபோதே, அவர்களைப் பழி வாங்கத் துடித்தவன். யாழில் கல்லூரி மாணவிகள் சிங்கள ராணுவத்தால், பலாலி முகாமிற்கு கடத்தப் பட்டபோது, பதிமூன்று சிங்கள சிப்பாய்களை எல்.டி.டி.இ. இயக்கம் வெடி வைத்து தகர்ப்பதில் ஈடுபட்டவர்களில், நானும் ஒருவன். அப்போது நான் ஆடிய ஊழிக்கூத்தில் இப்போதுகூட உடம்பு ஆடும்."

"காரணம், என் ஒரே தங்கை, எனக்குத் தங்கையாக இல்லாமல் தாயாகிப்போன விமலகுமாரி, சிங்களக் காடையர் களால் கற்பழிக்கப்பட்டு காட்டிலே வீசப்பட்டாள். உடம்பில் இருந்த கொஞ்சு நஞ்ச உயிரையும் அவள் போக்கிக் கொண்டாள். இதனால் அம்மா - சர்வசாதுவான என் தாய், நான் போராளியாக மாறியாக வேண்டும் என்பதில் என்னுடன் உடன்பட்டாள். நானும் சிங்கள ராணுவத்தை யாழ் கோட்டையில் இருந்து வெளியே வரவிடாமல் தடுத்த முன்னணி வீரர்களில் ஒருவனாக இருந்தேன். கண்ணி வெடிகள் செய்யவும் தெரியும். வைக்கவும் தெரியும். ஏறி குண்டுகளை எடுக்கவும் தெரியும். எறியவும் தெரியவும். இதற்காக பயிற்சி பெற்றேன்."

"என் தாயின் போக்கும் அடியோடு மாறிவிட்டது. கண் முன்னாலேயே கதறக் கதற கடத்திச் செல்லப்பட்ட அருமை மகளின் அந்திமத்திற்குப் பிறகு அந்த வீட்டுப் பூனை வேங்கை ஆகியது. எங்களுக்கு மூதாதையர் சொத்து இருந்தது. தந்தை சம்பாதித்த பணம் இருந்தது. என் தாய் போராளிகளுக்குச் சமைத்துப் போட்டாள். ஆட்டிறைச்சி, மாட்டிறைச்சி என்றும், இட்லி, சோறு என்றும் ஆக்கிப்போட்டாள். போராளிகள் வேன்களில் வந்து என் அம்மா பொட்டலம் பொட்டலமாகக் கொடுப்பதை எடுத்துக்கொண்டு போவார்கள். போராளித் தலைவர்களில் சிலர், எங்கள் வீட்டில் அம்மா கையால் சாப்பிடுவார்கள்."

"அவர்களுக்கு உணவூட்டியபடியே என் தாய், "நீ இன்றைக்கு எத்தனை காடையரை கொன்றாய்" என்று ஒவ்வொருவரையும்

கேட்பாள். எந்த பொடியனாவது, 'கொல்ல வில்லை' என்று சொன்னால் "உனக்கு சாப்பாடு கிடையாது" என்று செல்லமாகவும் கோபிப்பாள். கண்டிப்பாகவும் பேசுவாள். அதே சமயம், நமது பெண்களுக்கு வந்தது, சிங்களப் பெண்களுக்கு வரக்கூடாது என்றும் வாதாடுவாள். தவறு பேசுவாள். போராளிகள் அப்படி நடந்து கொண்டால்தானே அவள் வாதாடுவதாய் அர்த்தம்? அகத்தில் புத்தனாய், புறத்தில் யுத்தனாய் மாறிய பொடியன்களின் போர்ப்பண்பை வரலாறு சொல்லத்தான் போகிறது."

"எங்கள் வீட்டு நடவடிக்கைகளை தெரிந்து கொண்ட ராணுவத்தினர், பொடியன்கள் போர்க்களம் போன சமயத்தில் பேடிகளாய் வந்து, என் தாயை உதைத்துப் போட்டார்கள். என் அம்மாவின் முதுகிலே, சூடான இஸ்திரிப் பெட்டியை வைத்து இழுத்திருக்கிறார்கள். என்தாய் முதுகிலே தோலுரிந்து கிடந்த சேதி யாழில் இருந்த எனக்கு வந்தது. உடனே ஒரு சில போராளிகளோடு சாவகச்சேரி நோக்கிப் புறப்பட்டோம். இதை எதிர்பார்த்த ராணுவக் காடையர்கள், வழியில் எங்களை மறைந்திருந்து பிடித்தார்கள். பூட்ஸ் கால்களால் எட்டி உதைத்தார்கள். வித்தியாசமான பொடியன்களான எங்களுக்கு சாக்லேட்டும் சயனைடும் ஒன்று. கழுத்தில் தொங்கிய சயனைமீடு, என் கைபடும் முன்னால், சிங்கள துப்பாக்கி முனைக்கத்தி அதைக் கிழித்தெறிகிறது. நாங்கள் பூசா முகாமிற்கு கொண்டு போகப்பட்டோம். அப்பப்பா... அங்கே நாங்கள் பட்டபாட்டை நினைத்தால் இப்போதுகூட வலிக்கும்."

"இலங்கையின் தென்கோடியில் உள்ள இந்த முகாமில், ஒரு கொட்டடியில் எங்களைப் பூட்டி வைத்தார்கள். கைவிலங்கு, கால் விலங்கு, இவை போதாது என்று பிளாஸ்டிக் குழாயில் மணல் களைத் திணித்து, கால்களிலே அடிப்பார்கள். கால்களின்மேலே லத்திக் கம்புகளை பக்கவாட்டில் வைத்துவிட்டு, இருபுறமும் காடையர் இருவர் உட்காருவார்கள். இந்த மாதிரியான பயங்கரத் தண்டனையிலும் நாங்கள் கெஞ்சாமல் இருந்தோம். இதில் அதிகப்படியாக இருந்தவன் நான்போலும். ஆகையால் என்னை தலைகீழாகத் தொங்கப்போட்டார்கள். கைகளிரண்டும் பின்புறமாய் வழித்துக் கட்டுப்பட்டு அந்தரத்தில் தொங்கினேன். இரண்டு பெருவிரல்களையும் சங்கிலியில் கட்டி தலை கீழாகத் தொங்கப் போட்டு, அங்குமிங்கு மாக ஆடிய தலையைத் தூக்கி, முடியைப் பிடித்து இழுத்தார்கள். தமிழ்ப் போராளிகளின் தாக்குதல்களில் சிங்கள ராணுவத்தின் மரண எண்ணிக்கை, அதிகரிக்கும் நாட்களில், எங்களைப் பெருவிரலில் கட்டி, கம்புகளோடு சிப்பாய்களும் கால்மேல் ஏறுவார்கள்."

"இப்படியெல்லாம் சிறைப்பட்டு, வதைபட்டு, உதைபட்டு வருந்திய எங்களை அடிப்பதைக் குறைத்தார்கள். நாங்கள் இதற்கு பழக்கதோசமே காரணம் என்று நினைத்தபோது, இந்தியாவுடன் ஏற்பட்ட உடன்பாட்டால் நாங்கள் சித்ரவதை செய்யப்படவில்லை என்பதை உணர்ந்தேன். கிரிமினல் கைதி நிலையில் இருந்து, அரசியல் கைதியாக பதவியுயர்வு கிடைத்தது. பிறகு ஓராண்டுக்கு முன்பு, விடுவிக்கப்பட்ட போராளிகளில் நானும் ஒருவன். பூசா முகாமிலிருந்து இந்தியக் கப்பல் மூலம் காங்கேசன் துறைக்கு வந்தோம். அங்கிருந்து இந்திய விமானங்கள் விடுதலைக் கைதிகளை மட்டக்களப்பு, திரிகோணமலை முதலிய இடங்களுக்கு கொண்டு சென்று தத்தம் வீடுகளில் சேர்த்தன. நானும் ஒருசில போராளிகளும் ஹெலிகாப்டரில் சாவகச்சேரிக்கு வந்தோம்."

"சாவகச்சேரியைப் பார்த்து பதைத்துப் போனேன். என் வீட்டைப்பார்த்து சிதைந்து போனேன். சாவகச்சேரி மருத்துவமனை, குண்டடி பட்ட அடையாளத்துடன் தோன்றியது. இதைவிடக் கொடுமை, இலவசமாக அரிசி வாங்க நின்ற தமிழர்கள்மீது, போராளிகள் குண்டுவீசிக் கொன்றனர். இதில் என் மாமா மகன் மரித்துப் போனான். வீட்டுக்குப் போனேன். நான் பூசா முகாமிற்குப் போன மறுமாதமே அம்மா மரணமுகாமிற்குப் போய்விட்டாள். அம்மா என்று அழப்போனேன். அதற்குள், எல்.டி.டி. யினருக்கும் இந்தியப் படைக்கும் இடையே நடந்த துப்பாக்கிப் போரில் என் தந்தை இடைச் செறுகலாகி, யாழ் மருத்துவமனையில், வாழ்வின் விளிம்பில் ஊசலாடிக் கொண்டிருப்பதாகச் சொன்னார்கள். அப்பா என்று கதறப் போனேன். அதற்குள் அங்கே கிடக்கிறானே அந்தப் பொடியன், "அண்ணா" என்று சொன்னபடியே மொட்டைக் கையோடு வந்து நின்றான். நான் யாருக்காக அழுவது? எல்லோருக்குமாய் அழுதேன்."

"வீட்டுக்குள் நுழையாமலே, தம்பியோடு யாழ் நகருக்குள் பாய்ந்தேன். என்னைச் சந்தேகமாகப் பார்த்த இந்திய ராணுவத்திடம் என் அடையாளக் கார்டைக் காட்டி, மருத்துவமனைக்குள் போனேன். எப்பவோ மனதால் செத்த, என் தந்தை உடம்பாலும் சாகும் நிலையில் இருந்தார். துண்டிக்கப்பட்ட காலோடு துடித்தார். தண்டித்த விதியோடு போராடி சரிந்து சொரணையற்றுக் கிடந்தார். என் தந்தை எனக்கு எவ்வளவு பெரிய உபகாரம் செய்துவிட்டார் தெரியுமா தமிழ்ச்செல்வி? அவருக்கு சோறெடுத்துப் போக வேண்டாம். வயிறே இல்லாமல் போனது. எப்படி இருக்குது அப்பா என்று கேட்க வேண்டியதில்லை. காதிழந்து போனார். என்னைப் பார்த்து வேதனைப்பட வேண்டியதில்லை. உணர்விழந்து போனார்."

"நான், தம்பியோடு வீட்டுக்குப் போனேன். இரண்டு நாட்களில் யாழ்நகர ராணுவத் தளபதியிடம் இருந்து அழைப்பு வந்தது. என் மறுவாழ்விற்கு இருபத்தையாயிரம் ரூபாய் வழங்கப்படும் என்று தெரிவித்தது. என்னைப் போல் விடுதலையான கைதிகளை மறுவாழ்வில் ஈடுபடுத்த நடைபெறும் கூட்டத்தில் நான் கலந்து கொள்ளவேண்டும் என்று கேட்டுக் கொள்ளப்பட்டது.

நான், சட்டையை மாற்றாமலே புறப்பட்டேன். சாவகச்சேரியின் பிரதான சாலையை தாண்டி, காட்டுப் பகுதி போன்ற பகுதியில், நடந்தபோது, போராளிகள் என்னைச் சூழ்ந்து கொண்டார்கள். "ஏய், ஐந்தாம்படை" என்று அதட்டினார்கள்."



அந்த ரயில் குலுங்கிக் குலுங்கி ஓடி தமிழ்ச்செல்வியையும், கமலாகரனையும் குலுக்கிக் குலுக்கி சேர்த்து வைத்தது.

தமிழ்ச்செல்வி, ரயிலாட்டத்தில் அவன் தோள்மேல் விழுந்தாள். உடனே, உடனடியாக தலையைத்தூக்கி, பெட்டியின் எதிர்திசையில் சாத்தி, அவனையே பார்த்தாள். அந்தகார இருளில் வெளிச்சம் பீறிட்டது. காட்டு மரங்களைப் பற்றிய தீயில், சட்டென மலைகளும், மரங்களும் மரித்தெழுந்தன. அந்த ஒளிச் சிதறலில் கமலாகரன், தமிழ்ச்செல்வியின் கண் கடல்கள் நீர் நீராய் அலை அடித்து, விழிக்கரையை உடைத்து, கன்னப் பூமியில் அத்துமீறி, பாய்ந்து ஓடுவதைக் கண்டான். பேச்சை நிறுத்திவிட்டு, அவளையே பார்த்தான். அவளோ பேசினால் அழுகை வரும் என்பதுபோல், மேற்கொண்டு பேசும்படி கீழே தொங்கிய வலது கையை தூக்கி, உள்ளங்கை தெரிய மேலே மேலே கொண்டு போனாள். கமலாகரன் தொடர்ந்தான்.

"நான் ஒன்றும் புரியாமல் விழித்தேன். என்னைச் சூழ்ந்தவர்கள் எங்கிருந்தோ குதித்த போராளிகள் அல்ல. என் ஊனோடு உயிராக இருந்தவர்கள். என்னுடன் ஒன்றுபட்டு நின்றவர்கள். ஒரே இலையில் சாப்பிட்டவர்கள். என் வீட்டில் உறங்கியவர்கள். இப்போதோ என்னை அந்நியப்பட்டுப் பார்த்தார்கள். நான் ஏதும் புரியாமல் விழித்தபோது, அதை அவர்கள் நடிப்பென்று நம்பி, வெப்பமாகப் பேசினார்கள்.

"நீ இங்கே வந்து மூன்று நாள் ஆகுது. அப்படியும் எங்கள் இருப்பிடம் தெரிந்தும் நீ வரவில்லை..."

"நீங்கதானே என்னை வந்து பார்க்கணும்."

"இதுக்கு மேலே பேசினால் அப்புறம் பேசுவதற்கு வாய் இருக்காது. நாம் நடத்துவது ஒரு ஜீவ மரண போராட்டம். இதில் எந்தவித சமாதானத்திற்கும் இடமில்லை. இப்போது உறவின் உரிமை முக்கியமில்லை. கடமைதான் முக்கியம். லட்சியம்தான் சிந்தனை. நீ, எங்களை வந்து பார்க்காததற்கு, உன்னைப் பார்க்க முடியாத இடத்திற்கு அனுப்பி இருப்போம். ஆனாலும், மனம் கேட்கவில்லை. வெளிநாட்டு இந்தியப் படைக்கு நீ விலை போக மாட்டாய் என்று நம்பாமல் இருக்க முடியவில்லை. சரி... வெட்டிப் பேச்சுக்கு இப்போது நேரமில்லை. நீ நாங்கள் சொல்வதில் இரண்டில் ஒன்றைச் செய்யவேண்டும். ஒன்று இந்தியப் படையினரின் நண்பன்போல் நடித்து, எங்களுக்கு தகவல் தரவேண்டும். அல்லது காட்டுக்குள் வாழும் போராளிகளிடம் போக வேண்டும். இது வேண்டுகோள் அல்ல.... ஆணை."

"எனக்கு கொஞ்சம் யோசிக்க அவகாசம் கொடுங்க."

"யோசித்து யோசித்தே எண்ணமில்லாமல் போய்விட்டோம். நீ இரண்டில் ஒன்றைச் செய்யவில்லையானால், நாங்கள் ஒன்றே ஒன்றைச் செய்ய வேண்டியது வரும். அதாவது உன்னை கம்பத்தில் கட்டி சுட வேண்டியது இருக்கும்."

"நானும் ஒரு போராளி என்ற முறையில் சூடாகப் பேசப் போனேன். அதற்குள் அந்தக் காட்டுப் பகுதியில் ஆங்காங்கே பதுங்கியபடியே துப்பாக்கி பிடித்த இந்திய சிப்பாய்களில் ஒருவன் சந்தேகமாய் பார்த்தபடியே அந்தப் பக்கம் வந்தான். என்னைச் சுற்றி நின்றவர்கள், எனது நண்பர்கள்போல் தோளிலே கை போட்டார்கள். சிரித்துப் பேசுவதுபோல் தலையாட்டினார்கள் நான் அந்த சுதேசி நடிப்பிலும், அது உண்மையாக இருக்கும் என்பதுபோல் மெய்மறந்தேன். திரைப்படங்கள் கற்பனை என்று தெரிந்தாலும் நாம் சிரித்துவிடுகிறோமே, அழுதுவிடுகிறோமே அப்படி. அந்த சிப்பாய் இன்னொரு சிப்பாயை வலுக்கட்டாயமாக, தன்னுடன் வரவழைத்தபடி, எங்களை நோக்கி வந்தபோது, என் பழைய நண்பர்கள் என்னை புதிய விரோதிபோல் பார்த்தபடியே, "அந்தக் காடையர்களிடம் எங்களைப் பற்றி ஏதாவது சொன்னால், உன் தம்பியின் இன்னொரு கையும் போயிடும்", என்று சொல்லி விட்டு, தற்செயலாக நடப்பதுபோல் நடந்தார்கள்."

"இதற்குள் என்னிடம் வந்த இந்திய சிப்பாய்கள் இந்தியில் ஏதோ கத்தினார்கள். என் சட்டைப் பையை குடைந்தார்கள். அதற்குள் இருந்த அடையாள கார்டை பார்த்தார்கள். பழைய கைதியான என் கார்டைப் பார்த்துவிட்டு, அதை மீண்டும் என்னிடமே கொடுத்துவிட்டு முறைத்தார்கள். பிறகு... 'ஜாவ்... ஜாவ்...' என்றார்கள். எனக்கு, அவர்களின் இந்தி புரியவில்லையானாலும், அவர்கள் சொல்லப்போவது நினைவுக்கு வந்தது. நான் பூசா கைதி என்ற முறையில், இந்தியப் படை ஏற்பாடு செய்யும் மறுவாழ்வுக் கூட்டத்தில் கலந்து கொள்கிறவன்... அங்கே குண்டைத் தூக்கிப் போடுவேனோ, குழிபறிப்பேனோ என்று அந்த சிப்பாய்கள் இருவரும் என்னை தங்களோடு நடக்கச் சொன்னார்கள். இதை எனது போராளிப் பையன்கள் அனல் பறக்கப் பார்த்தார்கள். அவர்களைப் பற்றிப் பேசிக்கொண்டு போகிறேன் என்று அனுமானிக்கும் பார்வை."

"இந்த அநியாய வேதனை யாருக்காவது ஏற்பட்டிருக்குமா தமிழ்ச்செல்வி? போராளிகளுக்கு நான் ஐந்தாம் படை. இந்திய ராணுவத்திற்கோ எட்டப்பன். அவர்களே என்னைச் சந்தேகக் குழியில் தள்ளிவிட்டு... சந்தேகமாகப் பார்த்தார்கள். இரண்டு சிப்பாய்களும் அங்கிருந்த ராணுவ முகாமிற்குக் கூட்டிப் போனார்கள். ராணுவ அதிகாரி என்னிடம் ஆங்கிலத்தில் மிரட்டல் தொனியில் வேண்டுகோளாய் சொன்னார். ராணுவத்தினருடன் பழகும் சந்தர்ப்பம் கிடைத்த நான், நம்பிக்கைக்கு உரியவனாக இல்லையானால் நடப்பது வேறு என்றார். பொடியன்களைப் பற்றிய புள்ளி விவரம் தேவையில்லை என்றாலும், அவர்களோடு உறவாடினால் அதோ கதிதான் என்றார்."

"நான் அசந்து போனேன். அதிர்ந்து போகவில்லை. பூசா முகாமில் படாத வேதனையா? சித்ரவதையா? நானும் ஒரு போராளி. எந்த முடிவு எடுத்தாலும், அச்சத்தின் அடிப்படையில் எடுக்கக் கூடாது. எந்த முடிவெடுத்தாலும், சுயமாகவே முடிவெடுக்க வேண்டும்."

"போராளிகள் என்னை குற்றவாளிபோல் கருதுவதை பெரிதாக எடுத்துக் கொண்டு, அந்த அடிப்படையில் முடிவெடுக்கக்கூடாது. ஒவ்வொரு போராளியைப் பற்றியும் விவரம் அறிந்தவன், நாட்டு யானையை வைத்து, காட்டு யானையைப் பிடிப்பதுபோல், இந்திய ராணுவம் என்னை வைத்து, தங்களைப் பிடித்து விடுவார்களோ என்று அவர்கள் நினைப்பது நியாயமே. ஒரு போரில் சொந்த நண்பனையும் கொல்வது தவிர்க்க முடியாதது என்று தங்களுக்குத் தாங்களே ஒரு சமாதானத்தைச் சொல்லிக் கொண்டு, அந்த சமாதானத்தின்மீது ஏறி நின்று போர் தொடுக்கிறார்கள்.

அகத்தையும் புறமாக்கி விட்டார்கள். இவர்கள் என்மீது கொண்டுள்ள சந்தேகம் அநியாயமானது என்றாலும், ஒருவகையில் தவிர்க்க முடியாதது. இதேபோல் போராளிகளோடு தொடர்பு வைத்திருப்பதுபோல் தோன்றும் என்னை கண்காணிப்பதும் இந்திய ராணுவத்தால் தவிர்க்க முடியாதது..."

"இந்தப் பின்னணியில் நான் பயமின்றி யோசித்தேன். 'காட்டுக்குள் போகலாமா...? போராளிகளின் போக்கை எதிர்க்கலாமா...' எம்மக்களில் பலர்... துரோகிகள் என்று போராளிகளால் கொல்லப்படுகிறார்கள்... போராளி அமைப்புக் களுக்கிடையே நிலவும் பாரதப் போர், எம்மக்களின் ரத்தத்தைக் குடிக்கிறது. ஒரு பொடியன் கீழே குனியும்போது ராணுவத்தால் சுடப்படுகிறான். அல்லது ராணுவத்தில் செல்லும் இந்தியப் படைகள் கண்ணிவெடியில் சிதறு தேங்காயாய் சிதறிச் சாகிறார்கள். இதனால், இன்னொரு பொடியன் கீழே ஒரு பனங்காயை எடுத்தால்கூட அது குண்டாக இருக்கலாம் என்று சுடப்படுகிறான். அப்படி அவன் சுடப்பட வில்லையானால், ஒருவேளை, அவனால் பத்துப் பதினைந்து ராணுவ வீரர்கள் உயிரிழப்பார்கள். ஆக, இப்போது இலங்கைத் தமிழர் பகுதியை இந்திய ராணுவம் ஆளவில்லை; எல்.டி.டி.இ. ஆளவில்லை; ஈ.பி.ஆர்.எல்.எப். ஆளவில்லை; எமனே ஆள்கிறான். எம்மக்களுக்கு அழுதழுது கண்ணீர் தீர்ந்தது. புலம்பிப் புலம்பி வாய் செத்தது. வன்முறைகளைப் பார்த்துப் பார்த்து கண் இருளானது."

"நான், யோசித்துப் பார்த்தேன். முதல் தடவையாக, கிழக்குப் பகுதியில், தமிழ் உச்சரிப்பில் மாறுபட்ட தமிழர்களையும், தமிழர்களாக தங்களைக் கருதிக் கொள்ளாத தமிழ் முஸ்லீம் களையும், சிங்களவர் களையும் சிறுபான்மையாக உள்ளடக்கிய தமிழ் மாநிலம் பிறந்து விட்டது. தமிழர்களே காவல்துறையினராக, பயிற்சி நடைபெறுகிறது. தமிழ் ஆட்சிமொழியாக அங்கீகரிக்கப் பட்டாகிவிட்டது. இதற்கு மேலும், போரைத் தொடரும் போராளிகளின் போக்கு எனக்குப் பிடிக்கவில்லை. மாறுபட்டவர் களை துரோகிகளாகக் கருதி, சொந்தச் சோதரர்களைக் கொல்வதை அராஜகமாக நினைத்தேன். அதேசமயம் நீங்கள், அங்கே சொன்னது போல், போராளிகளை எதிர்த்து, துரோகிப் பட்டம் வாங்கிக் கொள்ளவும் மனம் ஏற்கவில்லை."

"இப்படிப்பட்ட சிந்தனைகளோடு யாழ் நகர் போனேன். வழியில் மருத்துவ மனைக்குப் போனேன். என் தந்தையின் உடல் முழுவதும் துணி மூடப்பட்டிருந்தது. சாவகச்சேரியில் துணிக்கடை நடத்தி, தரமான பொருளுக்கும், இதமான போக்கிற்கும் நற்பெயர் வாங்கிய என் தந்தையின் சடலத்தை பார்த்தபடியே நானே ஒரு

சடலம்போல நின்றேன். அதே சமயம், என் உள்ளம் மரத்துப் போனதாலோ என்னவோ அழுகை வரவில்லை. ஏதோ ஒரு விதமான பேய்ச்சிரிப்பு வந்தது. சிங்கள ஊழிக்கூத்தால் சுடலைப் பூமியான என் மண்ணில் இயற்கைக்கு விரோதமாக ஏற்படும் எத்தனையோ மரணங்களில் இதுவும் ஒன்று என்பதுபோன்ற உணர்வு. தந்தை வழியாக, தமிழ்க்குலத்தின் மரணத்திற்கு மருகினேன். தமிழ் இனத்தின் வழியாக, தந்தையின் சாவிற்கு தவித்தேன்."

"இதற்கு மேலும், யாழில் இருக்கப் பிடிக்கவில்லை. நான் படித்த கல்லூரியே இப்போது எமபுரிபோல் தோன்றியது. பிறந்த மண்ணே இறந்தது போன்ற உணர்வு. இருதரப்பிற்கும் சந்தேகமானேன். ஆகையால், என் தம்பியைக் கூட்டிக் கொண்டு இந்தியா வந்தேன். மொட்டைக் கையான தம்பிக்கு செயற்கைக் கை பொருத்த வேண்டும் என்று இந்தியப் படையினரிடம் கேட்டேன். அவர்களே, இங்கே என்னை ஆயிரம் கேள்விகளுக்குப் பிறகு அனுப்பி வைத்தார்கள். ஆனால், இங்கே வந்தாலோ, அங்கேயே இருந்திருக்கலாம் என்பதுபோல் தோன்றுகிறது. இலங்கைத் தமிழர்களுக்காக கோபாவேசமாய் நின்ற தாய்த் தமிழர்களும், புலிகளின் குகையாய் விளங்கிய தமிழகமும், இப்போது, இலங்கைத் தமிழன் என்றதும் ஏளனத்துடனும், எரிச்சலோடும் பார்க்கிறார்கள்."

"எந்த இடத்திலும், நாட்டிலும் இருக்கக் கூடியவர்கள்போல், எங்களில் ஒருசிலர் நடத்திய திருட்டையும், அத்துமீறல்களையும் பத்திரிகைகள் மிகைப்படுத்தியதாலும், தமிழகத்திலும், இலங்கைத் தமிழர்களின் துப்பாக்கிக் கலாச்சாரம் வந்துவிடும் என்ற பயத்தாலும், தாய்த் தமிழர்கள் எங்களை அந்நியத் தன்மையோடு பார்க்கிறார்கள். தம்பியுடன் தங்குவதற்காக வாடகைக்கு வீடு கேட்டு, சென்னை நகரமெங்கும் சல்லடை போட்டேன். வாடகைக்கு விடப்படும் என்று பலகை தொங்கவிட்டவர்கள்கூட, இலங்கைத் தமிழன் என்று தெரிந்ததும், வீட்டை விட்டு விட்டதாக என்னைக் கைவிட்டு விட்டார்கள்."

"என்றாலும், தாய் தாய் தான் என்பதுபோல், நம் மூதாதையர் பிறந்த இந்திய மண்ணிலும் இன்னும் நம்மவர்கள் என்று சொல்லும் படியானவர்கள் இருக்கத் தான் செய்கிறார்கள். எனக்கு ஒருத்தர் இடம் கொடுத்தார். கோபம் என்பதையே உணர்ந்தறியாத நல்ல மனிதர். பெங்களூரில் வசிப்பவர். தமிழர் பேரவை என்று ஒரு சமூக அமைப்பை வைத்திருக்கும் சண்முகசுந்தரம் என்பவர். அவரிடம் கோபம் என்பதை பார்க்கவே முடியாது. ஒரே ஒரு தடவை நான் வாடகை கொடுக்கப்போன போதுதான் கோபப் பட்டார். அடிக்க வருபவர்போல் பணத்தைத் திருப்பிக் கொடுத்தார். சரி... என் கதை

முடிந்தது - எல்லா வகையிலும்... உங்கள் கதையை நீங்கள் விருப்பப்பட்டால் சொல்லலாம்."

தமிழ்ச்செல்வி, அவனைக் குழந்தையைப் பார்ப்பதுபோல் பார்த்தாள். அத்தனை இடிகளையும் வாங்கிக் கொண்டு, வெளியே கம்பீரமாகவும், அதே சமயம் உள்ளுக்குள் அழுது கொண்டிருக்கும் அவனிடத்தில், அவள் மனம் போய் விழுந்தது. எந்தப் பொருத்தம் இருக்கிறதோ இல்லையோ துக்கப் பொருத்தம்... அவனிடம் ஒரு ஈடுபாட்டை ஏற்படுத்தியது. அவனருகே மேலும் நெருங்கியபடியே சொன்னாள்.

"உங்கள் கதை நாவல் என்றால் என் கதை சிறுகதை... உங்கள் கதையை... உள்வாங்கி துக்கப்படும் என்னால் இப்போது, என் கதையைச் சொல்ல முடியாது... நாளை சொல்லுகிறேன்."

"ஒங்ககிட்டே நடந்ததைச் சொன்ன பிறகு, மனம் லேசானது மாதிரி தோணுது."

"இந்த மனம் ரொம்ப பொல்லாதது கமலாகரன். இப்போ லேசானது மாதிரி தெரியும். அப்புறம் வட்டியும் முதலுமாய் கனமாய் வரும். இதை நானே அனுபவிக்கிறேன். அதனால் உங்க கஷ்டங்களையும் நஷ்டங்களையும் நம்பிக்கையானவர்களோடு பகிர்ந்து கொள்ளவும்."

"நம்பிக்கையானாவர்கள்னு யாருமே இல்லையே...?"

"அப்போ என்னை நம்பிக்கையானவள் என்று நீங்க நினைக்கலே...?"

"நினைக்காட்டால் பேசுவேனோ...? உங்கள் நட்பு ரயில் நட்புதானே..."

தமிழ்ச்செல்விக்கு என்ன பதில் சொல்வது என்று தெரியவில்லை. அவனுக்கு எப்படியாவது பதிலளிக்க வேண்டும் என்று நினைத்தாள். எந்த வார்த்தையும் கிடைக்கவில்லை. இறுதியாக, "காலையில் பேசிக் கொள்ளலாம். எந்தப் பிரச்சினையையும், நண்பர்கள் தீர்த்து வைப்பதை விட , நாள்-அதாவது காலம், நன்றாக தீர்த்து வைக்கும் என்ற நம்பிக்கையோடு தூங்குங்க" என்றாள்.

தமிழ்ச்செல்வி புறப்பட்டாள். கமலாகரனும், அவளோடு நடக்கப்போனான். உடனே அவள், அவனை ஓரம் சாய்த்துப் பார்த்தபோது, அவன் புரிந்துகொண்டு, அங்கே நின்றான் தமிழ்ச்செல்வி, பெட்டிக்குள் வந்தாள். எவரும் விழித்திருக்கவில்லை.

தாலாட்டுச் சத்தம் தாறுமாறு சத்தமாக, ஆடிய தொட்டில், அப்படியே நின்றால், குழந்தைகள் எப்படி கண்விழித்து எழுமோ,

அப்படி இருவரும் எழுந்தார்கள். ஒருவரை ஒருவர் சுகமாகப் பார்த்துக் கொண்டார்கள். நவாப்ஜான், "ஒனக்கு காபி வாங்கிட்டு வரட்டுமா...? டிபன் வாங்கிட்டு வரட்டுமா செல்வி..." என்றான். "காபி" என்று சொல்லப்போன தமிழ்ச்செல்வி, "வெளியில் போய் காலார நடந்து ஒரு காபி குடித்துட்டு வாறேன்" என்று தயக்கத்தோடு சொன்னபடியே, கூச்சத்தோடு எழுந்து, வெட்கத்தோடு நடந்தாள். வெளியே வந்தவள், திரும்பிப் பார்த்தாள். அவள் எதிர்பார்த்தது போல், கமலாகரன் வந்தான்.

அவளை நெருங்கி வந்து நின்று, அவளிடப் [illegible] ]தலை கேட்டான், அவன். பதறிப் போனவள் போல், 'அய்யய்யோ... அதெல்லாம் முடியாது..." என்றாள். உடனே, அவன் அவளைவிட்டு ' வேறு பக்கமாக நடந்தான்.

## 31

அந்த ரயில் புறப்படப்போனதோ இல்லையோ, அது புறப்படும் நேரம் நெருங்கி விட்டதாக பலர் நெருக்கியடித்தார்கள்.

சில்லறை வியாபாரிகள், பயணிகளிடம் அவசர அவசரமாக காசுகளைப் பறித்தார்கள். பயணிகளிடம் தாங்கள் கொடுத்த ரூபாய் நோட்டுக்களை அவசரமாகவும், அனாவசியமாகவும் வாங்கிக் கொண்ட நடமாடும் கடைக்காரர்கள் மீதிப் பணத்தைக் கொடுக்கும்போது, ஏதோ தன் அப்பன் வீட்டுச் சொத்தில் இருந்து எடுத்துக் கொடுப்பதுபோல் தயங்கினார்கள். பயணிகளோ, ரயிலை ஒரு கண்ணாலும், தயக்கர்களை இன்னொரு கண்ணாலும் மாறி மாறிப் பார்த்தார்கள். சிலர், தாய்மொழியில், தங்களை அறியாமலே வசை பாடினார்கள். இந்தச் சமயத்தல், தண்ணீர் வண்டியைத் தள்ளிக்கொண்டு வந்த பையன், வழிகேட்டு மணியடித்தான். இதனை ரயில் மணி என்று நினைத்து, பிளாட்பாரக்காரர்கள் பயணிகளானார்கள். ரயிலுக்குள் குசலம் விசாரித்தவர்கள், பிளாட்பார வாசிகளானார்கள். அவர்கள் பிணைப்புக்கள் அறுபட்டு, பிரிவுகளாக சிதறப் போனபோது_

தமிழ்ச்செல்வி, தன்னை விட்டு நகர்ந்து, தன் பாட்டுக்கு நடந்து போன கமலாகரனையே வெறித்துப் பார்த்தாள். அவன் முதுகு, எப்படி அவள் கண்களை வெளியே பார்க்க முடியாமல் மறைத்து,

தன்னை மட்டும் பார்க்க வைத்ததோ, அப்படி அவளும், அந்தக் கணத்தில் அவனை மட்டுமே நினைத்தாள். அவன் ஒருத்தி இருப்பதாக நினைவின்றியே, அவள், அவனாகி விட்டாள்.

'உலகில், அன்பைத் தவிர பெரிதாக என்ன இருக்கிறது? அழியக்கூடிய உடம்பில் அழியாதது ஆன்மா என்கிறார்கள். அந்த ஆன்மா என்பது அன்பதைத் தவிர வேறு எதுவாக இருக்கமுடியும்? அவரருகே இருக்கும்போது எனக்கும், என்னால் அவருக்கும் ஏதோ ஒரு நிர்மலமான மகிழ்ச்சியென்றோ, துயரமென்றோ, சொல்லில் விளக்க முடியாத உணர்விற்கும் அப்பாற்பட்ட அல்லது இந்த இரண்டும் ஒன்றறக் கலந்து ஏற்பட்ட ரசாயனச் சேர்க்கையில் உருவான ஒரு உணர்விற்கு - ஒரு ஸ்தூல உணர்விற்கு ஈடாக எது இருக்க முடியும்?'

'அப்படி என்ன பெரிதாகக் கேட்டுவிட்டார்... கையிழந்த தம்பிக்கு, செய்ப்பூர் செயற்கைக் கை பொருத்த வேண்டுமாம். அதைப் பொருத்துவதற்கு பயிற்சி அது இது என்று இருபது நாள் ஆகுமாம். இந்த இருபது நாளும், என்னையும் தன்னோடு வரச் சொன்னார். தாதியாக அல்ல; காதலியாக அல்ல; தோழியாக... துணையாக... வாழ்க்கையில் நம்பிக்கை இழந்தவளுக்கு, தன்னம்பிக்கையாக அவர் கூட்டதில் தப்பில்லை. அப்படி அவர் கூப்பிட்டதே ஒரு பெரிய பாக்கியம். வாழ்க்கையில் எத்தனையோ எதிர்பார்ப்புகள் ஏமாற்றங்களாக, நண்பர்களே பகைவர்களான வாழ்க்கை என்பதே விஷ நினைவாக, விஷப் பயணமாக போனவருக்கு, நான் உறுதுணையாக இருப்பது ஒரு சேவைதான். இதில் தப்பில்லை.'

தமிழ்ச்செல்வி, தாவியோடப் போனாள். அவன் முன்னால் போய் நின்று, "ஒங்களுக்கு நான்... எனக்கு நீங்கள்" என்று கூடச் சொல்ல நினைத்தாள். ஆனாலும், அவள் பாசச் சக்கரம் இப்போது கமலாகரனை கீழே அழுத்தி, பலராமன், நவாப்ஜான் தோழர்களையும், ரயில் பயலையும் தூக்கிக் காட்டியது. 'இவர்களை விட்டு- இந்த அன்புப் பிரவாகத்தை விட்டு எப்படிப் பிரிய முடியும்? இந்த ரயில் வாழ்க்கை, நிச வாழ்க்கையைவிட கோடி பெறும். இந்த ரயில் தோழர்கள் என் உயிர்த் தோழர்கள். உயிரை விட்ட உடம்பால் நடமாட முடியுமா? எனக்கோ எண்ணமே உடம்பே; அதன் உயிரான உணர்வுகள் இந்த பலராமன் அண்ணன்; இந்த நவாப்ஜான் தோழன்; இந்த அண்ணாமலை அண்ணாச்சி; இந்த ரயில்பயல் மகன். இந்த பாசத்தோப்பிலே நான் ஒரு மரம். இதைவிட்டுப் போனால் மரத்துப் போனவள் ஒருத்தி மறித்துப் போனாலும் பரவாயில்லை; மரத்துப் போகலாமா...?'

"கூடாது... கூடாது..." என்று சொன்னபடியே, தமிழ்ச்செல்வி, கமலாகரன்மேல் விட்ட கண்களை வலுக்கட்டாயமாக விட்டு விட்டு, ரயில் பெட்டியை நோக்கி நடந்தாள். கமலாகரனைப் பார்த்து, தன் நிலையை விளக்கிச் சொல்லலாமே என்று திரும்பி நடக்கப்போனாள். கால்களுக்கு மனம் நங்கூரம் பாய்ச்சியது. தோற்றுவிடுவோம் என்ற பயமோ, ரயில் தோழர்களை இழந்து விடுவோம் என்ற எண்ணமோ....

தமிழ்ச்செல்வி, தன் கையில் நண்டு ஊறுவது மாதிரியாக உணர்ந்து நகர்ந்தாள். ரயில் பயல், அவள் இடது கையைப் பற்றிக் கொண்டான். அவளை, அந்த சிறு இடைவேளைவரை சந்திக்காமல் இருப்பதால் தாக்குண்டவன்போல், அவள் கரத்தை இறுகப் பற்றிய படியே, "அம்.... அம்...." என்றான். அவளோ, அந்தப் பயலையும், தொலைவில் தெரிந்த கமலாகரனையும் மாறி மாறிப் பார்த்தாள். அவளின் மனோதராசில் இருந்த இந்த இருவர் அமர்ந்த தட்டுக்கள் சமப்பட்டன. பின்னர் உயர்ந்தும் தாழ்ந்தும், மாறிமாறி ஆடின.

தமிழ்ச்செல்வி, ரயில் பயலை கிட்டத்தட்ட, தூக்கியபடியே ரயில் பெட்டிக்குள் வந்தாள். இருவரும், நவாப்ஜானுக்கும், பலராமனுக்கும் இடையே உட்கார்ந்தார்கள். அவள், அந்தப் பயலின் தலையைக் கோதிவிட்டபடியே, ரயில் ஜன்னலுக்கு வெளியே எட்டிப் பார்த்தாள். அந்தப் பயலோ, அந்த ஸ்பரிசத்தில் அங்கே இல்லாததுபோல் எங்கேயோ இருந்தான். அந்த ரயில் பெட்டிக்குள் நடந்த நடமாட்டங்களைத் தாண்டி, அந்த ரயிலுக்கும், அப்பாற்பட்டு, கண்ணுக்குத் தெரியாத ஓர் களத்தில், சொல்ல முடியாத ஒரு சுகத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்தான்.

இதற்குள் ரயில் வேகமாக, முன்னெச்சரிக்கை கொடுக்காமலே ஓட்டம் பிடித்தது. எங்கேயோ பராக்குப் பார்த்துக் கொண்டு நடந்த கமலாகரனை, உள்ளே இருந்தபடியே தமிழ்ச்செல்வி, "ஒங்களைத்தான்... சீக்கிரம்... சீக்கிரம்..." என்று உசுப்பினாள். அவள் குரலைக் கேட்ட பிறகுதான் எத்தனையோ குரல்களுக்கிடையே, அந்த அபயக்குரல் காட்டிய அபாயத்தை உணர்ந்து, கமலாகரன் ரயில் பெட்டியின் இரும்புப் பிடிப்பை பிடித்து, துள்ளிக்குதித்து உள்ளே வந்தான். வந்த வேகத்தில் ரயிலோட்டத்தில் கீழே விழப் போனான். எல்லோரும் பதறி எழுந்தபோது, கிட்டத்தட்ட கீழே விழப் போனவனை, அவன் தம்பி - அந்த பன்னிரண்டு வயதுச் சிறுவன் தன் இரு கரங்களால் தாங்கிக் கொண்டான். முழுமையான ஒரு கையையும், முழங்கைக்கு மேல் இல்லாமல் போன மொக்கைக் கையையும் இணையாக வைத்து, அண்ணனை விழாதபடி பார்த்துக் கொண்டான். நவாப்ஜான், "பாரு சாரே... இதுக்குத்தான் தான்

ஆடாட்டியும் சதையாடும்" என்கிறது. நாங்களும் ஒன்னை பிடிக்க வந்தோம். ஆனால், தம்பிதான் ஒன்னைத் தாங்கிக்கொண்டான்... பார்த்து வரப்படாது... "நம்மோட நடமாட்டம் எப்போதும் இன்னொன்ணோடேயே இணைஞ்சிருக்கும் என்பதை மறந்துடப் படாது ஸாரே" என்றான்.

கமலாகரன், அப்போது தமிழ்ச்செல்வியை ஆழமாகப் பார்த்தான். அவளோ, ரயில் பயலின் தலையை யதேச்சையாகத் தடவியபடியே கையிழந்த அந்தச் சிறுவனைப் பார்த்தாள். இலங்கைத் தமிழர் பாரதப் போரில் அரவானாக்கப்பட்ட அந்த முனையிழந்த முருங்கப் பிஞ்சை உற்றுப் பார்த்தாள். உறவே உதாசினமாகும் இந்தக் காலத்தில், அந்தத் தம்பியை ஏதோ ஒரு அகதிகள் முகாமில் சேர்க்காமல், அவனுக்காகவே வாழ்வது போல், தம்பி சிரிக்கும்போது சிரித்தும், சுழிக்கும்போது சுழித்தும், அவன் முகத்தை கைக்குட்டையால் துடைத்து விட்டும், தலைமுடியை ஒதுக்கி விட்டும் சுகம் கண்ட அந்த அண்ணனைப் பார்த்து வியந்தாள். அந்தச் சமயத்தில், தனது அம்மா சாவதற்கே காரணமாக இருந்த, அவள் பெரிய அண்ணனையும் நினைத்துக் கொண்டாள்.

ரயில் போவது தெரியாமல் போய்க் கொண்டிருந்தது. வாய்க்கு வேலையளிக்க வேர்க்கடலைகளோ, மசால் வடைகளோ வரவில்லை. தமிழ்ச்செல்வியை, பெருமை பிடிபடாமல் பார்த்துக் கொண்டிருந்த நவாப்ஜான், பேச்சுக் கச்சேரியைத் துவக்க வேண்டும் என்பதற்காகவே பேசுகிறவன் போல் பேசினான்.

"என்ன சிஸ்டர்.... செய்தி படிக்கும்போது ஒனக்கு பயமா இருக்குமா..? ஒன்னத்தாம்மா தமிழ்ச்செல்வி...."

"எதுக்கு கூப்பிட்டே...?"

"அதுகூட கேட்கலியா... ரேடியோல... நியூஸ் படிக்கிறியே.... அப்படிப் படிக்கும்போது ஒனக்கு பயமாய் இருக்காதா.... ஏதோ ஒன்று கிடக்க ஒன்று உளறிடுவோமேன்னு பயமாய் இருக்காதா...."

"சும்மா கிடடா... சுத்த முட்டாள்... சிஸ்டர் நியூஸ் படிக்கும்போது, 'ஏதோ நம்ம பொழப்புக்கு ஒரு நூறு ரூபாய் கிடைக்குதே'ன்னு மட்டும்தான் நெனச்சிருக்கும். ஏன்னா வாழ்க்கையில் அடிபட்டு அடிபட்டு அவஸ்தை பட்டவங்களுக்கு, தான் செய்யுற எந்தக் காரியத்திலும் ஒரு கடமை தெரியாது. கடனே என்கிற உணர்வுதான் தோணும்... இல்லியாம்மா...?"

தமிழ்ச்செல்வி, ஒப்புக்கு தலையாட்டினாள். அதுவும் அவர்களைப் பாராமலே தலையாட்டினாள். தலை என்ற ஒன்று

தனக்கு இருப்பது தெரியாமலே அதை அங்குமிங்குமாய் ஆட்டினாள். நவாப்ஜானுக்கும், பலராமனுக்கும் என்னவோ போலிருந்தது. இருவரும் போட்டி போட்டபடியே அவளிடம் பேசப் போனார்கள். இவர்களை முந்தியபடி, மெக்கானிக் நாராயணன் கேட்டார்.

"ஏம்மா ஒரு மாதிரி இருக்கே..?"

"ஒண்ணுமில்லியே..."

"சொல்லு சிஸ்டர்... யாரும் ஒன்கிட்டே தப்பாய் நடந்துக் கிட்டாங்களா...? இன்னும் கொஞ்சம் கேட்டால் அழுதுடுவே போலிருக்கே... ஏம்மா... அப்படி இருக்கே..?"

"நல்லாத்தான் இருக்கேன்... நவாப்ஜாண்ணா..."

"நல்லாத்தான் இருக்கணும்... ஆனால் இருக்கலியே... சும்மாச் சொல்லும்மா..."

"நான் சொல்றேன்..."

எல்லோரும் அந்தக் குரலுக்குரிய கமலாகரனையே ஒரு சேரப் பார்த்தார்கள். அவன் நவாப்ஜானையும், பலராமனையும் மாறி மாறிப் பார்த்தபடியே விளக்கினான்.

"நான்தான், பாவம் அவர்கள் மனோநிலையை பாதிக்க வைத்தேன்... இவனுக்கு செய்ப்பூரில் செயற்கைக் கை பொருத்தணும். மொழி தெரியாத பிரதேசம்.... முகமறியாத மக்கள். அதனால் தமிழ்ச்செல்வியை என்னோடு உதவிக்கு வர முடியுமா என்று கேட்டேன். கேட்டது தப்புத்தான். ஆனால், அதில் எந்த உள் நோக்கமும் கிடையாது. எங்கள் நாட்டில் ஒரு ஆணும், பெண்ணும் எந்தவித உறவுக்கேடும் இல்லாமல் உதவுவது பழக்கம். இதனால் அவரைத் தாயாகக் கேட்டேன். தவறான எண்ணத்தில் அல்ல. தப்பாக கேட்டிருந்தால் என்னை மன்னித்து விடுங்கள் தமிழ்ச்செல்வி."

தமிழ்ச்செல்வி, பதறிப்போனாள். ரயில் பயலின் தலையை வருடிய கையைத் தூக்கியபடியே சமாதானம் சொன்னாள்.

"அய்யய்யோ... நான் உங்களைத் தப்பாய் நினைக்கவே இல்லை.. நீங்க சாக்லெட்டையும் சயனைடையும் ஒரே மாதிரி பாவிக்கிற தமிழர்னு எனக்குத் தெரியும். நீங்க குற்றவுணர்வோடு பிரியக்கூடாது என்கிறதுக்காகச் சொல்றேன். நீங்க கேட்டதிலும் தப்பில்லை... என் பதிலும் தப்பில்லை. நீங்க உங்க நிலைய விளக்கீட்டிங்க... நான் என் நிலையை விளக்கல. அவ்வுளவுதான் வித்தியாசம்."

தமிழ்ச்செல்வி பேசிய வேகத்திலேயே மீண்டும் ஜன்னல் வழியாக கண்களை ஊடுருவ விட்டாள். பலராமன், கமலாகரன்மீது எரிந்து விழப்போனான். ஆனால், அவன் முகத்தைப் பார்த்ததும், அந்தச் சிறுவனின் மொக்கைக் கையைப் பார்த்ததும், அவன் கோபம் தாபமாகியது. நவாப்ஜான்தான் சமாதானம் சொன்னான்.

“சிஸ்டரால வரமுடியாது ஸாரே... நீ அப்படிக் கேட்டிருக்கப் படாது... இப்பதான் அது ரேடியோவுல டெம்பரரியாய் வேலைல சேர்ந்திருக்கு... அதைவிட்டுட்டு வரமுடியுமா...?”

தமிழ்ச்செல்வி, அவசர அவசரமாக முகத்தைத் திருப்பினாள். அந்த முகம் முழுமையாய் திரும்பும் முன்பே, வார்த்தைகள் முன்னேறிக் குதித்தன.

“வேலை ஒன்றும் போயிடாது... நவாப்புண்ணா... இனிமேல் மாதக் கடைசியிலதான் படிக்கணும். அதுக்கு இன்னும் இருபது நாள் இருக்குது... செய்ப்பூருக்குப் போயிட்டு வந்துடலாம்.”

தமிழ்ச்செல்வி, இதைச் சொல்லிவிட்டு, ஏன் சொன்னோம் என்பதுபோல தன்னையே நொந்து கொண்டாள். நவாப்ஜானும், பலராமனும், தங்களுக்குள் பார்த்துவிட்டு, நாராயணனைப் பார்த்தார்கள். இந்த மூவரும், பின்னர், கமலாகரனையும், தமிழ்ச்செல்வியையும் மாறி மாறிப் பார்த்தார்கள். தங்களுக்குத் தெரியாமல் அவர்களுக்குள் ஏதோ ஒன்று ஆழமாக நடந்திருப்பதைப் புரிந்து கொண்டார்கள். நவாப்ஜான், எடுத்த எடுப்பிலேயே கேட்டான்.

“தமிழ்ச்செல்வி, உன் அண்ணன் கேட்கேன்... ஒனக்கு செய்ப்பூர் போறதுல விருப்பம்தானே...? சும்மா சொல்லும்மா...”

“எனக்கு ஒண்ணுமே புரியலண்ணா...”

“ஆனால், எங்களுக்குப் புரியுதும்மா... நீ வயதுக்கு வந்த பெண்... அறிவாளி... ஒன் இஷ்டத்துக்கு விரோதமாய் யாரும் ஒன்னை ஒன்றும் செய்ய முடியாதுன்னு எங்களுக்குத் தெரியும்... ஒனக்கும் ஒரு வாழ்க்கை தேவை.... ரயிலோட போகிற ரயில்பெட்டிகூட ஒரு கட்டத்துல கூட வராது. இங்கே இருக்கிற நாங்ககூட ஏதாவது ஒரு காலக் கட்டத்துல வேற ரயிலுக்கோ... ஊருக்கோ போகலாம். நம்மோட அண்ணன் தங்கை பாசம் நிசம். ஆனால், இந்த ரயில் வாழ்க்கை பொய். அதனால் உனக்குன்னு ஒரு வாழ்க்கை வரும்போது அதை ஏத்துக்கிறதுல தப்பில்லே...”

“டேய் மடையா... மக்குப் பையா... சிஸ்டரை விரட்டியடிக்கவா பார்க்கே...?”

"நீ எப்படியோ பிள்ளை குட்டி பெத்துட்டியே தவிர... ஒனக்கு இன்னும் அதுக்காக உள்ள குடும்ப வாழ்க்கையோட தாத்பரியம் புரியலடா. பலராமா... நான் நம்ம தங்கச்சியை விரட்டியடிக்கலடா... அதை வீட்ல வச்சுப் பார்க்க ஆசைப்படுறேன். புரிஞ்சா புரிஞ்சுக்கோ... புரியாட்டி ஒரு லிட்டர் போட்டுக்கோ... தமிழ்ச்செல்வி ஒன்னத்தாம்மா... இந்த தம்பியோட போயிட்டு வா... பாவம்... அவரும் பரிதவிச்சு நிக்காரு... இந்த இருபது நாளில நீங்க ஒருத்தரை ஒருத்தர் புரிஞ்சுக்கலாம். ஒனக்கு புரியக்கூடாது... புரிஞ்சுதுன்னா... இருக்கவே இருக்காங்க... செக்கு உலக்கை மாதிரி உன் அண்ணனுங்க... அதுதான் நாங்கோ..."

தமிழ்ச்செல்வி, நவாப்ஜானைப் பார்த்துவிட்டு, கமலாகரனை ஓரக் கண்ணால் உள்வாங்கிப் பார்த்தாள். பிறகு, அவளைத் தாபத்தோடு பார்த்த அந்த ரயில் பயலை, இடுப்போடு சேர்த்து இணைத்தபடியே விக்கி விக்கி அழப் போனாள். உடனடியாக தன்னைக் கட்டுப்படுத்தியபடியே அழாக் குறையாய் பேசினாள்.

"போமாட்டேண்ணா... போமாட்டேன்... உங்களையும் இவனையும் விட்டுட்டு எங்கேயும் போமாட்டேன்.... ஒருநாள்கூட போமாட்டேன்."

ரயில் பயல், தன்னை இடுப்போடு இடுப்பாய் இணைந்த தமிழ்ச்செல்வியின் விலாவிலே முகம் புதைத்தான். அவளின் அடுத்த பக்க இடுப்பையும், இரு கைகளால் இணைத்துப் பிடித்தான். பிறகு, என்ன நினைத்தானோ... ஏது நினைத்தானோ... கீழே விழப் போகும் வகையில் எழுந்தான். தமிழ்ச்செல்விக்கும் கமலாகரனுக்கும் இடையே நின்றுகொண்டு, இருவரையும், மாறிமாறியும், கண்கள் மாரியாகவும் பார்த்தான்.



## 32

அந்த ரயில், பல்வேறு மொழிகள் ஒன்றுபட்டு, புதியதோர் மொழியோசைகள் உற்பத்தியாகும் நாக்பூர் ரயில் நிலையத்தில், வழக்கம்போல் சக்கரக் கால்களை தண்டவாளத்தில் பதித்தபடி நின்றது.

அங்குமிங்குமாய் வியாபித்த கூக்குரல்கள் அடம்பிடித்து ஒரு தரப்பட்ட ஓசையாயின. மனித நடமாட்ட நெருக்கத்தில், கறுப்பு,

சிவப்பு, வெளுப்பு, புதுநிற முகங்களும், மொட்டை வழுக்கல், ஜடா முடித் தலைகளுடன் ஆறுதலை மனிதன்போல், ஏழுதலை மனிதன் போல் நடமாட்டம்; ஒரு உடம்பிற்குமேல், வேறு பல்வேறு தலைகளும், ஒரு தலையின்கீழ் பல்வேறு உடம்புகளும் இருப்பது போன்ற தோற்ற மாயை...

இப்போதும் அந்த எஸ். 11 பெட்டியில் பலராமன் இருந்தான். அதே மெக்கானிக் சோமையா. ஆனால், நவாப்ஜானுக்குப் பதிலாக அந்தோணி... இந்த இடங்களில் ரெண்டு கிழடு கட்டைகள். எவருக்கும் இடம் கொடுக்க மாட்டோம் என்பதுபோல், கால்களை இருக்கையில் விரித்துப் போட்டிருந்த மார்வாடிக் கூட்டம். இது போதாதென்று, சில ஓசிப் பேர்வழிகள், மார்வாடிக் கூட்டத்தை அதட்டி அதட்டி எழுப்பி விட்டார்கள். அதில் பிடித்த இடத்தில் டில்லி வரைக்கும் டிக்கெட் வாங்கியிருப்பதுபோல் வந்து உட்கார்ந்து கொண்டார்கள்.

ரயில்பயல், வழக்கம்போல், இந்த நாக்பூரில் இறங்கி, சென்னை நோக்கி நிற்கும் அந்த ஜி.டி.யில் ஏறுபவன். இப்போதோ கைகளிரண்டையும் கட்டியபடி எந்தவித சுரணையும் இல்லாமல் உட்கார்ந்திருந்தான். படபடத்தான் ஒரு சந்தேகத்தைத் கேட்டான்.

"இந்த மார்வாடிப் பசங்களே இப்படித்தான். ஒவ்வொரு காலையும் ஒரு ஆள் மாதிரி வளைச்சுப் போட்டிருக்காங்க பாரு... யோவ் காலை ரெண்டையும் இடுக்கி வையா... நீயுல்லாம் ஒரு காலுக்கு ஒரு டிக்கட்டுன்னு வாங்கணும்... ஆமா... நம்ம ரயில்பயல் வளரவே மாட்டானா...? நானும் நாலு வருஷமாய் பார்க்கேன்... அப்படியே இருக்கான்... ரயில்வே டாக்டரண்ட காட்டணும்பா..."

"அவ்வளவுதான்.... இருக்கிற உடம்பும் பூடும்."

எல்லோரும் சிரித்தார்கள். ஆனால், ரயில்பயல் மட்டும் சிரிக்க வில்லை. அங்கே இல்லாததுபோல் இருந்தான். அதைப் புரிந்து கொண்ட அந்தோணி, பயலுக்கு ஆறுதல் சொன்னான்.

"இன்னும் ஏண்டா தமிழ்ச்செல்வியையே நெனச்சுட்டு இருக்கே...? அதுக்கும் ஒரு வாழ்க்கை வேண்டாமா...? அதோட நீதானே அவங்களை சேர்த்து வைத்தே...?"

"என்ன விஷயண்டா...?"

"ஒன்கிட்டே சொன்னேனே, அந்தோணி... தமிழ்ச்செல்வி... அவள் செய்ப்பூருக்கு போகமாட்டேன்னுதான் சொன்னாள். இந்தப் பயல்தான் அவங்க ரெண்டு பேரு கையையும் பிடித்து சேர்த்து வைத்தான். அந்தப் பொண்ணும் இவனைப் பிரிய மனமில்லாமலே

பிரிந்து போனாள். இப்போ தமிழ்ச்செல்வியும், கமலாகரனும் கல்யாணம் செய்தாச்சு... ரிஜிஸ்டர் கல்யாணம். நானும் நவாப்பும் சாட்சிங்க..."

"அவங்க கல்யாணம் செய்தால் இவனுக்கென்னவாம்...?"

"பயலுக்கு சந்தோஷந்தான். தமிழ்ச்செல்வியும், முந்தாநாள் எங்களை வந்து பார்த்துட்டு ஒரு சேதியைச் சொன்னாள். அவளும், அவள் புருஷனும் மொரிஷியஸ் போறாங்களாம். அங்கே இருப்பவர்கள் நம் தமிழர்கள்தான். அவங்க பேர்கூட முருகன், ஆறுமுகம், பரமசிவமுன்னு இருக்குதாம். ஆனால், தமிழ்தான் துப்புறாவாய் தெரியாதாம். அங்கே இருக்கிற தமிழ் பேச முடியாமல் போன நம் தமிழ் சோதரர்களுக்கு தமிழ்நாட்டில் இருந்து ஆட்களை அனுப்பி தமிழ் கற்றுக் கொடுக்கணுமுன்னு... தமிழ்நாடு வந்த மொரிஷியஸ் நாட்டு தமிழ் அமைச்சர் பரத்ராம் பேசியிருக்கார். அவரை, தற்செயலாய் வானொலி நிலையத்தில் தமிழ்ச்செல்வியும், கமலாகரனும் சந்திச்சாங்களாம். அவர், இவங்க ரெண்டு பேரையும் மொரிஷியஸ் நாட்டுக்கு தமிழ் கற்றுக் கொடுக்க கூப்பிட்டிருக்கார். அடுத்த வாரம் ரெண்டு பேரும் தமிழறியாத தமிழர் பூமிக்குப் போறாங்களாம்... இதைக் கேள்விப்பட்டதில் இருந்து இந்தப் பயல் சரியா சாப்பிடமாட்டக்கான். பேச மாட்டக்கான். பாவம்... இவன், அவளை அம்மாவாகவும், அவள், இவனை மகனாகவும் நினைத்ததுண்டு..."

"கிட்டாதாயின் வெட்டன மற."

"பிரச்சினையே இதுலதான் அந்தோணி... நமக்கு வேண்டியவங்களை... பக்கத்து ஊர்லயே வருஷக் கணக்காய் பார்க்காமல் இருப்போம்... ஆனாலும், அவங்களை எப்போ வேணுமுன்னாலும் பார்க்கலாம், என்கிற உணர்வு. அவங்களைப் பார்க்காமல் இருப்பது பெரிசாத் தெரியாது. அதே உறவு ஆட்களை பார்க்கவே முடியாதுன்னு ஒரு நிலமை வந்தால், அது பரிதாபம். இவனுக்கு வந்திருக்கதும் இதுதான். தமிழ்ச்செல்வியை இனிமேல் பார்க்கவே முடியாது என்கிற எண்ணத்துல பாவம் துடிக்கான்... இவ்வளவுக்கும் அந்தப் பொண்ணு, புருஷனோட சம்மதத்துல இவனைக் கூப்பிட்டாள். அவன், அவருக்குத் தம்பி... எனக்கு தம்பி - நீ... நாலு பேராய் போகலாமுன்னு சொன்னாள். பயலுக்கு நம்மை விட்டும் போகமனமில்லை. வேணுமுன்னால் அவங்களோட போறியாடா...?"

பயல், அவர்களுக்குப் பதில் சொல்வதுபோல் கண்ணீர் விட்டான். அவர்களைப் பிரியமாட்டேன் என்பதுபோல் அந்தோணியின் கழுத்தைக் கட்டிக் கொண்டான். இதற்குள் ரயில்

ஓசை போட்டபடியே ஓடத் துவங்கியது. ரயில் பயலுக்கு அப்போது தான் கீழே இறங்கவேண்டும் என்ற உணர்வு ஏற்பட்டது. எழுந்திருக்கப் போனான். உடனே அந்தோணி "சரிதாண்டா டில்லி வரைக்கும் வாடா" என்றான். பயலும் பேசமால் இருந்து விட்டான். "அம்"மை மறக்க அல்லது அந்த சோகப் பிரிவைத் தாங்கிக் கொள்ள இந்த "அப்"களின் தோள்கள் அவனுக்குத் தேவைதான்.

படபடத்தான், அந்தோணியிடம் கேட்டான்.

"யாரை விட்டுப் போனாலும், இந்தப் பயல் சுந்தரத்தை விட்டுப் போகவே மாட்டான். ஆமா... அந்தோணி! சுந்தரத்துக்கு இப்போ எப்படி இருக்குது...? நான் ஆஸ்பத்திரியில் போய் பார்க்கணுமுன்னு நெனச்சேன். முடியல.... பிழைச்சுக்குவாரா...?"

"இன்னும் ஆஸ்பத்திரியில் இன்டென்சிவ் வார்ட்ல தான் அவரை வச்சுருக்காங்க... அவர் இருக்கதும் இறக்கதும் பாதிப் பாதியாம்... பாவம் மகளோட கல்யாணத்திற்கு எல்லா ஏற்பாடுகளும் செய்திருந்தார். கல்யாண அழைப்பிதழ்கள் வாங்குறதுக்காக சட்டையை போட்டுக்கினு புறப்பட்டிருக்கார். அப்படியே நெஞ்சை பிடிச்சுட்டு சுருண்டு விழுந்திட்டார்."

"இந்தக் காலத்துல யாருக்கு என்னது வருதுன்னே தெரியல... சாவு ரொம்ப மலிஞ்சுட்டு. ஒரு சின்ன கட்டி வருது... என்னடான்னா கேன்ஸர் என்கிறான். வாயுக் கோளார்ல நெஞ்சு வலியோன்னு நெனைக்கோம். அட்டாக் என்கிறான். இதனாலதான் அந்தக் காலத்துலயே நம்ம பெரியவங்க யோகாசன முறையை சொல்லி வச்சுட்டு.போனாங்க..."

"இந்த அவசர காலத்துல அதுவும் ஷிப்ட் டூட்டியில் இருக்கிற நம்மை மாதிரி ஆட்களுக்கு யோகாசனம் செய்ய நேரம் எங்கேடா இருக்குது...? போனவாரம் எனக்கு வேண்டியவரு யோகாசனம் செய்து உடம்பை ரப்பர் மாதிரி வச்சிருந்தார். பிளாட்பாரத்துல ஒழுங்காய் நடந்தவர்... பல்லவ பஸ் அடிச்சு அங்கேயே கொன்னுட்டான். இதுக்கென்ன சொல்றே."

"என்ன இழவோ... சுந்தரம் ஸாருக்கு இப்படி வர வேண்டாம்.... இந்தப் பயலை உயிருக்கு உயிராய் கவனிச்சார்... நாமகூட நம்ம பசங்களை அப்படி கவனிக்க மாட்டோம்."

அப்போதுதான், அந்த மூவரும் அந்தச் சிறுவனை, அவன் இருந்த பக்கமாகத் திரும்பிப் பார்த்தார்கள். அவன் அங்கே இல்லை. அவர்கள் எதிரில், கீழே மண்டியிட்டு மேலே கண்களைத் துருத்தி அவர்களையே பார்த்துக் கொண்டிருந்தான. அவனைப் பார்த்ததும், அவர்கள் மௌனமானார்கள். அவன் எழுந்தான். "அபா... அபா..."

என்று அரற்றினான். அவர்கள் மூலம் மடியில், ஒரு கையை ஊன்றியபடியே "அப்பாவுக்கு எப்படி இருக்கு" என்று சைகை செய்தான். "இருப்பாரா... இறப்பாரா" என்று கைகளை பொம்மை போல் குவித்தும், தலையைச் சாய்த்தும் சைகை செய்தான். அவர்களால், அவன் கேள்விக்கு விடையளிக்க முடியவில்லை. அவன் கண்களில் தேங்கிய நீரைப்பார்த்து விக்கித்துப் போனார்கள். அவர்களின் கொடூர மௌனத்தை, அவன் எமத்தனமாக எடுத்துக் கொண்டான். ஏங்கி ஏங்கி அழுதான். "அபா... அபா..." என்று அரற்றினான்.

அந்தோணியும், பலராமனும் விக்கித்து வேர்த்தார்கள். இந்த மாதிரி அவன் அழுவதை, எப்போதும் பார்த்ததில்லை. இப்படிப் புலம்புவதை என்றுமே கேட்டதில்லை. முன்புகூட, அந்தோணியோ அல்லது அண்ணாமலையோ அடிக்கப் போனபோது நரி மாதிரி ஊளையிடுவான். அப்போது அந்தச் ஊளைச் சத்தத்தில் ஒரு பாசாங்கு இருக்கும். ஒரு நையாண்டித்தனம் ஒலிக்கும். இலைமறை காய்மறைவான இளக்காரம் இருக்கும்.

ஆனால் இப்போதோ-

அவன் தன் தலையிலும், வாயிலும் அடித்துக் கொண்டான். அடிக்கு அடி, "அபா... அபா..." என்று, அந்தோணியின் முட்டிக் கால்களை கைநகத்தால் பிராண்டிக் கேட்டான். அவன் கண்ணீர், அந்தோணியின் மடியில் மழைச் சொட்டுக்களாக விழுந்தது. அந்தோணி தன்னைச் சுதாரித்தபடி, "அவருக்கு ஒன்றும் ஆகலடா.... ஆகாதுடா..." என்று சொல்லப் போனான். கூடவே, தனக்கு தொழில் கற்றுக் கொடுத்த குருவானா சுந்தரத்தின் உருவத்தை முழுமையாக உருவகப்படுத்திப் பார்த்தான். அவனால், அந்தச் சிறுவனுக்கு ஆறுதலளிக்க முடியவில்லை. அவனுக்கே ஆறுதல் தேவைப்பட்டது. பேசினால், விம்மி வெடிக்கப் போவது தெரிந்தது. உதடுகளைக் கடித்து, கண்ணீரை நிலைப்படுத்திக் கொண்டான். பலராமன்தான், அதட்டலாகப் பேசினான்.

"இப்போ இன்னாடா நடந்துட்டு...? ஏண்டா இப்படி அழுவுறே...?"

சோமையா, குறுக்கிட்டான்.

"டேய் பலராமா... அவனை அழவிடுடா... அவன் மனசுல இருக்கிற அத்தன பாரமும் கண்ணீர்ல கரையட்டுண்டா... அந்தோணி... நீ இவனை அந்த ரயிலுலயே போக விட்டிருக்கணும் ஒருவேளை இவனைப் பார்த்தால் சுந்தரண்ணன் சுகப்படலாம் பாரு..."

அந்தோணி, தன் முட்டாள்தனத்துக்கு நொந்து கொள்வது போல், தலையில் கை வைத்தான். அழுகையை நிறுத்தி கண்ணீரைத் துடைத்துவிட்டு, சோமையா சொல்வதை உற்றுக்கேட்ட அந்தப் பயல் மனதில் ஒரு நம்பிக்கை.... 'அப்பாவை அவன் பார்த்து விட்டால் பிழைத்துக்கொள்வாராம். அப்பாவைப் பார்க்கணும்.... இப்பவே போய் பார்க்கணும்...'

அவன் இந்த மூவரையும் முகபார்வையாய் பார்த்துவிட்டு, குடைக்குமிழி மாதிரி தொங்கிக் கொண்டிருந்த இரும்புப் பிடி பிரேக்கை இழுக்கும்படி சைகை செய்தான். அவர்கள் மௌனமாக அவனைப் பார்த்தபோது, அவன் இருக்கையில் ஏறி நின்று அதை இழுக்கப் போனான். அந்தோணி தழுதழுத்த குரலில், "மூணு நாளைக்கு பொறுத்துக்கோடா" என்று சொன்னபடியே அவனைப் பிடித்துக் கொண்டான்.

அந்தச் சிறுவன் பொறுக்கத் தயாராக இல்லை. அந்த ஓடும் ரயிலில் மேலும் கீழுமாகப் பார்த்தான். பள்ளிக்கூடத்தில், மொருக்குகளை கயிற்றில் கட்டி பிள்ளைகளின் தலைகளுக்குமேல் கொண்டுபோய் அவர்களை குதிக்க விடுவார்களே, அப்படி அவன் குதித்தான். அந்த பிரேக் பிடியை பிடிப்பதற்காக கைகளை தூக்கியபடியே பிடித்தான். "அபா... அபா..." என்று கூறியபடியே குதித்தான்.

அந்த கம்பார்ட்மெண்ட் பயணிகள் அனைவரும் அங்கே கூடி விட்டார்கள். அந்த மூவரிடமும் கேள்விக்கு மேல் கேள்வியாகக் கேட்டார்கள். உடனே ஒரு சர்வர் வாலிபர் அந்தச் சிறுவனை இழுத்துக் கொண்டு சமையல் கட்டுப் பக்கம் போனான். அவனைப் பார்த்துவிட்டு "வாடா என் கரிச்சான் குஞ்சே" என்று பேசப்போன அண்ணாமலை, வாயகல நின்றான். சமையல்கார குப்புசாமி, ஒரு சில சர்வர்கள், அவனை வியப்போடு பார்த்தபோது, அந்தப் பையனை கூட்டி வந்த சர்வர், அங்கே நடந்த் விவரத்தை உணர்ச்சியோடு கூறினான். ஒருவரைப் பற்றிய எண்ணத்தை ஏதாவது ஒருவகையில் ஏற்படுத்தும்போதுதான், அவரைப் பற்றிய நல்லது கெட்டது நினைவுக்கு வரும். இப்போது இந்தச் சிறுவன் சுந்தரத்தைப் பற்றிய நினைப்பை ஏற்படுத்திவிட்டதால், எல்லோரும் சுந்தரத்தை நினைத்துக் கண் கலங்கினார்கள். அவர்கள் மௌனிக ளானதை அனுமானித்து அப்பாவிற்கு மரணம் ஏற்படும் என்று அஞ்சிய அந்தச் சிறுவன், முன்னிலும் அதிகமாக அழுதான். பலமாக தலையில் அடித்துக் கொண்டான். பிரேக் பிடியைப் பார்த்து குதித்தான்.

அண்ணாமலை, அவன் கண்ணீரைத் துடைத்தபடியே, ஒரு நாற்காலியில் உட்கார வைத்தான். ஒருவன், சோடாவைக் கொண்டு வந்தான். பையன், அதை வேண்டாமென்று சைகை செய்த கையோடு, தன்னைக் கூட்டிக் கொண்டு உடனே போகும்படி சமிக்ஞை செய்தான். அண்ணாமலையை கையெடுத்துக் கும்பிட்டான். பிரேக்கைக் காட்டி முறையிட்டான். அண்ணா மலையும் சமயோசிதமாகச் சொன்னான்.

“ஸ்டேஷன் வரட்டும் இறங்குவோம்.”

ரயிலை, அவன் நாடி நரம்பு மாதிரி இழுத்து இழுத்து, எக்கி எக்கி ஓடிக் கொண்டிருந்த எஞ்சின், அவன் இதயம் போல் புலம்பியது. சமையல் கட்டில் இருந்த குழாயடிப் பக்கம் கிளினீர்கள் கொண்டுபோன தட்டுக்களின் சத்தம், அவனுக்கு இழவு மேளம் போல் கேட்டது.

ஆனாலும், அவன் அழுகையை அடக்கியபடியே, பொறுமையாக இருந்தான். அடுத்த ஸ்டேஷனில் இறங்கலாம். எப்படியோ சென்னைக்குப் போய் அப்பாவை பார்க்கலாம் என்ற எதிர்பார்ப்பில் அந்த எதிர்கால நிகழ்ச்சியில், நிகழ்கால சோகத்தை கரைத்துக் கொண்டான். ஆனால், இடையிடையே சந்தேகம் மட்டும் வந்தது. ‘அண்ணாமலைஅப்பா கொடுத்த வாக்கைக் காப்பாற்றுவாரா?’ அவனிடமே சைகை செய்து கேட்டான். அவனோ... “நீ இப்போ சாப்புடு... அப்போதான் அடுத்த ஸ்டேஷனில் இறங்கலாம்” என்று சொல்லி, அவன் முன்னால் ஒரு தட்டைப் போட்டான். அந்தச் சிறுவன், அதிலிருந்த ஆகாரம் என்ன என்பது புரியாமலே, உருட்டி உருட்டி வாய்க்குள் போட்டான். அவன் தின்று முடிக்கவும், ஏதோ ஒரு ஸ்டேஷன் வரவும் சரியாக இருந்தது.

அந்தப் பையன் அண்ணாமலையின் கையைப் பிடித்தான். பிடியை விடாமலே ரயில் வாசலை நோக்கி இழுத்தான். “அப்... அப்...” என்று அவனைப் பார்த்ததும், “அபா... அபா...” என்று தென்திசை நோக்கியும், அழுகை அழுகையாய் கேவினான். அண்ணாமலை, சோகத்தை தொண்டைக்குள்ளேயே தேங்க வைத்து பேசினான்.

“இது சின்ன ஸ்டேஷன்... வேண்டாம்... பெரிய ஸ்டேஷன் வரட்டும்... இறங்குவோம்... பாரு, ரயில் நின்ன மூணு நிமிஷத்துலயே ஓடுது பாரு...”

அந்த ஓடும் ரயிலுக்குள்ளே, அந்தப் பையன் கருப்பு வெள்ளாடு மாதிரி சுற்றினான். பெரிய நிலையத்திலும் இறங்க முடியாமல் போகலாம் என்று அண்ணாமலையின் போக்கை வைத்து, அவன் அனுமானித்தான். அவனுக்கு கோபமும் அழுகையும் மாறி மாறி

வந்தன. எல்லோரும் தன்னை ஏமாற்றுகிறார்கள் என்ற எண்ணம் ஏற்பட்டது.

உடனே, அவன் தாவிப் பாய்ந்தான். குழாயடிக்கு ஓடினான். கதவை மூடிக்கொண்டான். பிறகு, "டங்... டங்" என்று சத்தம் கேட்டது. "அப்... அப்..." என்று அலறல் கேட்டது.



அந்த ரயில், அப்போது அந்தக் காட்டுப் பாதையில், பஞ்சாப் பிரச்சினையாலும், பஞ்சப் பிரச்சினையாலும், தீவிரவாதிகள், தன்னைக் கவிழ்க்கலாம் என்ற அனுமானத்துடன், நின்று நின்று நகர்ந்தது.

கேந்திரமான அந்தப் பகுதியில், ரயில்வே போலீஸார் ரோந்து சுற்றிக் கொண்டிருந்தார்கள். ரயில் பாதையில் நடந்தபடி, தண்டவாளங்களை உற்றுப் பார்த்தபடியே இயங்கினார்கள். பாதி இவர்களின் பாதுகாப்பிற்காகவும், பாதி பயத்தோடும் அந்த ரயில் கிட்டத்தட்ட நடந்தது.

குழாயடி அறையை பூட்டிக்கொண்ட பயலைப் பார்த்ததும், ரயில்வே தொழிலாளர்கள் கதவைத் தட்டினார்கள். அந்தப் பயலோ, அங்கே குவிந்து கிடந்த தட்டுக்களையும், டம்ளர்களையும் காலால் உதைத்தான். பிறகு, ஒவ்வொரு டம்ளராக, ஜன்னல் கம்பிகளின் இடைவாய் வழியாக, ரயிலுக்கு வெளியே வீசி வீசிப் போட்டான். டம்ளர்கள் முடிந்ததும், தட்டுக்கள் விழுந்தன. ரயிலுக்கு வெளியே எகிறி எகிறி விழுந்தன. வெளியே கதவு பயங்கரமாகத் தட்டப் பட்டது. "டேய்... சோமாறி... சோதா..." என்ற குரல்கள், கோஷ்டி கானமாயின. அப்போதும் பயல் அசரவில்லை. ஒரு டிரேயை எடுத்து வீசப்போனான். அது ஜன்னல் வாய்க்குள் போக மறுத்ததால், பிளாஸ்டிக் டம்ளர்களை எடுத்து வெளியே வீசினான். இப்போது வெளியே பயங்கரமான ஓசைகள். ஆனாலும், அவன் கதவைத் திறக்கவில்லை. வெளியே வீசுவதை நிறுத்தவில்லை. "அப்.... அப்..." என்று அரற்றுவதை முடிக்கவில்லை.

திடீரென்று, ரயில் குலுங்கியபடியே, சிறிது தூரம் சிணுங்கிச் சென்றது. அப்புறம் வலுக்கட்டாயமாக நின்றது. உள்ளே நின்ற சிறுவனுக்கு, அண்ணாமலையின் பயங்கரப் பிளிறல் கேட்டது.

"டேய்.... கதவைத் திறடா... ஒன்னைத்தான்... கதவைத் திறடா..."

"கண்ணு, கதவைத் திறடா..."

"டேய் சோமாறி... எச்சப் பொறுக்கி, கதவைத் திறக்கிறயா... இல்லே உடைக்கட்டுமா...?"

பயல், அசையவில்லை.

இறுதியில், அந்தோணி முறையிட்டான்.

"டேய், நீ மட்டும் கதவைத் திறக்கலே... உன்னைக் கூட்டிட்டு வந்த குற்றத்துக்காக போலீஸ்காரன் என்னைக் கூட்டிட்டுப் போவான். அப்புறம் உன் இஷ்டம்."

கதவு, படாரென்று திறந்தது. அந்தப் பயல் வெளியே வராமல் அந்த அறையின் மூலையோடு மூலையாக ஒடுங்கி நின்றான். அண்ணாமலை, அவன் கையை பிடித்திழுத்து, வெளியே கொண்டு வந்தான். அவனை அடிப்பதற்காக கையைத் தூக்கினான். தூக்கப் பட்ட கரம் துக்கப்பட்டு நின்றது. "அப்... அப்..." என்று அவனைக் கட்டிப் பிடித்துக்கொண்டு, தன்னிடமே ஆறுதல் கேட்ட அந்தப் பயலை மௌனமாகப் பார்த்தான்.

இதற்குள், அந்த அறைமுழுவதும், மக்கள் மயமாகியது. டிரெய்ன் சூப்பரின்டெண்ட் ஒரு சில உதவியாளர்களுடன் கூட்டத்தை கிழித்தபடியே உள்ளே வந்தார். அவர் கேட்கும் முன்னாலயே, அவரை ஓரமாய் தள்ளிக்கொண்டு போய் அண்ணாமலை நடந்த விஷயத்தைச் சொன்னான். அவரும் விட்டுக் கொடுக்கப் போவதுபோல், நின்றபோது பொதுமக்களில் ஒரு சிலர் முறையிட்டார்கள்.

"வர வர நாட்ல... ஒழுங்கு, கட்டுப்பாடு போயிட்டு... ஒரு சின்னப் பயலால் நம்ம நேரம் வீணாகுது. நேராய் பிரதமருக்கு எழுதப் போறேன்..."

"எழுதுங்க ஸார்... உங்க லெட்டரை அவர் எதிர்பார்த்து இருக்காராம்...."

"இப்படி நையாண்டி பண்ணுனா நாடு உருப்படாது."

"இவ்வளவு நடந்தும் இந்த ஆபீஸர் சும்மா இருக்கார் பாருங்கோ...?"

டிரெயின் சூப்பரின்டெண்ட், பயந்துவிட்டார். பயத்தை மறைக்க பயங்கரமாய்க் கத்தினார்.

"போலீஸ்... இந்தப் பையனை பிடிங்க... அடுத்த ஸ்டேஷன்ல லோகல் போலீஸ்ல ஒப்படையுங்க..."

"யெஸ் சார்..."

"இனிமேல் இந்தப் பயல் இந்த ரயிலுல வரக்கூடாது."

"யெஸ் ஸார்..."

"வாட், யெஸ் ஸார்...? அவனைப் பிடிங்க..."

ரயில் போலீஸ்காரர்கள், அந்தச் சிறுவன் பக்கமாக நகர்ந்தார்கள். சர்வர்களால், பொறுக்க முடியவில்லை. அந்தோணி தன் தலையை மறைக்காமலே எச்சரித்தான்.

"ஸார்... இது அநியாயம்... நம் தோழர்களில் ஒருவர் சாகக் கிடக்கார். அவரைப் பற்றி நினைக்கக்கூட நமக்கு நேரமில்ல. ஆனால், இந்தப் பையன் அவருக்காக அழுகிறான். தன்னோட சோகத்தை இப்படி காட்டிட்டான். இவனை நீங்க போலீஸ்ல ஒப்படைக்கிறதாய் இருந்தால், நீங்க எங்களையும் ஒப்படைக்க வேண்டியது வரும்..."

"அப்படின்னா...?"

"ரயில் புறப்படும் போதெல்லாம் நாங்க நிறுத்துவோம்... எல்லோரும் சேர்ந்து நிறுத்த மாட்டோம். ஒவ்வொருவராய் ஒவ்வொரு இடத்தில் நிறுத்துவோம். இந்தப் பயல் இல்லாமல், ரயில் எப்படி டில்லிக்குப் போகுதுன்னு பார்த்துடலாம்..."

பொதுமக்கள் மத்தியில் லேசான முணுமுணுப்பு. 'சீக்கிரமாய் டில்லிக்குப் போக முடியாதோ...? வண்டி ஏற்கனவே லேட்டு...'

"சரி... ஏதோ நடந்தது நடந்துட்டு... அவனை போலீஸ்ல ஒப்படைக்கிறதால, ரயில் இந்நேரம் போக வேண்டிய இடத்துக்கு தாவிக் குதிக்காது... சூப்பரின்டெண்ட் ஸார் கண்டுக்காதிங்க..."

"அதெப்படி... ஒங்களுக்கு அசௌகரியம் ஏற்பட்டுட்டே...?"

"விட்டுத் தள்ளுங்க... ஸார். உங்க டிபார்ட்மெண்ட்ல எத்தனையோ அசௌகரியம். ஸ்டேஷன்ல ரிசர்வேஷன் கவுண்டர்ல 'புல்'னு இருக்கும். ஆனால், டிராவல் ஏஜென்ஸியில் டிக்கெட் வாங்கிக்கலாம். வெயிட்டிங் லிஸ்ட்ல சீனியருக்கு பெர்த் கிடையாது. லிஸ்ட்ல இல்லாத ஆசாமி ஹாயா தூங்குவார். கனெக்ஷன் டிரெயினுக்கு எழுதிப் போடுவோம். கேட்டால், எரிஞ்சு விழுவாங்க. மழை வந்தால்... கம்பார்ட்மெண்டே குளமாகும். இந்த அசௌகரியங்களில் இது எவ்வளவோ தேவல..."

சூப்பரின்டெண்ட் தனக்குச் சூடாகவும், சுவையாகவும் தேநீர் கொடுக்கும் சர்வர்களை ஓரக்கண் போட்டு கண்ணடித்தபடியே, 'பிகு' செய்தார். உடனே, இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்

கொண்டு, அண்ணாமலை, அந்தச் சிறுவனை அடித்தான். கைகளை குவித்து, உள்ளங்கையை பள்ளமாக்கி, பயங்கரமாய் அடிப்பது போல் அடித்தான். எல்லோரும் 'அச்சச்சோ' போட்டார்கள்.

இதற்குள், பல சர்வர்கள் கீழே இறங்கி, தட்டுக்களையும், டம்ளர்களையும் தேடிக் கொண்டிருந்தார்கள். அண்ணாமலை, அந்தப் பயலைப் பார்த்துக் கத்தினான். அவனைக் கண்ணடித்தபடி பொய்யாய் கத்தினான். பொய்க்கத்தல் என்பதால், அது பலமாகக் கேட்டது.

"பெரிய மகராசான்னு நெனப்போ...? கீழே இறங்கி போட்டது களை பொறுக்கிட்டு வாடா... பொறுக்கி கஸ்மாலம்..."

அந்தச் சிறுவனும், கீழே இறங்கினான். சிறிது நேரத்தில் ஒப்புக்கு அவன் கையில் இரண்டு தட்டுக்களை திணித்தபடி, ஒரு சர்வர் இவனை மேலே கொண்டு வந்தார். பொதுமக்கள் கலைந்தார்கள்.

டிரெய்ன் சூப்பரின்டெண்ட் "பயல் மறுபடியும் எதையும் எரிஞ்சுடாமல் பார்த்துக்கங்கோ. அப்படியே எரிஞ்சாலும் டிரெய்னை நிறுத்தாதிங்க... சரி... சரி... ஏதோ தங்க நகை கீழே விழுந்துட்டதா... இந்த புகார் புத்தகத்துல எழுது. இவன் நல்ல பயல்தானே, ஏன் இப்படிப் பண்ணுனான்....? ஓ... அதுனாலாயா..." என்றார்.

ஒரு சர்வர், அவருக்கு சூடான டீயும், சுவையான மசால் வடையும் கொண்டு வந்தார்.

கால்மணி நேரத்தில் ரயில் ஓடத் துவங்கியது.



## 34

**அ**ந்தப் ரயில்பயல், இப்போது வேறு ரயில் வண்டியில் கிடந்தான்.

ஒரே கூட்ட நெரிசல்... அவன் அங்குமிங்குமாகத் தள்ளப் பட்டான். ஆனாலும், அது அவனுக்கு உறைக்க வில்லை. இந்த ரயில் எங்கே போகும் என்பதும் அவனுக்குத் திட்ட வட்டமாகத் தெரியாது.. ஒரு அனுமானந்தான். 'எஞ்சின் தெற்கு நோக்கி நிற்கிறது. வடக்கே போகும் ஜி.டி.யை விட, இது தேவலை.. தமிழ்நாட்டிற்குத்

தான் போகும். இல்லையானாலும் அதனருகே போகலாம். அப்புறம் பார்த்துக் கொள்ளலாம்.'

அவன் எதிர் பிளாட்பாரத்தையே 'வெறித்துப் பார்த்தான். சிறிது நேரத்திற்கு முன்புவரை, ஜி.டி. எக்ஸ்பிரஸ்ஸால், வேலி போட்ட அந்த பிளாட்பாரம் வெறிச்சோடி கிடந்தது. அந்தச் சிறுவன் தன் சாமர்த்தியத்தைக்கூட லேசாக மெச்சிக் கொண்டான்.

அவன் செய்த அமர்க்களத்திற்குப் பிறகு, பழக்கப்பட்ட அந்த ஜி.டி. எக்ஸ்பிரஸ் புறப்பட்டபோது, அவன் குத்துக் காலிட்டு உட்கார்ந்தான். நொடிக்கு ஒரு தடவை "அபா... அபா...." என்று மனதுக்குள் கூவிக் கொண்டான். ஒரு மணி நேரத்திற்குள் ரயில் பெரிய நிலையத்தில் நின்றது. சர்வர்கள் பயணிகளுக்கு பறிமாறுவதில் சுறுசுறுப்பாக இருந்தார்கள். அண்ணாமலை, சமையல் கட்டுப்பக்கம் இயங்கினான்.

அந்தப் பயல், அங்குமிங்கும் பார்த்தான். 'இந்த ரயிலில் போனால், அப்பாவைப் பார்க்க நான்கு நாட்கள் ஆகும். அதற்குள் அவர்...' ரயில்பயலால் மேற்கொண்டு நினைத்துப் பார்க்க முடியவில்லை. எப்படியாவது கீழே இறங்கிவிட வேண்டும் என்று திட்ட வட்டமாக முடிவு எடுத்தான். இறங்குவதற்காக எழுந்திருக்கக்கூடப் போனான். மூளையில் உதித்த ஒரு சின்ன புத்திசாலித்தனம், அவனை தடுத்தது... இப்போது இறங்கினால், எப்படியாவது தேடிப் பிடித்து விடுவார்கள். வண்டிக்கு விசிலடிக்கும்போதுதான் இறங்க வேண்டும்.

ரயில் அசைவது வரைக்கும் அவன் அசைவற்றுக் கிடந்தான். 'அபா'வை விரைவில் பார்க்கப் போகிற சந்திப்புப் கிறக்கத்தில் அசந்திருந்தான். சிறிது நேரத்தில், விசில் சத்தம் கேட்டது. அவன், அந்த ஊதல் சத்தத்தை தனக்காக ஒலிப்பதாய் எடுத்துக் கொண்டு, எஞ்சின் ஊளையிடுவதற்கு முன்பே எழுந்தான். அது லேசாய் அசைந்து, ரயில் பெட்டிகளை ஆட்டுவித்தபோது, வேகவேகமாய் நடந்து, அங்குமிங்குமாய்ப் பார்த்து, கீழே இறங்கினான். ரயில் வண்டி அவனைக் கடந்தபோது, அதற்கு அவன் முதுகைக் காட்டினான். அது முற்றிலும் அவனைக் கடந்த பிறகு, மெள்ள மெள்ள நகர்ந்து, அப்புறம் பரபரப்பாய் ஓடி, இந்த ரயிலுக்குள் ஏறிவிட்டான்.

அந்தச் சின்னஞ்சிறு 'பெரிய' மனிதன் அத்தனை கூட்ட நெரிசலுக்குள்ளும் குத்துக் காலிட்டு உட்கார்ந்தான்.

அந்தக் . கணத்தில் அவனுக்காக வாதாடிய ஜி.டி. எக்ஸ்பிரஸ் அப்பாக்கள் தன்னைக் காணாமல் துடித்துப் போவார்களே என்ற

எண்ணம் அவனுக்கில்லை. அவர்கள் போகும் நிறுத்தப்பட்டு அமர்க்களப்பட்டதோ... அத்தனைத் தொழிலாளர்களும் அவனுக்காக வக்காலத்து வாங்கி, அவனை நிரந்தரமான தடையில் இருந்து காப்பாற்றியதோ அவனுக்கு உறைக்கவில்லை. அவன் ஒவ்வொரு அணுவிலும் - இதயத்தின் ஒவ்வொரு துடிப்பிலும், மூச்சின் ஒவ்வொரு இழுப்பிலும், உடம்பின் ஒவ்வொரு அசைவிலும் வியாபித்திருந்தவர் சுந்தரம்... சுந்தரமே. அவன்கூட அவன் உடம்பில் இல்லை. அவன் மனம் முழுவதும் மருத்துவ மனையாக வியாபித்து... அங்கே சுந்தரம் அங்குமிங்குமாய் புரண்டு கொண்டிருந்தார். கடந்தகால சின்னச் சின்ன நிகழ்ச்சிகள், அவன் மனதுக்குள் பெரிது பெரிதாய் நிழலாடின.

அவனுக்காக, தனக்கு வந்த சாப்பாட்டுக் கேரியரையே, அவன் முன்னால் வைத்துவிட்டு, "எனக்கு வயிறு சரியில்லை... நீ சாப்பிடு..." என்று சொன்ன சுமந்து பெறாத சுந்தரத்தாய்... அவன் சிரங்குக்கு தன் கையாலேயே மருந்து போட்ட சுந்தர வைத்தியன்... அவனை யாராவது கிண்டல் செய்தால்... அவரை பார்வையாலேயே மடக்கும் சுந்தரத் தோழன்... அவனுக்காக வாழ்வதுபோல் தன்னை மாற்றிக் கொண்டு குடும்பப் பொறுப்பைக்கூட மறுக்கும் அல்லது மறக்கும் சுந்தரத்தியாகி.... அவனைச் சேர்ந்தாற்போல் பார்க்காவிட்டால் துடித்துப்போகும் அந்தச் சுந்தரத் தந்தை...

அந்தப் பயல் மனம், சுந்தரமாகியது. பாச நெகிழ்ச்சி அவனை பந்தாடியது. தன்னைப் பார்த்து விட்டால், அப்பா பிழைத்துக் கொள்வார் என்ற எண்ணம், அவன் உள்ளத்தை எஞ்சினாக்கியது. உடம்பை ரயில் பெட்டியாக்கியது... சுந்தரம் என்ற தோழன், அவன் மனதுக்குள் ரயிலானார்.

ரயில் ஓடிக்கொண்டே இருந்தது.

அந்தப் பூஞ்சை உடம்பால், இரும்புக் கூட்டத்தை தாங்க முடியவில்லை. மெள்ள எழுந்தான். அவன் இருந்த இருப்பையும், நோக்கிய நோக்கையும் கண்டோ என்னவோ கூட்டம், பட்டும் படாமலும் அவனுக்கு வழி விட்டது.

அவன், அந்த ரயிலுக்குள்ளேயே ஒரு ரயில் மாதிரி ஓடினான்.

முதலாவாது வகுப்போ, இரண்டாவது வகுப்போ ஏதோ ஒரு பெட்டிக்கு வந்தான். நெரிசல் அதிகம் இல்லை. வாசலோரத்தில் டிக்கெட் பரிசோதகர், கடுகடுப்பாய் நின்றிருந்தார். அவருக்குச் சற்று முன்னால், குப்பைக் கூள மனிதர்கள். பிச்சை எடுத்து பிழைப்பு நடத்தும் ஒரு கால் மனிதர். கை சூம்பிய வாலிபன்... தாளக் கட்டைகள் வைத்திருந்த அம்மை வடுப்பெண். பெட்டிகளைத்

துடைத்து வயிற்றைத் துடைக்கும் ஒரு விடலைப் பையன்... வயதான கிழவி... அத்தனை பேரும், அந்த பரிசோதகரை பரிதாபத்துடன் பார்த்தார்கள். ஒரு எதிர்பார்ப்போடு பார்த்தார்கள்.

அவரோ, ஏற்கனவே முடிவெடுத்துவிட்ட முகபாவத்தோடு நின்றார். ஏதோ ஒன்று திருடு போய்விட்டது என்று ஒரு பயணி... ரயில்வே புகார் புத்தகத்தில் எழுதி விட்டாராம். டிக்கெட் இல்லாத பஞ்சை பனாரிகளை டிக்கெட் பரிசோதகர்களின் பரிபூரண சம்மதத்துடன் ரயில் பெட்டிகளுக்குள் நடமாடுவதே, திருட்டுக்கு மூல காரணம் என்று எழுதிவிட்டாராம். அந்தப் புகாரின் பேய்யுருவம், டிக்கெட் பரிசோதகர் என்ற ஆலமரத்தை பிடித்ததுடன், அதனுள் அடங்கிய இந்த தெருப் பிள்ளையார்களையும் பிடித்துக் கொண்டது. அவர்களை மட்டுமா? நமது ரயில் பயலையும் சேர்த்துத்தான். டிக்கெட் பரிசோதகரை, அவன் பிடறியில் பலமாக அடிக்க வைத்தது. அவனை கீழே விழ வைத்தது. அவனைச் சுற்றி, மேலும் பல அதிகாரிகளை சூழ வைத்தது.



அந்த இனந்தெரியாத ரயில், முகமறியாத மக்களோடு, திசையறியாத பாதையில் போவதை புரிந்து கொண்டான் ரயில் பயல்.

ரயில் பயல், கீழே அப்படியே விழுந்து கிடந்தான். அவன் எழுந்ததும், இன்னொரு உதை கொடுத்து, அவனைக் கீழே வீழ்த்த வேண்டும் என்று கைகளை விறைத்து வைத்திருந்த அதிகாரிகளுக்கு அசந்து போனது. அவன் எழுந்து நிற்கவில்லை. பதறிப்போன ஒருவர், அவனைத் தூக்கி நிறுத்தினார். அவன் இன்னும் ஒரு உதையைத் தாங்கிக் கொள்வான் என்பதுபோல், ஒருத்தர் அடிக்கப் போனார். ஆனால், அந்த நிர்மலமான கண்களையும், பேசத்துடித்து தோல்வியுற்ற உதடுகளையும் கண்ட இன்னொருத்தர், அடிக்கப் போனவர் கரத்தை, அடிப்பதுபோல் பற்றிக் கொண்டார். இவ்வளவுக்கும் அந்தப் பயல், டிக்கெட் பரிசோதகர்களையும், இதர அதிகாரிகளையும் பார்த்தவுடன், அவனாகத்தான் வலியப் போனான். அந்த ரயில் எங்கே போகிறது என்று வாய் மொழி அறியா அந்தப் பேதைப் பொடியன் கை மொழியால் கேட்கப் போனான். அவன் தோரணையைப் பார்த்தவர்கள், அவன் டிக்கெட்

வைத்திருப்பான் என்றுகூட நினைத்து, அவனிடம் ஒப்புக்குத்தான் 'டிக்கெட்' என்றார்கள். உடனே இல்லை என்று கையசைத்து சைகை செய்தான். ரயில்வே அதிகாரிகளும், அவனுக்கு சைகையாலேயே பதிலளித்தார்கள். அவன் பிடறியைத் தட்டி, கீழே போட்டார்கள்.

அந்தப் பயல், இதரப் பயல்களோடு நிறுத்தப்பட்டான். அந்த நிலையிலும், அவனுக்கு அடிபட்ட உணர்வு இல்லை. அப்பா சுந்தரத்தை பார்க்க வேண்டும் என்ற ஒரே ஒரு தாங்கொண்ணா வேட்கைத் தாக்கத்தில் அலைமோதினான். ரயில்வே அதிகாரி களிடம் கைகால்களால் மன்றாடி மன்றாடி முறையிட்டான். இந்த ரயில்கள்தான் தனது இல்லம் என்று கீழேயும் மேலேயும் கைகாட்டினான். "அப்... அப்..." என்று சென்னை நகரம் இருப்பதாக நினைத்துக் கொண்ட திசையை நோக்கி கையாட்டினான். ஆனால், அவன் முறையீடோ அவர்களின் கோபத்தை தீவிரப்படுத்தியதே தவிர, சிகிச்சையளிக்கவில்லை. இது போதாதென்று "ஒனக்கு ஆறுமாதம் வாங்கித் தாறேன் பார்" என்ற அர்த்தத்தில் ஏதோ ஒரு மொழியில் ஆறுவிரல்களை மடித்துக் காட்டினார் ஒருவர்.

அப்போதுகூட, அப்பாக்கள் இருந்த அந்த பாசரயிலை விட்டுவிட்டு, இந்தப் பாழும் ரயிலுக்கு வந்ததற்காக, அதிகமாக அவன் வருத்தப்படவில்லை. அவன் ஊனுடம்பு- உயிரனைத்திலும் ஒரே சிந்தனை. 'அப்பாவைப் பார்த்தாக வேண்டும். பார்த்தே ஆகவேண்டும். என்ன ஆனாலும் சரி, எப்படியானாலும் சரி...'

அந்த பூஞ்சைப் பையனைச் சிறைப்படுத்திய, அந்த புதிய ரயில் மணிக்கணக்கில் ஓடிக் கொண்டிருந்தது. காலேஸ்வரனின் இரவு என்னும், பெண்பாதிக்குள் ஓடி முடித்த அந்த இரும்பு வாகனம், இப்போது பகலென்னும் ஆண்பாதிக்குள் அடிபோட்டது. இதுவரை காலம் என்ற காரணங்கள் தெரியாமல், எல்லாக் கிழமைகளும் ஒரே கிழமையாக, எல்லா நேரமும் ஒரே நேரமாக, வாழ்ந்த அந்தப் பயல், ஒவ்வொரு வினாடிக் கழிவிலும் உயிர் போவதுபோல் துடித்தான். காலநேரம் தெரியாமல் பயணித்தவன், இப்போதோ, காலனுடன் போராடும் சுந்தரம் அப்பாவிற்கு கடைசி காலம் வந்து விடக்கூடாது என்று, கடைசி முயற்சி கிடைக்குமா என்று, அங்குமிங்குமாய் பார்த்துக் கொண்டபடியே அல்லாடினான்.

மத்தியானவேளை... ரயில்வே அதிகாரிகள் வாங்கிக் கொடுத்த ரொட்டித் துண்டுகளை அவன் வாங்கிக் கொள்ள மறுத்தான். 'பெரிய மகாத்மா காந்தி' என்று அவர்கள் சொன்னபோது, அவனுக்கு என்னமோ சுந்தரம் அப்பாவின் நினைவுதான் அப்போது நெஞ்சில் நிழலாடியது.

## 36

அந்த புதிய ரயில், வில்வண்டிக் கூடு மாதிரியான மேற்கூரை கொண்ட ஹைதராபாத் ரயில் நிலையத்திற்குள், வேகம் தணித்து நுழைந்தது.

அங்கேதான் டிக்கெட் இல்லாதவர்களை இறக்க வேண்டும். அதிகாரிகள் எழுந்து சட்டைகளை இழுத்துவிட்டுக் கொண்டார்கள். தூசிகளைத் தட்டிவிட்டார்கள். அந்தச் சமயத்தில் இந்தப் பயல் திடீரென்று ஓடினான். அவர்களை விட்டு, சென்னை இருக்கும் தென்திசைக்குப் போகப் போவதுபோல் ஓடினான். அந்த ரயிலுக்குள்ளேயே ஒரு ரயில் மாதிரி ஓடினான். அந்த ரயில் எஞ்சின் மாதிரி உருமியபடியே ஓடினான். நரிபோல ஊளையிட்டபடியே தாவினான்.

அதிகாரிகள் சுதாரித்தார்கள். “பிடி பிடி” என்று கத்தியபடியே பின்னால் ஓடினார்கள். அவனோ ரயில் பெட்டிகளுக்குள் வளைவு வளைவாக வளைந்து, தாவு தாவாகத் தாவி ஓடினான். ஆனாலும், மனோ வேகம், உடல் வேகமாகவில்லை. இனிமேல் ஓட முடியாது என்று ஐம்புலன்களால் அறிந்து, தனியறையாய் இருந்த ஒரு பெட்டிக்குள் ஓடினான். அந்த முதல் வகுப்புப் பெட்டியில் இருந்த இரண்டு பேரில், ஒரு வயதானவரின் காலுக்கடியில் போய் பதுங்கிக் கொண்டான். அவர், அவனை பன்றிக் குட்டியை பற்றுவதுபோல் பற்றி, மேலே கொண்டு வந்தார். அவனைப் பார்த்துவிட்டு, அடையாளம் காணும் வகையில் புருவங்களை உயர்த்தவில்லை. எடுத்த எடுப்பிலேயே “நீ... நீதானே” என்று கேட்டார். அந்தப் பயல், அவரைப் புரியாமல், தெரியாமல் விழித்தபோது, அவர் கடந்த கால நிகழ்ச்சி ஒன்றை நிகழ்காலத்திற்கு கொண்டு வந்தார்.

ஒரு தடவை அவர் ஜிடியில் போகும்போது, மூவாயிரம் ரூபாய் பெறுமான நோட்டுக்களை உள்ளடக்கிய மணிப்பர்ஸை தொலைத்துவிட்டார். ரயில் நிலையத்தில் விட்டாரா... ரயிலுக்குள் விட்டாரா... அவருக்கே தெரியாது. சாப்பாட்டிற்குக்கூட நயா பைசா இல்லாத நிலைமை. அவர் இங்குமங்குமாய் அல்லோலகல்லப் படுவதைப் பார்த்து, இதே இந்தப் பையன், அவர் கையைப் பற்றினான். பிறகு கரடுமுரடான ஆட்கள் இருந்த பெட்டிக்குள் கூட்டிப்போனான். இங்கிருந்தவர்கள் அவரிடம் குறுக்கு விசாரணை செய்தபோது, இவர் தனது பணப்பைக்குள் தனது புகைப்படம் இருக்கும் என்றார். அவர்கள் பிரித்துப் பார்த்து அந்தப் பையை மூடியபடியே அவரிடம் கொடுத்தார்கள். அப்போது இந்தப்

பயல் சிரித்த சிரிப்பு... அப்பப்பா... அவனுக்கே அந்தப் பணம் கிடைத்து விட்டது போன்ற சிரிப்பு... எல்லோரையும் பற்றிக் கொள்ளும் தொத்துச் சிரிப்பு. அவர், பணப்பையை நீட்டி, ரூபாய் நோட்டுக்களைக் காட்டி, எவ்வளவு வேணுமுன்னாலும் எடுத்துக் கொள் என்றபோது, ஒரே ஒரு பத்து ரூபாய் நோட்டை மட்டும் 'அப்பா'க்களின் அதட்டலால் எடுத்தபடியே, அப்போதும் சிரித்தான். ஆனால், இப்போதோ....

உடல் பரிமாணத்திற்கு, உள்ளத்தையும் விசாலமாக வைத்திருந்த அவர், அந்தப் பயலை ஆசுவாசப்படுத்தினார். அவன் கண்களைத் துடைத்து விட்டார். இதற்குள் உள்ளே வந்த ரயில்வே அதிகாரிகள், அவனை தட்டுமுட்டுச் சாமான்களை இழுப்பது போல் இழுத்தபோது, அவர் சீறினார். அதிகாரிகள் நிலைமையை விளக்கியபோது, அவர் அந்தப் பையனின் நேர்மையையும், ரயில்வே தொழிலாளர்கள் மூலம் கேள்விப்பட்ட, ரயிலோடு ரயிலாகிப் போன அவன் வாழ்க்கைப் பயணத்தையும் விளக்கினார். அவனுக்காக அவர் புறப்பட்ட இடத்தில் இருந்து, பயணச் சீட்டும், அபராதத் தொகையும் கட்டுவதற்காக, அந்தப் பயல் எந்தப் பணப்பையைக் கண்டெடுத்துக் கொடுத்தானோ, அந்த ராசியான பையை திறக்கப் போனார். அந்தப் பணத்திற்கு ரசீது கொடுக்க வேண்டும் என்பதால், அதிகாரிகள் அதை வாங்க மறுத்தனர். அதோடு, அவர்களுக்குள்ளும், சட்டப்படி சரியில்லாத - அதேசமயம் தர்மப்படி சரியான ஒரு மனிதாபிமானம் முளைத்தது. அந்தப் பயலை, அவருடனே விட்டுவிட்டு, அவர்கள் போய் விட்டார்கள்.

அந்தப் பயலோ, அவர் யாரென்று புரிந்து கொள்ளவும், அக்கறை காட்டவில்லை. சர்வ நாளங்களிலும், நரம்புகளிலும் ரத்த அணுக்களிலும் சதையின் அடர்ப்புக்களிலும் வியாபித்த "அப்... அப்..." என்ற உணர்வை, வார்த்தையாக அரற்றினான். 'மெட் மெட்' என்று கத்தினான். 'அப்' என்று சொல்லிவிட்டு பரிதவித்து நின்றான். பின்னர், அந்த சொல்லுக்குரிய அவர், படுத்த படுக்கையாக இருக்கிறார் என்பதை, சாய்ந்து காட்டியவன், அவர் புரியாமல் விழித்தபோது, கீழே படுத்துக் காண்பித்தான். இடது பக்கத்து மார்பைப் பிதுக்கிக் காட்டினான். பிறகு "மெட்.... மெட்...." என்றான். அவர் ஒன்றும் புரியாமல் விழித்து, பிறகு ஓரளவு புரிந்தது போல் "மெட்ராஸ் போகணுமா...?" என்றபோது 'ஆம் ஆம்' என்று தலையை ஆட்டினான்.

அந்த நன்றி மனிதர், அவனுடன் கீழே இறங்கினார். அப்போது தான் ஒரு ரயில் தெற்குநோக்கி முகம் வைத்து நின்றது. அவசர

அவசரமாக டிக்கெட் வாங்கி, அவனிடம் அந்தக் கொடுத்துவிட்டு, அவனை ஒரு ரயில் பெட்டிக்குள் ஏற்றினார். அங்கிருந்த பயணிகளிடம், அவனை சென்னையில் பத்திரமாக கொண்டு சேர்க்கும்படிச் சொல்லிவிட்டு, அவன் பையில் பத்து ரூபாய் நோட்டை வைத்தார். பிறகு யோசித்துவிட்டு, பத்துப்பத்து ரூபாய் நோட்டுக்களை திணித்துவிட்டு, அவனைப் பிரிய மனமில்லாமலே நின்றார். இதற்குள் அந்த ரயில், அவரைக் கூப்பிடுவதுபோல் ஓசை இட்டது. உடனே, அவர் ஓடினார். அப்போதுதான் சுயவுணர்வுக்கு வந்த அந்தப் பயல், அவர் போன திசையை நோக்கி கையெடுத்துக் கும்பிட்டான்.

அவன் முதல்முறையாக பயணச்சீட்டுடன் உட்கார்ந்திருந்த அந்த ஹைதராபாத் துரித ரயில் டீசல் சப்தத்துடன் புறப்பட்டது. அங்கிருந்த பயணிகள் அவனிடம், பேச்சுக் கொடுத்துப் பார்த்தார்கள். அவனோ சர்வம் சுந்தரமயமாகி கண்களை மூடிய படியே அந்த ஆஸ்பத்திரி மனிதரைப் பற்றி கனாக் கண்டு கொண்டு இருந்தான். அவ்வப்போது, ரயில் இன்னும் சீக்கிரம் போக வில்லையே என்பதுபோல் வெளியே எட்டிப் பார்த்தான். ஒரு சிலரிடம் சென்னைக்கு எப்போது போய்ச் சேரும் என்று கேட்டும் பார்த்தான். கேட்டவனுக்கு பதிலளிக்க, கேட்கப்பட்டவர்களுக்கு புரியவில்லை என்றாலும், அந்த ரயில் கூடூர் வந்தபோது அவனுக்கு வழி தெரிந்தது. ஒரு தடவை ரயில் விபத்தின் காரணமாக ஜி.டி. இந்த கூடூர் வழியாக சென்னைக்கு வந்ததை, நினைத்துப் பார்த்துக் கொண்டான்.

அவனைச் சுமந்து அவன் உணர்வுகளை வெளிக் காட்டுவதுபோல், அந்த ரயிலும், 'சிக்கு முக்குப் போட்டபடி, ஓடூர், பெடப்பரியா, நாயுடுப்பேட்டை, துறவாலிச் சத்திரம், சூலூர் பேட்டை, தடா ஆகிய ஆந்திர ரயில் நிலையங்களைத் தாவி, கும்மிடிப்பூண்டி, கவரப்பேட்டை, பொன்னேரி, மீஞ்சூர், எண்ணூர் ஆகிய தமிழ் ரயில் நிலையங்களைத் தாவி, பேசின் பிரிட்ஜில் குதித்து, குதித்த களைப்பில், தண்டவாளத்தில் குந்தியது. அவனுக்கு பொறுமையில்லை. அங்கிருந்து கீழே குதித்து, ரயில் மேம்பாலம் வழியாகத் துள்ளிக் குதித்து, மறுபக்கம் நின்ற மின்சார ரயிலுக்குள் அடர்த்தியான ஒரு பெட்டிக்குள் தன்னை அடைத்துக் கொண்டான். அங்கே முகம் தெரிந்தவர்கள் இருப்பார்களா என்று சுந்தரத்தைப் பற்றித் தெரிந்து கொள்வதற்காக சுற்றும் முற்றும் பார்த்தான். அந்த மின்சார ரயிலின் ஜன்னல் வழியாக, சுந்தரத்தின் பணிமனையைப் பார்த்துவிட்டு தேம்பித் தேம்பி அழுதான். உள்ளே இருந்தவர்கள் 'என்ன என்ன' என்று கேட்டபோது, வேறு பெட்டிக்குத் தாவித் தாவி அழுதான்.

அந்த ரயிலின் பின்பகுதியில் ஏறியவன், நேரத்தை வீணாக்க விரும்பாமல் முன்பகுதிக்கு ஓடிப் போனான். சென்ட்ரல் ரயில் நிலையத்தில், ரயில் சக்கரங்கள் தண்டவாளத்தை அழுத்தும் முன்பே, அவன் கால்கள் தரையில் பதிந்தன. அப்பா எந்த மருத்துவ மனையில் இருக்கிறாரோ என்று ஒரு யோசனை. பிறகு பிளாட்பாரம் இன்ஸ்பெக்டர் மணியிடம் கேட்கலாம் என்று, அவனே, அவனுக்கு ஆலோசனை சொல்லிக் கொண்டான். அந்த நிலையத்தின் மேற்கோரம் நின்ற அவன், கிழக்கோரத்திற்கு ஓடிய போது, இடையே பலராமன் தென்பட்டான். "அடே பாவி... ஒனக்காகத்தாண்டா அங்குமிங்குமாய் அலையுறேன்." என்று சொன்னபடியே, அவன் கையைப் பிடித்துக் கொண்டான். அந்தப் பயல் அவனிடம் 'எப்படி இருக்கு' என்று கேட்கப்போன கைகளை குறுக்கிக் கொண்டான். கேட்கப் பயம். அந்தக் கேள்விக்கு நேர்மாறாக பதில் கிடைத்துவிடக்கூடாது என்ற பயம். அதேசமயம். தன் தலையிலேயே அடித்துக் கொண்டான். பலராமன் மட்டும் பிடிக்கவில்லையானால் அவன், தலைவேறு, கைவேறாக ஆகி இருப்பான்.



வெள்ளைக்கார பாணி கட்டிடமான தென்னக ரயில்வே அலுவலக கட்டிடத்திற்கு ஈடு கொடுக்கும் எதிர் கட்டிடங்களின் தொகுப்புக்குள் பலராமன் அவனைக் கூட்டிச் சென்றான்.

பலராமனுக்குப் பின்னால் நடந்த அவன், அவனுக்கு இணையாக நடந்து, முந்தி நடந்தான். பிறகு அப்பா இருக்கும் இடம் அவனுக்குத்தான் தெரியும் என்பதால், அவனுக்கு இணையாக நடந்தான். இருவரும் பல்வேறு குறுக்கு நெடுக்கு பாதைகளைக் கடந்து, இருதய சிகிச்சைப் பிரிவு வார்டுக்குள் நுழைந்தபோது_

வகுப்பறை மாதிரியான அந்த அறைக்குள் இரண்டு வரிசைகளில் சுமார் இருபது வெள்ளைக் கட்டில்கள். அத்தனையிலும், இதயத்தைச் சுமக்க முடியாமல் சுமக்கும் நோயாளிகள். சுந்தரம் நடுப்பகுதியில் மல்லாந்து கிடந்தார். அவர் கட்டிலின் தலைப்பக்கம் பொருத்தப்பட்ட இரும்புக் கம்பியில் ஒரு குறிப்பேடு தொங்கியது. அவரது சிறுநீர் சர்க்கரையின் உயர்ந்தபட்ச அளவான 'ஃபோர்பிளஸ்' என்று காட்டும் ஒரு குறிப்பு. அவரது

ரத்த சர்க்கரையின் கொடுங்கோல் அளவான 400 ஐக் காட்டும் குறிப்பு; கொழுப்புச் சத்தும் கூடியிருப்பதைக் காட்டும் குறிப்பேடு... இ.சி.ஜி. எனப்படும் இதயத்தின் இயல்பையும், செயல்பாட்டையும் கோடு கோடுகளாகக் காட்டும் வரைபடம். இதுவும் போதாதென்று, 120-180 என்று அளவு காட்டும் ரத்த அழுத்தக் குறிப்பு.

சுந்தரத்தின் கட்டிலைச் சுற்றி அவரது மனைவி. குற்ற உணர்வுடன் நின்றாள். அவள், அங்கேயே நான்கைந்து நாட்களாக கிடக்கிறாள் என்பதை அவளின் கலைந்த கூந்தலும், களைப்பான முகமும் காட்டின. சுந்தரத்தின் மகள், சோகத்தால் அலங்கோலமாக நின்றாள். அவளுக்கு இரட்டைக் கவலை. இப்படி இருக்கும் அப்பா எப்படி ஆகப் போகிறாரோ என்ற பழைய கவலை. அழைப்பிதழ் வரைக்கும் அச்சாகிப்போன தனது திருமணம் அப்பாவோடு அமரத்துவமாகி விடுமோ என்ற புதுக்கவலை. இன்னும் நான்கைந்து பேர்...

சுந்தரமோ, கண்களை மூடிக் கிடந்தார். புறக்கண்களை மூடி, அகக் கண்களை திறந்திருப்பது போன்ற தோரணை.... உண்மைதான். வாழ்வே மாயம் என்று அவரும் சொல்லியிருக்கிறார். பிறர் சொல்லியும் கேட்டிருக்கிறார். ஆனால் இந்த தத்துவம், தன்னையே தாக்கும் போதுதான், அதன் முழுத் தாத்பரியமும் அவரை திக்கு முக்காடச் செய்தது. பணிமனையில் வேலை, பதவி உயர்வுக்காக அலைச்சல்கள், சங்கடங்கள், சந்தோஷங்கள், மனைவி மக்கள், தோழர்கள், சொந்தங்கள், ஆகிய அனைத்தும் கூட வரா என்பதும், ஒருவரின் பிராண வலியை ஆயிரம்பேர் அருகில் இருந்தாலும் அவர்தான் தாங்கிக்கொள்ள வேண்டும் என்ற அடிப்படை உண்மையும், அவரை வாழ்வின் அடிப்படையையே புரட்ட வைத்தது.

வாழ்க்கை ஒரு மாயையாகவும், உணர்வுகள் அனுமானங் களாகவும் வாழ்தல் ஒரு வீண் முயற்சியாகவும் தோற்றம் காட்டின. இறந்தவர்கள் எண்ணிக்கை, இருப்பவர்களின் எண்ணிக்கையை விட அதிகம். பிறப்பிலேயே இறப்பும் பிறக்கிறது. ஆனால், இந்த மனிதர்கள் இந்த உலகில் நிரந்தரமாய் இருக்கப் போவதுபோல் ஏன் அடம் பிடிக்கிறார்கள்? அடிதடி போடுகிறார்கள்? இதுதான் மாயை என்பதோ.... அல்லது இந்த நிரந்தரத்துவம் என்ற போலியுணர்வு இல்லையானால், மானுடம் நிரந்தரமாகாது என்று இவர்களை இயற்கை போட வைக்கும் நாடகமோ... நாடகமே வாழ்க்கை என்றார்கள். தவறு... வாழ்க்கையே நாடகம். ஒரு கூத்து... கூற்றுவன்... நிறைவு செய்யும் போலிக்கூத்து...

ஒரு வாரத்திற்கு முன்புவரை கல்லுப் பிள்ளையாராக இருந்த சுந்தரம், இப்போது அடி சாய்ந்த கல்லாகக் கிடந்தார். அவருக்

குள்ளே பகவத் கீதையும், பைபிளும் மாறிமாறி உபதேசிகளாய் தோன்றினாலும், அவருக்கென்னவோ மரணபயம் போகவில்லை. மரணத்தை எதிர்கொள்ள அச்சப்பட்டார். மகளின் திருமணம், நண்டும் சிண்டுமாக இருக்கும் குழந்தைகள், எல்லாவற்றிற்கும் மேலாக ரயில் பயல், இவர்களை விட்டுப் போக அவருக்கு மனமில்லை. 'மனைவிக்கு, மகள் இருக்காள். மகளுக்கு, மனைவி இருக்காள். ஆனால், நான் பெறாமல் பெற்ற அந்த பிள்ளைக்கு யார் இருக்கார்? ஆன்மாவுடன் ஐக்கியப்பட்ட அவனை பார்த்து விட்டால் போதும்... அவன் 'அப்' என்று சொல்வதைக் கேட்க வேண்டும். அவன் மெய் தீண்டலை உணர வேண்டும்.'

'இது என்ன பைத்தியக்காரத்தனம்... அவன் யார்? நான் யார்? அட சரிதாம்பா... முதலில் நீ யார்? இன்றோ என்றோ போகப் போகிறாயே அந்த உலகம் ஏது? எல்லோரையும் விட்டுவிட்டு, தனித்துப் போகப்போகிறாயே, அந்த உலகிற்கும் உனக்கும் எவ்வளவு தொடர்போ... அவ்வளவு தொடர்பு உனக்கும்... அந்தப் பையனுக்கும்.'

சுந்தரம், தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டார். ரத்த பந்தம் அவரை உடலாட வைத்தது என்றால், இந்தப் பந்தம் அவரை உயிராட வைத்தது. இந்தச் சமயத்தில் சுந்தரத்தின் மனைவி, "வாப்பா... நீ வந்த வேளையாவது என் மவராசா பிழைக்கட்டும்... ஒன்னைத்தாண்டா... என் சீமான் ஒன்னைத்தான் நினைச்சுட்டு இருக்கார். அப்பாகிட்டே போடா" என்றாள்.

சிறிது நேரம்வரை 'அப்' சுந்தரத்தையே வைத்த கண் வைத்தபடி, பார்த்தபடி நின்ற ரயில் பயல், மௌனமாக நகர்ந்தான். பிறகு, ஓடிப்போய், சுந்தரத்தின் கால்களை கட்டிக் கொண்டு "அப்... அப்..." என்றான். அவரது பாதங்களுக்கு இடையே தலையைக் கொண்டு அங்குமிங்குமாக ஆட்டினான். கட்டில் விளிம்பில் தன் நெற்றியை முட்டினான். பிறகு அப்பாவிற்கு சிரமம் கொடுக்கக்கூடாது என்பதுபோல் அவர் பாதம் நோகாமல் தலையைத் தூக்கினான். மெல்ல எழுந்து, மெள்ள மெள்ள நடந்து, அவரது முகத்தருகே போனான். ''அப்... அப்...' என்று அவன், ஒரு திருவுறவின், திருமந்திரத்தை மாறிமாறிச் சொன்னபோது, அவன் கண்ணீர் சுந்தரத்தின் விழிகளில் விழுந்தன. அந்த உஷ்ணம் தாங்காமல் சுந்தரம் தலையைப் புரட்டினார். பிறகு, கண் விழித்தார்.

இந்த விழிப்பு, இதழோரம் விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தியது. அவன் பக்கமாய் தலையைச் சாய்த்தபடியே, ஒட்டிய உதடுகளுக் கிடையே நீர்கோடு போட்டார். தலையில் அடிக்கப்போன அந்தப் பையனின் கையை, பலமாகப் பிடித்துக் கொண்டார். 'உன்ன

விட்டுப் போகமாட்டேன்' என்பது போன்ற பாசப்பிடிப்பு. 'போனாலும் என்னை விடாதே' என்பது போன்ற வேண்டுதல் பிடிப்பு.... 'நீதான் நான்' என்பது போன்ற நீக்கமற நினைத்த பிடிப்பு.

சுந்தரம், ஏதோ பேசப் போனார். ஆனால், அந்தப் பயலோ, அவரைப் பேசக்கூடாது என்று அவர் உதடுகளில் ஆள்காட்டி விரலை வைத்தான். பிறகு, அவர் தலையை வருடிக் கொடுத்தான். 'அப் அப்' என்று மூச்சு முட்டினான். பிறகு திடீரென்று பாய்ந்து, எங்கேயோ போய்க் கொண்டிருந்த டாக்டரை இழுத்து வந்தான். அந்தச் சின்ன உடம்பின் உடும்புப் பிடியில் தானாக வந்த டாக்டர், சுந்தரத்தின் ரத்த அழுத்தத்தைப் பார்த்தார். பிறகு கத்தினார்.

"இப்போதான் சுகமாயிட்டு வருது... இதுக்குள்ளே என்ன கூட்டம்...? இருதய நோயாளி உணர்ச்சி வசப்படக்கூடாது... ஒரே ஒருவர் தவிர, எல்லோரும் வீட்டுக்குப் போங்க... அவருக்கு தொல்லை கொடுக்காதீங்க... இல்லாட்டி அவருக்கு விபரீதம் நடக்கும்."

டாக்டருக்கு, என்ன அவசரமோ... அவர்களை விரட்டாமலே போய்விட்டார். நான்கைந்து நர்ஸம்மாக்களும் ஒரு மூலையில கூட்டம் போட்டார்கள். இந்த தைரியத்தில் பலராமன் பொறிந்து தள்ளினான்.

"இந்த டாக்டர்களே இப்படித்தான். சுந்தரம் அண்ணன் உணர்ச்சிவசப்பட்டுப் பரவசப்படுகிறார். மனுஷன் பரவசமாய் ஆக ஆக, அன்போட நிசமான தரிசனத்தைப் பார்க்கப் பார்க்க, அவருக்கு ரத்த அழுத்தமோ... நீரிழிவோ... எதுவும் செய்திடாது. இந்த டாக்டருங்க இதுங்களை அளவுகோலில் வச்சு வாழ்க்கையில கூட்டல்-கழித்தல் கணக்கு போடுறாங்க. ஆனால், எனக்கென்னமோ எல்லாவற்றிற்கும் மேலாக இந்த அன்பு கொடுக்கிற இன்சுலீனுக்கு இணையா... எந்த மாத்திரையும் வேலை செய்யாதுன்னு தோணுது. ஏன் அப்படி பார்க்கிறே சுந்தரண்ணே... எனக்கும் கொஞ்சம் சர்க்கரை ஜாஸ்தி தானாம். வேணுமுன்னா பாருங்களேன்... டாக்டரோட ஊசி செய்யாத வேலையை, இந்தப் பயலோட ஊசிப்பார்வை செய்யப் போகுது... மருந்து செய்யாத வேலையை இந்தப் பயலோட பாசமே செய்யப்போகுது... சுந்தரண்ணன் சிரிக்கார் பாரு... மெள்ளமாச் சிரிங்கண்ணே... அந்த நர்ஸம்மா பார்க்கிற பார்வை சரியில்ல... அதுலயே ரத்த அழுத்தம் பத்து டிகிரி ஏறும்."

சுந்தரம், பலராமனைப் பார்த்தார். லேசாக கையாட்டினார். பிறகு மீண்டும் அவர் பார்வை, அந்த ரயில் பயல்மேல் விழுந்தது; நிலைத்தது. அவனும் அவரைப் பார்த்தபடி நின்றான். இருவரும்

பாதாதிகேசம் வரை ஒருவரை ஒருவர் பார்த்தார்கள். ஒருவர் பிரசன்னத்தில், இன்னொருவர் சுகம் கண்டதுபோல் சிரித்தார்கள். "என்ன பொருத்தம் எங்கள் பொருத்தம் பாருங்கள்" என்பதுபோல் மற்றவர்களைப் பார்த்தார்கள். பிறகு, மீண்டும் ஒருவரை ஒருவர் விழி நீக்காது; இமை கொட்டாது; ஆடாது; அசையாது அப்படியே பார்த்தார்கள். அது ஆன்மாவின் பார்வை... சிலுவையில் இருந்து உயிர்த்தெழுந்த ஏசுவைப் போன்ற பார்வை. அன்பெனும் சிவம் உடல் பிணியையும், உயிர்ப்பிணியையும் ஒருசேர நீக்கவல்லது என்று பார்க்க வைக்கும் அருட்ஜோதி ராமலிங்கப் பார்வை. அன்பெனும் பிடியில் அகப்பட்ட பார்வை... சோதிக்காத பார்வை... சோதிமயமான பார்வை.

இந்த அன்புப் பார்வைக்கு எதிராக, அணுகுண்டுந்தான் நிற்குமோ? எந்த நோயும் இந்தப் பார்வையில்தான் எரிந்து போகாதோ? எரிப்பவற்றையும் எரிக்கும் சக்தி, அன்புச் சக்திக்குத் தவிர, வேறு எந்த சக்திக்கு உண்டு?



# சு. சமுத்திரத்தின் படைப்புகள்

பல பல்கலைக்கழகங்களில், பாடநூல்களாக வைக்கப்பட்டவை; முனைவர், எம்.பி.எல். பட்டங்களுக்காக ஆய்வு செய்யப்பட்டவை.

## நாவல்கள்

**1. ஒரு கோட்டுக்கு வெளியே**

பதினான்கு இந்திய மொழிகளில், மொழி பெயர்க்கப்படுகிறது. பதினான்கு மொழிகளில், வானொலியில் ஒலிபரப்பானது. - கிறிஸ்தவ இலக்கியச் சங்கம், 1997; மணிவாசகர் பதிப்பகம், சென்னை - 1992.

**2. சோற்றுப் பட்டாளம்**

சென்னை தொலைக்காட்சி நிலையத்தில், முதன் முதலாய் முழுநீள நாடகமாய் ஒளிபரப்பானது. கிறிஸ்தவ இலக்கியச் சங்கம், 1977; மணிவாசகர் பதிப்பகம், 1992.

இந்தப் படைப்பையும், 'உயரத்தின் தாழ்வுகள்', 'காமன் அறிந்த ஈசனையும்' இணைத்து, கங்கை பதிப்பகம், 1997ல் புதிதாக வெளியிட்டுள்ளது.

| | |
|---|---|
| **3. இல்லந்தோறும் இதயங்கள்** | மணிவாசகர் பதிப்பகம், 1982.<br>இரண்டாம் பதிப்பு, 1997-ல் வானதி |
| **4. நெருப்புத் தடயங்கள்** | மணிவாசகர் பதிப்பகம், 1983.<br>இரண்டாம் பதிப்பு - கங்கைப் பதிப்பகம். |
| **5. வெளிச்சத்தை நோக்கி** | மணிவாசகர் பதிப்பகம், 1989. |
| **6. ஊருக்குள் ஒரு புரட்சி** | தமிழக அரசு முதல் பரிசு பெற்றது.<br>மணிவாசகர் பதிப்பகம், 1980.<br>1992 (ஐந்து பதிப்புகள்) |
| **7. வளர்ப்பு மகள்** | மணிவாசகர் பதிப்பகம்,<br>1980-1987 (ஐந்து பதிப்புகள்) |
| **8. நிழல் முகங்கள்** | தமிழ்ப் புத்தகாலயம், 1991. |
| **9. சாமியாடிகள்** | மீனாட்சி புத்தக நிலையம்,<br>மதுரை - 1991. |
| **10. தாழம்பூ** | மணிவாசகர் பதிப்பகம், 1992. |
| **11. மூட்டம்** | அன்னம் வெளியீடு, 1994;<br>ஏகலைவன் வெளியீடு, 1996. |
| **12. அவளுக்காக** | வானதி பதிப்பகம், 1992. |
| **13. வாடாமல்லி** | வானதி பதிப்பகம், 1994.<br>இரண்டாம் பதிப்பு - 1997.<br>அமரர் ஆதித்தனார் பரிசு பெற்றது |
| **14. சத்திய ஆவேசம்** | மணிவாசகர் பதிப்பகம், 1987. |
| **15. பாலைப்புறா** | ஏகலைவன் பதிப்பகம், 1998. |

## குறுநாவல்கள்

| | |
|---|---|
| 1. புதிய திரிபுரங்கள் (+கேள்வித் தீ) | மணிவாசகர் பதிப்பகம், 1982, இரண்டாம் பதிப்பு, 1997 - வானதி பதிப்பகம். |
| 2. வேரில் பழுத்த பலா (+ ஒரு நாள் போதுமா) | சாகித்திய அக்காதெமி விருது பெற்றது. மணிவாசகர் பதிப்பகம், 1988, 1994. |
| 3. சத்தியத்துக்குக் கட்டுப்பட்டால் (+ பிற்பகல்) | வானதி பதிப்பகம், 1992. |
| 4. ஒத்தை வீடு (+ புதைமண்) | ஏகலைவன் பதிப்பகம், 2000. |

## சிறுகதைத் தொகுப்புகள்

| | |
|---|---|
| 1. குற்றம் பார்க்கில் | தமிழக அரசு முதல் பரிசு பெற்றது. கல்வி வெளியீடு, 1977; மணிவாசகர் பதிப்பகம், 1992. |
| 2. காகித உறவு | மணிவாசகர் பதிப்பகம், 1979-1982. |
| 3. ஒரு சத்தியத்தின் அழுகை | மணிவாசகர் பதிப்பகம், 1979-1985. |
| 4. உறவுக்கு அப்பால் | மணிவாசகர் பதிப்பகம், 1979. |
| 5. மானுடத்தின் நாணயங்கள் | நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், 1989. |
| 6. பிணம் தின்னும் சாஸ்திரங்கள் | நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், 1987. |
| 7. சமுத்திரம் கதைகள் | மணிவாசகர் பதிப்பகம், 1983. |
| 8. ஏவாத கணைகள் | நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், 1990-1993. |
| 9. மண் சுமை | தமிழக அரசின் முதற் பரிசு பெற்றது. மணிவாசகர் பதிப்பகம், 1991. |
| 10. யானைப் பூச்சிகள் | நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், 1994. |
| 11. காலில் விழுந்த கவிதைகள் | நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், 1994. |
| 12. மனம் கொத்தி மனிதர்கள் | வானதி பதிப்பகம், 1992. |
| 13. இன்னொரு உரிமை | வானதி பதிப்பகம், 1992. |
| 14. பூ நாகம் | வானதி பதிப்பகம், 1992. |
| 15. ஒரு மாமரமும் மரங்கொத் பறவைகளும் | ஏகலைவன் பதிப்பகம், 1996. |
| 16. பொய்யாய் - புதுக்கனவாய் | கங்கை பதிப்பகம், 1993. |
| 17. சிக்கி முக்கிக் கற்கள் | ஏகலைவன் பதிப்பகம், 1999. |
| 18. ஆகாயமும் பூமியுமாய்... | ஏகலைவன் பதிப்பகம், 1999. |

## நாடகம்

| | |
|---|---|
| 1. லியோ டால்ஸ்டாய் | மணிவாசகர் பதிப்பகம், 1987 |

## கட்டுரைத் தொகுப்பு

| | |
|---|---|
| 1. எனது கதைகளின் கதைகள் | ஏகலைவன் பதிப்பகம், 1996. |
| 2. சமுத்திரம் கட்டுரைகள் | ஏகலைவன் பதிப்பகம், 1999. |

# மக்கள் இலக்கியம் மக்களே இலக்கியம்



**சு. சமுத்திரம்** முற்போக்கு முகாமிலுள்ள முன்னணி எழுத்தாளர்களில் ஒருவர். இந்த நாவலில் மலேசியப்பெண்ணான தமிழ்ச்செல்வி, நமது நாட்டில் உறவுக்காரர்களால் கைவிடப்பட்டு, பாட்டாளி வர்க்கத்தால் தாங்கிக் கொள்ளப் படுவதை மிகச் சிறப்பாகச் சித்தரித்திருக்கிறார். ரயில்வே தொழிலாளர்கள் ஒரு அனாதைச் சிறுவனை எடுத்து வளர்ப்பதையும், அவனுள் எழும் மனிதாபி மானத்தையும் சிறப்பாகப் படைத்திருக்கிறார்.

பொதுவாக, யதார்த்தமாக எழுதும்போது அதில் சுவை குன்றுவது இயற்கை. ஆனால், **சு. சமுத்திரம்** தையுமே சுவையாக எழுதக்கூடியவர். இந்த **நிழல் முகங்கள்** நாவலிலும் இந்த முத்திரை, ஒவ்வொரு பக்கத்திலும் பதிந்துள்ளது.

**- கே.எம். முத்தையா,**

**மக்கள் இலக்கிய ஆசான்.**